கழக வெளியீடு : ௬௧௧

# சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை

## பகுதி - ௫

பரமசிவ நிலையம்,
127, லாயிட்ஸ் ரோட்,
சென்னை-6.

ஆசிரியர் :
புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

தேனினும் இனிய செழுந்தமிழ்ப் பாக்களால் மொழியையும் நாட்டையும் வளம்படுத்தியவர், பழங் காலச் சங்கப்புலமை நல்லோராவர் அவர்களுள் **காவலர் பாவலர்களும், கிழார்ப் பெயர்பெற்றோரும், வணிகரிற் புலவர்களும்** என்னும் மூவகையாகப் பிரித் தெண்ணப்படுகின்ற புலவர் பெருமக்கள், பொன்றுப் புகழ்பெற்றோராவர்

இவர்தம் வரலாறுகள், சிந்தைக்கினிய செவிக் கினிய வாய்க்கினியவாய்ச் சிறந்தன வாகும். இவ்வருமை பெருமை மிக்க வரலாற்றுண்மைகளை அவர்தம் பாவின் அகச் சான்றுகொண்டே ஆய்ந்தெழுதிய நூல்கள் இவையாகும் இம் முப்பகுப்பினர் வரலாறடங்கிய நூல் களை ஒரே தொகுப்பாக ஆக்கி உதவினுல், கற்பார்க்கும், கற்கவிழைவார்க்கும், துறைபோவார்க்கும் நற்பயனும் எனக்கருதி ஒரே கட்டடமாகக்கட்டி அழகிய முறை யுடன் அமைத்து வெளியிட்டுள்ளோம்

அறிஞருலகம் இதனையும் இதனோடு தொடர்ந்து வெளிவரும் ஏனைய இதுபோன்ற தொகுப்பு நூல்களை யும் வாங்கிக்கற்று நற்பேறெய்தி இன்புறுமென நம்பு கின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

கழக வெளியீடு : கூஅக

சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை - எ

# காவல பாவலர்கள்



புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.,
எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

முதற் பதிப்பு: டிசம்பர், 1953



பதிப்பாளர்:
திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
1/140, பிராட்வே, சென்னை-1.

தலைமை நிலையம்:
24. கீழைத் தேர்த்தெரு, திருநெல்வேலி.

அப்பர் அச்சகம், 2/140, பிராட்வே, சென்னை—120

# பதிப்புரை



பணடைககால நம தமிழகம், பாவலர் பலரைப் பெற்றுத் திகழ்ந்தது. 'அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்' என, உணாந்த நம் தமிழக வேந்தாகளும் பாவேந்தர்களாய் மிளிர்ந்தார்கள். அவர்கள் அதனால், புலவர்களை மதித்துப் போற்றும் பொற்புடைய வாழ்வு மேற்கொண்டொழுகினார்கள்.

அத்தகைய அறிவுடை வேந்தர்களின் வாழ்க்கை நிலையை அவர் பாத்துணைகொண்டு வரைவித்து வெளியிட்டுள்ளோம். இதில் கருவூரச சேரமான் சாத்தன் முதல் இளந்திரையன் ஈறாக இருபத்தெண்மர் வரலாறு நுவலப்பெறுகின்றது.

இதற்குக் 'காவல பாவலர்கள்' எனப் பெயரீந்து சங்கத் தமிழ்ப்புலவர் வரிசையில் ஏழாவதாக வெளியிட்டுள்ளோம். இந்நூல் வரிசையை வரிசையாக எழுதி வருகின்ற புலவா திரு. கா. கோவிந்தன் அவர்கள் தம் அரிய முயற்சியால் இதனையும் ஆக்கி உதவினார்கள்.

இதனைத் தமிழ்ப் பெருமக்கள் வாஙகிக் கற்றுக் கல்வி கேள்விகளிற் சிறந்தாராக மிளிர்வார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# காவல் பாவலர்கள்



## தோற்றுவாய்

" இருவேறு உலகத்தியற்கை ; திருவேறு ;
தெள்ளியராதலும் வேறு." (திருக்: ௩௭௪)

என்பர் வள்ளுவர். அறிவுடையாரிடையே செல்வம் இல்லா மையும், செல்வமுடையாரிடையே அறிவு சென்றடையா மையும உலகியல். அறிவுடையார், பொருளினும் அறிவே ஆற்றலுடையது என உணாநதவராதலின், அப்பொருள் பெறு முயற்சி மேற்கொள்ளாது, அறிவுவளர் வழியினையே மேற்கொளவதால் பொருள் அவர்களபால் அடைந்திலது ; பொருள்பெற்றா தம் அறியாமையால், பொருளே எல்லாம் என்று எண்ணிவிடுவதாலும, அப்பொருளை ஈட்டலும், காத்தலுமாய தொழிற்கே அவர் காலமெல்லாம் கழிந்து விடுவதாலும, அறிவைப பெறவேண்டும் என்ற எண்ண மற்றவராகிவிடுகின்றனர். இவவிருவர் நிலைகளும் குறை பாடுடையனவே ; அறிவுடையார் நலவாழ்வு வாழ, அவர்க் குப் பொருள் தேவை: பொருளுடையார் அதை நலவழியிற் பேண அவர்க்கு அறிவு தேவை. ஆகவே ஒவ்வொருவரும் இரண்டையும் பெறுதல் வேண்டும்.

பொருள்பெறுமல் அறிவொன்றையே பெற்றுரையும், அறிவுபெறுமல் பொருளொன்றையே உடையாரையும் ஒருங்கே பெற்றுள்ள உலகில அறிவுடையார் சொல்வழி பொருளுடையார் நடத்தல்வேண்டும் ; அதனுல் உலகமும் வாழும ; அவர்களும் வாழ்வர் ; அவ்வாறின்றி உலகம் பொருளுடையார் வழிநடப்பது எனறு ஆகிவிட்டால், அவ்வுலகம் அவர்கள் அறியாமை வழிப்பட்டு அழிதல் உறுதி.

இந்த உண்மையை உணர்ந்தவர்கள் தமிழரசர்கள்; அதனால், அவர்கள், தங்கள்பால் வந்து இரந்து நிற்கும் எளிய வாழ்க்கையினையுடைய புலவர்களை அவர்கள் இன்மைநிலை குறித்து எள்ளி இகழாது, அவர் கூறும் பொருளுரைகளைப் பொன்னேபோலப் போற்றி வந்தனர்.

"அரசனே எல்லாம்", "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" "அரசன் வாழ்வு, குடிகளின் வாழ்வு; அவன் தாழ்வு, அவர்கள் தாழ்வு" என்ற நிலையிலிருந்த காலத்தில், உலகத்தின் உயிர் எனத்தகும் உயரிய நிலை பெற்றுள்ள அரசன், தான் அரசாள அறிவினைப் பெறானும், எதற்கும் அறிவுடையாரையே எதிர்நோக்க வேண்டியவனாயின், அவனுலகிற்கு அழிவு நெடுநாள் இராது; ஆகலின் அரசன் அறிவுடையோர் துணைபெறுதற்கு மாறாகத் தானே அவ்வறிவுடையனாயின் அவன் ஆளும் நாட்டிற்கு அழிவு அரிதாம் ஆகலின், தமிழர்கள் தங்கள் அரசனை அத்தகைய அறிவுடையோனாகவே விரும்பினர்; அவர்கள் விரும்பியாங்கே, தமிழரசர்களும் அறிவு நிறைந்த புலவர் பெருமக்களாய் உலகம்போற்ற ஊராண்டிருந்தனர்; தமிழரசர்கள் கல்வியின் பெருமையுணர்ந்து அதைப் போற்றியுள்ளனர்; பொருளின் சிறப்புணர்ந்து, அதை நல்வழியில் ஈட்டி, அறவழியில் செலவழிக்கவேண்டும் என உணர்ந்திருந்தனர்; நாடாள் முறை இது, நாடாள்வோன் தகுதி இது; குடிமக்களின் ஆற்றல் இது; அவர்க்குக் கேடு விளைத்தலால் தமக்கு உண்டாம் அழிவு இது என்று உணர்ந்திருந்தனர். மானத்தின் பெருமையினையும், அம் மானம் இழந்தவழி வாழாமையால் வரும் உயர்வையும் உணர்ந்திருந்தனர், சுருங்கக்கூறின் அக்கால அரசர்கள் அறியவேண்டுவனவெல்லாம் அறிந்திருந்தனர்.

அத்தகைய அறிவுபெற்ற அரசர்களாய், பாவல்ல காவலராய் இருந்தாரைத் தொகுத்துக்கூறி, அவர்கள் அறிந்த அறிவு நலங்கள் இவை; அதனால் அக்காலத் தமிழர்கள்பெற்ற பெரும்பயன் இது என எடுத்துக் காட்டுவதே இச்சிறு நூல். அரசராய்ப் பிறந்து புலவராய்

வாழ்ந்த பெரியார்கள் இருபத்தெண்மரின் வரலாறுகள் இதில் வகுத்துரைக்கப்பட்டுள்ளன. அவர்களுள், கருவூர்ச் சேரமான் சாத்தன், சேரமான் இளங்குட்டுவன், சேரமான் கணைக்கால் இரும்பொறை, சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, சேரமான் எந்தை, நம்பிகுட்டுவனார், பாலைபாடிய பெருங்கடுங்கோ, மருதம்பாடிய இளங்கடுங்கோ, முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன் என்ற ஒன்பதின்மரும் சேரர்குடி வந்தவராவர்; குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், கோப்பெருஞ் சோழன், நலங்கிள்ளி, நல்லுருத்திரன், மாவளத்தான் முதலிய ஐவரும் சோழர்குடிவழிவந்தவர்; அண்டர்மகன் குறுவழுதியார், அறிவுடைநம்பி, ஆரியப்படைகடந்த நெடுஞ்செழியன், ஏனாதி நெடுங்கண்ணனார், ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியனார், கடலுள்மாய்ந்த இளம்பெருவழுதி, கானப்பேரெயில்கடந்த உக்கிரப்பெருவழுதி, குறுவழுதியார், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், நல்வழுதியார், பன்னாடுதந்த பாண்டியன் மாறன் வழுதி, முடத்திருமாறன் முதலிய பன்னிருவரும் தமிழ் வளர்த்த பாண்டியர் வழிவந்தவராவர்; இம் மூவேந்தர் வழிவாரா அரசர்களாய்ப் புலமையுற்றிருந்தார் ஆரிய அரசன் யாழ்ப் பிரமதத்தன், இளந்திரையன் என்ற இருவரும் இறுதியில் தொகுக்கப்பெற்றுள்ளனர். இவ்வரசர்களின் வரலாறுகளையும், அவ்வரலாறு உரைக்கும் அறவுரைகளையும் அறிந்து பயன்பெறுவோமாக.

## க. கருவூர்ச் சேரமான்சாத்தன்

இறையனார், உருத்திரன், சத்திநாதன், பெருந்தேவனார், பேரெயில்முறுவலார், வெண்பூதியார் முதலாய சிவனுக்குரிய பெயர்களையும், கண்ணன், தாமோதரன் முதலிய திருமாலுக்குரிய பெயர்களையும், பதுமன்போன்ற நான்முகனுக்குரிய பெயரையும், குமரன், கந்தன் என்பன போன்ற முருகனுக்குரிய பெயர்களையும் புலவர்கள் தங்கள் பெயர்களாக மேற்கொண்டிருந்தனர்; இப்பெயர்களே அல்லாமல் கொற்றன், சாத்தன், தேவன், பூதன் போன்ற சிறு தெய்வப்பெயர்களும் புலவர் பெயர்களாகப் பெரு வழக்காய் ஆளப்பட்டுள்ளன. அத்தகைய பெயர்களுள் ஒன்றாகிய சாத்தன் என்பதைக் கருவூர்க்கண் இருந்து அரசாண்ட சேரமான்களுள் ஒருவராய நம்புலவர் பெருந்தகையார், தம்பெயராகக் கொண்டுளார். அப்பெயர், ஐயனார்க்குரிய பெயராம் ஆகு இவர் பெயரால், இவர் சேர அரச மரபைச் சேர்ந்தவர், கருவூர்க்கண் இருந்து அரசாண்டவர், சிறு தெய்வங்களையும் வழிபடும் அளவு கடவுளன்புகொண்ட குடிவந்தவர் என்ற இவர் வரலாற்றினை அறிகிறோம். இவர் பாட்டாக நமக்குக் கிடைத்துளது, குறுந்தொகைக்கண் வந்துள்ள செய்யுளொன்றே; அது கூறும் பொருள்:

தலைமகள் ஒருத்தியைக்கண்டு காதல்கொண்டானொரு தலைமகன், தம் காதலொழுக்கத்தைச் சில நாள்வரை எவரும் அறியாநிலையில் மேற்கொள்ள விரும்பினான்; அத்தகைய களவொழுக்கத்தில் பேரின்பம் இருப்ப துணர்ந்த தலைமகளும் அதற்குத் தடைசெய்திலள்; இதனால், அவன், இரவில் கடத்தற்கரிய வழி பல கடந்து வந்து தலைவியைக்கண்டு செல்வானாயினன். இவ்வொழுக்கத்தைத் தலைமகளும் விரும்புகிறாள் எனினும், அவன் வரும் காலக் கொடுமையும், வழியின் ஏதமும் அவளுக்கு அச்சத்தை அளிக்கலாயின; தலைமகளின் அன்பையும், அச்சத்தையும் ஒருங்குணர்ந்த அவள் தோழி, அதற்கோர் மருந்தினைத் தேடலாயினள்; தலைவனை இன்றி வாழ்வதோ அரிது

அவன்வரும் வழியின் நிலையோ மிகவும் கொடிது; இதற்கு வழி, அவன் அத்தகைய கொடிய வழியில் வரவேண்டிய தின்றித் தலைவியோடிருத்தலேயாம். அதற்குவழி, அவன், இவளை வரைந்துகோடலே என உணர்ந்தாள்; இதைத் தலைவனுக்கு அறிவிக்க விரும்பினாள்.

தாம் அறிவிக்க விரும்பும் சில செய்திகளை அவர் முன் நின்று அறிவிக்கச் சிலர் நாணுவர்; அந்நிலையில், கடிதம் வழியாகவோ. அன்றி வேறு வழியாகவோ அறிவித்தலே நன்றாம். தம் உள்ளக் கருத்தினைத் தலைவனுக்கு நேரே அறிவிக்கத் தோழி அஞ்சினாள். ஆனால் கூறாதிருத்தலும் கூடாது எனவும் உணர்நதாள். ஒருநாள் தலைவன் நள்ளிரவில் வந்து வீட்டின் புறத்தே நின்று கொண்டிருக் கிறான்; இதை அறிந்துகொண்ட தோழி, அவன் வருகை யினை அறியாதாள் போன்று, அவன் கேட்குமாறு தலைவியை நோக்கி, "தோழி! தலைவனும், நீயும் கொண் டுள்ள அன்பின் உண்மை நிலையினை உணர்ந்தவளாதலின், வந்த தலைவரை, 'காலம் மிகுதியும் கழிந்து விட்டது; வழியில் ஏதமிகும் முன்னரே செல்வது நன்று; செல்கின் றீர்களா?' எனக்கேட்டு விரைந்து அனுப்பவும் வாய்வந் திலது; வழியில் ஏதம்பல உண்டு என அறிவேன் ஆதலின், அவ்வழியே அவனை வரக்கூறுதல் நன்றன்று ஆதலின், 'நாளை வருகின்றீர்களா?' எனக்கேட்டு வரவேற்கவும் வாய் வந்திலது; இவ்வாறு, அவனையின்றி வருந்தும் நின் அன்பு கண்டு அஞ்சவதா? படமெடுத்தாடும் பாம்பையும் அழிக் கும் இடியேறு முழங்கும் நள்ளிரவில் வருகின்றனரே என அவர் வரும் வழிஏதமும், காலக்கொடுமையும் கண்டு அஞ்சுவதா? என்றே அறிந்திலேன்; என் செய்வேன்?" என்று கூறுவாளாயினள்:

"சேறிரோ? எனச செப்பலும ஆற்றாம்;
'வருவிரோ?' என வினவலும் வினவாம்;
யாங்குச்செய்வாம் கொல்? தோழி! பாம்பின்
பையுடை இருந்தலை துமிக்கும் ஏற்றொடு
நடுநாள் என்னார் வந்து
நெடுமென் பணைத்தோள் அடைந்திசி னோரே." (குறுந் : உகூஅ)

தோழி கூறும் இச்சொற்கள், தலைவியின் நிலையினைத் தலைமகனுக்குத் தெளிய உணர்த்தி, இக்களவொழுக்கத்தினை மேலும் மேற்கோடல் நன்றன்று; விரைந்து வரைந்து கோடலே நன்றாம் என்ற முடிவினை அவனைக் கொள்ளுமாறு செய்யத்தக்கவை புரியும; கிடைத்த இவ்வொரு பாட்டே, தலைமகள், தலைமகன, தோழி இவாகள தம உள்ளங்களைத தெள்ளத தெளிவிக்கும புலவாதம புலமைத் ... ப புலப்படுத்துவது காண்க.

தோழி, 'சேற்றோர' எனபதில அவள் மனநடுக்கமும், 'வருவீரோ' என்பதில தலைவன் வருங்கால், அவன் வரும வழியில் நினைப்பினும கடுகிவரும் இடையூறுகளால் தமக்கு ஏற்படும கரையில்லாத் துன்பமும புலனுமாறு அமைத்து வைத்த திறப்பாடு மகிழ்ந்து இன்புறற்குரியது

இவ்வாறு தோழி தலைவிக்குக் கூறுங்கால், இனி இதற்குச் செய்யுமவழி யறியாதவளாய்த தலைவியையே இதற்கு ஓர் ஏதுகூறுமாறு கேட்பாளபோல, 'யாஙகுச் செய்வாம' என்று கடாவுகின்றாள். இதில இதத்னை நயஙகளும் பொதிந்து மணறகின்றகக நீரும் மாபபோல் அருமபொருள பலகெழும அமைநதிருந்த தலை ஓரந்து ஓரந்து 'நன்றெசாறும நாலநயம போலும' எனனும பொன்மொழிக்கு இலக்காக இருக்கதலைக சண்டு இனபுறுக.

## உ. சேரமான் இளங்குட்டுவன்

சேர அரசர்கள் குட்ட நாட்டிற்கு உரிமை பூண்டிருந்த சிறப்பால் தம பெயர்களுள் ஒன்றாகக் குட்டுவன் என்பதையும் மேற்கொண்டிருந்தனர்; பல் யானைச்செல்கெழு குட்டுவன், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், குட்டுவஞ் சேரல் என்ற பெயர்களைக் காண்க. அச்சேரர் மரபிலே பிறந்து நனிஇளையனாய காலத்திலேயே புலமையிற் சிறந்து விளங்கிய காரணத்தால் நம்புலவர் சேரமான் இளங்குட்டுவன் என்று அழைக்கப் பெற்றுள்ளார். நெடுந்தொகை என அழைக்கப்பெறும் அகநானூற்றில், பாலைத் திணையில், தலைமகன் ஒருவனைக் காதலித்து, தன்மனையிலேயே இருப்பின் தங்கள் அன்பு வாழ்க்கைக்கு இடையூறு உண்டாம் என அஞ்சி, அவனோடு அவனூர் சென்றுவிட்ட தன்மகளை நினைந்து அழும் செவிலித்தாய்கூற்று அமைந்த செய்யுளொன்று காணப்படுகிறது; நம் புலவர்தம் புலமையினைப் புலப்படுத்த நமக்குக் கிடைத்த பாட்டு அஃதொன்றே.

இதில், அழகிய இனிய சொற்களையே கூறும் தலைவியின் தோழிமார்களையும், அவர்களோடு சிறிது பொழுது பந்தாடி மகிழும் அதற்கே வருந்தும் அத்துணை மென்மையுடைய தலைவியையும், அத்தகு பெண்மையுடையாள், தான்கொண்ட காதலொழுக்கத்திற்கு ஊறு நேராவண்ணம் தலைவனோடு செல்லப் புறப்பட்டபொழுது, காடும், மலையும் செறிந்த பாலை நிலத்தில், கோடைக்காலத்து ஞாயிற்றின் வெப்பக் கொடுமையாலும் ஆண்டுவீசும் கோடைக் காற்றின் துணையாலும் தீப்பிடித்து எரியும் மூங்கில் காடுகளின் நெருப்பினால், மேலும் பசுமையற்று நடப்பதற்குத் தகுதியற்றுப்போன சுரவழியில் நடந்து செல்லவல்ல திண்மை உடையாளானமையினையும், தன்மகளின் மென்மையினையும், அவள் சென்ற ஆற்றின் கொடுமையினையும் உணர்ந்த அவள் தாய், அத்தகு கொடுவழியில் அவள் விரைந்து செல்லவல்லளோ என எண்ணி வருந்தும் வருத்த நிலையினையும், பெற்றெடுத்த தாய் வருந்துவளே எனவும்

எண்ணிப்பாராமல், கொடிய பாலைவழியில் செல்லத்தக்க வன்மையுடையதாம் வண்ணம், மகளிர்தம் மெல்லிய உள்ளத்தையும் மாற்றவல்ல இன்சொல் வழங்கும் அன்பு நிறை ஆண்மகனையும் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார் :

‘நோகோ யானே! நோதகும் உள்ளம் ;
அந்தீங் கிளவி ஆயமொடு கெழீஇப்
பந்துவழிப் படர்குவ ளாயினும, நொந்துநனி
வெம்புமன் , அளியள் தானே ; இனியே,
வன்கணாளன மார்புற வளைஇ,
இன்சொல் பிணிப்ப நம்பி, நங்கண்
உறுதரு விழுமம உள்ளாள் ; ஒய்யெனத்
தெறுகதிர் உலைஇய வேனில் வெங்காட்டு
உறுவளி ஒலிகழைக கணைஞுறுபு தீண்டபின்
பொறிபிதிரபு எடுதத பொஙகெழு சுடரெரிப்
பைதறு சிமையப் பயநீங்கு ஆரிடை
நல்லடிக் கமைந்த வல்ல மெல்லியல்
வல்லுநள் கொல்லோ தானே ? எல்லி
ஓஙகுவளா அடுக்கதது உயாந்த சென்னி
மீனொடு பொலிந்த வானிற் றோன்றித்
தேமபாய்ந் தாரக்கும் தெரியிணர்க கோஙகின்
காலுறக் கழன்ற கணைகமழ் புதுமலர்
கைவிடு சுடரிற் றோன்றும்
மைபடு மாமலை விலஙகிய சுரனே.’ (அகம் : கஅரு.)

இதில், கோங்கு மலர்ந்த காட்சி, மீன்பல விளங்கும் வான்போலும் எனவும், காற்றடிக்க அம்மலர் உதிர்தல் கானவர் பரண்மீதிருந்து யானையை விரட்ட வீசும் தீப் பந்தம் போலும் எனவும் கூறிய உவமை நன்று.

## ௩. சேரமான் கணைக்காலிரும்பொறை

சேரமான் கணைக்காலிரும்பொறை சங்ககாலச் சேர அரசர்களுள் சிறந்தோனாவன்; சேர அரசர்களுள் இரும்பொறை மரபினர் என்ற கிளையினர் சிலர், மேலைக் கடற்கரைப் பட்டினங்களாகிய தொண்டி, மாந்தை, நறவு என்ற பேரூர்களைத் தலைநகர்களாகக் கொண்டு நாடாண்டிருந்தனர்; அவர் வழி அரசர்களுள் சேரமான் கணைக்காலிரும்பொறையும் ஒருவனாவன். நம் இரும்பொறை, வெற்றியன்றி தோற்றலையறியாத வேற்படை நிறைந்த பெரிய படைக்கு உரியவன்; படைவலியோடு சிறந்த உடல்வலியும் உடையவன்; ஒருகால் தன் பாசறைக்கண் இருந்தபோது படையைச் சேர்ந்த யானையொன்று மதம் மிக்கு அழிவு பல செய்து திரியலாயிற்று; அவன் படைமறவர் அதனை அடக்கலாற்றாது அஞ்சி நடுங்குவாராயினர்; அக்காலை அவ்யானையை அடக்கி, அவ்வீரரெலாம் அச்சம் நீங்கி இனிது கண்படுக்குமாறு செய்த பேராண்மை உடையவன் நம் கணைக்காலிரும்பொறையே; கணைக்காலிரும்பொறை காலத்தே, சிறந்த கொடைப் புகழ் கொண்ட பெருவீரனாகிய மூவன் என்பானொருவன் இருந்தான்; அவனுக்கும், கணைக்காலிரும்பொறைக்கும் இடையே ஏனோ பகை வளர்ந்து விட்டது; நம் இரும்பொறை அவனைப் போரில் வென்று அகப்படுத்தியதோடு அவன் பற்களையும் பிடுங்கி, தன் வெற்றிச் சிறப்பை ஏனைப் பகைவேந்தரெல்லாம் அறிந்து அஞ்சுமாறு அவற்றைத் தன் தொண்டி நகர்க் கோட்டையின் வாயிற் கதவில் அழுத்தி வைத்தான்; இரும்பொறையின் இப்பேராண்மைகளை எல்லாம், அவன் அவைக்களப் புலவராய பொய்கையார், நற்றிணைச் செய்யுளொன்றில் அமைத்துப் பாராட்டியுள்ளார்:

> "மூவன்,
> முழுவலி முள்ளெயிறு அழுத்திய கதவின்
> கானலந் தொண்டிப் பொருநன்; வென்வேல்
> தெறலருந் தானைப் பொறையன்; பாசறை

> நெஞ்சம் நடுக்குறூஉம் துஞ்சா மறவர்
> திரைதபு கடலின் இனிதுகண் படுப்பக்
> கடாஅம் கழீஇய கதனடங்கு யானைத்
> தடவுநிலை ஒருகோடு." (நற். கஅ.)

இத்தகு பெருவீரனாகிய இரும்பொறைக்கும் செங்கணான் என்ற சோழ அரசனுக்கும் பகை உண்டாயிற்று; இருவரும் கழுமலம் என்ற நகரை அடுத்துள்ள திருப்போர்ப்புறம் என்ற ஓரிடத்தே போரிட்டனர்; 'யானைக்கும் அடிசறுக்கும்' என்ப, பெரும்படையும் பேராண்மையும் உடையனாகிய சேரமான் கணைக்காலிரும்பொறை சோழனது பெரிய யானைப்படையினை வெல்லமாட்டாது தோற்றான். செங்கணான் தோற்ற சேரனைக் கைப்பற்றிக் கொண்டுபோய்க் குடவாயிற் கோட்டத்துச் சிறையில் காவல் வைத்தான்.

சிறையில் இருந்த சேரன், ஒருநாள் சிறைக்காவலரை உண்ணீர் தரவேண்டினன்; அவர்கள் அவனும் ஓர் சிறைக் கைதியே என்ற எண்ணமுடையராய், ஏனைக் கைதிகள்பால் நடந்துகொள்வதேபோல் அவன் கேட்டபோதே தாராது காலந்தாழ்த்தித் தந்தும், தரும்போதும் அரசன் என்ற மதிப்பின்றித் தந்தும் இழிவு செய்தனர். காவலர்தம் இவ்விழிசெயல் பொறாத அரசன், அவர் தந்த அந்நீரை உண்ணாது ஒருபால் வைத்துவிட்டு,

போர்க்களம்புக்குப் போரிட்டு வாள்வடுப் பெற்றவர்க்கே துறக்கத்தில் இடமுண்டு என்ப; இறந்து பிறந்த குழந்தையும், உருவின்றிப் பிறந்த ஊன்தடியும் அத்தகு வாள்வடுப்பெறும் வாய்ப்பினைப் பெறுவதில; ஆதலின் அவை துறக்கம் புகா; ஆனால், அவற்றையும் துறக்கம் அனுப்பும் உள்ளத்தராய அரசர்கள், அவற்றைத் தருப்பைப்புல்மீது கிடத்தி 'வெற்றிவீரர் சென்ற வழியே இவையும் செல்க' என வாழ்த்தி வாளால் வெட்டிப் புதைப்பர்; இஃது அரசர்கள் பண்பு; அத்தகைய அரசர் மரபிலே, சங்கிலியால் பிணிக்கப்பட்டு இழுத்துச் செல்லப்படும் நாய்களேபோல், பகைவரால் தளைசெய்யப்பெற்று,

அவர் அடைத்த சிறையகத்தே வாழ்ந்து, அவர்கள் அளிக்கும் உணவினை உண்ணேன் என்ற உறுதிப்பாடு அற்றுத், தம்வயிற்றுப் பசித்தீயை அடக்குவதற்காக, அவரே தாராதநிலையில், தாமே இரந்து வேண்டி, அவர் இகழ்ந்து அளித்த நீரை உண்ணும் இழிநிலையுடைய கீழ்மகன் இவ்வுலகில் என்றும் பிறந்திலன் என்று எண்ணி, எண்ணிய தம் எண்ணத்தை ஓர் ஏட்டில் எழுத்துருவாக்கி அண்மையில் இருத்தி உறங்கிவிட்டான். அவ்வாறு எழுத்துருப் பெற்ற அவன் உள்ளமே இப்பாட்டு :

"குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்,
'ஆளன்று' என்று வாளின் தப்பார்;
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை இன்றி வயிற்றுத்தீத் தணியத்
தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்மரோ இவ்வுலகத்தானே." (புறம் : ௭௪)

'ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று' (திருக் ௯௬௭)

'மருந்தோமற்று ஊனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து' (திருக்-௯௬௮)

என்ற உயர்ந்த பண்பாடு கெடாவகை வாழ்ந்து

'இளிவரின் வாழாத மானமுடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு' (திருக்-௯௭௦)

என்ற குறட்பாவிற்கு அரியதோர் எடுத்துக்காட்டாய் விளங்கிய அவன் உள்ளச் சிறப்பினை விளக்க இவ்வொரு பாட்டே போதுமன்றோ?

சேரமான் கணைக்கால் இரும்பொறையின் அவைக்களத்தே இருந்து அவன் வெற்றிச்சிறப்பினையும், மறனிழுக்கா மானம் நிறைந்த அவன் பண்பாட்டுப் பெருமையினையும் பாடிமகிழும் புலவராகிய பொய்கையார், அரசனுக்கு நேர்ந்த கதியினைக் கண்டார்; கலங்கினார்; அவனைச் சிறைவீடுசெய்து சிறப்பித்தல் தம் கடன் என உணர்ந்தார்;

சோழன் செங்கணான், சேரனைச் சிறைசெய்த கொடி யோன் எனினும், புலவர்பாலும், அவர்தம் பாக்கள் பாலும் பெரு மதிப்புடையான் என்பதை அறிவாராதலின், உடனே அவனரசவை அடைந்து, அவனுக்கும் இரும்பொறைக்கும் நடந்த கழுமலப் போரின் சிறப்பையும், அதில் செங்கணான் பெற்ற வெற்றிச்சிறப்பினையும் பாராட்டிக் 'களவழிநாற்பது' என்ற பெயரால் நாற்பது பாக்களைப்பாடி நின்றார்; அவர் பாடற்பொருளும் பெருமையும் உணர்ந்த செங்கணான் அவர் உள்ளம் உவக்கும் வண்ணம், அவர் அன்புகாட்டும அரசனாய சேரமானைச சிறையினின்றும் விடுத்து அவர்பால் ஒப்படைத்து மகிழ்ந்தான்; அவற்றுள் சில.

"களவழிக் கவிதை பொய்கை உரைசெய்ய, உதியன்
காலவழித்தளையை வெட்டி அரசிட்ட பரிசும."
(கலிங்கத்துப்பரணி.)

"இன்னருளின்
மேதக்கபொய்கை கவிகொண்டு வில்லவனைப்
பாதத்தளைவிட்ட பார்த்திபனும்" (விக்கிரமசோழனுலா.)

"பொறையனைப் பொய்கை கவிக்குக்
கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோனும்"
(குலோத்துங்கசோழனுலா.)

"பொய்கை களவழி நாற்பதுக்கு
வில்லவன் கால்தளையை விட்டக் கோன்"
(இராசராசசோழனுலா.)

"செய்கை அரியகளவழிப்பா முன்செய்த
பொய்கை யொருவனாற் போந்தரமோ?" (பழம்பாடல்.)

பெரும்புலவர் ஒருவரின் அரிய நண்பனாய் விளங்கிய சேரமான் கணைக்காலிரும்பொறை தானும் ஒரு புலவனாய் விளங்கி, 'மறனிழுக்கா மானம் உடைய' அக்கால அரசர்களின் உள்ளத்தினையும், அவ்வாழ்க்கையைப் பேணிப் போற்றுதற்கு அவர் துணையாக மேற்கொண்ட வழக்கங்களையும் விளங்க உரைத்த வேந்தனாதல் கண்டு மகிழ்க.

## ௬. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை

தமிழரசர்கள் தாம் வெற்றிபெற்ற போர்க்களப் பெயர்களைத் தம் பெயர்களோடு இணைத்து ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதி, தெள்ளாறெறிந்த நந்திவர்மன் என வழங்கிப் பெருமை கொண்டாடுவதைப் போன்றே, அவ்வரசர்கள் இறந்த இடங்களையும் அவர் பெயர்களோடு இணைத்து வழங்கி வரலாற்றிற்குத் துணைபுரிந்தனர்; சிகற்பள்ளித்துஞ்சிய செல்வக் கடுங்கோவாழியாதன், காரியாற்றுத்துஞ்சிய நெடுங்கிள்ளி, இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி, குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன், வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, யானைமேல் துஞ்சிய இராசகேசரி இராசாதிராசன் என்ற பெயர்களைக் காண்க.

சேர நாட்டில் கோட்டம்பலம் என்றோர் ஊர் உண்டு; அஃது, இப்போது அம்பலப்புழை என வழங்குகிறது; இந்த அம்பலப்புழை இன்றும் பழங்காலச்சிறப்பு வாய்ந்துளது; இதையடுத்து மாக்கோதை மங்கலம் என்ற பெயருடைய ஓர் ஊரும் காணப்படுகிறது; மாக்கோதை என அழைக்கப்பெறும் சேர அரசன் ஒருவன் தன் இறுதிக் காலத்தில் அக் கோட்டம்பலத்தில் வாழ்ந்து உயிர்விட்டானாதலின், அவனைக் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை எனப் பெயரிட்டு அழைத்தனர்; "சில ஏடுகளில் கோட்டம்பலத்துத் துஞ்சிய என்பது கூத்தம்பலத்துத் துஞ்சிய எனக் காணப்படுகிறது; சேரநாடு கூத்துகளுக்குப் பெயர்போயது; கூத்து நடைபெறும் கூத்தம்பலங்கள் பல, அந்நாட்டின் பல பகுதியிலும் காணப்படும்; நம் மாக்கோதை அத்தகைய கூத்தம்பலத்தே இருந்து ஆங்கு நடைபெற்ற கூத்தொன்றைக் கண்டிருந்தவழி உயிர்துறந்

தான்; அதனல் அவன் பெயர் கூததம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை என வழங்குவதாயிற்று" என்று கூறுவர் சிலர்; கிள்ளி, வளவன் என்பன சோழர்களைக் குறிப்பன போலவும், வழுதி, மாறன் என்பன பாண்டியர்களைக் குறிப்பன போலவும், கோதை என்பது சேரர்களைக் குறிக்க வரும் பெயர்களுள் ஒன்றும்

சேரமான் கோட்டம்பலத்துத்துஞ்சிய மாக்கோதை பாடிய பாடல்களில் நமக்குக் கிடைத்தவை இரண்டு; ஒன்று, இரவுக்குறி வந்து திறரும் தலைமகன்பால அவன் வரும் வழியேதமகூறி வருதலை விலக்கி விரைதலைவேண்டும் அகநானூற்றுப பாடல், மற்றொன்று, இறந்த தன் மனைவியை ஈம ஒள்ளழல் எரிபபதுகண்டு வருந்திப் பாடிய கையறு நிலைசசெய்யுள். அது புறநானூற்றில வந்துள்ளது; அகநானூற்றுப் பாடலில் சின்னுடகளுக்கு முன்னரே பிறந்ததும், தளாநடைகொண்டு அசைந்து அசைந்து இயங்குவதுமாகிய தன் கன்று அருவிகளின் இன்னேசை யால மயங்கி உறங்கிக்கொண்டிருக்க, அதற்குக் காவலாய்த் தன் பிடியினைத தழுவிகொண்டு நிறகும களிறு ஒன்றின் அன்பு வாழ்க்கையினையும், அவ்வன்பு வாழ்க்கைக்கு ஊறு விளைக்கச, சூழ்நதுநிறகும் மலைக் குகைகளிலிருந்து முழங்கும புலிகளின் கொடுவாழ்க்கையினையும நன்கு எடுத்துக் காட்டியுள்ளார்; நம்மைப பிரியாது கலந்திருப்பதை மகிழ்நது வரவேறகிறோம் எனினும, நீ வரும வழியேதம் கண்டு விடியுமவரை நீகலங்கும் கண்களோடு நிற்க வேண்டியவராகிறோம்; ஆகவே இரவு வருதலைத் தவிர்க எனக் கூறும மகளிரின் அன்பு உள்ளத்தையும், தலைமக னுக்குக கேடு உண்டாகுமோ என அஞ்சும் அவர் தம் அருள் உள்ளததையும எடுத்துக்காட்டியுள்ளார்; மாக்கோதை யின் குடிப்பற்று குன்றிலிட்ட விளக்கெனத தோன்றி விளங்குவதை இப் பாட்டில் காண்கிறோம்: யானைக்கன்றை உறங்கவைக்கும் அருவியோசைக்குத் தான் பிறந்த சேரர் குடிவந்த முன்னேனுகிய பெருஞ்சோற்றுதியன் சேரலாதன் என்பான் அளித்த சோற்றுப் பரிசிலினை அவன்

அறச்சாலை அடைந்து பெற்று உண்ணவருவார் ஆண்டுச் செய்யும் பேரொலியினை உவமையாககிக் கூறியதோடு, அவ் வுதியன், கொடுப்பதைத் தன் பிறவிக்கடமையாகக் கொண்டவன; இவர் ஏதிலார்; இவர் இனியார் என்ற எண்ணமற்ற நடுநின்ற உள்ளத்தவன் என்று பாராட்டியும் உள்ளார:

"கொடைக்கடன் என்ற கோடா நெஞ்சின்
உதியன அட்டில்போல ஒலியெழுந்து
அருவியார்க்கும் பெருவரைச சிலம்பின்
ஈனறணி இரும்பிடி தழீஇக் களிறுதன்
தூஙகு நடைக குழவி துயில்புறங காப்ப
ஒடுங்களை புலம்பப் போகிக கடுஙகண்
வாள்வரி வயப்புலி கணமுறை உரற." (அகம்: கசஅ)

அவர் பாடிய புறநானூற்றுப் பாடல், மாக்கோதை தன் மனைவிபால் கொண்டிருநத பேரன்பைப் புலப்படுதது வதாம். மாக்கோதையின் மனைவியாராகிய அரசமாதேவி யார் இறநதுவிட்டார; இறநதார் உடலை ஈமத்தீயிலிட்டுக் கொளுததிவிட்டனர்; எரிகின்றது அவர் உடல்; அதைக் கண்டு நிற்கும் மாக்கோதையார உள்ளம் கழிந்தகாலக் காதல்வாழ்வை எண்ணித துயரஉறுவதாயிற்று; அவ ளோடு கூடிவாழ்நத காலததே 'பிரியேன்; பிரியேன் உயிர் தரியேன்' என்றும, 'காதல், காதலின்றேல் சாதல்' என்றும் வழங்கிய வன்புரைகளை எண்ணினார்; ஒருவரை யொருவர் பிரிநது வாழமுடியுமா என வாழ்ந்த அக்கால வாழ்க்கையினை எண்ணிபபார்த்தார்; அவர் உள்ளம் நாணிற்று; "இன்று அவள் இறந்துவிட்டாள்; அவளுடல என் கண் முன்னரே இதோ பற்றி எறிகிறது; அதைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்; எனினும் என் உயிர் போய்விடவில்லை. வாழ்கிறது என் உயிர; இந்நிலை என் னைப் பெரிதும் வருத்துகிறது; அவள் இறந்ததால் நான் பெற்ற நோய் அத்துணைப் பெரிதன்று; பிரிவுத்துயர் உண்மையில் மிகப் பெரிதாயின் அஃது என் உயிரையு

மன்றோ கொண்டுபோயிருத்தல்வேண்டும்; ஆனால் அது, அதைச் செய்யவில்லையே, உயிரைக்கொண்டுபோம் ஆற்றல் அவள் பிரிவுத்துயர்க்கில்லை; என்றால், இஃது உண்மைத் துயரன்று; இறந்த மனைவியை எண்ணி உண்மைத் துயருறு யான் அவள்பால்கொண்ட காதலும் உண்மைக்காதலன்று போலும்! என்னே இவ்வுலகியல்! என்னே இவ்வியற்கை யின் திருவிளையாடல்!" என்றெல்லாம் ஆறறி அழுவா ராயினர்:

"யாஙகுப் பெரிதாயினும் நோயளவு எனைத்தே?
உயிரசெகுக்கல்லா மதுகைதது அனமையின?
கள்ளி போகிய களரியம பறந்தலை
வெள்ளிடைப் பொததிய விளைவிற கீமத்து
ஒளளழற் பள்ளிப் பாயல சோத்தி
ஞாங்கா மாய்ந்தனள் மடந்தை,
இன்னும வாழ்வல்; என் இதன் பணபே!"

(புறம்: உசுடு)

இக்கருத்தொப்பத தண்டியலங்கார மேற்கோட் செய்யுளினும் வருதல் காண்க:

"கழல்சேர்ந்த தாள்விடலை காதலிமெய் தீணடும
அழல்சோந்து தனனொடு சயர்ந்தான்—குழலசேர்ந்த
தாமம் தரியா தசையும் திருமேனி
ஈமம் தரிக்குமோ எனறு." (தண்டி. சூ. கூஅ. மேற்கோள்)

## ரு. சேரமானெந்தை

இருந்து இல்லறம் ஆற்றும தலைமகன், அவ்வில்லற வாழ்க்கை இனிது நடைபெறுதற்குப பெரும் பொருள் வேண்டும, அபபொருளைத் தேடிக் கொணர்தல் ஆண்மகற் குற்ற கடமை என உணர்ந்து, அப்பொருளீட்டும் முயற்சி மேற்கொண்டு வெளிநாடு செல்லததுணிவன்; வெளிநாடு செலவோர் தம மனைவியரையும் உடன்கொண்டு செல்லு தல் இயலாது, அதனல், அன்றுவரை பிரிந்தறியாத தம் மனைவியைப பிரிநதுசெலலவேண்டுமே என்ற எண்ணம் அவனைப பெரிதும கலக்குவதாயிற்று; பிரியாது இருப பதோ அரிது என்பதையும உணர்கிருன்; சென்றுவரும் எண்ணமுடையேன் என்று கூறவும் அஞ்சுகிருன்; இறுதி யில் தன் கருததினை எவ்வாருயினும் அவள் உணரவைததல் வேண்டும என உறுதிகொண்டான்; தன் கருததினைத தெளிய உரைக்காது குறிபபான் உணாததத தொடங் கிஞன்.

மனைவிபால் அன்றுவரை காட்டாத பேரன்பு காட்டத் தொடஙகிஞன்; கணவன்பால் காணும் இம்மாற்றம தலை விக்கு அச்சததை உண்டாக்கிற்று; அமைதி புயலுக்கு அறிகுறி என்ப, தலைவன் செய்யும் இத்தலையளிக்குக் காரணம இருததல்வேண்டும் என உணாந்தாள்; அவள் உள்ளம் சிறிதே நடுஙகததொடங்கிற்று; அந்நிலையில் அவன் வெளிநாடு செல்லுஙகால் துணையாக எடுத்துச் செல்வதற்கு என வேல்களைத் துடைததுச் செப்பனிடுவ தைக் கண்டாள்; அவள ஐயம் உறுதியாயிற்று; தலைவன் பிரிந்து வெளிநாடு செல்லப்போகிருன் என்பதை உணர்ந் தாள்; உடனே தோழியை அழைத்து, "தோழி! நம தலைவர் இப்போது செய்யும் மிக்க தலையளியும், அவரின் வேறு சில செயல்களும், அவர் பிரியும உள்ளததவர் என்பதை உணர்த்துகின்றன; அவரைப் பிரிந்து யான் எவ்வாறு உயிாவாழ்வேன்?" என்று கூறிக் கண்ணீர் விட்டுக் கலங்குவாளாயினள்! தோழியோ தலைவன் பிரிந்து செல்வான்; அஃது அவன் கடமைகளுள் ஒன்று என்றெல்

ம் உணர்வாள்; என்றாலும் எதையாவது கூறித் தலைவி
பத தேற்ற எண்ணினாள், தலைவன் வெளிநாடு செல்வதற்
ன முயற்சிகள மேற்கொண்டதையெல்லாம தலைவி
ண்டுள்ளாள ஆதலின், தலைவன் செலவின் எனக
றினை ஏற்றுக்கொள்ளாளாதலின், "தோழி! தலைவர்
ன்னைப்பிரிந்து செல்லார் என்றே யான் எண்ணுகிறேன்;
னால அவர் செல்வது உறுதி என்று நீ கூறுகின்றனை;
வ்வாறாயின், அவர் தனித்துச் செல்வாரல்லர், நின் நுதல
றும நறுமணம அவரைப் பிரியவிடாது, நின் நுத
றகினும், நின் கண்களில் தேங்கிநிற்கும் கண்ணீர்,
னித்து விட்டுச்செல்லும துணிவினை அவர்க்கு அளிக்
து, அதைக் கண்டபின்னரும விட்டுப்பிரியும அத்துணை
ருளற்றவர் அல்லர் நம தலைவர், அவர் நின்னையும் உடன்
காண்டே செலவர்; அழுவதொழிக," என்றெல்லாம்
றித் தேற்றுவாள எனக்கூறி அக்கால மக்களின் பண்பு
பற்ற வாழ்க்கையின் சிறப்புக்களை வகுத்துக் காட்டுகிறார்
ரபுலவர் சேரமானெந்தை:

"நீர்வார் கண்ணை நீ இவண் ஒழிய
யாரோ பிரிகிற்பவரே ......
தேம்ஊர் ஒண்ணுதல்! நின்னொடும் செலவே."

(குறுந் 22)

## ௯. நம்பி குட்டுவனார்

செந்தமிழ் நிலத்தைச் சார்ந்துநின்ற பன்னிரண்டு
ந் தமிழ்நாடுகளில் குட்ட நாடு என்பதும் ஒன்று ;
மேலைக் கடற்கரையினைச் சேர்ந்து நிலவிய நாடாகும்:
_ நாட்டார் தாயைத் தள்ளை என அழைப்பர்
ர உரையாசிரியர்கள் இக்குட்ட நாட்டினை ஆளும்
ம பூண்ட காரணத்தால் சேர அரசர்கள் குட்டுவர்
அழைக்கப்பெறுவர் பெண்பாலிற் சிறந்தாளை
ந என்னும், ஆடவரிற் சிறந்தானை நம்பி என்னும்
ர வழக்கு சேரர் குடியிற் பிறந்து, அறிவாலும்,
மையாலும், அரசியல் திறத்தாலும் சிறந்து விளங்கின
ால நம்புலவர், நம்பிகுட்டுவனார் என்ற பெயர் பெற்று
யினார்.

நம்பிகுட்டுவனார் பாடிய பாடல்களுள் நமக்குக்
த்தன அகத்துறைப்பொருள் தழுவிய பாடல்கள்
த : எனினும் புலவரின் பெருமையினை விளக்குதற்குக்
-த்துள்ள அவ் ஐந்து பாடல்களே சாலும்

“தலைவன் வரையாது வந்து துயர் செய்கின்றான்
னும், அவனுக்குக் கேடுவருதல் கூடாது ; அன்னையோ
ர் யானை கொன் என்று கேட்கிறாள் , இந்நிலையில், ‘அவன்
நம் சேரிசேர வருகின்றதே என் செய்வேன் ?’ என
ாக்காக வருந்தும் இறப்ப உயர்ந்த மலைகள் உள்ளத்
ம், அவன் வரையாது செய்யும் துயரை, அவன் மலை
து குளிர்ந்து வரும் காற்றால் போகக்கட்டும் ; தோழி!
ாற்று வீசும் முன்றிற்கு என்னை அழைத்துச் செல்வா
” எனக் கூறும் அவள் அன்பின் ஆழத்தையும், அரிய
பாடல்கள் துணைபுரிகின்றன தான் மேற்கொண்
ழுகும் களவொழுக்கம் கண்டு கடியும் தன் தாயினை
போல் கொடிய நெஞ்சுடையாள் ‘நிரைய நெஞ்சத்து
[illegible]

லாம் உணர்வாள்; என்றாலும் எதையாவது கூறித் தலைவியைத் தேற்ற எண்ணினாள், தலைவன் வெளிநாடு செல்வதற்கான முயற்சிகள் மேற்கொண்டதையெல்லாம் தலைவி கண்டுள்ளாள் ஆதலின், தலைவன் செல்லான் எனக் கூறினால் ஏற்றுக்கொள்ளாளாதலின், "தோழி! தலைவர் நின்னைப் பிரிந்து செல்லார் என்றே யான் எண்ணுகிறேன்; ஆனால் அவர் செல்வது உறுதி என்று நீ கூறுகின்றனை; அவ்வாறாயின், அவர் தனித்துச் செல்வாரல்லர். நின் நுதல் நாறும் நறுமணம் அவரைப் பிரியவிடாது, நின் நுதலழகினும், நின் கண்களில் தேங்கிநிற்கும் கண்ணீர், தனித்து விட்டுச்செல்லும் துணிவினை அவர்க்கு அளிக்காது, அதைக் கண்டபின்னரும் விட்டுப்பிரியும் அத்துணை அருளற்றவர் அல்லர் நம் தலைவர், அவர் நின்னையும் உடன் கொண்டே செல்வர்; அழுவதொழிக," என்றெல்லாம் கூறித் தேற்றுவாள் எனக்கூறி அக்கால மக்களின் பண்பு பெற்ற வாழ்க்கையின் சிறப்புக்களை வகுத்துக் காட்டுகிறார் நம்புலவர் சேரமானெந்தை:

"நீர்வார் கண்ணை நீ இவண் ஒழிய
யாரோ பிரிகிற் பவரே ......
தேமலர் ஒண்ணுதல்! நின்னொடும் செலவே."

(குறுந். 22)

## ௩. நம்பி குட்டுவனார்

செந்தமிழ் நிலத்தைச் சார்ந்து நின்ற பன்னிரண்டு கொடுந் தமிழ்நாடுகளில் குட்ட நாடு என்பதும் ஒன்று; அது மேலைக் கடற்கரையினைச் சேர்ந்து நிலவிய நாடாகும்: 'குட்ட நாட்டார் தாயைத் தள்ளை என அழைப்பர்' என்பர் உரையாசிரியர்கள் இக்குட்ட நாட்டினை ஆளும் உரிமை பூண்ட காரணத்தால் சேர அரசர்கள் குட்டுவர் என அழைக்கப்பெறுவர். பெண்பாலரிற் சிறந்தாளை நங்கை எனவும், ஆடவரிற் சிறந்தானை நம்பி எனவும் புலவர் வழக்கு. சேரர் குடியிற் பிறந்து, அறிவாலும், ஆண்மையாலும், அரசியல் திறத்தாலும் சிறந்து விளங்கினமையால் நம்புலவர், நம்பிகுட்டுவனார் என்ற பெயர் பெறுவாராயினார்.

நம்பிகுட்டுவனார் பாடிய பாடல்களுள் நமக்குக் கிடைத்தன அகத்துறைப்பொருள் தழுவிய பாடல்கள் ஐந்தே: எனினும் புலவரின் பெருமையினை விளக்குதற்குக் கிடைத்துள்ள அவ் ஐந்து பாடல்களே சாலும்.

"தலைவன் வரையாது வந்து துயர் செய்கிறான் எனினும், அவனுக்குக் கேடுவருதல் கூடாது; அன்னையோ அவன் யாரென்று என்னைக் கேட்கிறாள், இந்நிலையில், 'அவன் தோள் நம் சேரிச் சேர வருகின்றதே என் செய்வேன்?' என அவனுக்காக வருந்தும் இறப்ப உயர்ந்த தலைமகள் உள்ளத்தையும், அவன் வரையாது செய்யும் துயரை, அவன் மலை படிந்து குளிர்ந்து வரும் காற்று வந்து போக்கட்டும்; தோழி! அக்காற்று வீசும் புறத்தே என்னை அழைத்துச் செல்வாயாக," எனக்கூறும் அவள் அன்பின் ஆழத்தையும், அறிய அவர் பாடல்கள் துணை புரிகின்றன. தான் மேற்கொண்டொழுகும் களவொழுக்கம் கண்டு கடியும் தன் தாயினை நாகம்போல் கொடிய நெஞ்சுடையாள் 'நிரைய நெஞ்சத்து அன்னை,' அற உள்ளம் அற்றவள் 'அறனில் அன்னை' என்றெல்லாம் கடிந்து கொள்ளும் தலைமகளை அவர் பாக்கள் அன்றோ நமக்கு அறிமுகம் ஆக்குகின்றன?

தன் மனத்திற்காம் பொருளைத்தானே தேடிப்பெறல் வேண்டும் என்ற பேருள்ளம் கொண்டு பொருள்வயிற் பிரியக்கருதும் தலைமகன், தலைவிபால், சென்று, 'விரைந்து வந்து வரைந்து கொளவேன்; சற்றே ஆற்றியிரு' எனக் கூறிய வழி, 'தலைவ! உலகம, நம்பிக்கை என்ற ஒன்று அடிப்படையாக இருபபதினலேயே அழியாது இயங்குகிறது, அந நமபிக்கை அறறுப போயின உலகம் இயங்காது, ஆகவே, அந நம்பிக்கை அறாது இருக்கப் பார்ததுக் கோடல பெரியோரதம கடனும; நீயோ அருள உளளததவன், பெரிய நட்புக குணமுடையவன்; அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம, வாய்மை என்ற குணஙகளால் நிறைநத சான்றேன, நீதியில் வழுவா நடுநிலை நெறியாளன் என்றெல்லாம கூறததகக பெரியோன, ஆகவே, 'பிரியேன்; பிரியின், உயிர தரியேன்' என்று அன்று நீ கூறிய தெளிவுரைகளை நமபியே நினபால் அனபு கொண்டோம்; ஆனல், இன்று 'பிரிகினறேன், என்றாலும விரைந்து வநது விடுவென' என்கினறனை, பிரியேன் என்று அன்று சொன்ன சொல்லையே அழித்துவிட்டனை, அதனல் நின் உறுதிமொழியின்பால் கொண்ட நம்பிகையினை அழித்து விட்டாய்; இன்று மீண்டும ஓர உறுதி மொழி கூறுகின்றனை; இதை நாஙகள எவவாறு நம்புவது? இத்துணைப் பெரியவராகிய தங்களையே நம்ப இயலவில்லை எனில, இனி இவ்வுலகில நமபிக்கை நிலவுவதே அரிது; மக்கள் இனி நமபிகைகை இழபபார்களாக,' என அவள் கூறினள் எனபபாடி நமபிகைகை இழக்கவிடுதல் நன்றன்று எனப புலவர கூறும் புதுமையினைக காண்க:

"அரிய பெரிய கேணமை நுமபோல்
சால்பெதிர கொண்ட செமமை யோரும்
தேறு நெஞ்சம கையறுபு வாட
நீடின்று விரும்பா ராயின்
வாழ்தல் மற்றெவனே? தேய்கமா தெளிவே." (நற். ௩௪௫.)

உள்ளம் ஒருவழி நில்லாமல் எதையாவது எண்ணிக் கொண்டிருந்தால் உறக்கம் வாராது என்ப; வறுமை

போன்ற காரணங்களால் உள்ளம் அமைதியற்று இருக் கின்ற காலத்தில் உறக்கம் வருவதில்லை ; அவர் எத்துணை முயன்றாலும் உறக்கம் கொள்ளார்; உடற்றுயர் பெரிய அளவில் பெற்றிருப்பினும், அதனைப் பொருட்படுத்தாது உறங்குதல் கூடும்; ஆனால் உள்ளத்துயர் உடையார் உறக்கம் கொள்வது சிறிதும் இயலாது; திருவள்ளுவர், இவ்வுண்மையினை உணர்ந்து,

> "நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்; நிரப்பினுள்
> யாதொன்றும் கண்பாடு அரிது." (திருக் : க0சக.)

எனக் கூறியிருப்பது காண்க.

இந்த உண்மையினைப் புலவர் நம்பிகுட்டுவனார் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார் தலைமகன் பொருள்வயிற் பிரிந்து விட்டான், 'பிரிந்தவன் விரைந்து மீண்டிலனே' என்ற எண்ணம் அலைக்க வாழ்கிறாள் தலைமகள் ; அதனால் அவள் உறக்கம் கொண்டிலள், உறக்கம் இன்மையால் உடல்நலம் குன்றத் தொடங்கிற்று ; அது கண்டு கவன்ற அவள் தோழி, தலைவியைக் கடிந்து கொண்டு 'உடல நலம் கெட்டொழியுமாறு உறக்கம் கொள்ளாதிருத்தல் நன் றன்று, சிறிது பொழுதாவது உறங்குதல் வேண்டும்' என்றனள், அதற்கு அவள் "தோழி! அவரை நான் நினைந்துக் கொண்டேயிருப்பதால் என் கண்கள் உறங்குவ தொழிந்தன, நீயோ உறங்குவாயாக, உறங்குவாயாக என ஓயாது உரைக்கின்றனை ; யான் உறங்க வேண்டுமாயின், அஃது அவரையுள்ளுவதை ஒழித்தால்தான் இயலும் ; நினக்காக அவரையுள்ளுவதை இனி ஒழிக்கின்றேன் ; என் கண்கள் இனியாவது இனிது உறங்குமாக," என்று கூறினாள் என்ற கருத்தமைந்த குறுந்தொகைப் பாட்டில் புலவர் கருத்துப் புலனாதல் காண்க :

> "சோப்பனை
> உள்ளேனே; தோழி! படீஇயர் என் கண்ணே."
>
> (குறுந் : உசரு.)

# எ. பாலைபாடிய பெருங்கடுங்கோ

> "வெண்பாவிற் புகழேந்தி, விருத்தமெனும்
> ஒண்பாவிற் குயர் கம்பன்"

என ஒவ்வொருவகைப் பாவினம் பாடுவதில் ஒவ்வொருவர் சிறந்து விளங்குவர் எனப் பாராட்டுவதைப் போன்றே, பழங்காலப் பாவலர்கள் பெரிதும் பாராட்டிப் பாடிய பொருள்களை அவர்களுக்கு அடையாகத் தந்து பாராட்டியுள்ளனர். காக்கைபாடினியார், நச்செள்ளையார், கோடைபாடிய பெரும்பூதனார், நோய்பாடியார், பாரதம்பாடிய பெருந்தேவனார், மடல்பாடிய மாதங்கீரனார், மருதம்பாடிய இளங்கடுங்கோ, வெறி பாடிய காமக்கண்ணியார் என்ற பெயர்களைக் காண்க. அவ்வாறே புலவர் பெருங்கடுங்கோ, ஐந்திணைகளுள் பாலைத் திணை ஒழுக்கத்தினைப் பலவாற்றானும் விரித்துப் பாடியுள்ளாராதலின், அவர் பாலைபாடிய பெருங்கடுங்கோ என அழைக்கப்பட்டுள்ளார். பேய்மகள் இளவெயினி என்பார் பாடிய புறநானூற்றுப் பாடல் ஒன்றின் கீழ், "சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பேய்மகள் இளவெயினி பாடியது," என எழுதியிருத்தலினால், இவர் சேரர் வழி வந்தவர் என்பது புலனாம்.

> "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
> வலவன் ஏவா வானவூர்தி எய்துப" (புறம் உஎ)

என்ப பாவலர் காவலனாயச் சிறப்புற்றதோடு, பாவலரும் பாராட்டும் பெருமை மிக்காருள் நம் பெருங்கடுங்கோவும் ஒருவர். "நம்சேரர் பெருந்தலைக்குரிய கருவூர் வானுற உயர்ந்த வெற்றிப்புகழ் கொண்டது, அக்கருவூரை அணைத்துப்பாயும் பொருநை ஆற்றில் அந்நாட்டு இளமகளிர் மணற்பாவைசெய்து மலர் சூட்டியும், ஆற்றுப் புனலில் படிந்தும் ஆடி மகிழ்வர்; அக்கருவூரில் இருந்து ஆட்சி புரியும் நம் பெருங்கடுங்கோ இவரைப் புலவர் பாடுதற்காம் பேராற்றல் வாய்ந்தவன்; கடிய அரண் பல கடந்து; அப்பகைவர் பணிந்துதந்த பெரும்பொருள் கொண்டவன், பகைவர்பால் கொண்ட பெரும்பொருளுடையானைப் பாடிய

பாண்மகள், பலகழஞ்சு நிறையுள்ள பொன்னரி மாலையைப் பரிசாகப் பெறுவள்; பாண்மகள் பின்னின்று இசைபாடும் பாண்மகன், வெள்ளிநாரால் தொடுக்கப்பெற்ற பொற்றாமரை மலரைப் பெறுவன்," என்று, நம்புலவரின் பேராண்மையும் பெருங்கொடையும் ஒருங்கே தோன்றுமாறு பேய்மகளார் பாடியுள்ளார்.

"அரிமயிர்த் திரள்முன்கை
வாலிழை மடமங்கையர்
வரிமணல் புனைபாவைக்குக்
குலவுச்சினைப் பூக்கொய்து
தண்பொருநைப் புனல்பாயும்
விண்பொருபுகழ் விறல்வஞ்சிப்
பாடல்சான்ற விறல்வேந்தனும்மே,
வெப்புடைய அரண்கடந்து
துப்புறுவர் புறம்பெற்றிசினே;
புறம்பெற்ற வயவேந்தன்
மறம்பாடிய பாடினியும்மே
ஏருடைய விழுக்கழஞ்சிற்
சீருடைய இழைபெற்றிசினே.
இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர் சீர்க் கொளைவல் பாண்மகனும்மே
எனவாங்கு
ஒள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாரால் பூப்பெற்றிசினே" (புறம் · கக)

பாலைபாடிய பெருங்கடுங்கோ, பேராற்றலும் பேராண்மையும் கொண்டு பகைவரைப் பணியவைக்கும் பெருவீரனவன் என்பதைப் பேய்மகள் இளவெயினியார் கூற்றேயன்றி, பெருங்கடுங்கோ பாடிய பாட்டொன்றும் விளங்க உணர்த்துகிறது. பாய்ந்துவரும் பகைவர் படையினை எதிர்த்துப் போரிட்டுத் துரத்தி வெற்றிபெற்றான் ஒரு வீரன்; ஆனால் மேற்கொண்ட அப்போரில், பகைவர் எறிந்த வேல்களும் வாள்களும் பாய்ந்தமையால், அவன் உடல் கண்ணிற்குப் புலனாகாவாறு சிதைந்து அழிந்து

விட்டது; அவனும் இறந்துவிட்டான்; இத்தகைய பெரு வீரனைக் "கடன் முடித்த காளை" எனப் பாராட்டியதோடு, பெரும்புகழ் பாரிலே நிற்க, அவன் புலவர்வாய்ப் பாவிலே சென்று மறைந்துவிட்டான் என்றும் பாடிப் பாராட்டியுள்ளார்.

> "எஃகு உளம்கழிய இருநில மருங்கின்
> அருங்கடன் இறுத்த பெருஞ் செயாளனை
> யாண்டுளனோ என வினவுதி யாயின்,
>
> .. ..... . ............. ........
> சேண் விளங்கு நல்லிசை நிறீஇ
> நாநவில்புலவர் வாயுளானே." (புறம். ௨௮௨)

பாலைபாடிய பெருங்கடுங்கோ, பாலைத்திணை பாடுவதோடு, அப்பாலைத்திணைக்கிடையே, பழந்தமிழ் வரலாறு சிலவற்றையும் கூறுகிறார். சேரர் குலத்தோடு தொடர்புடைய நன்னன் என்பானொருவன், சேரநாட்டை அடுத்துள்ள கொண்கான நாட்டை ஆண்டிருந்தான். அவன் நாடு பொன்வளம் மிக்கது; வேளிர் என்பார் தாம் அரிதிற் சேர்த்த தம் பெரும்பொருளை வைத்துக் காக்கத்தக்க அரிய காவல்செறிந்த பாழியும், பாரமும் அவனுக்குரிய பேரூர்களாம்; நன்னன் பெரிய வீரன்; சிறந்த கொடையாளன்; அவன் நாட்டில் ஏழிற்குன்றம் என்ற பெயருடைய சிறந்த மலை ஒன்றுண்டு, அது புலவர் பாடும் புகழுடையது எனப் புலவர் பாராட்டுவர்; அது செல்வத்திற் சிறந்தது; இந் நன்னன் என்பானையும் அவன் கொண்கான நாட்டையும், அவன் ஏழிற்குன்றையும் எழில் பெறப் பாடியுள்ளார் நம்புலவர்:

> "பொன்படு கொண்கான நன்னன் நன்னாட்டு
> ஏழிற்குன்றம் பெறினும் பொருள்வயின்
> யாரோ பிரிகிற் பவரே?" (நற். ௩௯௧)

புலவர் பெருங்கடுங்கோ பாடிய பாடல்கள், எட்டுத்தொகை நூல்களில் நற்றிணை, நல்லகுறுந்தொகை, கற்றறிந்தார் ஏத்தும்கலி, அகம், புறம் ஆகிய ஐந்து நூல்களில்

இடம்பெற்றுள்ளன. இப்போது தமிழகம் அறிய உள்ள அவர் பாடல்கள் அறுபத்தேழு; அவற்றுள் ஒன்றுமட்டுமே புறத்திணை தழுவியது; ஏனைய அறுபத்தாறும் அகப்பொருள் தழுவியனவே; அகப்பொருட் பாடல்கள் அறுபத்தாறில், குறிஞ்சிப்பொருளில் ஒன்றும், மருதப்பொருளில் ஒன்றும் இடம்பெற எஞ்சிய பாடல்கள் அறுபத்து நான்கும் பாலைப்பொருள்பற்றியே வந்துள்ளன; பாலை நிகழ்ச்சி, களவு, கற்பு ஆகிய இரு நிலையிலும் உண்டாம்; பாலைப் பொருள் குறித்த பாடல்கள் அறுபத்து நான்கில், ஆறு பாடல்கள் களவுக்காலத்துப் பாலைப்பொருளிலும், ஏனைய பாடல்கள் கற்புக்காலத்துப் பாலைப்பொருளிலும் வந்துள்ளன.

களவுக்காலத்தில் களவொழுக்கம் மேற்கொண்டொழுகும் தலைமகளை அவள் விரும்பும் ஆண்மகனுக்குத் தர அவள் பெற்றோர் மறுத்து வேறு ஒருவனுக்கு மணம் செய்துதர முயன்றவழி, அவள் காதல் வாழவேண்டுமாயின், அவள் கற்பு நிற்கவேண்டுமாயின், அவள் அவனோடு அவனூர்சென்று மணத்தல்வேண்டும் எனத் துணிந்த தோழி, உடன்போக்கிற்கு இருவரையும் இசைவித்தலும், இருவரையும் ஒன்றுகூட்டி யனுப்புதலும், பாலை வழியே அவர்கள் செல்வதும், வழியில் வருவார் அவரைக் கண்டு பாராட்டலும், சென்றவர்களை நினைந்து தாய் வருந்தலும், செவிலி பாலைவழியில் தேடிச்செல்வதும், எதிர்ப்பட்ட அறிஞர் உலகியல்கூறி அவளைத் தெளிவித்தலும் ஆய நிகழ்ச்சிகள் களவுப்பாலைப் பொருள்களாம்.

தலைவன்பால்கொண்டுள்ள தலைவி அன்பு, அவனை இன்றி வாழமாட்டா அவள் நிலைமை, அவள் களவொழுக்கம் கண்டு இற்செறித்துத் துயர்செய்யும் தலைமகள் சுற்றத்தார், ஆகியன கூறித், தலைமகளைக் கொண்டுசென்று மணந்து கொள்வதே செய்யக்கடவது என்று தலைமகனுக்கு எடுத்துக்காட்டி அவன் ஒப்புதலைப்பெற்ற தோழி, தலைவிபால் சென்று, "தோழி! நின் களவொழுக்கம் கண்டு ஊராரும் உறவினரும் கூறும் அலர்ச்சொல் நாணி, இற்செறித்துக்

கொடுமை செய்கின்றாள் நம் அன்னை; இதனால் தலைவனைக் காண்டலும் இல்லாதுபோயிற்று; மேலும் நம் பருவநிலை யறிந்த நம் பெற்றோர் வேற்றுவரைவிற்கு வரவேற்பளிப் பினும் அளிப்பர்; ஆதலின் இனியும் ஈண்டேயிருத்தல் நன்றன்று; நின் கற்பு வாழவேண்டுமாயின், நீ நம் ஊரையும் சேரியையும் மறந்து தாயனையையும் மதியாது தலைவனோடு சென்று மணந்து வாழ்தலை மேற்கொள்ளவேண்டும்; பலவாற்றானும் ஆராய்ந்து கண்ட முடிவு இது. இதுவன்றி வேறுவழி யறிந்திலேன். ஆகவே, இடைவழியில் உதிர்ந்து கிடக்கும் நெல்லிக்கனிகளைத் தின்றும், யானைகளின் கால் பதிந்த பள்ளங்களில் தேங்கித் தெளிந்த நீரைக் குடித்தும் அவரோடு மகிழ்ந்து செல்லத் துணிவாயாக," என்று கூறித் தலைமகளையும் போக்கிற்கு உடன்படுத்துவள்.

"ஊஉர் அலர் எழச், சேரி கல்லென,
ஆனாது அலைக்கும் அறனில் அன்னை
தானே இருக்க தன் மனை யானே,
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க
உணலாகின்றேனெல், அவரொடு சேய்நாட்டு
... .. ..... .. . ......... .........
பெருங்களிற் றடி நிலைஇய நீரே (குறுந் உசஉ)

தலைவியை இரவிடை அழைத்தேகும் தலைமகன், பொழுது புலர்ந்ததும், சுரமும், சுரத்திடை உளவாம் இடை யூறும் கண்டு வருந்துகின்றாள் தலைவி எனக்கண்டு அவள் அச்சம் போக்குமாறு, "அன்புடையாய்! நாம் செல்லும் வழியின் இருமருங்கும் குயில் கூவி விளையாடும் குளிர்ந்த சோலைகள் பல உள்ளன. ஆதலின் வெய்யிலின் வெம்மை கண்டு வருந்தற்க; மேலும் நெறியை அடுத்தடுத்துப் பற்பல சிற்றூர்கள் உள. ஆதலின், சுரத்தின் அருமை கண்டும் அஞ்சற்க; நிழலைக்கண்ட இடங்களில் வழிவரும் வருத்தம் தீர நெடிது தங்கி இளைப்பாறியும், மணல் நிறைந்த இடங் களில் மணல்வீடு கட்டி ஆடி மகிழ்ந்தும் செல்வாயாக," எனக்கூறி மகிழ்விப்பான்:

> "நிழல்காண் தோறும் நெடிய வைகி,
> மணல்காண் தோறும் வண்டல் தைஇ
> வருந்தாது ஏகுமதி வால்எயிற் றோயே!
> மாநனை கொழுதி மகிழ்குயில் ஆலும்
> நறுந்தண் பொழில கானம்,
> குறும்பல் ஊர யாம் செல்லும் ஆறே." (நற் : கூ)

தலைமகன் தன் மகளை வைகிருளிலே கொண்டு சென்றுவிட்டான் என்பதறிந்து, மகளின் பிரிவெண்ணி வருந்தும் நற்றாயின் துயர்காணப் பொறாத செவிலி, "தலைவனும் தலைவியும் யாண்டுச் சென்றுவிடுவர்? நாடுதோறும், ஊர்தோறும், குடிதோறும் சென்று தேடிக் கொணர்வேன், ஆறியிரு," என்று தேற்றித் தலைமகளைத் தேடிச் சுரத்துவழிச் செல்வள், இவ்வாறு தேடிவரும் செவிலியை அறிவர் சிலர் கண்டனர், அவள் துயரக்காரணம் அறிந்த அவர்கள், அவளை நோக்கி, "அம்மையே! கடலிடைப் பிறக்கும் முத்தும், மலையிடைப் பிறக்கும் சந்தனமும், யாழிடைப் பிறக்கும் இன்னிசையும் தாம் பிறந்த கடலுக்கும், மலைக்கும், யாழிற்கும் பயன் அளிப்பதில்லை, அன்றியும் அவை ஆண்டே இருப்பின் அவற்றிற்கும் பயன் இல்லை: அவை, தம்மைப் பயன்படுத்துவாரிடத்தே சென்றால்தான் அவரும் பயன் பெறுவர். அவையும் சிறப்படையும்; அதைப்போன்றே அறிவு ஒழுக்கங்களிற் சிறந்த நின்மகள் நின் இல்லில் இருப்பதால் நினக்கும் பயன்படாள்; அவளும் பொலிவு குன்றுதலல்லது சிறப்படையாள். அவள் சிறந்தானை வழிபட்டு இல்லறப் பயனைப் பெற்றுச் சிறப்படைதலே செயற்பாலதாம், அறந்தலைப்பட்ட ஆறும் அஃதே, ஆகலின் கவலாது மீள்க," என்று கூறித் தேற்றி அனுப்புவர் :

> 'பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை
> மலையுளே பிறப்பினும் மலைக்கு அவைதாம் என்செய்யும்?
> நினையுங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கனையளே,
> சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்கு அல்லதை
> நீருளே பிறப்பினும் நீர்க்கு அவைதாம் என்செய்யும்?
> தேருங்கால் நும்மகள் நுமக்கும் ஆங்கனையளே;

ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க்கு அல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செய்யும்?
சூழுங்கால் நும்மகள் நுமக்கு மாங்கு அனையளே;

எனவாங்கு
இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்,
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்;
அறந்தலை பிரியா ஆறும் மற்றதுவே" (கலி : ௯)

தலைவியை மணந்து இல்லறமாற்றும் தலைவன், கல்வி, காவல், பொருள் இவைகுறித்துப் பிரிந்து வெளிநாடு செல்லக் கருதலும், பிரிந்தால் தலைவி வாழாள் என உணர்ந்து பிரிந்துசெல்லக் கருதும் தன் எண்ணத்தைக் கைவிடுதலும், காதல் உள்ளத்தினும் ஆற்றல் மிக்க கடமையுள்ளம் உடைய அவன் இறுதியில் பிரியத் துணிதலும், தலைவன் கருத்தினைக் குறிப்பால் உணர்ந்த தலைவி வருந்தலும், அவளை ஆற்றுவதற்காகப் பிரியேன் எனத் தலைமகன் பொய்கூறலும், அவ்வாறு தலைவிபால் பொய்கூறிய தலைமகன், அவள் தோழிபால் தன் கருத்தினை உணர்த்தலும், அவள் நாளது சின்மை, இளமையது அருமை, அன்பின் தகலம், அகற்சியது அருமை ஆகியவற்றைக் கூறி அவன் பிரிவைத் தடுத்தலும், பின்னர் உலகியல் அறிந்து அவன் போக்கிற்கு இசைந்த தோழி, தலைவிபால் சென்று, முதலில் அவர் பிரியார் எனக் கூறியும், பின்னர் சிறிது சிறிதாகப் பிரிதல் ஆடவர் கடன் என அறிவித்து அவன் பிரிவுணர்த்தி ஆற்றலும், தலைவன் பிரிந்த காலத்துத் தலைவி வருந்தலும், தோழி அவளை ஆற்றுதலும், சென்ற தலைமகன் இடைச்சுரத்தில் தலைமகளை நினைந்து புலம்பலும், தலைவிமேல் கொண்ட காதற்சிறப்பால் சென்ற வினையினை விரைவில் முடித்து ஊர் திரும்பலும், அவன் மீண்டமையறிந்து தோழி தலைவிக்குக் கூறலும், தலைவி மகிழ்தலும் ஆகிய இந்நிகழ்ச்சிகள் கற்புக்காலத்துப் பாலைப்பொருள்களாம். இந்நிகழ்ச்சிகளைப் புலவர் பெருங்கடுங்கோ, பாலைபாடிய என்ற சிறப்பினைப் பெறுதற்கேற்ற அரிய முறையில் நன்கு

பாடியுள்ளார்; அவையனைத்தையும் எடுத்துக்கூறின் ஏடு விரியுமாதலின், இவற்றுள் ஒன்றுகுறித்துவரும் அவர் பாட்டு ஒன்றைமட்டும் முழுதும்காட்டி, ஏனைய பாக்களில் காணப்படும் அரிய பகுதிகளை மட்டும் எடுத்துக்காட்டிச் செல்ல விரும்புகின்றேன்.

பொருள்வயிற் பிரிந்துவிட்டான தலைவன்; அவன் பிரிவினைப் பொறாத தலைமகள் வருந்துகிறாள்; அவள் துயர் போக்க முயலும் தோழி, அதற்கு அவளுக்கு ஆறுதல் கூறுவதினும், அவள்முன் சென்ற தலைவனின் கொடுமை கூறிப்பழித்தலே பயனளிக்கும் என, அறிந்தாள், அவ்வாறு பழிப்பின், தன்முன் தலைவனைப் பழிகூறலைப் பொறாத தலைவி, தன் துயர் மறந்து தலைவன் புகழ் பாடத் தொடங்கிவிடுவாள்; இந்த உண்மையுணர்ந்த தோழி, தலைவியைப் பிரிந்துசென்ற தலைவனின் கொடுமையினையும், அவன் சென்ற வழியின் கொடிய நிலையினையும் கூறி, 'இத்தகைய கொடிய வழியிலே சென்ற அவர் எப்போது வருவாரோ? அதுவரை இவள் நிலை என்னும்? இவ்வாறு இவள் வருந்தப்பிரிந்த அவர் அறிவுதான் என்னே?'' என்றெலாம் கூறலாயினள், கேட்ட தலைவிக்குச் சினம் பிறந்தது; "தோழி! தலைவர் அறிவற்றவரன்று; பொருளின் இன்றியமையாமையினை உணர்ந்தே பிரிந்துள்ளார்; இருந்தோம்பி இல்வாழ்வது விருந்தோம்பி வேளாண்மை செய்வதற்கே; துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இறந்தார்க்கும் துணையாவானே இல்வாழ்வான் என்றெலாம் கூறுவர் பெரியோர்; அதற்குப் பொருள் வேண்டும்; வாழும் நாட்டிற்குப் பகையாய் அகத்தும் புறத்தும் வாழ்வாரை வென்று ஒழித்தால்தான் நாட்டில் அமைதிநிலவும்; அத்தகைய போராட்டத்திற்கும் பொருள் வேண்டும்; இல்வாழ்விலிருந்து குறைவின்றி நிறைந்த இன்பத்தினை நுகர்தல் வேண்டுமாயின் அதற்கும் பொருளே இன்றியமையாதது; இதை அவர் உணர்ந்தார்; யானும் உணர்ந்தேன்; அதனால் அவர் பிரிந்தார்; பிரிந்ததில் தவறொன்றும் இல்லை.

"அவர் சென்ற காடு நெருப்பைக் கக்கினாற்போன்ற வெப்பம் உடையது; செல்வார் அடிவைத்து நடக்கலாகா அத்துணைக் கொடுமை யுடையது; மரங்களெல்லாம் கோடையின் கொடுமையால் இலைகளெல்லாம் உதிர்ந்து போக, முற்றும் தீய்ந்த கொம்புகளையே கொண்டிருப்ப தால் சேர்ந்தார் நிழல்பெறாது துயருறுவர், மூங்கில்கள் உலர்ந்து வாடித் தீப்பற்றி எரிந்து செல்வார்க்குத் துயர் தரும் என்று காட்டின் கொடுமையினைக் கூறி இத்தகைய கொடியவழியில் சென்ற அவர், எங்ஙனம் விரைந்து வருவர் என்கின்றனை? தோழி! நீ எண்ணுவது தவறு, அவர் கூறிய காட்டின் கொடுமைகளைமட்டிலும் எண்ணிப் பார்க் கின்றனையேயன்றி, அக்காட்டில் உள்ளனவாக அவர் கூறிய அரிய காட்சிகளை மறந்துவிட்டாய்போலும்! காடு கொடியது என்ற அவரே, அக்காட்டில், கன்றும், பிடி யோடும் உண்ணுநீர் தேடிச்சென்ற களிறு, இறுதியில் சிறிதே நீர் உள்ள நீர்நிலை ஒன்றைக் கண்டு மகிழ்ந்து, கன்று புகுந்து உண்டு கலக்கிய நீரையும் முதலில் தான் உண்டு விடாமல், முன்னர்த் தன்பிடியை உண்ணவைத்துப் பின் தான் உண்ணும் என்றும், வெப்பத்தால் வருந்தும் தன் பெடைக்கு ஆண்புறா தன் சிறகைவிரித்து நிழல்தந்து காத் துத் தான் வருந்தும் என்றும், நிழலின்றி வருந்தும் தன் பிணைக்குக் கலைமான் தன் உடல்நிழலைத் தந்து வெய்யி லின் கொடுமையினைத் தான் தாங்கி வருந்தும் என்றும் கூறியதை மறந்தனையோ? இந்த அரிய காட்சிகளைக் காணும் அவர் காலம் தாழ்த்தி நிற்பர் என்று எண்ணு கின்றனை? பெண் இனத்திற்குண்டாம் துயர் போக்கிப் பேணுதல் ஆண்கள் கடன் எனக் காட்டுவாழ் உயிர்களும் எண்ணுவதைக் கண்ட அவர் எனக்குத் துயர் தாரார்; விரைந்து வருவர்; அதற்கான நன்னிமித்தங்களும் தோன்றுகின்றன; அதோபார், பல்லி நாம் கூறுவது உண்மை என்பதே போல் ஒலிக்கின்றன; இதோபார், என் இடக்கண் துடிப்பதை" என்று கூறினாள்; இந்தக் காட்சி யைப் படம் பிடித்தாற்போல் பாடியுள்ளார் புலவர் பெருங் கடுங்கோ :

"அரிதாய அறனெய்தி அருளியோர்க்கு அளித்தலும்,
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்,
புரிவமர் காதலின் புணர்ச்சியும் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநம் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய்! வலிப்பல்யான் ; கேளினி!

'அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையால்
கடியவே கனங்குழாஅய்! காடு' என்றார். 'அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்உண்ணும் களிறு' எனவும் உரைத்தனரே ;

'இன்பத்தின் இகந்தொரீஇ இலைதீந்த உலவையால்
துன்புறூஉம் தகையவே காடு' என்றார், 'அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறகரால் ஆற்றும் புறவு' எனவும் உரைத்தனரே ,

'கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னருஉம் தகையவே காடு' என்றார் 'அக்காட்டுள்
இன்னிழல் இன்மையால் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலை' எனவும் உரைத்தனரே ;
எனவாங்கு,
இனைநலம் உடைய கானம் சென்றோர்
புனைநலம் வாட்டுநர் அல்லர் மனைவயின்
பல்லியும் பாங்கொத்து இசைத்தன ;
நல்லெழில் உண்கணும் ஆடுமால் இடனே.' (கலி. ௧௧)

இனி, பெருங்கடுங்கோ கண்ட சுரக்காட்சி, அரசியல், பொருள், அறநூல் பற்றிய அவர் கொள்கை, அவர் புலமை நலம் போன்றவற்றைச் சிறிது காண்போம்.

'பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று' (திருக். ௭௫௩)

எனப்பொருளின் சிறப்பையும்,

"தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது
உண்ணலின் ஊங்கினியது இல" (திருக் : ௧௦௬௫)

எனத் தாமே தேடிய செல்வத்தின் சிறப்பையும்,

"அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்' (திருக்: எருரு)

என அதை நல் வழியில் பெற வேண்டும் எனவும்,

"பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை' (திருக்: சுருன)

எனத் தீதுடை நெறிவந்த செல்வம் செல்வமாகாது எனவும்,

"செல்வத்துப் பயனே ஈதல்,
துய்ப்பேம் எனினே தப்புந பலவே" (புறம்: கஅக)

எனச் செல்வத்தின் பயன் இது எனவும்,

'கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ் செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று' (திருக்: ௩௩௨)

எனச் செல்வம் நிலையற்றது எனவும் பெரியோர்கள் கூறிச் சென்றதைப் போன்றே, புலவர் பெருங்கடுங்கோவும்,

"அறன் கடைப்படா அ வாழ்க்கையும், என்றும்
பிறன் கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்
பொருளின் ஆகும்." (அகம்: கருரு)

எனப் பொருளின் சிறப்பையும்,

"உள்ளது சிதைப்போர் உளர் எனப்படார்
இலவோர் வாழ்க்கை இரவினும் இளிவு" (குறு: உஅ௩)

எனத் தாம தேடாது முன்னோர் பொருளை உண்ணலின் இழிவையும்,

"செம்மையின் இகந்து ஒரீஇப் பொருள் செய்வார்க்கு அப்பொருள்
இம்மையும் மறுமையும் பகையாவது அறியாபோ" (கலி: கச)

எனப் பொருளை நலவழியிற் பெறவேண்டியதன் இன்றியமையாமையினையும்,

"ஏதிலிற் குறைகாட்டாது அறன் அறிந்து ஒழுகிய
தீதிலான் செல்வம் போல் தீங்கரை மரம்நந்த" (கலி: உஎ)

எனச் செல்வத்துப் பயன் இது எனவும்,

"இல் என இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இளிவு" (கலி: உ)

"சிறியவன் செல்வம் போல் சேர்ந்தார்க்கு நிழலின்றி" (கலி: கO)

எனப் பயன்பெறாச் செல்வம் செல்வமன்று எனவும்,

"கிழவர் இன்னோர் என்னாது பொருள்தான்
பழவினை மருங்கிற் பெயர்பு பெயர்பு உறையும்" (கலி: உக)

எனச் செல்வத்தின் இயல்பு இது எனவும்,

"மரீஇத்தாம் கொண்டாரைக் கொண்டக்கால் போலாது
பிரியுங்கால் பிறர்எள்ளப் பீடின்றிப் புறமாறும்
திருவினும் நிலையிலாப் பொருள்" (கலி: அ)

என அதன் நிலையாமையினையும்,

"இவன் இன்உயிர் தருதலும் ஆற்றுமோ?
முன்னிய தேஎத்து முயன்றுசெய் பொருளே" (கலி: எ)

எனப் பொருள் போனவுயிரை மீட்டுத்தரும் ஆற்றலுடையதன்று என அதன் குறைபாட்டினையும் நன்கு விளக்கியுள்ளார்.

பாலை பாடிய பெருங்கடுங்கோ ஒரு பேரரசர் மரபிலே வந்தவர்; தாமும் ஓர் அரசராய் இருந்து நாடாண்டவர்; அதனால் அக்கால அரசியல்புகளை நன்கு அறிந்தவர்; தாம் அறிந்த அரசியல் நுட்பங்களை ஏற்ற இடங்களில் எடுத்துக் காட்டிச் சென்றுளார்.

"பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும்" (திருக் : சுஙஉ.)

என்ப; ஒரு நாட்டு ஆட்சியின் தன்மை, அந்நாட்டு அரசனினும் அமைச்சனைப் பொறுத்தே அமையும். அமைச்சன் நல்லனாயின் அரசனும் நல்லனாம்; ஆட்சியும் நன்றாம்; அவன் தீயனாயின் நல்லரசும் தீதாம்: அந்நாட்டுக்குடிகள் அல்லற்பட்டு அழஅழ பொருள் பறிக்கப்படுவர்; அதனால் அவர்கள்,

"கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டில்
கடும்புலி வாழும் காடு நன்றே" (வெற்றி : சுஉ)

என்ற எண்ணமுடையராய் நல்லிடம் தேடிச் சென்றுவிடு வர்; அத்தகைய நாட்டினுள் பகைவர்படை எளிதிற் புகுந்து வென்றிகொள்ளும் என்ற இந்த உண்மைகளை எடுத்துக் கூறியுள்ளார்.

"நடுவிகந்து ஒரீஇ நயனிலான் வினைவாங்கக்
கொடி தோராதத மன்னவன்" (கலி : அ)

"அலவுற்றுக குடிகூவ ஆறின்றிப் பொருள்வெஃகிக்
கொலையஞ்சா வினைவரால் கோல் கோடியவன்" (கலி : கO)

"ஆள்பவா கலக்குற அலைபெற்ற நாடுபோல்
பாழ்பட்ட முகம" (கலி · கூ.)

"பேதையோன் வினைவாஙகப் பீடிலா அரசனுட்டு
ஏதிலான படைபோல இறுத்தந்தது" (கலி உஎ.)

அரசனும் நாடாண்டும், அறிஞனும் பலநூல் பயின் றும் தாம் அறிந்த அரிய உண்மைகள் பலவற்றைத தம் பின்னுளோரும் அறிநது, 'நல்வாழ்வு வாழ்க' என்ற நல் லெண்ணம் கொண்ட புலவர் பெருங்கடுங்கோ, தம்முடைய பாக்களுக்கிடையிடையே பல அறவுரைகளை அமைததுச் சென்றுளார்; அவ்வாறு அவர் கூறும் அறவுரைகளுள் சில இவை :

"வினையே ஆடவர்க்கு உயிரே ; வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவா உயிா" (குறுந் : கரு௬.)

"சென்றோர் முகப்பப் பொருளும் கிடவாது ,
ஒழிந்தவர் எல்லாரும் உணணுதும் செல்லார் ; (கலி கஅ.)

"உணகடன் வழிமொழிந்து இரக்குங்கால் முகனும், தாம்
கொண்டது கொடுக்குஙகால் முகனும் வேறுகுதல்
பணடும் இவ்வுலகததியற்கை" (கலி : உஉ.)

"கடைநாள் இது என்றறிந்தாரும் இல்லை" (கலி : கஉ.)

"யார் கண்ணும் இகந்துசெய்து இசைகெட்டான் இறுதி"
(கலி : கO.)

"கனிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி"

"திணையழிய வாழ்பவன் ஆக்கம்போல் புல்லென்று" (கலி: ௧௪)

"சிறப்புசசெய்து உழையராப் புகழ்போற்றி, மற்றவர்
புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார்"

"செல்வத்துட் சேர்ந்து அவர் வளனுண்டு மற்றவர்
ஒல்கிடத்து உலப்பிலா உணர்விலார் தொடாபு"

"பொருந்திய கேண்மையின் மறையுணாந்து அம்மறை
பிரிந்தக்கால் பிறாக்குரைக்கும பீடிலாா" (கலி: உ௫)

இன்று மக்களால் வணங்கப்பெறும் வைதீகக்கடவு ளரிற் பலர் சங்ககாலததிலேயே தமிழர்களுக்கு அறிமுக மாகிவிட்டனர்; அவர்களைப்பற்றிய பல கதைகளையும்அக் காலத்திலேயே அவர்கள் அறிந்திருநதனர், புலவா பெருங் கடுங்கோ, நான்முகனைத் "தொடங்கற்கட்டோனறிய முதியவன்" என்றும், சிவனை, "முக்கணான்", "சிறருங் கணிச்சியோன்", "ஆனேற்றுக கொடியோன்" என்றும், காமனை, "மீனேற்றுக் கொடியோன்" என்றும், வீமனை "வளிமகன்" என்றும பெயரிட்டு அழைப்பதோடு, சிவன் புரம் எரித்த கதையினையும, பாரததில வரும் அரக்கு மாளிகை நிகழ்சசியினையும எடுத்துக் கூறியுள்ளார். "கேளவி அநதணர் கடவும் வேள்வி ஆவியினை" அறிந் துளார் அவர்; நாளும், கோளும் நல்லனவா என நோக்கல், பல்லி சொல் பலன் பார்த்தால், இடக்கண் ஆடல் இனிது என்பனபோன்ற நிமித்தங்களிலும் நம்பிக்கை வைத் துளார்.

பாடுதற்கு விரும்பி மேற்கொண்ட பாலை ஒழுக்கத் தினைப் பல்லாற்றானும் விரித்துரைத்த புலவர், அவ் வொழுக்கம் நிகழ்தற்காம் பாலைநிலத்தின் இயல்புகளையும் நன்கு பாடியுள்ளார்; அவையனைத்தையும் எடுத்தியம்புவது இயலாது ஆகலானும், ஆங்குக்காணும் இன்ப நிகழ்ச்சி களுக்கு எடுத்துக்காட்டாக ஒன்று முன்னரே காட்டப்பட் டுளது ஆகலானும், துன்ப நிகழ்ச்சிகளுள் ஒன்றைமட்டும் எடுத்துககாட்டுகிறேன். பாலைநிலத்தில் வாழ்மக்கள் மறவர் எனப்படுவர்; அவர்களுக்கு அவ்வழி வருவாரை அலைத்துக்

கைக்கொள்ளும் பொருள்தவிர வேறு வருவாய் இல்லை; அதனால் ஆறலைக்கும் தொழிலில் அவர்கள் மிகவும் கொடியராய் விளங்கினர்; அவர்கள் கொடுமையினை விளக்க, வழிவருவார் கையில் பொருள் இல்லை என உணர்ந்தும், தம் அம்பேறுண்டு அவர் துள்ளும் அந்தக் காட்சியினைக் கண்டு மகிழ்வதற்காகவே அவர்களைக் கொல்வர்:

> "அற்றம் பார்த்து அல்கும் கடுங்கண் மறவர்தாம்
> கொள்ளும் பொருளிலர் ஆயினும், வம்பலர்
> துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து உயிர்வௌவலின்
> புள்ளும் வழங்காப் புலம்புகொள் ஆரிடை" (கலி: ௪)

என்றும் கூறிய புலவர், அதற்கு ஓர் எடுத்துக்காட்டாகக், காட்டு வழியே கடிதம் ஏந்திக் தூதுசெல்லும் தொழில் மேற்கொண்ட பார்ப்பான் ஒருவனை, ஒருநாள் மறவர் சிலர் மடக்கிக்கொண்டு, அவனிடம் பொன் இருக்கவும் கூடும் என்று எண்ணிக்கொன்று நோக்கியவழி, கிழிந்து கட்டலாம் தகுதிக்குறைந்த ஆடையினை அணிந்திருக்கும் அவன் வறுமையினை உணர்ந்து, கொன்று சிவப்பேறிய தம் அம்பைக் கையில் எடுத்துக்கொண்டு கலக்கமின்றிச் சென்றனர் என்ற கொடிய காட்சியினைக் காட்டுகிறார்:

> "தூது ஓய் பார்ப்பான் மடிவெள் ஓலை
> படையுடைக் கையர் வருதொடர் நோக்கி
> உணர்ந்த மருங்குல் இன்னோன் கையது
> பொன்னாகுதலும் உண்டு எனக் கொன்னே
> தடிந்துடன் வீழ்த்த கடுங்கண் மழவர்
> திறனில் சிதாஅர் வறுமை நோக்கிச்
> செங்கோல் அம்பினர் கைந்நொடியாப் பெயர"
>
> (அகம்: ௩௩௭)

புலவர் பெருங்கடுங்கோவின் பாக்கள் பல அழகிய உவமைகளைக்கொண்டு அணிபெற்றுள்ளன; அரசியல் நிகழ்ச்சிகளையும், அரிய அறவுரைகளையும், உவமைகளாக ஆண்டுள்ளார்; ஆண்டவன் செயல்கள் சிலவும், வேறு சில கதைகளும் உவமையாக வந்துள்ளன; தோழியின் அற

வுரை கேட்டுத் தன் போக்கினை நிறுத்திக்கொண்ட தலைமகனுக்கு, யாழ் ஓசைக்கு அடங்கி நிற்கும் மதம்பட்ட யானையினையும்,

> " தாழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்
> யாழ்வரைத் தங்கியாங்கு " (கலி: உ)

விரைந்து செல்வதற்கு வில்லினின்றும் புறப்பட்ட அம்பு விரைந்து செல்வதையும்,

> " வில்லுமிழ் கணையிற்சென்று சேணபடர் " (குறுந்: உகூக)

தலைவன் அருள்பெறாத் தலைமகள் வருந்துவதற்கு, மழைபெறா உலகம வருந்துவதையும,

> " துளிமாறு பொழுதின் இவ்வுலகம் போல " (கலி: உரு)

தலைமகளின் ஒளிமழுங்கிய நெற்றிக்குப் பாம்பு கவர்ந்த திங்களையும்,

> " அரவு நுங்குமதியின் நுதல் ஒளிகரப்ப " (அகம்: கூகஉ)

உணவுபெறாது உடல்சுருங்கிக் கிடக்கும் பாம்பிற்கு, மிக்க பொருளைச் சொரிந்துவிட்ட பணப்பையை

> " நிதியம் சொரிந்த நீவி போலப்
> பாம்பு ஊன்தேம்பும் " (அகம்: கூகஉ)

உவமை கூறியுள்ளார்.

பாலை பாடிய பெருங்கடுங்கோவின் பெருமையினை இந்த அளவிலே முடித்தல் இயலாது; ஆனால் மேலும் எடுத்து இயம்பலும் இயலாது; அவர் பெருமையினை அவர் பாக்களைப் பலகால் பயின்று அறிந்துகொள்வார்களாக.

## அ. மருதம்பாடிய இளங்கடுங்கோ

மருதத்திணையினை மிகச் சிறந்தமுறையாற் பாடிய பெருமையால், இவர் மருதம்பாடிய இளங்கடுங்கோ என அழைக்கப்பெற்றுள்ளார். இவர் சேரர் மரபினர்; பாலை பாடிய பெருங்கடுங்கோவின் தம்பி என்று ஊகிக்கப்படு கிறார் என்று கூறுகிறார் நற்றிணை உரையாசிரியர். இவர் சேரர் மரபினர் என்பதை விளக்கத் தக்கசான்று எதுவும் இல்லை இவர் பெயரும அதற்குத் துணைபுரியவில்லை; சேரரைக் குறிக்கவழங்கும் சொல எதுவும் இவர் பெய ரோடு சேர்நது வழங்கபபெறவில்லை கடுஙகோ என்பது செல்வக்கடுஙகோ வாழியாதன் என்ற சேர அரசன் பெய ரோடு இணைத்து வழஙகப்படுகிறது எனினும், அவன் சேரன் என்பதைதக கடுஙகோ என்றசொல் குறிக்கிறது என்று கொளவதினும், அப்பெயரீற்றில் வரும் ஆதன் என்றசொல குறிககிறது என்று கொளவதே பொருநதும். உதியன், இருமபொறை, ஆதன் என்ற சொறகளைப் போன்றே, கடுஙகோ என்பதும் சேரரைக குறிக்கவரும் சொற்களுள் ஒன்று என்று சொல்வதற்கில்லை, பாண்டிய அரசர்களைக குறிக்கவும இச்சொல் வந்துளது. களப் பிரர்களை அழித்துப் பாண்டிய அரசினை மீண்டும் நிறுவிய பாண்டிய அரசன பெயர் கடுஙகோன் என்பதே; ஆகவே, கடுஙகோ என்ற சொல் ஒன்றைக்கொண்டே நமபுலவர் சேரர் மரபினைச் சேர்நதவர் எனக்கோடல் பொருந்தாது. இனி, பாலைபாடிய பெருங்கடுங்கோ என்பவர் சேரர்; அவர் சேரர் என்பதை அவர் பெயர்முன் வரும் சேரமான் என்ற அடை உறுதி செய்கிறது; இவர் இளங்கடுங்கோ என அழைக்கப்பெற்றுளளார்; ஆகவே இவரை அவர் இளைய ராகவும், அவரைப்போன்றே சேரமரபினராகவும் கொள் ளுதல்கூடும என்று முடிவு செய்வதும அததுணை உறுதிப் பாடு உடையதன்று.

> "தாய்போல் கழறித் தழீஇக் கோடல்
> ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்து" (தொல்: கற்பு: ௩௨)

என்பர் தொல்காப்பியனார். மனைவியோடிருந்து இல்லற மாற்றிப் பெருமைபெறவேண்டிய கணவன், தகா ஒழுக்கம்

மேற்கொண்டவழி, அவன் பகைவரும் போற்றும் பண்புடையாளன்—செறுநரும் விழையும செம்மலோன்—என்று பாராமல், அவன் மனைவியே அல்லாமல், அவள் தோழியாம் தகுதியுடைய பெண்களும், அவனை நடுத் தெருவில் நிறுததிவைத்தே, 'தகா ஒழுக்கம் மேற்கொள் ளும நின்னைக் கேட்பாரெவரும் இலலையோ? கேட்பார் உளர்கொல்? இல்லைகொல்?' எனவும, 'நாணம் சிறிதும் இல்லாதவன் நீ—நாணிலை எலுவ' எனவும் இழித் துரைப்பர் எனவும்,

மனைவி புதல்வனைப் பெற்றுப்பேணி வளர்த்துக் கொண்டு பெருமனைக்கிழததியாய் நெல்வளம நிறைந்த நெடிய தன்மனையில் வாழ்ந்திருக்க, பரத்தை வீடு சென்று விட்டான் ஒரு தலைமகன். அவளோடு வாழ்ந்திருந்த அவன், ஒருநாள் சிறிதே அவளைபபிரிந்து எங்கோ சென்று விட்டான்; உடனே பரததைக்கு அவன்பால் சினம் பிறந்துவிட்டது; கண்ணின் மைகரைநது போகுமாறு கண்ணீர்விட்டுக் கலங்கினள; கைகளை முறித்துக்கொண் டாள்; பறகளை நறநறவெனக் கடித்துக்கொண்டாள்; அம் மட்டோடு நிலலாமல் ஊரெல்லாம் அறியுமாறு அவனைத் தேடிப் புறபபட்டுவிட்டாள; இசசெய்தியைத் தலைமகள் தோழி அறிநதிருந்தாள்; சின்னாள கழித்துத் தலைமகன் தன் மனைநோக்கி வநதான்; வந்தானைத தோழி வாயிலில் நிறுத்திவைத்து, "தலைவ! மக்களைப்பெற்று மனையறம் காததுவரும் கடமையால் தாஙகள் எஙகளைப் பிரிந்து சென்று பலநாளாகியும் அதைப் பொருட்படுத்தாமல் வாழ்கிறோம்; ஆனால் சிறிதுபொழுது பிரிந்தாய் என்ப தற்கே நின் காதறபரத்தை ஊரெல்லாம் அலர்தூற்றி விட்டாள்; நாஙகள்தான் இல்லறமிருந்து வாழக் கடமை பூண்டுள்ளோம்; ஆகையால், பன்னாள் பிரிந்து இருப்பி னும், அதுகுறித்து எவரிடமும் குறைகூறி அழாமல் மக்களைப் பேணலும், மனையறங்காத்தலுமாகிய கடமையினை மேற்கொண்டு அமைந்துவிடுகிறோம்; தாங்கள் விரும்பும் பரத்தைக்கும் அத்தகைய கடமையுண்டு என எண்ணி

விட்டனைபோலும்; அவளுக்கு அத்தகைய கடமையில்லை; அதனாலன்றோ அவள் தாங்கள் சிறிது பிரிந்ததையும் பொறாது அலர் தூற்றிவிட்டாள்? பெருமனைக்கிழத்திக்கும், பரத்தைக்கும் உள்ள இவ்வேறுபாட்டினை உணர்ந்தவனாயின் பரத்தையர் ஒழுக்கம் மேற்கொள்ளாய்; இப்போதாவது மீண்டு வந்தனையே; அதற்கு நன்றி; இந்த நின் வருகை, எங்கள் பொறுமைப் பொறுப்புணர்ச்சிகளையும், பரத்தையரின் பொறுமை பொறுப்பின்மைகளையும் உணர்ந்ததன் விளைவால் ஆயின் நன்று, ஆனால் அவ்வாறு உணர்ந்து வந்தவன் அல்லை. ஊரெல்லாம் கூறும் பழிச்சொல் அஞ்சியன்றோ வந்துளாய், அத்தகையானை யாங்கள் எவ்வாறு ஏற்றுக்கொள்வோம்,'' என்று இடித்துக் கூறினாள் எனவும் கூறித் தவறுகண்டவழி ஒறுத்துத் திருத்தும் உயர்தமிழ் ஒழுக்கநெறியினை உணர்த்தியுள்ளார்:

“மாணிழை முன்கைக்
குறுந்தொடி துடக்கிய நெடுந்தொடர் விடுத்தது
உடன்றனள் போலும் நின்காதலி எம்போல்
புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து
நெல்லுடை நெடுநகர் நின்னின்று உறைய
என்ன கடத்தளோ மற்றே? தன்முகத்து
எழுதெழில் சிதைய அழுதனள் ஏங்கி
வடித்தென உருத்த தித்திப் பல்லூழ்
நொடித்தெனச் சிவந்த மெல்விரல் திருகுபு
கூர்நுனை மழுங்கிய எயிற்றள்
ஊர்முழுதும் நுவலும் நிற்காணிய சென்மே.”

(அகம்: 176.)

வரலாறு உரைக்கும் பண்பும் நம்புலவரிடத்தில் பொருந்தியிருக்கக் காண்கிறோம். தாம் பாடிய அகநானூற்றுப் பாடலொன்றில், வெண்ணெல் விளையும் வளமிக்க பருவூர் என்ற இடத்தில் நடைபெற்ற போர் ஒன்றில், சேர பாண்டியராகிய இருபெரு வேந்தரும் ஒருங்கு சேர்ந்து சோழமன்னரை எதிர்த்தனர்; ஆனால் சிறந்த

யானைப் படை உடைமையால் போர்வல்ல சோழர் பெரும் படைமுன் நிற்கலாற்ருது இருவரும் தோற்றுப் பின் னிட்டனர்; வாளேந்தி வெற்றி கொண்ட சோழ அரசர் பகை வேந்தர்தம் யானைப் படைகளைக் கைப்பற்றிக் களித் தனர்; அத்தகைய ஆற்றல் மிக்க சோழர்க்கு மகளாம் பெருமையுடைய அஃதை என்பாள் ஒருத்தி இருந்தாள் எனக் கூறுகிருர்:

> "அஃதை தந்தை
> அண்ணல்யானை அடுபோாச சோழர்
> வெண்ணெல் வைப்பின் பருவூர்ப் பறந்தலை
> இருபெரு வேந்தரும் பொருதுகளத் தொழிய
> ஒன்றுவாள் நல்லமர்ககடந்த ஞான்றைக்
> களிறு கவர் கம்பலை." (அகம்: கசு.)

## ௯. முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன்

ஆதன் என்ற சொல் சேரர் வழி வந்தவர்களைக் குறிக்க அவர் பெயர்களின் முன்னும் பின்னும் இணைக்கப் படுவதுண்டு; ஆதனுங்கன், ஆதனவினி, ஆதனெழினி, ஆதனழிசி என்ற பெயர்கள், அச்சொல் பெயர்களின் முன் வந்தமைக்கு எடுத்துக்காட்டுகளாம்; கடுங்கோ வாழி யாதன், நெடுவேளாதன், கடுங்குளாதன் என்பன, அச் சொல் பெயர்களின் பிற்பகுதியில் வந்தமைக்கு எடுத்துக் காட்டுகளாம். சேரர்க்கு உரித்து எனப்பட்ட இவ் ஆதன் என்ற சொல், சேரரைக் குறிக்க வழங்கும் சேரர் என்ற மற்றோர் சொல்லோடு இணைந்து வருதலும் உண்டு; உதியஞ் சேரலாதன், பெருஞ் சேரலாதன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்ற பெயர்களைக் காண்க. பெயர்களுக்கு முன், அப்பெயருடையாருக்குப் பெருமையளித்தற்காக உயர்வுப் பொருள்தரும் நெடு என்ற அடைகொடுத்து வழங்குதலும் வழக்கமாம்; ' நெடியோன், நெடுங்கிள்ளி, நெடுஞ் செழியன், நெடுமாவளவன், நெடுமானஞ்சி, நெடுவேள், நெடுவேளாதன் என்பன காண்க. அவ்வாறே சேரலாதன் என்ற பெயரோடு நெடு என்ற அடையினைச் சேர்த்து வழங்கிய பெயர்களும் உண்டு; சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதன், இமய வரம்பன் நெடுஞ் சேரலாதன். சேரர் களுள் நெடுஞ்சேரலாதர் பலர் இருப்பதால், அவரின் பிரித்துக் காண்பதற்காக நம்புலவர், முடங்கிக் கிடந்த நெடுஞ் சேரலாதன் என அழைக்கப் பெற்றுள்ளார்; ஆனால் அவர் பெயர்க்கு முன்வரும் முடங்கிக் கிடந்த என்ற சிறப் படை இவர்க்கு வர இருந்த காரணம் யாது என்பது சிறிதும் விளங்கவில்லை.

இவர் பாடிய நெய்தல் திணை தழுவிய பாடல் மிகவும் நயம் செறிந்து காணப்படுகிறது; சிறு சிறு கண்களைக் கொண்ட பெரிய வலையினைப் பருத்து நீண்ட கயிற்றோடு பிணைத்துக் கொண்டு, கடலிடையே சென்று, கடல் வள மெல்லாம் சுருங்கிற்றே என எண்ணுமாறு அக்கடல் மீன் களெல்லாம் ஒருங்ககப் படுமாறு வீசிவிட்டு மாலையில் கரை சேர்ந்த வலைஞர், தம் வரவினைக் கவலையோடு எதிர்நோக்கி

நிற்கும் தம் மனைவியரைக் கண்டு மகிழ்ந்து, ஊக்கம் மிக்கு, இளையரும் முதியருமாகிய எல்லோரும் ஒன்று சேர்ந்து அவ்வலையினை வருந்தி, பேராரவாரத்திற்கிடையே இழுத்து இழுத்துக் கரைசேர்த்து, வலையில் அகப்பட்டுக் கிடக்கும் மீன்களைப் பிரித்தெடுத்துக் கரையில் குவித்து, ஆங்கு வந்து குழுமி நிற்கும் இரவலர்க்கு அவர் கலம் நிறைய வழங்கி, எஞ்சியவற்றைச் சிறியதும் பெரியதுமாய பலகூறுகளாக்கி விலைகூறி விற்றுத் தம் தொழில் முடித்த மகிழ்ச்சியாலும் பகலெலாம் உழைத்த களைப்பாலும், அக் கரைக்கண் படிந்த மணல் மீதே கிடந்து உறங்குவர் என வலைஞர் தம் அன்றாட வாழ்க்கையினை விளங்க உரைத்துளார்.

இந்த ஒரு பாட்டிலேயே, பெரிய வலையினை வருந்தி வலிக்கும் வலைஞர் தொழிலுக்கு, உப்புப் பொதியினை ஏற்றியவண்டி, கடத்தற்கரிய *மணல்செறிந்த நிலத்துட்புக்க வழி, அவ்வண்டியினை மண்டியிட்டு வலிந்து இழுத்துச் செல்லும் சிறந்த பெரிய எருதுகளின் தொழிலையும், பெற்ற மீன்களை இரவலர்க்கு வழங்கும் வலைஞர் கொடைத் தொழிலிற்குக் களத்தில் அடித்துக் குவித்த நெற்குவியலைக் களம்பாடிவரும் இரவலர்க்குப் பரிசிலாக அளிக்கும் உழவர் செயலையும் உவமைகூறித் தம் புலமையினைப் புலப்படுத்தியுள்ளார்.

"நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலைக்
கடல் பாடழிய இனமீன் முகந்து
துணைபுணர் உவகையர் பரத மாக்கள்
இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி
உப்பொய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன்பகடொப்பக் குழீஇ,
அயிர்திணி அடைகரை ஒலிப்ப வாங்கிப்
பெருங்களம் தொகுத்த உழவர் போல
இரந்தோர் வறுங்கலம் மல்க வீசிப்
பாடுபல அமைத்துக் கொள்ளை சாற்றிக்
கோடுயர் திணிமணல் துஞ்சும் துறை." (அகம் : ௩௦.)

களவில்வந்து செல்லும் தலைவன் நாள்தோறும் தவறாது வருதலை விரும்பும தோழி, தலைவன்பால் சென்று, "நீ ஒருநாள் வாராது நின்றுவிடின் இவள் உடல்நலம் கெட்டு அழகு குன்றுவள; ஆதலின், நீ நாள்தோறும் வந்து இவள் நலம்கேட்டுச் செல்லுதல்வேண்டும்; அவ்வாறு வந்துசெல்வதால் நின்பெருமையொன்றும் கெட்டுவிடாது," என்று கூறவிரும்புவாள் அவனை அணுகி,

"பெருமை என்பது கெடுமோ? ஒருநாள்

தணணறுங கானல்வந்து' நும்
வணணம எவனோ?' என்றனிர செலினே?" (அகம்· ௯௧)

எனவினவினுள் எனக் கூறும் புலவர் கூற்றுச் சிறந்து விளங்குதல் காண்க.

## ௧0. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

திருமாவளவன் ஆட்சிக்குப் பின்னர் சோழநாடு இரு கூறுபட்டு இருதிறத்தாரால் ஆளப்பட்டுவந்தது; அவற்றுள் ஒன்றிற்குத் தலைநகர் புகார்; மற்றொன்றிற்குத் தலைநகர் உறையூர்; கடற்கரைநாடு, உள்நாடு எனச் சோழநாடு இருபகுதியாக விளங்கிற்று எனப் பெரிப்ளூஸ் என்ற நூலும் அறிவிக்கும் கரிகாலனுக்குப் பிற்பட்டகாலத்தே உறையூரும், உறையூர்ச் சோழருமே சிறந்து விளங்கினர்; உறையூராண்ட சோழ அரசர்களுள் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் சிறந்தோனவன்; மணிமேகலை கூறும் கிள்ளிவளவன், இக் கிள்ளிவளவனே என்பர் ஆராய்ச்சியாளர். கிள்ளிவளவன் புலவர் போற்றும் புகழ்மிக்கோனவன்; ஆலத்தூர் கிழார், ஆடுதுறை மாசாத்தனார், ஆவூர் மூலங்கிழார், இடைக்காடனார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார், ஐயூர் முடவனார், கோவூர் கிழார், நல்லிறையனார், மாறோக்கத்து நப்பசலையார், வெள்ளைக்குடி நாகனார் ஆய புலவர் பதின்மர் இவரைப் பாடியுள்ளனர்; புலவர் பலர் பாராட்டைப்பெறும் பண்புடையோனாகிய கிள்ளிவளவனும் ஒருபுலவனாவன். கிள்ளிவளவனின் நாடா வளமசெறிந்த நாட்டுவளம், கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே மூத்துச் சிறந்த அவன் குடிவளம், பகைவரும் அஞ்சும் அவன் பேராண்மை, மாரியும் தோற்கும் அவன் கைவண்மை, செவிகைப்பச் சொற்பொறுக்கும் அவன் பண்புடைமை ஆய இன்னோரன்ன குறித்துப் புலவர்கள் கூறும் பாராட்டுப் பல; அவற்றுள் சிலவற்றை ஈண்டுக் காண்பாம்.

அறநூல் அறிந்த அந்தணர்கள் வளர்க்கும் முத்தீ விளங்கும் நாடு என நீர்வளம் தரும மழையினைத் தரவல்ல அவன் நாட்டுவேள்விச் செல்வத்தினையும்,

> "அறுதொழில் அந்தணர் அறம்புரிந்தெடுத்த
> தீயொடு விளங்கு நாடன்" (புறம் : ௩௯௭.)

'கோடைநீடி மழைவளம் சுருங்கிய காலத்தும் நீர் அறுநீர்மையுடைய காவிரியாறு பாயும் நாடு' என அவன் நாட்டு நீர்வளத்தினையும்,

"கோடையாயினும் கோடாவொழுக்கத்துக்
காவிரி புரக்கும நன்னாடு" (புறம் : ௩௬௬.)

'நீர்வளம் நிறைந்தமையால் ஒரு பெண்யானை படுத்து உறங்குதற்காம் நிலம், ஏழு ஆண் யானைகளைப் புரக்கவல்ல பெரும் உணவினைத் தரும் நாடு' என அவன் நாட்டு நில வளத்தையும்,

"ஒருபிடி படியும் சீறிடம்
எழுகளிறு புரக்கும் நாடு" (புறம் : ௪௦.)

இத்தகைய வளம் பல சிறந்தமையால், வருவார்க்கு வழங்க வழங்கக் குறைவுபடாத வளத்தால் நிறைந்தும், அதனால், உணவு உண்டாக்க எழுப்பும தீ அல்லது பகைவர் எடுக்கும் தீ யறியாப் பண்பாடு பெற்றும் விளங்கும் நாடு என அவன் நாட்டின் விருந்தோம்பற்சிறப்பினையும்,

"கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகா
அடுதீயல்லது சுடுதீ யறியாது இருமருந்து விளைக்கும நன்னாடு"
(புறம : ௭௦.)

புலவர்கள் பாராட்டியுள்ளனர்.

நற்குடிப் பிறந்தாரிடையேதான் செப்பமும் நாணும் இயல்பாக இருக்கும்; ஒழுககமும், வாய்மையும, நாணும் இம்மூன்றும் இழுக்காதிருப்பதும் அவரிடையேதான்; அடுக்கியகோடி பெறினும் குன்றுவசெய்யாக் குணம் குடிப்பிறந்தாரிடையேதான் உண்டு என்பர் ஆதலின், உயர்குடிப்பிறப்பினராதல் ஒருவர்க்குக் கருவிலே வாய்த்த திருவாம். கிள்ளிவளவன் பிறந்த சோழர்குடி, வழிவழிச் சிறப்புடைய குடியாம்: அவன் பெருமைக்கு அவன்குடிப் பெருமையே காரணம். இதை மாறோக்கத்து நப்பசலையார் விளக்குந் திறம் வியக்கத்தக்கதாம்: "கிள்ளிவளவ! நீ கொடையாற் சிறந்தவன் என்கின்றனர்; அதனால் நினக்கொரு புகழும் இல்லை; அது நீ பிறந்த குடியின் பண்பு;

அடைக்கலம் அடைந்த புறவின்பொருட்டுத் துலைபுகுந்து புகழ்கொண்ட சிபியினை முதல்வனாகக் கொண்டது நின் குடி; கொடைக்குணத்தை இயல்பாகக் கொண்டது சோழர்குடி; அக்குடிவந்தார் அனைவருமே அக்குண முடையராவர்; ஆகவே, அக்குணம் நின்பால் இருப்பது நினக்கே உரிய புகழன்று; அது நின்குடிப்புகழ்; கிள்ளி வளவ! பகைவரும் அஞ்சும் பேராண்மையுடையான் நீ என்ப, அதுவும் நினக்குப் புகழளிக்காது; நின்குடி, தேவர்பொருட்டு, ஆகாயத்தே திரிந்து கேடு விளைக்கும் கோட்டைகளை வாழ்விடமாக்கொண்ட அரக்கர்களை அழித் துப் புகழ்பெற்ற தொடித்தோட்செம்பியன் என்பானை முன்னோனாகக் கொண்டது; ஆதலின் வெற்றி சோழர் குடிப்பண்பு; ஆகவே, கிள்ளி! வெற்றிவீரனாவதில் நினக் குத் தனிப்புகழில்லை; கிள்ளி! முறைவேண்டினார்க்கும் குறைவேண்டினார்க்கும் பேரத்தாணிக்கண் அந்தணர் சான்றோர் உள்ளிட்டாரோடு காண்டற்கெளியனாய் இருந்து முறைசெய்வை என்று பாராட்டுவர்; இதனாலும் நினக் குப் புகழில்லை; நின் தலைநகராகிய உறையூர்க்கண் அமைந் துள்ள அறங்கூரவை அவையில், அறம் என்றும் நின்று நிலைபெற்றிருக்கும் என்ப; ஆகவே அறம்கூறுதல் சோழர் குடிக்கு இயல்பாம்; ஆதலின், அதிலும் நினக்குப் புக ழில்லை" என்று பாடி, சோழர்குடி இயல்பாகவே கொற் றம் உடையது; கொடையிற் சிறந்தது; அறத்தில் இயன் றது என்று அவன் குடிப்புகழ் போற்றினார்:

"புறவின் அல்லல் சொல்லிய, கறையடி
யானை வான்மருப்பு எறிந்த வெண்கடைக்
கோல் நிறைதுலாம் புக்கோன் மருக!
ஈதல் நின்புகழுமன்றே ;......
தூங்கெயில் எறிந்தநின் ஊங்கணோர் நினைப்பின்,
அடுதல் நின்புகழுமன்றே; கெடுவின்று
மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறம் நின்றுநிலையிற்று ஆகலின், அதனால்
முறைமை நின் புகழுமன்றே." (புறம்: கூக)

கிள்ளிவளவன் கொற்றம் நிறைந்தவன்; அவன் வீரத்தைப் புலவர் பலரும் வியந்து பாராட்டியுள்ளனர்; அவர்களுள் ஆவடுதுறை மாசாத்தனர், அவன் இறந்த பிறகு இரங்கிப் பாடிய பாட்டொன்றில், கூற்றுவனை முன்னிலைப்படுத்தி, "ஏ கூற்றுவனே! நீ மிகவும் அறிவற்றவன் என்பதை அறிந்துகொண்டேன்; பசி என்று சொல்லி விதையினை உண்போர் உலகத்தில் எவரும் இரார்; ஆனால், பசிக்கு விதையினைத் தின்றுவிட்டனை நீ; இனி நின் பசிபோக எதை உண்பையோ? கிள்ளிவளவன் நல்லுயிரை உண்டுவிட்டனை; நாளதோறும் தவறாது களம் சென்று யானை, குதிரை, காலாள் என்ற இவர்கள் உயிரைப் போக்கி நின் பசியினைப் போக்கிவந்தான் அவன்; இவ்வாறு நின் பசிப்பிணி தீர்க்கும் மருந்தாவனாய் விளங்கியோன் உயிரை உண்டுவிட்டாய்; இவனைப்போல் நாள்தோறும் பல உயிர்களைக்கொன்று நின் பசிதுயாபோக்கவல்லார் இனி யாருளர்? ஒருவரும் இலர்," என அவன் வெற்றி விளங்கப் பாடியுள்ளார்:

"நனி பேதையே, நயனில் கூற்றம்!
விரகின்மையின், வித்தட்டுணடனை;
இன்னும் காண்குவை நன்வாயாகுதல்;
ஒன்றுவாள் மறவரும், களிறும், மாவும்
குருதியம் குரூஉப் புனல் பொருகளத தொழிய
நாளும் ஆனன், கடந்து அட்டு என்றும் நின
வாடுபசி அருத்திய பழிதீர் ஆற்றல்,......
இனையோற கொணடனை யாயின
இனியார் மற்று நின் பசிதீரப் போரே" (புறம்: உஉஎ)

ஆவூர்மூலங்கிழார், 'கிள்ளிவளவன் சினந்து நோக்கிய இடத்தில் செந்தீ பரந்தெழும்; அவன் அன்புப் பார்வை பட்ட இடத்தில் வளங்கொழிக்கும்' என்றும்,

"நீ உடன்று நோக்கும்வாய் எரிதவழ,
நீ நயந்து நோக்கும்வாய் பொன்பூப்ப" (புறம்: நஅ)

பகைவரைவென்று அவர் அணியும் முடிகளை அழித்துப்பெற்ற பொன்கொண்டு புனைந்த வீரக்கழலைக் காலில் அணியும் வீரம் மிக்கோன்,

"நீயே, பிறர் ஓம்புறு மறமன்னெயில்
ஓம்பாது கடந்து அட்டு அவர்
முடிபுனைந்த பசும்பொன்னின்
அடிபொலியக் கழல் தைஇய
வல்லாளனை" (புறம்: ௪0)

என்றும் அழிக்கவும் ஆக்கவும்வல்ல அவன் ஆற்றலைப் பாராட்டியுள்ளார்.

கோவூர்கிழார், "தான் கொல்லக்கருதிய உயிர்களையும், கூற்றுவன், அவற்றைக் கொள்வதற்காம் காலம் பார்த்தே கொல்வன்; ஆனால் கிள்ளிவளவனோ, தான் எண்ணியபோதே, அதுவும் எண்ணிய இடத்திலேயே உயிர்களைக் கொல்வன்" என்றும், "அவன் பகைவர் நாட்டின்மீது படையுடன் செல்லும் செலவு, காற்றோடு கலந்த எரியின் செலவுபோல் கொடிதாம்" என்றும் பாராட்டுவர்:

"காலனும் காலம் பார்க்கும். பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே!
. ....... ... காற்றோடு
எரிநிகழ்ந் தன்ன செலவின்
செருமிகு வளவ!" (புறம்: ௪௧)

மாறோக்கத்து நப்பசலையார், வளவன் கொற்றமும், கொடையும் ஒருங்கே விளங்கப்பாடிய பாட்டில், "கிள்ளி வளவன் இறந்துவிட்டான்; அவன் உயிரைக் கொண்டு போய்விட்டான் கூற்றுவன், ஆனால் ஒன்றுமட்டும் உறுதி; கூற்றுவன், வளவனை வெறுதகேதா, அவனோடு பகைத்துப் போரிட்டோ அவன் உயிரைக் கொண்டுசென்றிருத்தல் இயலாது; கிள்ளிவளவனைப் பாடிச்செல்லும் இரவலரைப்

போன்றே, தானும் பாடிச்சென்று, கைகூப்பி வணங்கி இரந்து நின்றே அவன் உயிரைப் பெற்றிருத்தல் வேண்டும் எனப் பாராட்டியுள்ளார் :

> "செற்றன் றாயினும், செயிர்த்தன் றாயினும்,
> உடன்றன் றாயினும் உய்வின்று மாதோ !
> பாடுநர் போலக் கைதொழுது ஏத்தி
> இரந்தன் றாகல் வேண்டும், பொலந்தார்
> மண்டமர் கடக்கும் தானைத்
> திண்தேர் வளவற் கொண்ட கூற்றே" (புறம் ௨௨௬)

புலவர் பலரும் கிள்ளிவளவன் கொற்றத்தை இவ்வாறு பொதுவாகவே பாடிச்சென்றுள்ளனர்; அவன் வெற்றிகொண்ட அரசர்கள் யாவர்? அவன் கைப்பற்றிய நாடுகள் யாவை? என்பதை அறிந்துகொள்ள அவர் பாக்கள் துணைபுரிவன அல்ல; ஆனால், மாறோக்கத்து நப்பசலையார் அவன் பெற்ற வெற்றி யொன்றைக் குறிப்பிட்டுள்ளார், அதையும் அவர் அத்துணைத் தெளிவாகக் கூறியுள்ளார் எனக் கொள்வதற்கில்லை, அவர் பாட்டொன்றில், கிள்ளி வளவனை,

> "இமயம் சூட்டிய ஏம விற்பொறி
> மாணவினை நெடுந்தேர் வானவன் தொலைய
> வாடா வஞ்சி வாட்டும் நின் பீடுகெழு நோன்தாள்" (புறம் : ௩௯)

என்று பாராட்டியுள்ளார்.

ஈண்டு, வளவன் வஞ்சியை அழித்துத் தொலைத்த வானவன், இமயத்தே வில்பொறித்தோனும், சேரன் செங்குட்டுவன் தந்தையுமாய இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுவன்; இந்தக் கொள்கையை உறுதி செய்வதற்கான சான்றுகள் சிலவும் கிடைத்துள்ளன; அவற்றை, "திருமா வளவன்" என்ற என்னுடைய ஆராய்ச்சிச் சிறுநூலின்கண் (பக்கம் - 34) எடுத்துக் கூறியுள்ளேன்.

> "வெய்துண்ட வியர்ப் பல்லது
> செய்தொழிலான் வியர்ப்பறியாமை
> ஈத்தோன் எந்தை இசைதனதாக" (புறம்: ௩௮௬

"விறகொய் மாக்கள் பொன்பெற் றன்னதோர்
தலைப்பாடன்று அவன் ஈகை;
நினைக்க வேண்டா;" (புறம்: ௭0)

எனக் கோவூர் கிழாரும்,

"நீ அவற்கண்ட பின்றைப், பூவின்
ஆடும்வண் டிமிராத் தாமரை
சூடா யாதல் அதனினும் இலையே" (புறம்: ௬௯)

"பாணர்க்கு
அகலாச் செல்வம் முழுவதும் செய்தோன்
எங்கோன் வளவன் வாழ்க என்றுநின்
பீடுகெழு நோன்தாள் பாடே னாயின்,
படுபறி யலனே பலகதிர்ச் செல்வன்" (புறம்: ௩௪)

என ஆலத்தூர் கிழாரும் கூறுவன, அவன் கொடைச் சிறப்பினைக் குன்றிலிட்ட விளக்கெனை விளக்கு மன்றோ!

"செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு" (திருக்: ௩௮௯)

"இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்கும் தகைமை யவர்?" (திருக் ௪௪௭)

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானும் கெடும்" (திருக்: ௪௪௮)

எனக்கூறும் அறிவு நூல்கள். "சுடர் விளக்காயினும் நன்றாய் விளங்கிடத் தூண்டுகோல் ஒன்று வேண்டும்" என்ப. அரசன் எத்துணைதான் நீதி நூல்களை அறிந்தவனாயினும், அறிவுரை கூறுவார் சிலரைத் தன்னோடு கொண்டிருத்தல் வேண்டும்; உயிர்க்குணங்களுள் ஒன்று தோன்ற ஏனைய அடங்கி வரும் என்ப; அவ்வழி, அறநூல் உணர் அறிவு அடங்கிற்றாயின், அரசற்கும், அவன் நாட்டிற்கும் கேடு பலவாம்; ஆதலின் அவ்வாறு அவன் அறிவு அடங்கிய வழி அவனுக்கு அறிவுரை கூறத்தக்க நல்லோர் அவனருகே இருத்தல் நன்றாம். இதை உணர்ந்தே நல்ல அரசர்கள், அறிவுடையோர் கூறுவன தமக்குக் கேடுதரு

வனபோல் தோன்றியவிடத்தும் அவர்கள்பால் சினவாது, அவர் கூறுவன ஏற்றுப போற்றிவநதுள்ளனர், "நான் ஒரு பேரரசன்; என்னிடம் இரந்து நிற்கும் புலவனிவன்; இவன் எனக்குப புததி புகட்டுவதா?" என அவர்கள் எண்ணினாரல்லர்.

செவிகைப்பச் சொற் பொறுக்கும் இப்பண்புடைமை கிள்ளி வளவன்பாலும அமைநது கிடந்தது: "அரசே! போர்க்களததே எதிாததுவரும் பகைவர் பெரும்படையைப் பாழ்செய்து பெறும் வெற்றி நின் படைபபெருமையால் ஆவதன்று; அது, நிலததை உழுது நெல் விளைக்கும உழவர் தந்த வெற்றியாம்; ஆகவே, இதை உண்மையில் உணர்நதா யாயின், உழவுத்தொழிலை பழிததுரைக்கும அறிவற்றோர் கூறுவனவறறை மேற்கொளளாது, ஏர்த்தொழில் கொண்டு வாழ்வாா தம இன்னல் போக்கி, அவர் துணை கொண்டு ஏனைக்குடிகளையும காப்பாற்றுவதைக் கடமை யாகக் கொள்ளின், நின் பகைவரெல்லாம நினைப் பணிநது நிற்பர்"

> "வருபடை தாஙகிப் பெயர்புறத தாாத்தும்
> பொருபடை தரூஉம் கொறறமும உழுபடை
> ஊன்றுசால மருஙகின ஈனறதன பயனே;
>
> அதுநற் கறிந்தனையாயின, நீயும்
> நொதுமலாளா பொதுமொழி கொள்ளாது,
> பகடுபுறம் தருநர் பாரம ஓம்பிக்
> குடிபுறம் தருதவை யாயின நின
> அடிபுறம் தருகுவா அடஙகாதோரே" (புறம்: ரு௫)

என்று தன் எதிரிலேயே ஏர்த்தொழிலைப் போற்றிப் புகழ்ந்தும, தன் தொழிலாம் போாத தொழிலைப் பழித்து நின்ற வெள்ளைக்குடி நாகனார்பால் சினம கொள்ளாது, அவர் அவ்வறிவுரை கூறுவதற்குக் காரணமாம் அவர் குறையறிந்து, அவர் தம் நிலததிற்குச் சேர இருந்த இறைக்கடனைப் போக்கிச் சிறப்பளித்தான் கிள்ளிவளவன்

என்ற செய்தி, அவன்பால் அப்பண்பு உண்டு என்பதை உறுதிசெய்வதாமன்றோ?

கிள்ளிவளவன் புலவர் பாடும் புகழுடையோனவன்; அவனைப் பாடிய புலவர்கள் பதின்மர் என்ற ஒன்றே இதற்கோர் எடுத்துக்காட்டு. மலையிற்றோன்றிய பேராறு பள்ளம் நோக்கிப் பாய்வதேபோல், புலவரெலாம் கிள்ளியின் அவை நோக்கிச் செல்வர்,

“மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை இழிதரும் பல்யாறு போலப்
புலவரெல்லாம நின்னோக்கினரே” (புறம் : சஉ).

என்று இடைக்காடனாரும் கிள்ளி புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை உடையான் என்று ஐயூர் முடவனாரும் பாராட்டியுள்ளனர்; புலவர் பலரும் அவன்பால் பெருமதிப்புடையராதலைப் போன்றே, அவனும் புலவர்கள்பால் பெருமதிப்புடையானவன். தன்னைப் பாடிய வெள்ளைக்குடி நாகனார்க்கு, அவர் நிலத்திற்கு இறுக்கவேண்டிய இறைக்கடனை நீக்கிச் சிறப்பளித்ததும, கருவூரை முற்றுகையிட்டிருந்த தன்னிடம் வந்து, “அரசே! நின்படைவீரர், முற்றுகையிட்டிருக்கும் கோட்டையைச் சூழஉள்ள காவற்காட்டை அழிக்குங்கால் எழும் பேரொலி தன் காதில் படவும், அதைக் கேட்டும், மானங்கொண்டு வெளிப்போந்து நின்னோடு போரிடாமல் அஞ்சி ஒளிந்திருக்கும் அவனோடு போரிடல் பேரரசர்க்கு இழிவன்றோ?” என்று கூறிய ஆலத்தூர் கிழார் அறிவுரை கேட்டு அம்முற்றுகையினைக் கைவிட்டதும், தன் குலப்பகைவனாகிய மலையமானை வென்று, அவன் மக்களைக் கொணர்ந்து, யானையின் காற்கீழ் இட்டுக் கொல்லப் புக்கவழித் தோன்றி, “அரசே! நீயோ புறவின் அல்லல் போக்கிய அரசன்வழிவந்தவன்; இவர்களோ, புலவர் துயர்போக்கும் பண்பாளனுைய பேரரசன் ஒருவன் மக்கள்; மேலும் இளைஞர்; இவற்றை உணர்ந்து நீ விரும்புமாறு செய்க” என்று கூறிய கோவூர் கிழார் பாடல்கேட்டு, அம்மக்களை விடுதலை செய்ததும்,

புலவர்பால் கிள்ளிவளவன் கொண்டிருந்த பெருமதிப்பிற்குச் சான்றுகளாம்.

'பொன்மலை சார்ந்த காகமும் பொன்னிறம் பெறும்' என்றும் 'கம்பன்வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடும்' என்றும் கூறுவர் பெரியோர்; புலவர் பதின்மர் போற்ற அவரிடையே வாழும் நல்வாய்ப்புற்ற கிள்ளிவளவன் தானும் ஒரு புலவனாய் விளங்கியதில் வியப்பொன்றும் இல்லை. கிள்ளிவளவன் பாடிய பாடல்கள் எத்தனையோ? இப்போது நமக்குக் கிடைத்துள்ளது, பண்ணன் என்பானைப் பாடிய பாடல் ஒன்றுமட்டுமே

"பண்ணன்,
தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்
பண்ணன் சிறுகுடி"

எனவும்,

"கைவள ஈகைப் பண்ணன் சிறுகுடி"

எனவும்,

"மாற்றோர் மலைமருள் யானை மண்டமர் ஒழித்த
கழற்கால் பண்ணனை"

எனவும் புலவர் பாராட்ட வாழ்ந்தவன், புலவர் பதின்மர் பாராட்டைப் பெறும் பேறுபெற்ற கிள்ளிவளவனே இவனைப் பாராட்டினான் எனில் இவன் பெருமைக்கோர் எல்லையுண்டாமோ? பண்ணன் பேராண்மையும், பெருங்கொடையும் உடையவன்; சோழநாட்டில் காவிரிக்கரையில் இருந்த சிறுகுடி என்னும் சிறந்த ஊரின் தலைவன். பாம்பறியும் பாம்பின்கால். வள்ளல் ஒருவன் சிறப்பினை அவன்பால் பரிசில்பெறும் புலவர்கள் பாடுவதில் சிறப்பொன்றும் இல்லை; வள்ளல் ஒருவனை அவனைப்போன்ற பிறிதோர் பெருவள்ளல் பாராட்டுவதே உண்மைச் சிறப்பாம்; அத்தகைய பெருஞ்சிறப்புடையாளன் பண்ணன்; பெருங்கொடைவள்ளல் தலைவனாகிய கிள்ளிவளவன் பண்ணனைப் பாராட்டியுள்ளான்.

பண்ணன்பால் பரிசில்பெறக் கருதிய பாணன் ஒருவன், அவன் சிறுகுடியை நோக்கிச் செல்கிறான்; பண்ணன்பால் பரிசில்பெற்ற இளைஞரும் முதியருமாய பாணர்கள் வேறு வேறு திசைநோக்கி வரிசை வரிசையாகச் செல்கின்ற காட்சியினையும் காண்கிறான்; பழுமரம் ஒன்றில் பழம் உண்ணவந்து கூடியிருக்கும் பறவைகள் எழுப்பும் பேரொலி போல், பண்ணன் அறச்சாலையில் உணவு பெறுவார் எழுப்பும் ஓசையும் கேட்கலாயிற்று, அவன் சிறுகுடி அண்மையில் உளது என்பதை உணர்த்துகின்றன இவை; பாணன் பசிக்கொடுமை இதை உணராந்த பின்னரும், வழியில் எதிர்ப்படுவார் ஒவ்வொருவரையும் பண்ணன் சிறுகுடியாண்டுளது? பண்ணன் சிறுகுடியாண்டுளது? என மீண்டும் மீண்டும் கேட்கத் தூண்டிற்று. பரிசில் பெற்று மீளும் பாணர் சிலரை அண்மி, "ஐய! பசிப்பிணி மருத்துவனும் பண்ணன் இல்லம் யாண்டுளது? அஃது அண்மையில் உளதா? சேய்மைக்கண் உளதா?" என்று கேட்கலாயினன் இந்தக் காட்சியைப் படம்பிடித்தாற்போல் பாடியுள்ளான கிள்ளிவளவன்:

"யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய!
பாணர்! காண்க இவன் கடும்பின திடும்பை;
யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
ஊணொலி அரவம் தானுமம் கேட்கும்,
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டை கொண்டு வற்புலம் சேரும்
சிறுநுண் எறும்பின சில்லொழுக் கேய்ப்பச்,
சோறுடைக் கையா, வீறுவீ றியங்கும
இருங்கிளைச் சிறாஅர்க் காண்டும; கண்டும்
மற்றும மற்றும் வினவுதும தெற்றெனப்
பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ? சேய்த்தோ? கூறுமின் எமக்கே"

(புறம் : கஎங)

இந்தச் சிறு பாட்டில், பண்ணன் அறச்சாலையில் எழும் ஒலிக்கு, பழுமரம் சேர்ந்த புள்ளினங்கள் எழுப்பும்

பேரொலியினையும், அறச்சாலையினின்றும் உணவுபெற்று மீளும் பாணர்கள் வரிசைவரிசையாகச் செல்லும் செல விற்கு, மழைவரும் என அறிந்து முட்டைகளை ஏந்திக் கொண்டு மேட்டுநிலம்நாடி வரிசைவரிசையாகச் செல்லும் எறும்புகளின் செலவையும் உவமைகூறிய அழகும், எறும்பு முட்டைகொண்டு திட்டை ஏறின் தப்பாது மழை பெய்யும் என்ற உண்மைஉரையினை எடுத்தாளும சிறப்பும், பாணர்க்குப் பரிசில் அளித்து அவர் பசிபோக்கித் துணை புரியும் பண்ணனைப் 'பசிப்பிணி மருத்துவன்' எனப் பெய ரிட்டுப் பாராட்டும் பெருமையும, அவன் புலமைநலத் தின் பண்புகளாம்.

## ௧௧. கோப்பெருஞ் சோழன்

பழந்தமிழ்ப் புலவர்கள், பாராண்ட அரசர்கள் பலரைப் பாராட்டியுள்ளனர்; அக்கால அரசர்கள், அப்புலவர்கள் பாராட்டைப் பெறுதற்குப் பெற்றிருந்த குணங்கள் கொடையும், கொற்றமுமேயாம். பாடிய புலவர் ஒவ்வொருவரும், தாம் பாராட்டிய அரசர்கள்பால் அமைந்திருந்த இவ்விரு பெரும் சிறப்புக்களையே பாராட்டியுள்ளனர். ஒருவன் கொடைக்குணம் கண்டு பாராட்டினர்; ஒருவன் வெற்றிகண்டு பாராட்டினர் என்பதால், பாராட்டைப் பெற்றார்தம் உண்மைப் பெருமையினை உணர்தல் இயலாது; கொடுத்தான் எனப் பாராட்டுதல், செய்ந்நன்றி அறிதலாம்; கொடுப்பான் எனப் பாராட்டுதல், குறியெதிர்ப்பை நீரதுடைத்து; அதாவது ஒன்றை எதிர்நோக்கி, ஆதலின் அத்தகைய பாராட்டு உண்மைப் பாராட்டாகாது; இதனால் அப்பாராட்டைப் பெற்றார்தம் உண்மைப்பெருமை உருவாகாது; அதைப்போன்றே, ஒருவன் கொற்றம்கண்டு பாராட்டுவதும ஆம்; அஃது அவன்பால் உள்ள, கொற்றம் கண்டு தோன்றிய அச்சம் காரணமாகவும் இருததல்கூடும்; ஆதலின் அதுவும் உண்மைப் பாராட்டாகாது

புலவர் பலர்தம் பாராட்டைப்பெற்ற கோப்பெருஞ் சோழன், அப்பாராட்டைப் பெறுதற்குப் பெற்றிருந்த குணங்கள் மேற்கூறியன அல்ல; கோப்பெருஞ் சோழனைப் பாராட்டியோர், அவன் கொடையின் பெருமை கண்டோ, அல்லது அவன் கொற்றத்தின் திறங்கொண்டோ பாராட்டினரல்லர்; அவன்பால அமைந்திருந்த, இளிவரின் வாழாத மானம் உடைமையும், புணர்ச்சியும், பழகுதலும் இன்றி, உணர்ச்சியொன்றிய நட்புடைமையும் கண்டே பாராட்டியுள்ளனர்; ஆதலின் அப்புலவர் பாராட்டும் பாராட்டு உண்மைப் பாராட்டாம்; புலவர்தம் உண்மைப் பாராட்டைப்பெறும் உயர்புகழ் கொண்டவன் கோப்பெருஞ் சோழன் ஒருவனே.

பழந்தமிழ் அரசர்கள் பெறாத மற்றொரு சிறப்பும் அவன்பால் உண்டு. ஒரு அரசன் உயிர் துறந்தான்; அவன்

பிரிவினைப்பொறாது புலவர் பலர் அவனைத் தொடர்ந்து தமதம் உயிரைத் துறந்தனர் என்று உலகோர்போற்ற வாழ்ந்த அரசன் கோப்பெருஞ்சோழன் ஒருவனே; பாரியின் பிரிவாற்றாது வடக்கிருந்து உயிர்துறந்தார் கபிலர் என்ற வரலாற்றினைத் தமிழுலகம் அறியும்; ஆனால் பாரியின் பிரிவாற்றாது உயிர்துறந்தவர் கபிலர் ஒருவரே; கோப்பெருஞ்சோழன் பிரிவினைப்பொறாது உயிர் துறந்த புலவர் பலராவர், இந்தச்சிறப்பு, அக்கால அரசர் எவர்க்கும் கிடைக்காத பெருஞ் சிறப்பன்றோ?

உறையூரைத் தலைநகராகக்கொண்டு உலகோர் போற்ற நாடாண்ட சோழ அரசர்களுள் கோப்பெருஞ்சோழனும் ஒருவன். கோப்பெருஞ்சோழனைப் பாடிய புலவர் பலர்; அவர்களுள் எவரும் அவன் அரசியல்வாழ்வு பற்றிய எதையும் கூறினரல்லர், ஒரு புலவனாய் அவன் பாடிய பாக்கள் ஏழு, அவற்றுள் எதுவும் அவன் அரசியல்பற்றிய குறிப்பு எதையும் கொண்டிலது; அவன் பாக்களும், அவனைப் பாடிய புலவர் பாக்களும், நண்பனாய்ப் பழகற்குரிய நல்லோன், மானம் இழந்தபின் வாழா மாண்புடையான் என்று அவன் பண்புடைமைகளையே பாராட்டுகின்றன.

கோப்பெருஞ்சோழன் நண்பர்கள்பால் கொண்டிருக்கும் பெருமதிப்பு அவன்பாடிய குறுந்தொகைப் பாடற்கண் தோன்றி விளங்குகிறது; தலைமகள் ஒருத்திபால் உள்ளத்தைப் பறிகொடுத்த கவலையால் உடல் நலங்கெட்டானொரு தலைமகன், தன் உடல்நலக்கேடு குறித்து வினவிய தன் நண்பனை, "என் நண்ப! இளைஞர்கள் இன்புறுதற்குக் காரணமான நட்புக்குணமுடையோய்! அறிவுடையார்தம் அன்புடைத் தோழ!"

"எலுவ! சிறாஅர் ஏமுறு நண்ப!
புலவர் தோழ!" (குறுந்: கஉக)

என விளித்தான் எனப் பாடிப் புலப்படுத்தினமை காண்க.

கோப்பெருஞ்சோழனின் திருந்திய பண்பாட்டுடைமையினை அவன் பாடிய மற்றொரு பாட்டு விளக்கி நிற்கிறது; பொருள் தேடுங்கால், அப்பொருள் பெறும்வழி அறநெறிப் பட்டதாக இருத்தல் வேண்டும்; பொருள் செய்வார் தம் உள்ளத்தில் நிலைவேண்டிய மக்கட் பண்புகளாகிய அன்பையும் அருளையும் அறவே ஒழித்துவிட்டு, பொருள் ஒன்றையே குறிக்கோளாகக் கொள்ளுதல் கூடாது; பொருள் வருபவழி, அன்பு நெறியோடும், அருள் நெறியோடும் மாறுபடுதல் கூடாது;

> "அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
> புலலார்; புரளவிடல்" (திருக்: எருரு)

எனக் கூறுவர் பெரியோர். இந்தப் பண்பாட்டுள்ளம் கோப்பெருஞ் சோழனபாலும் குடிகொண்டிருக்கக் காண்கிறோம். தலைவன் பொருளவயின் பிரியக் கருதுகிறான் எனக் கூறினாள் தோழி; அதற்குத் தலைமகள் "தோழி! அருளையும் அன்பையும் அறவே மறந்துவிட்டுப் பொருள் வயினபிரிதல் அற உள்ளம் உடையார்க்கு இயலாது; அத்தகைய உள்ள உரம் அவர்க்கு இராது; அருளும், அன்பும் அற்று உரமபெற்ற உள்ளமுடையோர்க்கே அஃது இயலும், தலைவர்க்கு அத்தகைய உள்ளஉரம் இராது என எண்ணுகின்றேன்; அவர்க்கு அத்தகைய உரம், ஆற்றல் உண்டாயின், அவர் அன்பும், அருளும் அற்றவராயின் பொருள்வயின் பிரிக" எனக் கூறினாள் எனக் கூறும் இக்கூற்றில் கோபபெருஞ் சோழனார் தம் உள்ளம் தோன்றுதல் காண்க:

> "அருளும் அன்பும் நீக்கித் துணைதுறந்து
> பொருள்வயிற் பிரிவோர் உரவோ ராயின்
> உரவோர் உரவோ ராக" (குறுந் ௨0)

இத்தகைய சிறந்த பண்பாடு உடையவனாகிய கோப்பெருஞ்சோழன், புல்லாற்றூர் எயிற்றியனார், கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார், பொத்தியார் போன்ற புலவர் பெருமக்கள் போற்ற உறையூர்க்கண், நாடாண்டிருந்தனன். அப்போது பாண்டிநாட்டில் பிசிர் என்னும்

ரின்கண் ஆந்தையார் என்ற அறிஞர் பெருந்தகை ஒருவர் வாழ்ந்திருந்தார்; அல்லவை கடிந்து நல்லவை கண்டு நாடாளும் அரசனைக்கொண்டது அவர்நாடு: ஆன்று அவிந்து அடங்கிய சான்றோர் பலர் வாழும் வளமுடையது அவர் ஊர்; மனைமாட்சியிற் சிறந்த மனையாளையும், அறி வறிந்த மக்களையும், தாம எண்ணுவதைக் குறிப்பால் அறிந்து முடிக்கவல்ல ஏவலர்களையும் பெற்றிருந்தார்; இத்தகு அமைதி வாழ்வு மேற்கொண்டிருந்த காரணத்தால் ஆண்டு பல ஆகியும், நரை திரைபெறாது நல்ல இளமைச் செவ்வி யுடையவராய் விளங்கினார். பிசிராந்தைபால் பொருந்திய இப்பண்புகள் கோப்பெருஞ்சோழனைப் பெரி தும் கவர்ந்துவிட்டன, அவரைத் தன் உயிர நண்பராகக் கொண்டு போற்றினான்; "நண்பருட் சிறந்தாரவர்" எனப் பலர் அறியக் கூறலாயினன்; "அவர் தெற்கே மிகச் சேய்மைக்கண்ணதாகிய பாண்டிநாட்டுப் பிசிர் என்னும் ஊரில் இருப்பவராயினும், அவரே என் உயிரைப் பேணும் உயரிய நண்பராவர்; பிசிராநதையார் பிறர் பெயரையும் பழித்தறியார்; எவரிடத்தும் இனியராய்ப் பழகும் பண் புடையார்; என் உயிரைப்பிணித்த உயர்ந்த நட்புடையார்; பொய் கூறுவதால புகழுண்டாம் என்று கூறுவார் உள ராயினும், அப்புகழை விரும்பிப் பொய்கூறியறியார்; அத் தகுசிறந்த பண்பினராகிய அவர், தன் பெயரைக் கூறுங் கால், 'என் பெயர் கோப்பெருஞ்சோழன் என்பது' என என் பெயரையே தம் பெயராகக்கொண்டு கூறும் அத்துணை அன்பும், உரிமையும், என்பால் கொண்டவர்" என்று அவர் புகழ் பாடிக்கொண்டிருந்தனன்:

> "தென்னம் பொருப்பன் நன்னாட்டுள்ளும்
> பிசிரோன் என்ப என்உயிரோமபுநன்" (புறம்: உகரு)

> "இகழ்விலன், இனியன், யாத்த நண்பினன்,
> புகழ்கெட வரூஉம் பொய்வேண்டலனே,
> தன்பெயா கிளக்குங்காலை 'என்பெயர்
> பேதைச் சோழன்' என்னும் சிறந்த
> காதற் கிழமையும் உடையன்." (புறம்: உகக)

கோப்பெருஞ் சோழனைப் போன்றே பிசிராந்தை யாரும், கோப்பெருஞ்சோழன் புகழ்பாடுவதையே தம் பண் பாகக் கொண்டிருந்தார்; ஒருநாள் மாலைக்காலத்தே தெற்கி லிருந்து வடக்குநோக்கிப் பறந்து செல்லும் அன்னப் புட்கள் சிலவற்றைக் கண்டார்; அவை குமரியாற்றில் இரைதேர்ந்துண்டு இமயம் சென்று உறங்குவபோலும் என்று எண்ணினார்; அவ்வெண்ணத்தைத் தொடர்ந்து, இமயம் செல்லவாயின் இடையில் உள்ள சோழ நாட்டைக் கடந்தன்றோ செல்ல வேண்டும் என்று எண்ணினார்; உடனே, சோழநாட்டுத் தலைநகர் உறையூரும், ஆண்டிருக் கும் அரசன் பெருங் கோயிலும், அதில் இனிது உறையும் தம் நண்பன் கோப்பெருஞ் சோழனும் அவர் மனக்கண் முன்வந்து நின்றனர்; அக்காட்சியினைக் கண்ட ஆந்தையார், பறந்து செல்லும் சேவல் அன்னம் ஒன்றை விளித்து, "ஏ! அன்னச் சேவல்! நின் மனைவி நல்ல அணிபல அணிந்து அழகுற்றுத் தோன்றுவதை விரும்புவாயன்றே? அவ் வாறாயின், யான் கூறுவன கேள்; இமயம் நோக்கிச் செல்லும் வழியில் உறையூரில் என் நண்பன் கோப்பெருஞ் சோழன்பால் நேரே சென்று, 'நான் ஆந்தையார்பால் அன் புடையேன்' என்று கூறின், நின் அன்புடைய மனைவி யணியுமாறு தன் அழகிய அணிகள் அத்தனையும் அளிப்பன், அவனைக்கண்டு செல்கின்றனையா?" என்று பாடுவாராயினர்.

ஆந்தையார், இவ்வாறு எப்பொழுதும் 'கோப்பெருஞ் சோழன், கோப்பெருஞ்சோழன்' என்று கூறிக்கொண்டே யிருப்பதைக் கண்ட அவர் நண்பர்கள், "நின் கோப்பெருஞ் சோழன் யாவன்? அவனுறையும் இடம் யாது? அவன் இயல்புகள் யாவை?" என்றெல்லாம் கேட்கலாயினர்; அதற்கு அவர், "என் தலைவன் உறையூரை வாழ்விடமாகக் கொண்டவன்; கோப்பெருஞ்சோழன் எனும் பெயருடை யான்; சிறந்த நண்பனாகிய பொத்தியார் என்ற புலவ ரோடு கூடி மகிழ்ந்துறையும் இயல்புடையான்" என்று விடைகூறும் வாய்பாட்டான் சோழன் புகழ்பாராட்டி வாழ்வாராயினர்.

'புல்லிதழ் பூவிற்கும் உண்டு' என்ப; குணங்களால் நிறைந்த குன்றென விளங்கும் கோப்பெருஞ் சோழற்குப் பிறந்த மக்கள், தகாவொழுக்கம் மேற்கொண்டு மாண்பில ராயினர்; தங்கள் தந்தையார் இருக்கும்போதே தாம் நாடாளவேண்டும் என்ற பேராசையுடையராயினர். மக்கள் மாண்பிலராதல் அறிந்த கோப்பெருஞ் சோழன் அவர் விருப்பத்திற்கு இசையானாயினான்: அதனால் வெகுண்ட அவன் மக்கள், அவனைப் போரிடை வென்று நாடாள எண்ணினர்; அவர்கள்பால் ஆட்சியைத் தரின் அந்நாட்டு மக்கள் அல்லல் பல அடைவரே! என அந்நாட்டு மக்கள் பால் கொண்ட நல்லெண்ணம், தன் மக்களை வென்று ஒழிக்கத் துணிந்தது; படையோடு வந்து நிற்கும் தன் மக்கள் மீது போர்தொடுத்து எழலாயினன்

கோப்பெருஞ் சோழன் கொண்ட முடிவு நன்றேயா யினும், மக்களையே பகைவராக் 'கொண்டான் என்ற பழிச் சொல் எழுமே என அஞ்சிய அவன் புலவ நண்பர்களுள் ஒருவராகிய புல்லாற்றூர் எயிற்றியனார், கோப்பெருஞ் சோழனை அணுகி, "வேந்தர் வேந்தே! நின்னோடு பகை கொண்டு போரிட வந்து நிற்கும் அவர்கள், நின் குலப் பகைவராகிய பாண்டியரோ அன்றிச் சேரரோ அல்லர்; அவரை வென்று புறங்காண வந்திருக்கும் நீயும், அவர்கள் குலப்பகைவர் குலத்துத் தோன்றினவன் அல்லை; அவர் உன் மக்கள்; நீ அவர் தந்தை; இவ்வுலகில் நின் புகழ் நிறகச் சிறந்து வீட்டுலகம் சென்றபின், இந்நாட்டாட்சிக்குரிய வர் அவரேயன்றோ? இந்த நியதியை நீ நன்கு அறி வாயன்றோ? அது நிற்க; நீங்கள் மேற்கொண்டிருக்கும் இப்போரில், நின்னோடு பொரவந்திருக்கும் நின் மக்கள் தோற்று இறந்து விடுகின்றனர் என்றே கொள்வோம்; பின்னர், நின் ஆட்சிச்செல்வத்தை எவர்பால் தருவை? அவ்வாறின்றி, இப்போரில் நீ நின் மக்களுக்குத் தோற்று இறந்து விடுகின்றனை என்றால், அதனால் நினக் குண்டாம் பழியின் பெருமையினை உணர்ந்துபார்; எவ் வாறு நோக்கினும், இப்போர் மேற்கோடல் நினக்குப்

பொருந்துவதன்று," என்று நயம்படக் கூறினர்; புலவர் தம் அறிவுரை கேட்ட அரசன் போரொழிந்து மீண்டான்.

மக்கள் செயலால் மன்னன் மனம் குன்றி, 'மானம் இழந்தபின் வாழாமை முன்னினிதே' என்று எண்ணினன்; சோழன்பால் அவன் மக்களே படைகொண்டு வென்றனர் என்ற பழிச்சொல் ஏனைப்பகை வேந்தர்களாகிய சேர, பாண்டியர் செவி புகுமுன்னரே உலக வாழ்வினின்றும் விடைபெற்றுக்கொள்ள விரும்பினன்; வடக்கிருந்து உயிர் துறக்கத் துணிந்தான்; தன் உள்ளக்கருத்தினைத் தன் புலவ நண்பர்களுக்கு உணர்த்த விரும்பி, அவர்களை அன்புடன் அழைத்து, "அறிவுடைப் பெரியீர்! யானைவேட்டை மேற்கொண்டு சென்றவன், தன் வேட்டம் வாய்க்க யானையோடு வருதலையும், சிறு பறவை வேட்டைமேற்கொண்டு சென்றோன், பறவை எதுவும் கிடைக்கப்பெறாமல் வறிதே மீள்வதையும் உலகில் காண்கிறோம்; உள்ளுவ எல்லாம் உயர்வுடையவே உள்ளும் நல்லோர்க்கு ஆகூழ் உண்டாயின், அவர் உம்பர் உலகம் புக்கு அவ்வுலக இன்பத்தை நுகர்தலும், அவ்வும்பர் உலகத்தினும் மேலாம் வீட்டுலகடைந்து பிறவாப் பெருநெறி அடைதலும் உண்டு; அத்தகைய பேரின்பத்தினை உறாதுபோயினும், உலகுள்ளளவும் நிற்கும் உயர்ந்த புகழ் பெறுதல் உறுதி ஆகவே, நல்வினையினை எண்ணிய போதே செய்வர் அறிவுடையோர்; அறிவில்லாதவரோ, நல்வினை செய்யவேண்டுமா? செய்வதாயின் இன்றே செய்யவேண்டுமா? இன்னும் சின்னாட்கழித்துச் செய்தலாகாதா? நல்வினை சிறிதுசெய்தால் போதாதா? செய்வன எல்லாம் நல்வினையாகவே இருத்தல்வேண்டுமா? என்றெல்லாம் ஐயப்பாடுற்று அவற்றில் தெளிவேதும் பெறமாட்டாமல் வருந்துவர்; யான் அத்தகைய தெளிவிலா அறிவுடையேனல்லேன்; ஆகவே வடக்கிருந்து உயிர் விடலாம் நல்வினையினை இன்றே மேற்கொள்ளத் துணிந்துவிட்டேன்," என்று கூறினன்.

"செய்குவம் கொல்லோ நல்வினை? எனவே
ஐயம் அறாஅர் கசடீண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவில் லோரே;
யானை வேட்டுவன் யானையும் பெறுமே;
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே;
அதனால், உயர்ந்த வேட்டத்து உயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கின் எய்தல் உண்டெனின்
தொய்யா வுலகத்து நுகர்ச்சியும் கூடும்;
தொய்யா வுலகத்து நுகர்ச்சி இல்லெனின்
மாறிப் பிறப்பின் இன்மையும் கூடும்;
மாறிப் பிறவா ராயினும், இமயத்துக்
கோடுயர்ந் தன்ன தம்மிசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தல்தவத் தலையே" (புறம் உகச)

புலவர்கள் அரசன் உள்ளம் உணர்ந்தவராய், அவன் விருப்பத்திற்குத் தடையாக ஏதும் சொல்லினா ரல்லர்; மாறாக, அவன் ஆற்றும் நல்வினையினைத் தாமும் ஆற்றி அவன் செல்வழிச்செல்லவேண்டும் என்ற விருப்பின ராய் அவனோடு வடக்கிருக்கத் தாமும் துணிந்தனர்; காவிரி யாற்றின் இடையே அமைந்த வோர் ஆற்றிடைக்குறையின் கண் வடக்கிருப்பார் அனைவர்க்கும் இடம் செய்வாராயினர்; அந்நிலையில் கோப்பெருஞ் சோழன், தன் இடத்தை அடுத்துப் பிசிராந்தையார்க்கு இடம் ஒதுக்குமாறு பணித் தனன்; அவன் கூறுவனகேட்ட ஆண்டிருந்த புலவர்கள், "அரசே! ஆந்தையார் நின்பெயரும் புகழும் கேட்டவரே அல்லால், நின்னைக்கண்டு பழகியவரல்லர் மேலும், நின்னை அறிந்து இத்துணை ஆண்டுகள் ஆகியும் ஒருமுறையேனும் கண்டு வந்தவரல்லர்; மேலும், அவர் உள்ள இடமோ மிக மிகச் சேய்மைக்கண் உளது; ஆகவே, நின்செயல் அறிந்து இப்போது வந்து நின்னோடு வடக்கிருத்தல் இயலாது; ஆதலின் அவருக்கு இடம் ஒழிப்பது வீண் அன்றோ?" என்றனர்.

அவர் கூறுவனகேட்ட சோழன், "புலவர் பெரு மக்களே! வருவாரா அவர்? என்று ஐயம் கொள்ளற்க;

அவர் மிகச் சேயநாட்டினர்தான்; என்றாலும் வருவர்; கெட்டகாலை விட்டனர் என்ற பழிச்சொல் நாணும் பண்பினரவர்; ஆகவே, நான் அரசாள்காலத்து வாராது போயினும், அரசிழந்து உயிர்துறக்க நிற்கும் இக்காலத்தில் அவர் வாராதிரார்; அவர் உறுதியாக வருவார்; அவர்க்கும் இடம் ஒதுக்குக" என்றனன்;

"கேட்டல் மாத்திரையல்லது, யாவதும்
காணல் இல்லாது யாண்டுபல கழிய
வழுவின்று பழகிய கிழமைய ராகினும்
அரிதே தோன்றல்; அதற்பட ஒழுகல் என்று
ஐயம் கொள்ளன்மின் ஆரறி வாளீர்!
... .......... ... ..........
இன்னதோர் காலை நில்லலன்;
இன்னே வருகுவன்; ஒழிக்க அவற்கு இடமே"
(புறம்: உகக)

"செல்வக்காலை நிற்பினும்
அல்லற்காலை நில்லலன் மன்னே." (புறம்: உகரு)

கோப்பெருஞ்சோழனும், புலவர்களும் வடக்கிருந்து நோற்கத் தொடங்கிய சின்னாட்களுக்கெல்லாம், அவன் கூறியவாறே, ஆந்தையார் ஆண்டு ஓடோடியும் வந்து, அவன் செயலறிந்து, அவன் அருகே தனக்கு ஒதுக்கிய இடத்தே இருந்து தாமும் வடக்கிருப்பாராயினர்; 'வருவான்' என்று கூறிய அரசனின் சொல்லாற்றலும், அவன் சொல் பழுதாகாவண்ணம் ஆண்டுவந்து சேர்ந்த ஆந்தையாரின் செயலும் ஆண்டிருந்தார் அனைவருக்கும் வியப்பினை அளித்தன; "நினைக்கும்காலை மருட்கையுடைத்தே" என்று வியந்து பாராட்டினர் புலவரெல்லாம். வடக்கிருந்த வேந்தனும், புலவர்களும், சின்னாட்களுக்கெல்லாம் பொன்றும் உடல்அழியப் பொன்றாப் புகழ்பெற்றுச் சிறந்தனர்.

"மகப்பெறும் நிலையில் உள்ள நின் மனைவியாரை விட்டு என்னோடு வடக்கிருத்தல்கூடாது," எனக் கோப்பெருஞ்சோழனால் தடைவிதிக்கப்பெற்ற பொத்தியார்,

ரந்த அரசனையும், புலவர்களையும் நினைந்து நினைந்து புலம்பிப் போற்றிக்கொண்டே சின்னாட்கள் வாழ்ந்து, மனைவி மகப் பெற்றவுடனே, அவ்வாற்றிடைக்குறை யடைந்து சோழன் வடக்கிருந்து உயிர் துறந்த இடத்திற்கு அணித்தே தாமும் வடக்கிருந்து உயிர் துறந்தார்.

அரசனாய், அறிவுடைய புலவனாய், மானம் மகனாய் வாழ்ந்த கோப்பெருஞ்சோழன், நண்பர் உலகிற் கோர் எடுத்துக்காட்டாய் விளங்கினான், உள்ளம் ஒத்தவர் களிடையே நட்புத்தோன்றி வளர்தற்கு, ஒரு நாட்டிற் பிறந்து, ஓர் ஊரில் வாழ்ந்து புணர்ச்சியும் பழகுதலும் வேண்டுவதில்லை என்ற உண்மையினை விளக்குவதற்கு ஏற்றதோர் எடுத்துக்காட்டாக, நம் சோழர் பெருந்தகைக் கும், அவர் ஆருயிர் நண்பர் பிசிராந்தையாருக்கும் இடையே தோன்றி வளர்ந்த நட்பையே மேற்கொள்வர்

"புணர்ச்சி பழகுதல் வேண்டா ; உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்" (திருக்: ௭௮௫)

என்ற குறட்பாவிற்கு உரை எழுதிய ஆசிரியர் பரிமே லழகர், (புணர்ச்சி, பழகுதல் ஆகிய) "இவ்விரண்டு மின்றிக் கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் போல உணர்ச்சியொப்பின், அதுவே உடனுயிர் நீங்கு முரிமைத்தாய நட்பினைப் பயக்குமென்பதாம்," எனக் கூறுவதும் காண்க.

## கஉ. நலங்கிள்ளி

திருமாவளவனால் ஆக்கப்பெற்று, மணிமேகலைகூறும் கிள்ளிவளவன் காலத்தே அழிவுற்ற புகார்ப்பெருநகரை, அஃது அழிவுறுதற்குச் சில ஆண்டுகளுக்குமுன், தலைநக ராகக் கொண்டு சோணுடாண்ட அரசர்களுள் சிறந்தோன் நலங்கிள்ளி எனும் நலமிலோனுவன். அவன் நாடு, கலம் செல்லலாம் தகுதிமிக்க பேராறு ஒன்று கடலோடு கலக் கும் ஓர் இடத்தைத் தலைநகராகக் கொண்டது என்று உறையூர்முதுகண்ணன் சாத்தனுர் என்பார் கூறியுள்ளார்; பாயை மாற்றாமலும், ஏற்றிய பாரத்தைக் குறைக்காமலும் ஆற்று முகத்தே புகவல்ல பெரிய மரக்கலங்கள் தங்கு கடற்செல்வம் கொண்ட நாடுடையோன்.

"கூம்பொடு மீப்பாய் களையாது
மிசைப்பரந்தோண்டாது புகாஅர்ப் புகுந்த
பெருங்கலம்...சொரியும் கடற்பஃறாரத்த நாடுகிழவோய்."

என்று அவர் கூறுவது காண்க.

ஆலத்தூர்கிழார், உறையூர் முதுகண்ணன் சாத்தனுர், கோவூர்கிழார் என்ற முப்பெரும் புலவர்கள் நலங்கிள்ளி யைப் பாராட்டியுள்ளனர்; இவர்களுள் ஆலத்தூர்கிழார், அவன் இறந்தபின்னரும் இருந்து பிரிவாற்றாது இரங்கிப் பாடியவராவர்; நலங்கிள்ளியின் பாக்களும், அவனைப் பாராட்டிய புலவர்கள் அளித்த பாக்களும் நலங்கிள்ளி யின் நற்பண்புகள் பலவற்றை நன்கு எடுத்துக் காட்டுகின் றன; புலவர்கள் மூவரும் நலங்கிள்ளியின் கொற்றம், கொடை, பிறபண்பு முதலாயின கண்டு பாராட்டி யுள்ளனர்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனுர், பகைவர் நாடு நோக்கிச் செல்லும் அவன்படை, வழியில் பனந்தோப்பு ஒன்றினூடே சென்றவழி, படையின் முன்வரிசையில் வரு வார் பனையின் நுங்கினை உண்பர்; படைவரிசையின் இடைப்பகுதி ஆண்டுவருங்கால், அப்பனை முற்றிப் பழுத்து

விடும் ஆதலின், அவ்விடைப்பகுதியில் வருவார் பனையின் பழத்தினை உண்பர். படையின் ஈற்றுப்பகுதி ஆண்டுவரும் காலத்தில் பழங்காலமும் கழிய, கிழங்குக்காலம் வந்து விடும் ஆதலின், படையின் ஈற்றில் வருவார்க்குக் கிழங்கே கிடைக்கும், அத்துணைப் பெரும்படை அவன்படை என அவன் படையின் பெருமையினையும், நலங்கிள்ளியின் பகைவேந்தர்கள், தம்மிடம் உள்ள, வெற்றிகண்டவழி ஊதும் வலம்புரிச் சங்கினை ஒலித்தால், அவ்வொலி கேட்டுப்பொறாது நலங்கிள்ளி தம்மீது படையொடுவரினும் வருவன் என அஞ்சி அவன் வாழ்நாள்வரை, அவ்வலம்புரிச் சங்கினை ஒலிக்காது, தம் அரண்மனையின் ஒருபக்கத்தில் வறிதே தூக்கி வைத்திருந்தனர் என அவன் ஆற்றலையும் பாராட்டினர்:

> "தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய
> இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
> கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர
>
> சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன்கொல் என . . .
> ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி" (புறம். ௨௨௫.)

கோவூர்கிழார், சேர, பாண்டிய மன்னர்களின் இரு குடைகளும் பின்னேநிற்க, தன்குடை மட்டுமே உயர்ந்து முன்னே விளங்கவேண்டும் என்ற ஆர்வமுடைய நலங்கிள்ளி, எப்போதும் பாசறைக்கண் உறைதலையே விரும்புவன்; மனையினுள் மாழ்கியிருக்க விரும்பான்; அவன் படையைச் சேர்ந்த யானைகள், பகைவர் மதில்களை அழிப்பதையே விரும்புவதல்லது, அமைதியாயிருக்க விரும்பார்; அவன் படைமறவர், பகைவர் நாடு, இடையில் காடும் மலையும் கிடக்க மிகச் சேய்மைக்கண் உளது; ஆண்டு எவ்வாறு செல்வேம் எனத் தயங்காது, போர் என்றவுடனே பூரிக்கும் தோளினராவர்; இதனால் நலங்கிள்ளியால் தங்களுக்கு எந்த நேரத்தில் கேடுண்டாமோ என்ற அச்சத்தால் வடநாட்டரசர்கள் சிறிதும் கண்ணுறங்கார்; நலங்கிள்ளி, சேரர்க்குரிய வஞ்சியையும், பாண்டியர்க்குரிய மதுரையை

யும் கைப்பற்றிப் பாணர்க்குப் பரிசளிக்கும் பேராற்றலன்; பாண்டிநாட்டின்கண் இருந்த ஏழு அரண்களை அழித்து, அவற்றின் வாயிற்கதவுகளில் தன் வெற்றிக்கறிகுறியாகப் புலிபொறித்தான் என்று பாராட்டியுள்ளனர்.

நலங்கிள்ளியின் கொற்றத்தை இவ்வாறு பொதுநிலையில் பாராட்டிய புலவர்கள், சேர நாட்டிலும், பாண்டி நாட்டிலும், வடபுலத்திலும் இவன் பகையாய் வாழ்ந்தோர் யாவர் என்பதைத் தெளிவாக உணர்த்தினரல்லர்; சோழ நாட்டில் நடைபெற்ற உள்நாட்டுப் போர்பற்றிய வரலாறு மட்டும் சிறிது விரிவாக உணர்த்தப்பட்டுளது, நலங்கிள்ளிக்கும், அவன் தாயத்தானாகிய உறையூர் நெடுங்கிள்ளிக்கும் இடையில் நடைபெற்ற போர்களைப் புலவர் கோவூர் கிழார் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார். நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையில் ஏனோ பகை வளர்ந்து விட்டது; நலங்கிள்ளிபால் பரிசில்பெற்றுத் தன்பாலும் பரிசில்பெறும் எண்ணங்கொண்டு தன் தலைநகராம் உறையூர் வந்த இளந்தத்தன் என்ற புலவனை, அவன் தன் பகைவன் ஊரினின்றும் வந்துளான் என்ற காரணத்தினாலேயே பகைவன் ஒற்றன் எனக்கொண்டு கொல்லப் புகுந்தான் எனில் அவ்விருவர்க்கும் இடையில் இருந்த பகைக் கொடுமையினை என்னென்பது? நெடுங்கிள்ளி ஆவூர்க் கோட்டையினுள் உளன் என அறிந்து அதை முற்றுகையிட்டுக் கைப்பற்றிய நலங்கிள்ளி, அவன் உறையூர்க் கோட்டையினுள் ஒளிந்துகொண்டதறிந்து ஆண்டும் விடாது சென்று முற்றினான் என்ற வரலாற்றினைக் கோவூர்கிழார் அறிவிப்பர்.

வெற்றிமிகு வேந்தனாய் விளங்கிய நலங்கிள்ளி, கொடைச் சிறப்புமிக்க கொற்றவனாகவும் விளங்கினான்; தன்கண் வந்து இரந்து பொருள் பெற்றார், மீண்டும் மற்றொரு தலைவனைத் தேடிச்சென்று இரக்க வேண்டிய நிலை உண்டாகாவாறு மிக்கபொருள் அளிக்கும் கொடைக்குணமுடையவன்.

"பிறன்கடை மறப்ப நல்குவன்" (புறம்: 68.)

அவன், பகைவராம் அரசர்களை அழிக்கும் ஆற்றல் மட்டும் உடையவனல்லன்; பாணரையும் புலவரையும் துன்புறுத்தும் பசியாகிய பகையினையும் அழிக்கவல்ல ஆற்றலுடையவன்;

> "தன்பகை கடிதலன்றியும், சேர்ந்தோர்
> பசிப்பகை கடிதலும் வல்லன்" (புறம்: ௪00.)

அவன்பால் பரிசில் பெறும் பாணரும் கூத்தரும், 'நலங்கிள்ளிபால் அன்புடையராய நாங்கள், அவன் நாள் பல பெற்றுவாழ்க என அவனைப் பாடுவேமேயன்றி, பிற அரசர் எவரையும் பாடேம்; பிறரைப் பாடிப் பிழைக்க வேண்டிய இழிநிலை உடையரல்லேம்' என இறுமாந்திருந்தற்காம் பெருங்கொடையாளன்:

> "நலங்கிள்ளி நசைப் பொருநரேம்
> பிறர்பாடிப் பெறல் வேண்டேம்
> அவற்பாடுதும் அவன தாள் வாழிய என" (புறம்: ௩௮௨.)

என அவன் கொடைச் சிறப்பினைப் பாராட்டும் புலவர் பாக்கள் பலவாம்.

கொடையாலும், கொற்றத்தாலும் சிறந்த நலங்கிள்ளிபால் அமைந்துள்ள நற்பண்புகள் பலவாம். உலகத்தாரெல்லாம் உறங்கும் இரவின் கடைப்பகுதியாகிய விடியற் காலத்திலும் உறங்காதிருந்து உலகோரைக் காக்கும் வழி வகைகளை ஆராய்ந்து கொண்டிருப்பன் என அவன் நாடாளும் நற்பண்பு தோன்ற ஒரு புலவர் பாராட்டியுள்ளார்:

> "கடைத் தோன்றிய கடைக்கங்குலாற்
> பலர்துஞ்சவும் தான் துஞ்சான்
> உலகுகாக்கும் உயர் கொ.... ...... க்
> கேட்டோன் எந்தை" (புறம்: ௪00.)

பணியுமாம் என்றும் பெருமை; பெருமை பெருமிதம் இன்மை; நல்லார்கண் தோன்றும் அடக்கம் என்றெல்லாம் கூறுவர் பெரியோர்! நலங்கிள்ளி புலவர் பாடும் புகழ்சால் குணம் பல கொண்டோன், அவன் கொற்றத்தின் சிறப்பும்,

கொடையின் திறமும் அக்கால அரசர் எவர்பாலும் காணு அளவு பெரியனவாம்; என்றாலும் நலங்கிள்ளியை நோக்கு வார்க்கு, அவன்பால் அத்துணைச் சிறப்பியல்புகள் உள என்பது புலனாகாது; அவை தன்பால் இருப்பது கண்டு செருக்கித்திரியும் செம்மையற்றவனல்லன். அத்துணைச் சிறப்புக் குணங்கள் இருப்பினும், அவை யாதும் இல்லா தான்போல் அடங்கி நிற்பன்; இந்த நற்குணத்தைப் புலவர் உறையூர் முதுகண்ணன் சாத்தனார், "ஞாயிறு முதலாம் இயற்கைப் பொருள்களின் இயல்புகளை உள்ளவாறு உணர வல்ல பேரறிவாளராலும் அறிந்துகொள்ள இயலாவாறு நின் நற்பண்புகளை அடக்கிக் கொண்டுள்ளனையே; நின்னைப் பாட விரும்பும் புலவர்கள் நின்னை எவ்வாறு பாட வல்லுந ராவர்?" எனப் பாராட்டினர்.

நலங்கிள்ளி அறிவுடைப் பெருமக்கள் கூறும் அறி வுரை கேட்டு அறநெறி நிற்பவனாவன், அவன்பால் அப் பண்புடைமை இருப்பதினாலேயே உறையூர் முதுகண்ணன் சாத்தனார், அவனிடம் சென்று, பொருள் பெற்றதன் பயன் பிறர்க்கு ஈத்து அருட்செயல் புரிதலாம்; அஃது ஆற்றுதான செல்வம் பயனற்றதாம் என்பன போன்ற அறிவுரைகளையும், நாடோறும் அவன் மேற்கொள்ள வேண்டிய கடமைகளையும் எடுத்துரைப்பாராயினர்.

நலங்கிள்ளியைப் பாடிய புலவர் வாயிலாக அறிந்த அவன் பண்பும் பெருமையும் இவை, அவன் பாடிய பாக்கள் இரண்டும், அவன் உள்ளத்தின் உயர்வையும், புலமையின் சிறப்பையும் மேலும் நன்கு புலப்படுத்துகின்றன.

"என் அரசைப் பெறவேண்டி நிற்கும் என் பகை யரசன் மெல்லவந்து என் அடி பணிந்து, 'நின் அரசுரிமை யினைத் தந்தருள்க' என்று இரந்து நிற்பனாயின், அவற்கு இவ்வரசையேயன்றி என் உயிரையும் தருவன்; அவன், தூங்கும் புலியைக் காலால் இடறிய குருடனைப்போல, ஆற்றல் மிக்க என் அமைச்சர், படைத்தலைவர் முதலாயி னோரை மதியாது, என் உள்ளத்தின் ஊக்கத்தையும் இகழ்

வனாயின், அவன் அழிந்து ஒழியாமல் பிழைத்துப் போதல் அரிதினும் அரிது; அனனேன், யானையின் காலால் மிதியுண்ட மூங்கில் முளையைப்போல் அழியுமாறு, அவன் நாடு சென்று வெற்றி கொள்ளேனாயின், அன்பின் விழையாது பொருள் விழையும் பரத்தையர் தொடர்புகொண்ட பழியுடையேனாகுக:"

"மெல்ல வந்து,என் நல்லடி பொருந்தி,
'ஈ' என இரக்குவ ராயின, சீருடை
முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்,
இன்னுயி ராயினும் கொடுக்குவென் இந்நிலத்து;
ஆற்ற லுடையோர் ஆற்றல் போற்றாது என
உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே; மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப் பட்ட
வன்திணி நீண்முளை போலச் சென்றவண
வருந்தப் பொரேஎ னாயின, பொருந்திய
தீதில நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர
ஒல்லா முயக்கிடைக் குழைக என்தாரே." (புறம்: எ௩)

என்ற பாடற் பொருளும், "தம் குடியிற் பிறந்த முன்னோரும், முன்னோர்க்கு முன்னோரும் இறந்தாராக, முறைப்படி வந்த அரசுரிமையைப் பெற்றான் ஒருவன், இத்தகைய பேரரசைப் பெற்றோம் என்ற செருக்கால், தம்குடிகள்பால் இறை வேண்டி இரந்து நிற்கும் இழியரசு உடையனாயின், அத்தகையானுக்கு, அவ்வரசுரிமை பெரும் பாரமாய்த் துன்பம் தரும்; அவ்வரசுரிமையைப் பெரும் போர் கண்டும் கலங்காப் பேருள்ளமுடையோனொருவன் பெறின், அது அவனுக்குக் கோடையில் உலர்ந்து ஒடிந்து வீழ்ந்த சிறு சுள்ளியைப்போல் மிக மிக எளிதாம்:"

"மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்
பால்தர வந்த பழவிறல் தாயம்
எய்தினமாயின் எய்தினம் சிறப்பு எனக்

குடிபுரவு இரக்கும் கூரி லாண்மைச்
சிறியோன் பெறின், அது சிறந்தன்று மன்னே ;
மண்டமர்ப் பரிக்கும் மதனுடை நோன்தாள்
விழுமியோன் பெறுகுவ னாயின், ஆழ்நீர்
அறுகய மருங்கின் சிறுகோல் வெண்கிடை
என்றூழ் வாடுவறல் போல, நன்றும்
நொய்தா லம்ம தானே ; மையற்று
விசும்புற வோங்கிய வெண்குடை
முரசு கெழுவேந்தர் அரசுகெழு திருவே." (புறம் : எரு.)

என்ற பாடற் பொருளும், நலங்கிள்ளி, இரப்போர்க்கு உயிரும் கொடுக்கும் உயர் கொடையாளன் ; இகழ்ந் தோரை எளிதில் அழிக்கவல்ல ஆற்றலன் ; பரத்தையர் ஒழுக்கம் பேணப் பண்புடையான் ; குடிபுரவு இரக்கும் குறையரசு அறியான் ; மண்டமர் கடக்கும் மதனுடை யான் என அவன் பண்பு பாராட்டுதல் காண்க. இப்பாக் களில், ஆற்றல் அறியாது எதிர்த்தானுக்குத் தூங்கும் புலியினை இடறிய குருடனையும், அத்தகையான் நலங்கிள்ளி படையால் பாழாவதற்கு யானையின் காலால் மிதியுண்ட மூங்கில் முளை அழிவதையும் உவமை கூறிய நலங்கிள்ளியின் புலமைச் சிறப்பினையும் கண்டு பாராட்டுவோமாக.

## ௧௬. நல்லுருத்திரன்

உழவர் உழுது பயிர்செய்தாராக, விளைந்து முற்றி விளைந்த கதிர்களை அவ்வுழவர் அறியாவண்ணம், சிறுகச் சிறுக, கொண்டுசென்று தன் வளையினுள்ளே சேர்த்து வைக்கும் இயல்புடையது எலி; தன் பெரும் பசியைப் போக்கிக்கொள்ளவேண்டி, கொழுத்த பன்றியொன்றை அடித்தக்கால், அது தனக்கு இடப்பக்கத்தே வீழ்ந்தது கண்டு, தன் பசியின் கொடுமையினையும் பாராது, இடப் பக்கத்தே வீழ்ந்ததனை உண்ணாது தன் உறுதியே முன்னிற்க, அதை உண்ணாது விட்டுச்சென்று, மறுநாள் முழையி னின்றும் வெளிப்போந்து, பெரிய ஆண்யானையொன்றை அடித்து வலப்பக்கத்தே வீழ்த்தித் தன் பசியாறும் பண் புடையது புலி. எலியொத்த இழிவுள்ளம் உற்றாரும், புலி நிகர் பேருள்ளம் பெற்றாருமாய இருவகையினர், மக்களி லும் வாழக்காண்கின்றோம். எலியொத்தவர் தம் தோளவலி கொண்டு உழைத்துப்பெறாது, பிறர் உழைத்துச் சேர்த்த பொருளை, அவர் அறியாவண்ணம் சிறிது சிறிதாகக் கைப் பற்றி, அதையும் ஆர உண்டு மகிழாமல், உண்ணாதே சேர்த்துவைக்கும் சிறு செயலினராவர், புலி நிகர் மாந்தர்,

> "ஈன்றாள் பசிகாண்பானாயினும் செய்யற்க
> சான்றோர் பழிக்கும் வினை" (திருக்: ௬௫௬)

என்ற உயர்நோக்குடையராய்த், தம் புகழ்கெட வரும் செல்வம், பெருஞ் செல்வமேயாயினும், அதைப் பொரு ளென மதியாப் பேருள்ளம் உடையவராவர் இவ்விரு வகை மக்களுள், முந்தையோர் உள்ள உயர்வு அற்றவர்; அத்தகையார் பெரும்பொருளினராயினும் அவரோடு நட்புக்கொள்வதை அறிவுடையோர் விரும்பார்; விரும்பு தல்கூடாது;

> "பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
> கழிநல் குரவே தலை" (திருக்: ௬௫௭)

என்பவாகலின், பின்னையோர் நட்பினையே சான்றோர் பெரிதும் பேணி வரவேற்பர்; இந்த அரிய உண்மையினை

அழகிய பாட்டின்வழியாக உலகிற்கு உணர்த்திய உயர் பெரும்புலவர் சோழன் நல்லுருத்திரனாராவர் :

> "விளைபதச் சீறிடம் நோக்கி, வளைகதிர்
> வல்சி கொண்டு அளைமல்க வைகும்
> எலி முயன் றனைய ராகி, உள்ளதம்
> வளன் வலியுறக்கும் உளமிலாளரொடு
> இயைந்த கேண்மை இல்லாகியரோ ;
> கடுங்கட் கேழல் இடம்பட வீழ்ந்தெனை,
> அன்றவண் உண்ணாதாகி, வழிநாள்
> பெருமலை விடரகம் புலம்ப, வேட்டெழுந்து
> இருங்களிற் றொருத்தல் நல்வலம் படுக்கும்
> புலிபசித் தன்ன மெலிவில் உள்ளத்து
> உரனுடை யாளர் கேண்மையொடு
> இயைந்த வைகல் உளவா கியரோ." (புறம் ௧௯0)

'கற்றறிந்தார் ஏதும் கலி' எனப் போற்றப்படும் கலித்தொகைக்கண், முல்லைத்திணை குறித்து வரும் கலிப் பாக்கள் பதினேழைப் பாடிய புலவரும் இச்சோழன் நல்லுருத்திரனே ; என்பதல்லால் இவர் வரலாறுபற்றிய செய்திகள் எதையும் அறிந்துகொள்வதற்கில்லை.

காடும், காடுசார்ந்த நிலமுமாகிய முல்லை நிலத்தில், ஆடு, மாடு, எருமை முதலாயின காத்தலும், வரகுபோன்ற புன்செய்ப் பொருள்களைச் செய்தலும் ஆய தொழில் மேற் கொண்ட ஆயர்கள் தம் வாழ்க்கையினை வகுத்துரைப்பார் போல, அவ்வாயமகளிர் தம் கற்பு மாண்பினைக் காவியப் பொருளாகக்கொண்டு பாடவந்த முல்லைத்திணையாம் முல்லைத் திணை பாடவந்த உருத்திரனார், மென்மணர்க்கொன்றை, மென்மலர்க்காயா, தண்ணறும்பிடவம், தவழ்கொடித் தளவம், புல்லிலைவெட்சி, குல்லை, குருந்து, கோடல் போன்ற மரம்பல செறிந்த முல்லைநிலக் காட்சியைக்காட்டி, ஆடுகாக்கும் புல்லினத்தாயரையும் மாடுகாக்கும் நல்லி னத்து ஆயரையும், எருமைகாக்கும் கோட்டினத்து ஆயரையும் அறிமுகம்செய்து, தந்தைநிரை மேய்ப்பன் ;

அண்ணன் பயிர் செய்வன் ; தாய் தினைகொய்வள் ; மகள் நிரைமேய்க்கும் தநதைக்குக் கறவைக்கலம் கொண்டு செல்வள்; புனத்துளமகனுக்கு உணவுகொண்டு செல்வள் ; தினை அரிதாள் மேயும் கன்று காப்பள் ;

"புனத்துளான் எந்தைககுப் புகாவுய்த்துக கொடுப்பதோ?
இனத்துளான் என்னைககுக் கலத்தொடு செல்வதோ?
தினைககாலுள் யாய்விட்ட கனறு மேய்க்கிற்பதோ?"

என்று அவ்வாயர் மேற்கொள் தொழில்கூறி,

"விரிநீருடுககை உலகம பெறினும
அருநெறி யாயா மகளிாக்கு
இருமணம் கூடுதல் இலலியல்பன்று"

"கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்
புல்லாளே ஆயமகள்"

"ஒஓ இவள், பொருபுகல நல்லேறு கொள்பவரல்லால்
திருமாமெய தீணடலர் என்று.........
சொல்லால் தரப்பட்டவள்"

என்று பாடி, அவ்வாயர்மகளிரின் கற்பு நெறியின் திறம் வியநது, அவர் கற்பு நிற்க, அவ்வாயர் மேற்கொள்ளும் ஏறுதழுவற் பெருவிழாவினை விரித்துரைப்பர்.

ஏறுதழுவல் இடையர் குலத்திற்கே உரிய ஒரு விழா ; மகளைபபெறற தந்தை, அவளை மணக்கவரும் ஆண்மகன் நெடிதுநாள் வாழ்நது காக்கும திறனுடையன் எனத் தேர்ந்தே கொடுப்பன். அரசன், தன் மகளை மணக்க விரும்புவோன், அக்கால அரசர்களுள் சிறந்தோனாதல் வேண்டும ; அத்தகையோனே அவ்வரசர்களால் அழி வுறாமல் நெடிதுநாள் வாழ்வன்; ஆகவே, அத்தகையானைத் தேர்தல்வேண்டும் என்ற எண்ணமுடையனுய்த், தன் மகள் மணபபருவம எய்தியகாலை எல்லா அரசாகளையும் ஒருங்கே அழைததுு, இவ்வில்லை மறித்தார் இவளை மணப்பர் ; இந்த இலக்கை எறிந்தாா இவளை மணப்பர் என்றெல்லாம் கூறி அவர்களுட் சிறந்தானைத் தேர்ந்தெடுப்பன்.

ஆயர் ஆடு, மாடு, எருமைகளோடு வாழ்பவர்; இவற்றுள் ஆனேறு மிகவும் ஆற்றலுடையது; ஆனேற்றை அடக்கி ஆள்வது அத்துணை எளிதன்று; அதனால் உயிர் துறந்தாரும் உளர். ஆகவே மகளைப்பெற்ற ஆயன், எத்துணைக்கொடிய காளையையும் அடக்கியாளும் ஆற்றல் தன் மகளை மணப்போனுக்கு உண்டா என அறிந்தே மணம் செய்து தருவன், அம்மணமகனைத் தேர்ந்தெடுக்கும் விழாவே, ஏறுதழுவல்.

மகள் பிறந்த அன்றே, தங்கள் மனையில்வளர் ஆனேற்றுக்கன்று ஒன்றைக் கட்டவிழ்த்துவிடுவர்; அவள் வளர, வளரக் காளையும் காட்டுட்புகுந்து விரும்பியாங்கு மேய்ந்து வளர்ந்துவரும் மகள் மணப்பருவம் எய்தினள் என அறிந்தவுடனேயே காளையை அரிதிற்பற்றிக் கொணர்வர். இவ்வாறே, அவ்வூரில் மணப்பருவம் எய்திய மகளிர் ஒவ்வொருவருக்கும் விடப்பட்ட காளைகளையெல்லாம் கொணர்வர் ஊர்க்கோடியில் உள்ள பெருவெளியில் வேலி அமைத்துக் காளைகளை அதனுள்விடுவர்; மகளிர் அணிபல அணிந்துவந்து ஒருபால் நிற்பர்; மகளிரை மணக்கவிரும்பும் ஆடவரும் ஆண்டுவந்து நிற்பர்; ஊர்த் தலைவன் முன்வந்து, ஒவ்வொரு பெண்ணையும், அவளுக்காக விடப்பட்ட காளையையும் முறையேகாட்டி, இதை அடக்கியோன் இவளை மணப்பன்; இதை அடக்கியோன் இவளை மணப்பன் என்றுகூறி அமைவன்; உடனே காளைகளுக்குச் சினம் பிறக்குமாறு பறை முதலாயினவற்றை முழக்குவர்; பறையொலி கேட்டுச் சினந்து நிற்கும் அக்காளைகள் அந்நிலையில், இளைஞர்கள், ஏறுகள் நிற்கும் வேலியினுட்புகுந்து யார் யார், யார் யாரை மணக்க விரும்புகின்றனரோ, அவரவர்க்கென விடப்பட்ட காளைகளைத் தேர்ந்து போராடி அடக்கி ஆள்வர். இந்த முயற்சியில் இளைஞர்கள் பெரும் புண்பெறுதலும் உண்டு; சிலர் உயிரையும் இழப்பர்; இறுதியில் காளையை அடக்கிய காளைபோல்வானுக்கு மகளை மணம்செய்து கொடுப்பர். இது பழந்தமிழர் நாகரிகம்; இவ்விழா இன்றும், தைத்திங்கள் தொடக்கத்தே

தமிழ்நாட்டுச் சிற்றூர்தோறும் நிகழ்கிறது எனினும், அவ்விழா மேற்கொளவதற்கு அடிப்படையாய காரணததை அவா எவரும அறியார் ; அக்காரணத்திற்காகவும அது மேறகொள்ளப்படுவதில்லை.

இவ் ஏறுதழுவலைப் புலவர் நல்லுருத்திரனார் பாடிய கலிபபாககள பலவும நன்கு விளக்குகின்றன ; நுண்பொறி வெள்ளை, பாணிறவெள்ளை, செமமறுவெள்ளை, சுரிநெற்றிக் காரி, வெண்காற்காரி, வெண்காற் சேய் எனக காளைகளை அறிமுகம செய்யும திறமும், நீறெடுப்பவை, நிலைஞசாடு பவை, மாறேற்றுச் சிலைபபவை, மண்டிப்பாய்பவை என அவற்றின் தொழிலகளை அறிவிக்கும் முறையும,

"ஒள்ளிழை வாருறு கூந்தல் துயில்பெறும வைமருப்பிற்
காரி கதனஞ்சான கொள்பவன் ;
ஈரரி, வெரூஉப்பிணை மானோக்கின் நல்லாள் பெறூஉம் இக்
குரூஉக்கண் கொலலேறு கொள்வன் ;
வரிக்குழை, வேயுறழ் மெனதோள துயில் பெறூஉம, வெந்துப்பிற்
சேஎய சினன அஞசான சாரபவன் எனறுங்கு
உறைவரை நல்லாரை ஆயர் முறையினால்
நாணமீ னாய சூழ்ந்த மதிபோல மிடைமிசைப்
பேணிநிறுத்தார் அணி" (முல்லைக்கலி : ௩.)

என ஆயர், மகளிரை அறிமுகம் செய்து அறிவிக்கும் முறையினைத தெரிவிக்கும திறமும வியககத தக்கனவாம். கலியின நலமெலாம காட்டின் ஏடுஇடம கொள்ளாது ;

நல்லுருததிரனார், இன்றைய இந்துசமயக் கடவுளர் பலரையும அறிநதவர், பாரதக கதையினை நன்கு பயின்றவர் என்பது அவர் பாக்களால அறியக் கிடக்கிறது; சோழா குலத்தே பிறநத நமபுலவர், தமிழ்வளர்த்த பெருமை பாண்டியர்ககே உரித்து என்ற கொள்கையால், பாண்டியரின பெருமைகளைப் பலவாறு பாராட்டிப் போற்றி வாழ்த்துவர் ; தன்னைக் கைப்பற்றத் தவறித் தன் முன்வீழ்ந்த ஆயர் இளைஞனை எதிர்த்து நில்லாது மீளும்

காளைக்குப் போர்க்களத்தே வாள்பெற்றிருந்தும் வெற்றி கொள்ளாது தன்கையகப்பட்ட வீரனை, அவன் பாய் மற மின்மை யுணர்ந்து, அவனைக் கொன்றொழிக்காது போக விடும பெருவீரனை உவமைகூறி,"

"அழியுநர் புறக் கொடை அயில்வேல் ஓச்சாக்
கழிதறு கண்மை" (புறப்பொருள் வெண்பா)

யினைக் காதலிக்கும் தன் உள்ளத்துயர்வை உணர்த்தியுள்ளார் புலவர்.

## கச. மாவளத்தான்

மாவளத்தான், புலவனாய், புலவர்போற்றும் பெரு வீரனாய் விளங்கிய நலங்கிள்ளியின் தம்பியாம தகுதி யுடையோனாவன்: மாவளத்தானும ஒருபுலவன்; அவன் புலவனாதல் மட்டுமேயன்றி, புலவர்களோடு கலந்து பழகும பண்பும் உடையவன் ஒருகால், இவனும் புலவர் தாமற்பல்கண்ணனாரும் கூடி வட்டாடி மகிழ்ந்திருந்தனர்; வட்டுக்களில் ஒன்றைத் தாமற் பல்கண்ணனார் தம கை மறைத்துவைத்துவிட்டது, அதுகண்டு வெகுண்ட மாவளத்தான், அவரை அவ்வட்டினாலேயே எறிந்தான்: வட்டெறிந்த வருத்தம் தாங்கமாட்டாப் புலவர், மாவளத்தானை நோக்கி, "சோழர்குடிவந்த நின்முன்னோர் எவரும் பார்ப்பார் வெறுக்கத்தக்கன செய்யார்; அக்குடிப் பிறந்தோனாகிய நீ, இக்கொடுமையினைச் செய்தனை;

> "நலத்தின்கண் நாரின்மை தோன்றின், அவனைக்
> குலத்தின்கண் ஐயப் படும்" (திருக்: கஙஅ)

என்பர் பெரியோர்; ஆகவே, நின்பிறப்பையே ஐயுறுகின்றேன்" என்று கூறிப பழித்தார்; புலவர் செய்தது தவறே யாயினும் அவர் உளம் நோவச்செய்த தன் செயல் கண்டு நாணிப் பெரிதும் வருநதுவனாயினன்;

> "இன்னாசெய்தாரை ஒறுத்தல் அவர் நாண
> நன்னயம் செய்துவிடல்" (திருக்: கூகச.)

என்ற அறிவுரையினை அறிந்தவனைப்போல், தவறு தன்னுடையதாகவும், அதை மனத்துட் கொள்ளாது, தன் தவறு கண்டு வருந்தும் மாவளத்தான் செயல் புலவரை உளம்நடுங்கச் செய்தது; தவறுகண்டு நாணும் அவனை," "தவறு செய்தவன் நானாகவும், தவறுசெய்தவன் நீ போல் நாணும் பெருநதகாய்! பிழைத்தாரைப் பொறுக்கும் பண்பு இக்குலத்து வந்தார்க்கு இயற்கையின் இயன்றதாம் எனத் தெளியக்காட்டிய நீ வாழிய பன்னாள்" என்று வாழ்த்தினர்;

பேரரசன் தம்பியாய், பெரும்புலவர் நண்பனும், பிழைபொறுக்கும் பண்புடையனும், தன்தவறு கண்டு நாணும் நல்லோனும் விளங்கும் மாவளத்தான் பாடிய பாட்டொன்று குறுந்தொகைக்கண் வந்துளது.

தலைவன் பொருள்வயிற் பிரிவன் என்று அறிந்து வருந்தும் தலைமகளைத் தேற்றும் தோழி, "நம் தலைவர் நம்மை ஈண்டே விடுத்துத் தாம்மட்டுமே பிரிந்துசெல்லக் கருதினராயின், அவர் நின் கண்களினின்று வடியும் நீர், நின் இழைவிளங்கும் மார்பினை நனைப்பதைக் கண்டிலர் என்றே எண்ணுகின்றேன்; கண்டால் அவர் செல்வாரல்லர்; அவர் அதைக் காண்பர்; ஆகவே அவர் செல்லார்" எனக்கூறியதாக அமைந்துளது அச் செய்யுள்:

"தாமே செல்ப வாயிற் கானத்து
புலந்தேர் யானைக் கோட்டிடை யொழிந்த
சிறுவீ முல்லைக் கொம்பிற் றாஅய்
இதழழிந் தூறுங் கணபனி மதரெழிற்
பூணக வனமுலை நனைத்தலும்
காணார் கொல்லோ மாணிழை நமரே." (குறுந் : ௩௨௮.)

# க௫. அண்டர் மகன் குறுவழுதியார்

வழுதி என்ற சொல், பாண்டியரைக் குறிக்க வழங்கும் பெயர்களுள் ஒன்று; அண்டர் என்பது ஆயர் என்ற பொருளுடையது;

"அண்டர் கயிறு அரி எருது,"

"அண்டர் பல்லா பயந்த நெய்" (குறுந்: ௧௧௭, ௨௧0)

என்ற தொடர்களைக் காண்க. ஆதலின், இவர் ஆயர் குலத்தவராவர் என்றும் கொள்ளலாம்;

"தென்னவன்
தொல்லிசை நட்டகுடியொடு தோன்றிய
நல்லினத்து ஆயர்" (முல்லைக்கலி: ௪)

என்ற தொடர், பாண்டியர் குடியும், ஆயர் குடியும் பண்டு உறவுகொண்டிருந்தன என உணர்த்துவதும் காண்க.

தேனீக்கள் ஒலிக்கவும், கல் என்ற ஒலி எழவும் ஓடி வரும் அருவி, கீழே வளர்ந்து நிற்கும் சந்தன மரத்தின் மீது வீழ்ந்து, குளிர நனைக்கும் மலைச்சாரலில், குவளைமலர் பூத்து மணக்கும் சுனையில் பகல்போலக் காயும் நிலாவொளியால், மலைமேல் நிற்கும் வேங்கையின் மலர்கள், புலிகளின் உடற்புள்ளிபோலத் தோன்றுவது கண்டு அஞ்சி ஓடும் பெண்யானைகள் நிறைந்த மலைநாடு எனக் குறிஞ்சி நிலத் திணைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார்:

"பிரசப் பல்கிளை ஆர்ப்பக், கல்லென
வரைஇழி அருவி ஆரம் தீண்டித்
தண்ணென நனைக்கும் நளிமலைச் சிலம்பிற்
கண்ணென மலர்ந்த மாயிதழ்க் குவளைக்
கண்முகை நெடுஞ்சுனை ..........
வானகம் விரிந்த பகன்மருள் நிலவிற்
சூரல் மிளைய சாரல் ஆராற்று
ஓங்கல் மிசைய வேங்கை ஒள்வீப்
புலிப்பொறி கடுப்பத் தோன்றலின், கயவாய்
இரும்பிடி இரியும் சோலை." (அகம்: ௨௨அ)

தலைவர் நம்மோடு சுனையாடி, பகலை இனிது கழித்து இரவில் தம் சிறுகுடி சேர்தலையே யான் விரும்புகின்றேன் எனத் தலைவி பகற்குறி நேர்தலையும் (அகம் : உஉஅ), 'ஐய, தேரை மணல் மேட்டில் நிறுத்திவிட்டு, எமசிறுநல்லூரில் இரவு தங்கிச் செல்லின் தவறுண்டோ எனத் தோழி இரவுக்குறி நேர்தலையும் (குறு : நஎசு), விளங்கப் பாடியுள்ளார் புலவர்.

அரசனொருவனிடத்தில் அழகிற் சிறந்த மகளொருத்தி உளள் என அறிந்த அரசர்கள், அம்மகளை மணம் செய்து தருமாறு வேண்டுவர்; ஆனால், அவள் தந்தையும் அண்ணனும அவ்வரசர்கள் எவரும் அவளுக்கு ஏற்றவராகார் என உணர்ந்து மணம் செய்துதர மறுப்பர்; அவர் மறுபபதறிந்த அரசாகள், அவள் நாட்டின்மீது படையொடுசென்று, அவள் பெற்றோர் உற்றார்களையும், அவள் பிறநத ஊரையும் அழித்து அவளைப்பெற முனைவர்; அவ்வாறு பகைகதது வநதாரை, அவள் தந்தையும் தமரும் எதிர்த்து வென்று விரட்டுவர்; பழந்தமிழாகளிடையே கண்ட நாகரிகம் இது; தகவிலார்க்குத் தமமகளைக் கொடுக்க மறுக்கும் தமிழன் உள்ளத்தின் விளைவால் விளையும் இந்நிகழ்ச்சியை மகட்பாற் காஞ்சி எனப் பெயரிட்டுப் புலவர்கள பாடிப் பாராட்டுவர். அத்தகைய மகட்பாற்காஞ்சித்துறை தழுவிய பாட்டொன்று பாடியுள்ளார் நமபுலவா அண்டர் மகன் குறுவழுதியார்.

பசிதீர் நிலை அறியும் அறிவற்றாயல்லை; ஆதலின் இன்னும சிறிது உண் எனக்கூறி, மகள் வாயில் பால் வளளதளை வைத்து உண்பிக்கும அன்புடையள் தாய்; நிறையக் கற்றும், 'யான் கற்ற கல்வி அததுணைப் பெரிதன்று' என்று கூறும பண்பாடும், வலலாண்மையும் உடையனாகிய உடன்பிறந்தான், வேலேந்திப் போரிடுவதில் வல்லன்; ஆதலின், பகைவரோடு போரிட்டு அழிவார் அழியவும், அழியாது உயிர்பெற்றார், தமமை வரவேற்றுப் பேணுவார் எவரையும் காணுமல் அழியவும் பெரிய

கேட்டைத்தரும் இவள் நலன் என்ற அவர் பாட்டின் பொருளுணர்க:

"'பிறங்கிலை; இனியுளபால்' என மடுத்தலின்
ஈன்ற தாயோ வேண்டாள் அல்லள்;
'கல்வி என்?' என்னும் வல்லாண சிறாஅன்
ஒள்வேல் நல்லன்; அதுவாயாகுதல்;
அழிந்தோர அழிய, ஒழிந்தோர ஒக்கல்
பேணுநர்ப் பெறாஅது விளியும்
புன்தலைப் பெருமபாழ் செயும இவள் நலனே."

(புறம்: ௩௪௩)

## கசா. அறிவுடை நம்பி

அறிவுடை நம்பியின் பெயர், பாண்டியன் அறிவுடை நம்பி என ஏடுகளில் எழுதப்பட்டுள்ளமையால், அவன் பாண்டியர் வழிவந்தவன் என்பது புலனும். ஆடவரிற் சிறந்தானை நம்பி என்றலும், பெண்டிரிற் சிறந்தாளை நங்கை என்றலும் தமிழ்நூல் மரபாதலாலும், அறிவுடை என்ற அடைச்சொல் உண்மையாலும், நம்புலவர் ஆடவரிற் சிறந்தவர், அறிவால் நிறைந்தவர் என்று கொள்க. அறிவுடை நம்பி பாடிய பாக்கள் நான்கு; அவை, நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய நான்கு நூல்களிலும் இடம் பெற்றுள்ளன.

> "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
> மக்கட்பே றல்ல பிற" (திருக்: சுக)

> "இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
> மறுமை யுலகமும் மறுவின்று எய்துப
> செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
> சிறுவர்ப் பயந்த செம்மலோர்" (அகம் : சுசு)

என்று கூறுவர் பெரியோர். இந்த உண்மையை உலகிற்கு உணர்த்தப் புகுந்த அறிவுடை நம்பி, "பலகோடி செல்வத்தை ஈட்டி, அச் செல்வத்துப் பயனும் பலரோடு இருந்து உண்ணும் உயர்வாழ்வு பெற்ற மிகப்பெரிய செல்வர்க்கும், மக்கட்பேறு அற்றவழி, வாழ்நாள் பயனுடையதாகாது வீணும் என்று கூறி, மெல்ல மெல்ல அடிவைத்துக் குறுகக் குறுக நடந்தும், சிறிய கைகளை நீட்டிக் கலத்துள் உணவைத் தரையிலிட்டும், அதைத் தாமே தோண்டிப் பிசைந்தும், வாயிலிட்டுக் கவ்வியும், இருகைகளையும் இட்டுத் துழாவியும், வாரி உடலெலலாம் பூசிக் கொண்டும் பெற்றோர்க்கு இன்பம் தந்து, அவ்வின்பம் கண்டு மகிழும் அவர்தம் அறிவையும் மயக்கும் குழந்தைகளின் இன்பச் செயல்களை எடுத்துக் காட்டியுள்ளார்:

> "படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும்
> உடைப்பெருஞ் செல்வ ராயினும், இடைப்படக்
> குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி,
> இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்

நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம் வாழுநாளே.'' (புறம்: 188)

பொருண் மொழிக்காஞ்சித்துறை தழுவிய இப் பாடல் ஒன்று நீங்க, ஏனைய மூன்று பாக்களும் அகத் திணைப் பொருள் கொண்டன; நற்றிணையில் வரும் நெய்தற்றிணைச் செய்யுள், வரையாது வந்தொழுகும் தலைவனை அடுத்து, "சேணும் எம்மொடு வந்த நாணும் விட்டேம்; அதனால் அலர் எழல் கண்டு வருந்தும் எம் நிலையினை நீ யுணராநதனையல்லை'' என இடித்துக் கூறி வரைவு கடாவுகிறது.

குறுந்தொகைக்கண் வந்துள்ள செய்யுள், 'தலைவி யைப்பெறத் துணைசெய்து அருள்' என்ற தலைமகன் வேண்டுகோட்கிணங்கிய தோழி, பலமுறை வேண்டியும் இசையாது நிற்கும் தலைமகளைக் கடுஞ்சொல் கூறி இசை விக்க எண்ணி, "தோழி! இடையறாது வந்து இரந்து நிற்பதை ஒழுக்கமாக்கொண்ட தலைமகன், சின்னாட்களாக ஈண்டு வருவதிலன்; வருதல நன்றன்று என்ற முடிவினை அவனே மேற்கொண்டிரான்; அவன் வாராமைக்குக் காரணமாய செயல் எதையேனும் யான் செய்திருப்பேனோ என அஞ்சுகின்றேன்,'' என்று கூறித் தலைமகள் ஒப்பு தலையும் பெற்றுள எனக் கூறுகிறது

அகநானூற்றுச் செய்யுள், வரையாது வந்துசெல்லும் தலைமகன் சிறைப்புறத்தானாக, அவன் கேட்குமாறு தலைவியை நோக்கி, "தோழி! முற்றிய திணைக்கதிர்களை யாம் இன்னும் கொய்யத் தொடங்கவில்லை; ஆனால், புனத்தில் கதிர்களை இழந்த தாள்கள் பல நிற்பதைக் காண்கிறோம்; இக்கதிர்களையெல்லாம் கிளிகளே கொண்டு சென்றுள்ளன; புனத்தின் நிலை இது; ஆனால், நீயோ பலமணமும் கலந்து நாறும் கண்ணி சூடி, நாய் பின்வர, வரும் தலைவனைக் காண்பதே கருத்தாக இருக்கின்றனை; இதனால் வரும் கேட்டினை நின் காதல் மிகுதியால் உணர்ந் திலை; கிளிகள் வந்து தங்கும் இடந்தோறும் சென்று

சென்று குரல் எடுத்து அக்கிளிகளை ஓட்டாயாயின், நம் தாய், 'இவள் கிளி ஓட்ட அறியாள்' என்று நின்னை நீக்கி இற்செறித்துவிட்டுப் பிறரைக் கொணர்ந்து வைப்பள்; இதனால், தலைவனைக் காண்பதும் அரிதாகிவிடும்," என்று கூறி, அவ்வாறு கூறியதினாலேயே, 'இனியும் களவொழுக்கம் மேற்கோடல் நன்றன்று, வரைந்துகொள்வதே நன்று' என்ற எண்ணம் தலைமகன் உளத்தே தோன்றுமாறு செய்யும் தோழியின் தொண்டினை எடுத்துக்கூறுகிறது:

"மெய்யில் தீரா மேவரு காமமொடு
எய்யா யாயினும், உரைப்பல் தோழி!
கொய்யா முன்னும் குரல்வார்பு தினையே
அருவி ஆன்ற பைங்கால் தோறும்
இருவி தோன்றின பலவே; நீயே,
முருகு முரண் கொள்ளும் தேம்பாய் கண்ணிப்
பரியல் நாயொடு பன்மலைப் படரும்
வேட்டுவற் பெறலொடு அமைந்தனை; யாழநின்
பூக்கெழு தொடலை நுடங்க எழுந்து எழுந்து
கிள்ளைத் தெள்விளி இடை இடை பயிற்றி
ஆங்காங்கு ஒழுகாயாயின், அன்னை
சிறுகிளி கடிதல் தேற்றாள் இவள் எனப்
பிறர்த் தந்து நிறுக்குவ ளாயின்,
உறற்கரிதாகும் அவன் மலர்ந்த மார்பே." (அகம்: உஅ.)

பெரும்புலவனும் பேரரசனுமாய் விளங்கிய நம் அறிவுடைநம்பியிடம் பிசிராந்தையார் என்ற புலவர் சென்றிருந்தார். புலவனும் புலவனும் கூடியவழி, பொருள் நிறை சொல்லாடல் நிகழும். பிசிராந்தையார் புலவரே; ஆதலின், அவர் எப்பொருளும் விரும்புவர்; ஆனால் அறிவுடைநம்பியோ, புலவனாதலேயன்றி, நாடாள் உரிமை பெற்ற அரசனுமாவான். ஆதலின், அவன் விரும்பும் பொருள் பெரும்பாலும் அரசியற்றொடர்புடையதாகவே இருக்கும். இம்மன இயல்பு அறிந்தவர் பிசிராந்தையார். ஆதலின், அரசியல் பற்றிய தம் அரிய கருத்தினை அழகிய பாவொன்றில் அமைத்துக் கூறினார்.

"நிலத்தின் அளவு, மா அளவு மிகச்சிறிது என்றாலும், அதை முறையாகப் பயிரிட்டு, அதில் விளைந்த உணவுப் பொருளை, நாள்தோறும் இவ்வளவுதான் என்று கணக்கிட்டுக் கொடுத்தால், அச்சிறு நிலத்தில் விளைந்த உணவே யானைக்குப பலநாளைக்கு உணவாகும. பரந்த நிலத்தில் பயிர்செய்துவிட்டு, அவை விளைநது பண்பட்டிருக்கும் காலத்தில் யானை ஒன்றை அவிழ்த்து அந்நிலத்தில் விட்டு அது விரும்பியாங்கு உண்ணச்செய்தால் நூறு வேலியளவு பரவிய நிலத்தில் விளைந்த அவ்வுணவெல்லாம் ஒரே நாளில் பாழாகிவிடும். யானையின் வாயுட்சென்று உணவாகப் பயன்படுவதினும், அதன் கால்களால் மிதியுண்டு அழிவனவே மிகுதியாம். அதைப்போலவே, ஆளும் அரசன் அறிவுடையனாகிக் குடிகளிடமிருந்து எவ்வளவு பெறலாம்? எவ்வளவு பொருள்களை அவர்களால் கொடுக்கமுடியும்? என்பதறிந்து அதற்கேற்ப ஆறிலொரு கடமை என்பதைப்போல், ஒழுங்கான ஒருமுறையை அடிப்படையாகக் கொண்டு பெறுவதை மேற்கொண்டால் அவனுக்குக் கொடுக்கவேண்டிய பொருள்களை விரும்பிக் கொடுத்து அவன் நாட்டு மக்களும் நனிவாழ்வர்; அவனும் வாழ்வன். அரசன் தானும் கொடுங்கோலனாய், குடிகள் அழஅழ அவர்களிடமிருந்து வரிவாங்குவதே அறநெறியாம் என்று அழிவுப்பாதை காட்டுவோரையே அமைச்சராகவும் கொண்டு, குடிகள் வருந்த வரிவாங்குவதை வழக்கமாக மேற்கொண்டால் அவனும் அந்நாட்டு அரசனாய் நெடிது நாள் வாழமுடியாது. அவன் நாட்டு மக்களும் வரிச்சுமை தாங்காது வருந்தி, வாழ்விழந்து வாடி வதைவர்." அறிவுடைநம்பிபால் பிசிராந்தையார் கூறிய அரசியல் முறை இது.

"நான் ஒரு புலவன்; எனக்குப் பிறர் கூறத்தக்க அறிவுரை ஒன்றும் இல்லை," என்று எண்ணாமல் தன்னையொத்த புலவர்தம் பொருண்மொழி கேட்டு முறை செய்யும் அறிவுடைநம்பியின் அறநெறி கண்டு போற்றுவோமாக.

---

## கஎ. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

அரசன் அவை அடைந்து கணவன் கள்வனல்லன் என்பதைக் கண்ணெதிர் காட்டிநிறுவ முன்வந்த கண்ணகி, தன் காற்சிலம்பினை உடைத்தாளாக, அதனுள்ளிருந்த மாணிக்கப்பரல் தன் வாயிற்பட்டுத் தெறித்ததுகண்டு,

> "பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட
> யானோ அரசன்! யானே கள்வன்,
> மன்பதை காக்கும் தென்புலங் காவல்
> என்முதற் பிழைத்தது; கெடுக என் ஆயுள்"
>
> (சிலப். உ0 எச - எ.)

என்றுரைத்து, உரைத்த அவ்வளவிலேயே அவ்வரசு கட்டிலிலேயே வீழ்ந்துயிர்துறந்து தீவினையால் வளைந்த கோலை உயிர்துறத்தலால் நிமிர்த்திய பாண்டிய அரசனே ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனாவன். தவறுசெய்து வாழாத் தறுகண்மை உடையனாய இவன் மனைவியும்,

> 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்'

என்ற கழிபெருங் கற்புடையளாய்க் கணவன் இறந்த ஆண்டே,

> 'தன்உயிர்கொண்டு அவன்உயிர் தேடினள்போல்'

உடன் உயிர்விட்டு மாண்புற்றாள்.

இந்நெடுஞ்செழியன், தன் காலத்தே தமிழ்நாட்டை வென்றகப்படுத்த எண்ணித் தமிழக எல்லைக்கண் வந்திருந்துகொண்டு தமிழரசர் பலர்க்குத் தொல்லை பல தந்துகொண்டிருந்த ஆரிய அரசர்களின் பெரும்படையினை எதிர்த்துப் போரிட்டுத் துரத்திப் புகழ்பெற்றான். ஏனைய தமிழரசர்கள் செய்ய ஒண்ணா இச்செயற்கருஞ் செயலைச் செய்துமுடித்த அவன் ஆற்றல் கண்ட அக்கால மக்கள், 'ஆரியப்படை கடந்த' என்ற சிறப்படைதந்து அவனைப் பாராட்டினர். சிலம்புச் செல்வத்தைச் செந்தமிழ் நாட்டிற்கு அளித்த அடிகளார்,

"வடவாரியர் படைகடந்து
தென்தமிழ் நாடு ஒருங்குகாணப்
புரைதீர் கற்பின் தேவிதன்னுடன்
அரசுகட்டிலில் துஞ்சிய பாண்டியன்
நெடுஞ்செழியன்" (சிலப். உ௩: கட்டுரை: ௧௪-அ.)

என இவன் புகழ்கூறிப் பாராட்டுவர் எனின் இவன் புகழின் பெருமைதான் என்னே!

சீரிய செயலுடையனாய நெடுஞ்செழியன் செந்தமிழ் வல்ல புலவனாயும விளங்கினான். ஒரு நாடு நல்லாட்சி பெற்று தனிசிறந்து விளங்கவேண்டுமாயின், அந்நாடு அறிவன அறிந்த ஆன்றோர பலரைத் தன்னகத்தே கொண்டிருத்தல்வேண்டும. அதற்குக் 'கல்வியே கருந்தனம்' என்பனபோன்ற கருத்துரைகளை அவர் மனங்கொளச் செய்யும நற்பணியினை நல்லோர் பலர் மேற்கோடல் வேண்டும். இந்த உண்மை உணர்ந்தவன் நெடுஞ் செழியன். ஆதலின், 'கல்வி கற்றோர உறும ஏற்றம் இது. கல்லார பெறும பொல்லாங்கிவை' என எடுத்துக்காட்டி, 'ஆகவே கற்றல் நன்று' என்று அறிவுரை கூறும் அப்பணியினைத் தானே மேற்கொண்டான். அவன் புரிந்த பணி அழகிய பாட்டாய் அமைந்துவிட்டமையால் அஃது அவன் கால மக்களுக்கும, அவன் நாட்டு மக்களுக்குமேயல்லாமல், எக்கால மக்களுக்கும எந்நாட்டு மக்களுக்கும் பயன்படும் நிலைத்த துணையாய்நின்று விளங்குகிறது.

"தன் வயிற்றிற் பிறந்த மக்கள் அனைவர்பாலும் ஒத்த அன்பே காட்டும இயல்பினள் தாய் என்ப. அத்தகைய தாயும தன் மக்களிடையே காணும் கல்வியின் ஏற்றத்தாழ்வுகளுக்கேற்ப அவர்கள்பால் தான் காட்டும் அன்பிலும் ஏற்றத்தாழ்வு காட்டுவள். ஒரு குடியிற் பிறந்தார் பலராயினும், அவருள் மூத்தோன் கல்வி கல்லாதவனாகவும், இளையோன் கற்றோனாகவும் காட்சி தரின், மூத்தோனை 'வா' என்றழைக்கவும் நாணும் இவ்

வுலக மக்கள், கற்ற அவனிளையோன் ஆட்டும் சுட்டுவிரல் கண்டே ஆடமுன்வருவர். மக்களைப் பிறப்பால் நால்வகையினராக்கி, ஒருவர் பிறப்பினாலேயே உயர்ந்தவர்; ஒருவர் பிறப்பினாலேயே இழிந்தவர் என்று கூறும் சில அறநூல்கள். ஆனால், மேற்குலத்தில் பிறந்தான் கல்லாதவனையும், இழிகுலத்தில் பிறந்தான் கற்றவனையும் காணப்படின், கற்ற இழிகுலத்தான் காலின்கீழ்க் கல்லாத மேற்குலத்தான் வீழ்ந்துகிடப்பன். ஆகவே, ஒருவன் உயர்விற்கும் தாழ்விற்கும் காரணம் பிறப்பன்று; அவன்பால் காணப்படும் கல்வி, கல்லாமைகளே அதற்குக் காரணமாம். ஆகவே, ஒவ்வொருவரும் கற்றல்வேண்டும்,” என்று கல்வியின் இன்றியமையாமையினை எடுத்துக் காட்டிப் பின்னர்க் கற்கும் முறைபற்றிக் கூறுவார், “கல்வியைக் காசுகொடுத்துப் பெறல் முடியாது; ஆணையிட்டும் அடிமைகொள்ளல் இயலாது; கல்வியையுடையோர் அதை விரும்பிக் கொடுத்தாலன்றி அதைப் பெறுதல் எவர்க்கும் அரிதாம். ஆகவே, கல்வியைப் பெறவிரும்புவோர், அதை வேண்டுமளவு கொடுக்கும் நல்லுள்ளம் கல்விதரும் ஆசிரியர்க்கு உண்டாமாறு ஆக்குதல் வேண்டும். உள்ளம் அடிக்கும் ஆணைக்கும் அடங்காது; அன்பிற்கும் ஆர்வத்திற்குமே அது அடங்கும். அது தானே மாறுதல் வேண்டும் அம்மாற்றம் உண்டாம் வண்ணம் அவர் உள்ளம் உவப்பன செய்தல் வேண்டும் அது, அவர்க்குத் துன்பம் உற்றவழி முன்னின்று செய்யும் உதவியாலும், போதும் என அவர் உள்ளம் உணருமளவு பெரும்பொருள் கொடுத்தலாலும் உண்டாம். இது மட்டுமன்று, ‘நாமோ மேற்குல மகன்! பணிந்து நிற்பது நம் பண்பன்றே’ என்ற எண்ணம் கற்க வருவார்பால் எழல் கூடாது; அந்த எண்ணம் அவர்பால் உண்டு என அறியினும், ஆசிரியன் உள்ளம் திரிந்துவிடும். திரிந்த உள்ளத்தினின்றும் தெளிந்த கல்வியைப் பெறல் இயலாது. ஆகவே பணிந்து பின்னின்று கற்பதற்குச் சிறிதும் தயங்குதல் கூடாது” என்று அதற்கு வழியும் கூறிய அவ்வரச உள்ளத்தின் அழகே அழகு!

"உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும்,
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே ;
பிறப்போரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும் ;
ஒருகுடிப் பிறந்த பல்லோருள்ளும்
மூத்தோன் 'வருக!' என்னாது, அவருள்
அறிவுடை யோனாறு அரசும் செல்லும் ;
வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்
கீழ்ப் பாலொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கட் படுமே."

(புறம் : ௧௮௩.)

# கரு. ஏனாதி நெடுங்கண்ணனார்

ஏனாதி நெடுங்கண்ணனார், பாண்டியன் ஏனாதி நெடுங் கண்ணனார் என அழைக்கப்பெறுதலால், அவரைப் பாண்டியர் குடிவந்தவர் என்று கூறிவிடுதல் இயலாது; படைத்தலைமைபூண்டு சிறந்தார்க்கு, அரசர்கள் ஏனாதி என்ற சிறப்புப்பெயரையும், அதற்கு அடையாளமாக ஏனாதி என்ற பெயர்பூண்ட மோதிரத்தையும் கொடுத்துப் பெருமை செய்வர். அவ்வாறு பட்டம்பெற்ற பாண்டியர் படைத்தலைவர், பாண்டியன் ஏனாதி என்றும், சோழர் படைத்தலைவர், சோழிய ஏனாதி என்றும் அழைக்கப் பெறுவர். சோழிய ஏனாதி திருக்கிள்ளி என்பாரையும் காண்க. இதனால், நெடுங்கண்ணனார் என்ற இயற்பெயர் பூண்ட இவர், பாண்டியர் படைத்தலைவராய்த் தொண்டாற்றி னார் என்பது அறியப்படும் பகைவர் படை வருகையினை, அது மிகச் சேய்மைக்கண் இருக்கும்போதே அறிந்து ஆவன மேற்கொள்ளும் இவர் அறிவுடைமை கண்டு, சேய் நிலத்து நிகழ்ச்சிகளையும அறிந்துகொள்ளும் அவர் அறிவின்தொழிலை, அவர் கண்மேலேற்றி நெடுகண்ணனார் என இவருக்குப் பெயர் சூட்டினர் என்றும் கொள்ளலாம்.

தமிழ்நாட்டுப் படைமறவர்கள் போர்ப்பயிற்சி ஒன்றே அறிந்தவரல்லர்; அவர்கள், கலை பல கற்று, காவியப் புலமையும் பெற்றிருந்தனர் என்பதற்குப் பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் ஓர் எடுத்துக்காட்டாவார்; இவர் பாடியனவாக நமக்குக்கிடைத்த பாக்கள் இரண்டு.

தலைமகள் ஒருத்தியின் அறிவு, உரு, திரு முதலாயின கண்டு காதல்கொண்டு, கலங்கி உடல்மெலிந்த தன்னைப் "பெண்ணொருத்தியால் பெற்ற பெருந்துயர் இது எனக் கூறல் நின் ஆண்மைக் கழகாமோ" எனக் கடிந்துரைக்கும் தன் பார்ப்பனத்தோழனை, "நண்ப! என்னைக் கழன் றுரைக்கும் நீ, நீ கற்ற வேதத்துள், என் துயர் போக்கற் காம் மருந்து ஏதாயினும் உளதோ என அறிந்து கூறு; இன்றேல், அறிவுரைகூறி மயங்குவதைக் கைவிடு," எனக்

கூறும் தலைமகன் கூற்றாகப் பாடிய குறுந்தொகைச் செய்யுளில், புலவர் நெடுங்கண்ணனார், தண்டு, கமண்டலம் தாங்கி, விரதம் மேற்கொண்டுவாழும் பார்ப்பனர்க்கு எழுதாக்கிளவியாம் வேதம் ஓதுதல் தொழிலாம் என்று அறிவிக்கின்றார் :

"பார்ப்பன மகனே! பார்ப்பன மகனே!!
செம்பூ முருக்கின் நல்நார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண்டலத்துப்
படிவ உண்டிப் பார்ப்பன மகனே!
எழுதாக் கற்பின் நின்சொலுள்ளும்
பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின
மருந்தும் உண்டோ? மயலோ இதுவே" (குறுந். ௧௫௬)

பகைவர் படையால் பாழுற்ற ஓர் ஊரில், மறையவர் வழங்கும் மன்றத்தில், யானைகள் உராய்ந்தமையால் முறிந்துபோன தூண்களையுடைய அம்பலத்தில், தலைவியைப்பிரிந்து வந்திருக்கும் ஒரு தலைமகன், அவள் பிரிவாலுண்டாய துயரால் செயலற்றுத் தன் இருமுழந்தாள்களையும் இரு கைகளாலும் இறுகப் பிணித்துக்கொண்டே, "நம் நிலையோ இது; அவளோ, நாம் அவள் நினைவாகவே இருந்து வருந்துகின்றோம் என்பதை அறியாளாய்ப் படுக்கையிற் கிடந்து, கொதிக்கும் உள்ளத்துடன் பெருமூச்சு விட்டு, கண்களினின்றும் பெருகித் தோள் நனையுமாறு ஒழுகும் நீர்த்துளிகளை விரல் நகத்தால் தெறித்துவிட்டுக் கொண்டே, இருள் நிறைந்த நடுயாமத்திலும் உறங்குவதொழிந்து வருந்துவள்" என்று அவளை நினைந்து வருந்துவன் எனப் பிரிந்துறையும் காதலர்களின் துயர்நிலையினைப் பாடிய நம் புலவர், ஒரு படைத்தலைவராதலின், படையால் பாழ்பட்ட பகைவர் நாட்டுச் சிற்றூர்க்காட்சியை நன்கு காட்டியுள்ளார்; நடுயாமத்தும் துயிலாதிருக்கும் தலைவியின் செயலுக்குப் போரவல்ல அரசர்கள் சூழ்ந்து அளிக்க, எல்லாம் அழியவும், எஞ்சியுள்ள ஒரு மதிலும் உறுதியின்றிக் குலைந்துளது என அறிந்த சிற்றரசன் 'எந்த

நேரத்தில் பகைவர் படை உட்புகுந்து விடுமோ?' என்ற அச்சத்தால் உறங்காதிருத்தலை உவமை கூறியுள்ளார் :

"மனைபாழ்பட்ட மரைசேர் மன்றத்துப்
பணைத்தாள் யானை பருஉப்புறம் உரிஞ்சச்
செதுகாழ் சாய்ந்த முதுகால் பொதியில
...... ... .................. ......
தாள்கை பூட்டிய தனிநிலை இருக்கையொடு
தன்நிலையுள்ளும் நம்நிலை உணராள்,
இருமபல் கூந்தல் சேயிழை மடந்தை
கனையிருள் நடுநாள் அணையொடு பொருந்தி,
வெய்துற்றுப் புலக்கும் நெஞ்சமொடு ஐதுயிரா,... ..
பெருந்தோள் நனைக்கும் கலுழ்ந்துவார அரிப்பனி
மெல்விரல் உகிரில தெறியினள......
ஓரெயில் மன்னன போலத்
துயில துறந்தனள் கொல்! அளியள் தானே" (அகம்: ௩௭௩)

## கக. ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன்

புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த ஒலிய மங்கலமும் அதைச்சூழ உள்ளநாடும் பண்டைக் காலத்தில் ஒல்லையூர் எனவும், ஒல்லையூர் நாடு எனவும் முறையே பெயர் பெற்றிருந்தன. சோழ நாட்டிற்கும் பாண்டி நாட்டிற்கும எல்லையாக ஓடும் வெள்ளாற்றின் தென்கரை, தென்கோனாடு என அழைக்கப்பெறும். இத் தென் கோனாட்டின் மேலைப் பகுதியே ஒல்லையூர் நாடு. ஒல்லையூர் நாடு பாண்டிய நாட்டின் வடவெல்லை நாடாகும ஒருகால் அதைச் சோழர்கள் கைப்பற்றிக் கொண்டனர்; இதனால் பாண்டியர் குடிக்கு உண்டாகிய சிறுமையைப் போக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்ட பூதப்பாண்டியன், அந்நாட்டின்மீது படையொடு சென்று அதை வென்று மீண்டும் பாண்டியர் உடைமை யாக்கினன். பூதப் பாண்டியனின் செயற்கரும் இச்செயல் கண்ட பாண்டிப் பெருமக்கள் அவன் வெற்றி விளங்குமாறு, ஒல்லையூர் தந்த என்ற அடையினை அவன் பெயர்முன் கொடுத்துப் பெருமை செய்தனர்.

பூதப்பாண்டியன், பாடிய பாட்டாக இப்போது இருப்பன இரண்டு; அவற்றுள் புறநானூற்றில் வரும் செய்யுளொன்றே, அவன் ஆற்றல், அன்பு, நட்பாடற் பண்பு, நாடாள் சிறப்பு ஆய இன்னபல் குணங்களை, அவன் புலமைத் திறத்தோடு உணரத் துணைபுரிகிறது.

பாண்டியர்க்குப் பகை வேந்தர்களாகிய சேரனும் சோழனும் சிங்கம்போல் சினந்து, தொடங்கிய வினையை இடையில் மடங்காது முடிக்கவல்ல தம் பெரும்படையோடு பாண்டி நாட்டின்மீது போர் தொடுக்கப் போகின்றனர் என்ற செய்தி பூதப்பாண்டியனுக்குப் பெருங் கோபத்தை உண்டாக்கிவிட்டது: “என்னோடு போரிட விரும்புவோர் வருக; வருகின்றவர் யாவரேயாயினும், போர்க்களத்தில் அலற அலறத்தாக்கி, அவர்களும், அவர்கள் தேர்ப்படைகளும் தோற்றுப் புறங்காட்டி ஓடுமாறு

செய்கின்றேன்; அவ்வாறு செய்யேனாயின், இதோ என்னருகிருக்கும் என் அழகிய மனைவியை விட்டுப் பிரிந்து விடுவேனாகுக; நீதிதவறா நன்மை நிலைபெறும நீதிமன்றத்தே, முறைவேண்டியும் குறைவேண்டியும் வந்தார் கூறுவன கேட்டு நீதி அளிக்கவல்ல ஆற்றலற்றொருவனை நிறுத்திக் கொடுங்கோலிற்கு வழிகோலியவனாவேனாகுக, மாவன் ஆந்தை, அந்துவஞ் சாத்தன், ஆதனழிசி, இயக்கன் முதலாய கண்போற் சிறந்த என் நண்பர்களை இழப்பேனாகுக, வழிவழியாக இவ்வுலகாள் பெருமை நிறைந்த இப்பாண்டிய நாட்டையாளும் உரிமை இழந்து, சிறப்பில்லா வன்புலங்களைக் காக்கும் குறுநில மன்னர் குடியிலே பிறந்து பெருமை குன்றுவேனாகுக," என்று அவன் கூறிய வஞ்சினம் ஓர் அழகிய பாட்டாய் உருப்பெற்றுளது:

"மடங்கலிற் சினைஇ மடங்கா உள்ளத்து
அடங்காத் தானை வேந்தர் உடங்கியைந்து
என்னொடு பொருதும் என்ப; அவரை
ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறம் காணேனாயின், சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக;
அறனிலை திரியா அன்பின் அவையத்துத்
திறனில் ஒருவனை நாட்டி, முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக, மலிபுகழ்
வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்
பொய்யா யாணர் மையல் கோமான்
மாவனும், மன்எயில் ஆந்தையும், உரைசால்
அந்துவஞ் சாத்தனும், ஆதன் அழிசியும்,
வெஞ்சின இயக்கனும் உளப்படப் பிறரும்
கண்போல் நண்பின் கேளிரொடு கலந்த
இன்களி மகிழ்நகை இழுக்கி யான், ஒன்றோ,
மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த
தென்புலங் காவலின் ஒரீஇப் பிறர்
வன்புலங் காவலின் மாறி யான்பிறக்கே." (புறம்: ௭௧)

இப்பாட்டால், பூதப்பாண்டியன், மனைவிபால் பேரன்புடையவன், நாட்டில் நல்லாட்சி நிலவ வேண்டுமென்னும் நல்லெண்ணமுடையவன், சிறந்தாரை நண்பராகக்கொண்டு அவரைப் பிரியாது வாழும் நற்பண்புடையவன், தான் பிறந்தது பாண்டியர்குடி என்பதில் பெருமைகொள்பவன் என்பன புலனாதலறிக. பொதிய மலையை உரிமையாக் கொண்டு வாழ்ந்த திதியனைத் தன் பாட்டில் வைத்துப் பாராட்டிய பூதப்பாண்டியன் செயல,

"பொருநர
செல்சமம் கடந்த வில்கெழு தடக்கைப்
பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதியன்." (அகம்: உ௫)

உண்மை வீரரை உயர்த்திப் புகழ அவன் உள்ளம் தயங்காது என்பதை உணர்த்தும்.

கணவர் இறந்தாராக, அவரை இழந்து வாழக் கருதாது, உடனுயிர் துறக்கத் துணிந்து, சான்றோர் பலர் நின்று தடுப்பவும் நில்லாது, அவர்க்குக் கற்புடை மனைவியின் கடமை யாது என்பதை அழகிய பாக்கள் வழியாக எடுத்துக்கூறி உயிர் துறந்த சிறப்புடைய அம்மையாரைத் தம் அருமை மனைவியாகக் கொண்ட பெருமையுடையவர் நம் பூதப்பாண்டியன்.

## ௨௦. கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி

பெருவழுதி என நற்றிணையிலும், இளம்பெரு வழுதி எனப் பரிபாடலிலும், கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி எனப் புறநானூற்றிலும் பெயர்பெற்ற புலவர் ஒருவரே என்று அறிஞர்கள் கூறுவர். ஆண்டானும், அறிவானும் நிறைந்த பெரியோர்களபால் காணலாம் எல்லாப் பண்பு களையும் தன் இளமைக் காலத்திலேயே பெற்றிருந்த காரணத்தால், இப்புலவர் இளம்பெரு வழுதியார் என்ற பெயர் பெற்றார். தமிழர்கள், கடைச்சங்க காலத்திற்கும் முற்பட்ட காலத்திலேயே, கடலில் கலம் செலுத்தும் கலை யறிவுடையராயிருந்தனர்; தமிழக வணிகர்கள், கடாரம், சீனம் முதலிய கீழ்நாடுகளுக்கும், எகிப்து, உரோம் முதலாம் மேல் நாடுகளுக்கும் கலங்களிற் சென்று கடல் வாணிபம் புரிந்து வந்தனர்; தமிழரசர்கள், பெரிய கடற் படைத்துணை கொண்டு ஈழம், கடாரம் முதலாம் அரசுகளை வென்று ஆண்டு வந்தனர். அத்தகைக் கடற் செலவு ஒன்றில் இறந்து போனமையால் போலும், கடலுள் மாய்ந்த என்ற தொடரை இவர் பெயரோடு கூட்டி வழங்கினர்.

இளம்பெருவழுதியார் என்ற பெயர் அவர்க்கு மிக மிகப் பொருந்துவதாம்; அப்புகழிற்கு உரியவரே அவர் என்பதை அவர் பாடிய பாக்களை அறிந்தார் அறிவர். நற்றிணையில் தன்னைவிட்டுப் பிரிந்து சென்ற தலைவனையே எண்ணி ஏங்கும் தலைமகள், தன் உள்ளம் எப்போதும் அவனையே நினைந்து கொண்டுளது; அவனைப் பிரிந்துறை துயரால், தன் உடல்நலமெலாம் குன்ற, தன் பண்டைய வடிவழகும் மாறிவிட்டது என்ற கருத்தை, “சென்ற தலைவரைத் தேடிச் சென்ற என் உள்ளம, அவர் செய்யும் வினைக்குத் துணையாய் நின்று, வினையை முற்றுவித்து அவருடன் ஒருங்குவர எண்ணியுளதோ? அல்லது, அவர், தனக்கு அருள் செய்யாமையால் மீண்டும் இவண் வந்து, அவர் பிரிந்து செல்லுங்கால் இருந்த நலம் அழியப் பசலை பாய்ந்து விளங்கும் என் உடலைக்கண்டு, ‘இவள் நம் தலைவி

அல்லள்; அயலாள் ஒருத்தி' என்று எண்ணி வருந்தி என்னைத்தேடி வேறிடம் சென்றுளதோ? யான் ஒன்றும் அறியேன் :

"சென்ற நெஞ்சம் செய்வினைக் குசாவாய்
ஒருங்குவரல் நசையொடு வருந்துங் கொல்லோ?
அருளா ளாதலின் அழுந்தினள் வந்து
தொன்னலன் இழந்தஎன் பொன்னிறம் நோக்கி
ஏதிலாட்டி இவள் எனப்
போயின்று கொல்லோ நோயதலை மணந்தே." (நற் : ருசு)

என்று கூறியதாகப் பாடியுள்ளமையாலும், பரிபாடலில், பொன்னுடை புனைந்து கிடக்கும் திருமாலுக்கு, பொன்னிற இளவெயில் சூழ வளரும் இருளை,

"இளவெயில் வளாவ இருள்வளாவெனப்
பொன்புனை யுடுக்கையோன் புணர்ந்தமா லிலையே"
(பரி : கடு · உஎ-அ.)

என, உவமை கூறியுள்ளமையாலும், நீலம் மலர்ந்த சுனையையும், அச்சுனையைச் சூழப் பொன்னிற மலர் நிறை அசோகையும், உச்சியில், காய்களும், கனிகளும், மலர்களும் நிறைந்த வேங்கையையும் கொண்டுள்ள மலை, நீல நிறத்தையும், பொன்னுடையினையும், மணிகள் இழைத்த பொன்முடியினையும் உடைய திருமாலை யொக்கும்.

"சுனையெலாம் நீலம் மலர்ச் சுனைசூழ்
சினையெலாம் செயலை மலரக்
காய்கனி உறழ நனைவேங்கை
ஒள்ளிணர் மலர மாயோன் ஒத்த" (பரி : 15 · 30 33)

என்று கூறியுள்ளமையாலும் அவர் புலமைநலம் விளங்கித் தோன்றுதல் காண்க.

உலகம் அழியாது இயங்குவது ஒருசில பெரியோர்களால்தான்; ஒருசில பெரியோர்கள் வாழ்வதால்தான் உலகம் வாழ்கிறது என்ற கொள்கை உடையவராய நம் புலவர், அந்தப் பெரியார் யார்? யாது அவர் பண்பு? என்பார்க்கு, பெரியார் எனப்படுவோர்,

"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று" (திருக்: அஉ.)

என்ற குறள் நெறியுணர்ந்து, அமிழ்தமே கிடைக்கினும், அது உடற்கும் உயிர்க்கும் உறுதி தருவது என்ற காரணத்தால், அதைத்தாமே தனித்து உண்ணார்; எவரையும், எதையும் வெறுத்து ஒதுக்கார்; 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை' என்ப ஆதலின், அஞ்சவேண்டிய பழி பாவங்களைக் கண்டஞ்சுவர், சோம்பித்திரியும் இயல்பினரல்லர்; புகழ்தரும செயலாயின், அச்செயலைத் தம் உயிரைத் தந்தும செய்து முடிப்பர்; பழிதரு வழிவரும் செல்வம், உலகளவு உயர்ந்த செல்வமாயினும, அதைக் கொள்ளார்; எதற்கும் கலங்காத் திண்ணிய உள்ளம் உடையார்; கூறிய இக்குணங்களால் மாண்புற்றதோடு எதைச் செய்யினும், அதில் சுயநலம் காணாது - எதையும் சுயநலம் கருதிச் செய்யாது, எதைச் செய்யினும இதனால் உலகிற்கு என்ன பயன் என்று எண்ணி, எதையும் உலகநலம் கருதியே செய்யும் சிறப்புடையவர். இந்தக் குணங்களுள் ஒன்றையும் ஒழியாமல் அனைத்தையும் பெற்றவரே பெரியார் என்று பெரியார் பண்புரைக்கும் அவர் சொற்கள், 'உண்மையில் இவரே பெரியார்; ஒப்புயர்வற்ற பெரியார்; இளம் பெருவழுதி என்ற பாராட்டிற் குரியார்' என்பதை உறுதி செய்வனவாமன்றே? இக்கருத்துரைக்கும் அவர் பாட்டு இது:

"உண்டா லமம இவ்வுலகம்; இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும, இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே: முனிவிலா;
துஞ்சலும இலர்; பிறா அஞ்சுவது அஞ்சிப்,
புகழ்எனின் உயிரும் கொடுக்குவா; பழி எனின்
உலகுடன் பெறினும கொள்ளலா; அயர்விலர்;
அனன மாட்சி அனைய ராகித்
தமக்கு என முயலா நோன்தாள்
பிறர்க்கு என முயலுநர் உண்மை யானே." (புறம்: கஅஉ.)

## உக. கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி

தமிழ்ச் சங்கங்கள் மூன்றுள், கடைச் சங்கம் புரந்த பாண்டிய அரசர்களுள் உக்கிரப் பெருவழுதியும ஒருவன்; கடைச்சங்கததின் இறுதிக்காலததில் வாழ்நதவனும் இவனே, கடைச்சங்கம கலைநதுவிடுமோ என்ற அசசத்தால், அச்சங்கப் புலவர்களின் பாக்களை ஆராய்ந்து, அகததிணை தழுவிய பாடல்களுள், பதின்மூன்றடிச சிறுமையும், முப்பததோரடிப் பெருமையும கொண்ட நானூறு பாக்களை எடுத்து, அகநானூறு என்ற பெயரால் தொகுப்பித்தான்; இநத அரிய தொண்டில் இவனுக்கு உற்ற துணையாய் உதவியவர், மதுரை உபபூரி குடிகிழார் மகன் உருத்திர சனமன் என்ற ஊமைப் புலவராவர். திருக்குறள அரங்கேறியதும இவன் அவையிலேயே என்று கூறுவாரும் உளர்.

தானும் ஒரு புலவனாய்த் தமிழ் வளர்த்ததோடு தமிழ்ப் புலவர் துணைகொண்டு தமிழ் நூல் தொகுப்பித்த பெருமையுடையோனாகிய பெருவழுதி, பல சிற்றரண்களை உளளடக்கிய பேரரண் அமைந்த காரணத்தால் கானப் பேரெயில் என்ற பெயர் பெற்ற, பகைவர் அணுகற்கரிய ஊரை இருபபிடமாகக் கொண்டு வெற்றி விளங்க வீற்றிருந்த வேங்கைமார்பன் என்ற குறுநில மன்னனை வென்று சிறபபுற்றான், அதனால், கானப் பேரெயில் கடநத உக்கிரப் பெருவழுதி என்று பாராட்டவும் பெற்றான்.

தமிழரசர்கள்பால் காண இயலா நற்பண்பொன்று இவன்பால் இருக்கக் காண்கிறோம். உலகம போற்ற வாழ்ந்த தமிழகம், இன்று உலகோர் துணைவேண்டி நிற்ப தற்குத் தமிழரசர்களிடையே ஒற்றுமை நிலவுவதறகு மாறாகப் பகையும் பொறாமையும் நிலைபெற்றிருந்தமையே காரணம்; அவர்கள் பகையும், பொறாமையும் கொண்டிருந்த காரணத்தால், அவர்கள் தங்களுக்குள்ளேயே பல போர்களை இடைவிடாது மேற்கொண்டு தமிழ்நாட்டின்

வளமும், வாழ்வும் குன்ற வழி செய்து விட்டனர். உக்கிரப் பெருவழுதியார், தமிழரசர்கள் செய்த தவறை உணர்ந்த வர்; தம காலத்தே வாழ்ந்த ஏனைச்சேர, சோழ அரசர் களோடு பகைகொண்டு வாழாமல நட்புப்பூண்டு வாழ்ந்தார்; தமிழரசர்களிடையே காணப்படும் இவ்வொற்றுமை, அக் காலத் தமிழ்ப்புலவாகளுக்குப பெரு மகிழ்ச்சியைத் தந்தது. அருந்தமிழ் மூதாட்டியாம் ஔவையார், உக்கிரப் பெருவழுதி, சேரமான் மாவெண்கோ, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற இருபெரு வேநதரோடு நட்புப்பூண்டு ஒருஙகிருநத காட்சியைக் கண்ணாரக் கண்டு களித்துக் கவி பாடிப் பாராட்டியுள்ளார்.

கணவன் செய்யும் எத்துணைப் பெரிய தவற்றினையும் மறந்து மன்னிக்கும மாண்புடையவள் தமிழ்மகள ; வள் ளுவர்வழிவந்த ஒரு தமிழ்மகள்,

"எழுதுங்கால், கோல்காணுக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கணட விடதது' (திருக் : கஉஉ௫)

என்று கூறுவது காண்க. உக்கிரப் பெருவழுதியார் அறிந்த ஒரு தமிழ்மகள், "பரதையா உறவுபூண்டு தகா ஒழுக்கம மேற்கொண்டு வாழ்நத தலைவன் என்வீடு நோக்கிவந்தவிடத்து, அவன் தவறுகண்டு, 'அன்பிலே, கொடியை' என்றெலாம் கடிந்துரைப்பதற்கு மாறாக, நன்கு உழப்பெற்று உலர்ந்து புழுதியான ஒரு நிலத்தில் பெருமழை பெய்தக்கால், அப்புழுதி கரைந்து குழைநது போவதேபோல் என் உள்ளமும், தலைவன் தலையளி கண்ட வுடனே, நெகிழ்ந்து அவனோடு கலந்துவிட்டது," என்று கூறுகிறாள் :

"வளங்கேழுரனைப்
புலததல் கூடுமோ? தோழி!......
சிறுபுறம கவையின னாக, உறுபெயல்
தணதுளிக் கேற்ற பலவுழு செஞ்செய்
மணபோல் நெகிழ்ந்தவற் கலுழ்ந்தே
நெஞ்சறை போகிய அறிவி னேற்கே." (அகம் : உசு)

இதில், தமிழ்மகளின் உள்ளத்தை உணர்த்திய புலவர், நிலத்தைப் பலமுறை ஆழஉழுதலாம் பயன் பெரிது என உழவுத்தொழில் பற்றிய உயர்ந்த நுணுக்கம் ஒன்றையும்

களவொழுக்கம் மேற்கொண்டொழுகும் தலைமகன், தலைமகள்பால் வந்து மகிழ்ந்து செல்ல விரும்பி, காவல் சிறந்த அவள் மனையுள் மறைந்து புகும்பொழுது, நிலவு வெளிப்படல் முதலிய தடைகளால், தன் முயற்சிக்கு ஏதம் வருவதறிந்து அஞ்சி, வறிதேமீண்டு தனஊரா புகு வன் என்ற செய்தியை உள்ளுறை வகையால் உணர்த்த, பன்றியொன்று, தினைக்கதிரை உண்ணவிரும்பிப் புனம் நோக்கிச்சென்று, ஆண்டு, தினைக்கதிரை அழிக்கவரும் விலங்குகளைக் கைபபற்ற, புனங்காபபோர் அமைத்திருக் கும் இயந்திரப் புழையினை நெருங்குங்கால, அருகே எழுந்த பல்லிச்சொல் கேட்டு, மேறசென்றால் ஏதம் உண் டாம் என அஞ்சி, வறிதே மீண்டு தன் அளை புகும என்று கூறிய நம் புலவர் புலமை நலத்தைப் போற்றுவோமாக.

"சிறுகண் பன்றி,
ஓங்குமலை வியன்புனம் படீஇயா, வீங்குபொறி
நூழை நுழையும் பொழுதில் தாழாது
பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென
மெல்ல மெல்ல பிறக்கே பெயர்ந்துதன்
கல்லளைப் பள்ளி வதியும் நாடன்." (நற் : கூஅ)

## உஉ. குறுவழுதியார்

பெருவழுதி, குறுவழுதி என்ற பெயர்கள் பாண்டியர் குடியில் பயில மேற்கொள்ளப்பெற்றுள்ளன. அண்டர் மகன் குறுவழுதியார் வேறு; குறுவழுதியார் வேறு. இவர் பாடிய பாட்டொன்று நெடுந்தொகைக்கண் வந்துள்ளது.

தலைவி, தலைவனோடு கூடி மகிழ்ந்த கழியும், கானலும் காண்தொறும், தலைவனை இடைவிடாது பெற்று இன்பம் உற எண்ணி, அத் தலைவர் ஆண்டு வாராரோ என ஏங்கி வருந்துவள் என்பதனால், தலைவி, தலைவனை இன்றியமையாள் என்பதையும், தாய் தன் மகள் முனையினும் பேரழகுடையளாதல் அறிந்து, அவள் அவ்வழகோடு புறத்தே போதல் அவள் பெண்மைக்குக் கேடுண்டாதலும் கூடும் எனும அச்சத்தால் இற்செறித்துவிட்டாள் என்பதனால், தலைவனும், தலைவியும் பண்டேபோல் களவில் கூடிமகிழ்தல் இயலாது என்பதையும் எடுத்துக்கூறி, இவ்விடையூறு நீங்கற்கு வழி, தலைவன் தலைவியை விரைந்துவந்து வரைந்து கொள்வதே என்பதை விளக்கினள் தோழி என்ற துறையமைந்த பாடலை அழகாகப் பாடியுள்ளார் புலவர்.

"எல்லினை பெரிது" எனப் பன்மாண் கூறிப்
பெருந்தோள் அடைய முயங்கி நீடுநினைந்து
அருங்கடிப் படுத்தனள் யாய்......

கழியும் கானலும காண்தொறும் பலபுலந்து
வாரார்கொல் எனப் பருவரும்." (அகம் : உகO)

# ௨௩. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

சங்ககாலப் பாண்டிய மன்னர்களுள், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தலைசிறந்தோனுவன்; இவனைப பாடிய புலவாகள பலராவர்; பத்துப் பாட்டுள் நெடுநல்வாடையும், மதுரைக்காஞ்சியும் இவன் புகழ் பாடவந்த நூலகளாம் இவவாறு இவன் புலவர் பலர் பாராட்டைப் பெறுவதற்குக் காரணமாயது, அவன் தலையாலஙகானத்தே பெற்ற பெரு வெற்றியேயாகும். நெடுஞ்செழியன அரியணை ஏறுங்கால் மிகமிக இளையவன்; பொதியமலைப பல்வளமுமம, கொறகைத்துறை முத்தும் பெற்று, பாண்டிநாடு பெருஞ்செலவத்தால் பொலிவுற்று விளங்கிற்று; இதைக் கண்ணுற்றனர் அவன் பகைவர்கள்; யானைக்கண் சேய் மாநதரஞ்சேரல இரும்பொறையும், ஒருசோழனும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் ஆகிய இவர்களும அவன பகைவ ராவர்; இவர்கள் எழுவரும் "செழியன் கடிதிளையன்; அவனை வென்றுபெறும் பொருள மிகப்பல" என்று எண்ணி, அனைவரும்கூடி, அவனை அவனூர் வாயிலிடத்தி லேயே எதிாத்தனர்; இளைஞனே எனினும், ஈடிலாத் திறனுடையனுகலின், அவர் செயல்கண்டு நாணித் தன் வாயிலில் வநது நின்ற அவர்களை எதிர்ததுப் போரிட்டான்; அவன் போாவன்மைக்கு ஆற்ருது, அரசர்கள் தோறறோட லாயினர்; தோற்றோடும அவரைத் துரத்திச்சென்று, தஞ்சைமாவட்டத்தில், தலையாலங்கானம் என்னுமிடத்தில் மடக்கிப் போரிட்டு வென்றான்; எதிர்த்த ஏழரசர்களையும் இளமைக்காலத்திலேயே வென்ற சிறபபறிந்து, அவ்வெற் றிச்செயலை அவன் பெயரோடு இணைத்துப் பாராட்டினர்:

"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவதன்று; இவ்வுலகத் தியற்கை;
இன்றி னூஙகோ கேளலம்......
பொருநும் என்று தன்தலைவந்த

புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க
ஒருதா னாகிப் பொருது களத் தடலே" (புறம்: எசு)

என்றும்,

"ஈண்டு அவர் அடுதலும் ஒல்லான்; ஆண்டு அவர்
மாணிழை மகளிர் நாணினர் கழியத்
தந்தை நமரூர்ஆங்கண்
தெண்கிணை கறங்கச் சென்று ஆண்டு அட்டனனே"
(புறம்: எஅ)

என்றும், அவன் தலையாலங்கானப் போரைப் பாராட்டிப் புகழ்வாராயினர்:

"தன் நாட்டுக்குள் புகுந்து நலிவுசெய்ய முயன்ற பகைவர்களைப் பாழ்செய்து வென்ற நெடுஞ்செழியன், பின்னர்ப் பகைவர் நாடுகளுள் தான் புகுந்து போரிடலாயினன்; கொங்கு நாடுசென்று கொங்கரை ஓட்டி வெற்றிபெற்றான்; கொங்கரோடு நடத்திய இப்போரில் பாண்டியர் படைத் தலைவனாகிய அதிகன் என்பான் இறந்தான்; சேரநாடு சென்று, செல்வத்தால் சிறந்த அவன் முசிறித் துறையை முற்றிச் சேரன் யானைப்படைகளை அழித்து வென்று மீண்டான், இவ்வாறு சேய பலநாடுகளையும் வென்றுகொண்ட செழியன், தன் நாட்டின் அணித்தே நீடூர் என்னும் ஊரிலிருந்த எவ்வி என்பானை வென்று அவனுக்குரிய மிழலைக் கூற்றத்தையும், வேளிர்க்குரிய முத்தூர்க் கூற்றத்தையும் தன் ஆட்சிக்குட்படுத்திக்கொண்டான்.

"வெற்றிப்புகழ் மிக்க வேந்தனாகிய நெடுஞ்செழியன் தன் படைவீரர்கள்பால் பேரன்புடையவன்; அவன் படைவீரர்பால் காட்டும் அன்புடைமையினை ஆசிரியர் நக்கீரர், நெடுநல்வாடையில் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார்; போர்ப்புண்பெற்ற வீரர்கள் பாசறையில் உள்ளனர்; அவர்களைக் காண விரும்புகிறான் நெடுஞ்செழியன்; பகற்காலம் போர்க்கள நிகழ்ச்சியில் கழிந்துவிடுகிறது; ஆகவே இரவில் காணச்செல்கிறான்; இரவின் நடுயாமத்தில், குளிர்ந்த வாடைக்காற்று வீசிக்கொண்டிருக்கவும், மழைத்துளிகள்

மாறாது வீழ்ந்துகொண்டிருக்கவும் காலத்தின் அருமையினை எண்ணிப்பாராமல், வாடை வீசுவதால், தெற்கே சாய்ந்து விளங்கும் அழல்களைக்கொண்ட பெரியபாண்டில் விளக்கு களைப் பலர் ஏந்தி முன்னேசெல்ல, தலையில் வேப்பந்தாரும், கையில் நெடிய வேலும்கொண்ட படைத்தலைவன் முன்னே செல்ல, மழைதுளி மன்னன்மீது விழாமை குறித்து வெண்கொற்றக் குடை ஏந்தி ஒருவன் பின்னேசெல்ல, செழியன், காற்றால் அலைப்புண்டு கீழேவிழும் மேலாடை யினை இடக்கையால் பற்றிக்கொண்டு, தோளில் தொங்கும் வாள்மீது வைத்த வலக்கையனாய், வழியில் வரிசையாக நிற்கும் குதிரைகள் உதறிய அவற்றின் உடல்மேல் நீர் தன் மேலபடச் சேறு நிறைந்த தெருவிலே நடந்துசென்று, படைத்தலைவன் புண்பெற்ற வீரர்களையும், அவர்கள்பெற்ற புண்களின் நிலையினையும் காட்டிக்கொண்டே முன்னே செல்ல, பின்னே அவ்வீரர்களுக்கு அன்புரை வழங்கிக் கொண்டே செல்கிறான்" என்று பாடியுள்ளார்.

நெடுஞ்செழியனைப் பாராட்டிய புலவர்களுள் தலை சிறந்தவராய மாங்குடிகிழார், "நெடுஞ்செழியன், நண்ப ராய் அன்புகாட்டுவார் குடிஉயரத் துணைபுரிவான்; தன் னைப் பகைத்தார் குடியைப் பாழாக்குவன்."

> "நட்டவர் குடி உயர்க்குவை
> செற்றவர் அரசுபெயர்க்குவை" (மதுரைக்: ௧௩௧-௨)

என்றும், "பெறுதற்கு அருமைவாய்ந்தன எனப் பிறர் கருதும் பொருள்களை எல்லாம் எளிதிற்பெற்று, அவ்வாறு பெற்ற பொருள்களைத் தனக்கென வைத்துக்கொள்ளாது, தன்பால் வந்து இரப்பார் அனைவர்க்கும் வாரிவழங்குவன்"

> "அரியவெல்லாம் எளிதினிற் கொண்டு
> உரியவெல்லாம் ஓம்பாது வீசி" (மதுரைக்: ௧௪௬-௭.)

என்றும், "ஒரு பொய் கூறுவதால் உலகமும் அமிழ் தமும் ஒருங்கே வருவதாயினும், பொய்கூறலை மறந்து வாய்மையே வழங்குவன்"

"உயர்நிலை உலகம் அமிழ்தொடு பெறினும்
பொய்சேண் நீங்கிய வாய்நட்பினையே."
(மதுரைக்: ககஎ - அ.)

என்றும், "தென்திசை மலைகள் எல்லாம் நிறையுமாறு வாணன் என்பான் சேர்த்துவைத்த பெரும் பொருள் அளவான பொருளெலாம வருவதாயினும, பழியொடு வரும அப்பொருளைப் பெற விரும்பான்"

"தென்புல மருங்கின் விண்டுநிறைய
வாணன் வைத்த விழுநிதி பெறினும
பழிநமக்கு எழுக என்னாய்" (மதுரைக்: உ0௩ - ௪.)

என்றும் பாராட்டியுள்ளார்.

இவ்வாறு பாராட்டும் பண்பினராய புலவர்கள், அவனுக்கும அவன் அரசியலுக்கும் ஆக்கம் தரும் நல்லுரைகளை அளிப்பதிலும் தவறினாரலர். அவனைப் பாடிய புலவர்களுள் ஒருவராய குடபுலவியனார், "அரசே! இறந்து செல்லும் உலகத்தில் இன்பம் துய்க்க விரும்பினும, உலக அரசுகளையெல்லாம அழித்து நீ ஒருவனே ஆள விரும்பினும், புகழ் இவ்வுலகில் அழியாது நின்று நிலைபெறுவதை விருமபினும அதற்கு வழி யாது எனக் கூறுகின்றேன் கேள்! உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் எனப் போற்றப்படுவர் அவவாறு உயிர் எனப் போற்றப்படும உணவு என்பது நிலமும நீரும் இயைய உண்டாவதாம். ஆகவே, அத்தகைய நீரையும் நிலத்தையும ஒன்றுசேர்த்தோர், உடமபையும உயிரையும் படைத்தவராவர் ஆகவே, நிலன் உள்ள இடத்தில் நீர் இருத்தல் இனறியமையாததாம. உழுது பயிர்செய்துவிட்டு அப்பயிர் விளைதற்கு வேண்டும் நீருக்கு மழைநீரையே எதிர்நோக்கி நிற்கும நிலங்கள், பலகோடி ஏக்கராகப் பரவியிருப்பினும் அந்நிலங்களால் பயன் சிறிதும் இல்லையாம் அவற்றால் அந்நாட்டரசன் பயனுறுதல் இல்லை. ஆகவே நிலங்கள் இயல்பாகவே தாழ்ந்திருக்கும் இடங்களிலெல்லாம் நீர் உண்டாமாறு நீர்நிலைகள் பலவற்றைத்

தோண்டிவைத்தவரே முற்கூறிய முப்பேற்றினையும் பெற்றோராவர். அவ்வாறு நீர்நிலைகளை உண்டாக்காத அரசர், அப்பேறுகளைப பெறாதவராவர்'' என உழவின் சிறபபைக் குறித்தும, அதற்கு உறுதுணையாம் நீர்நிலைகளின் இன்றியமையாமைகளை எடுத்தோதியும அறிவுரை கூறியுள்ளமை காண்க.

நெடுஞ்செழியனைப் பாராட்டிய புலவர்களின் பாக்கள் துணைகொண்டு நாம காணும் நெடுஞ்செழியனைவிட அந்நெடுஞ்செழியனே பாடிய பாட்டின துணைகொண்டு நோககிய வழிததோன்றும நெடுஞ்செழியன் மிகமிகச் சிறபபுடையோனாகத திகழ்கின்றனன தான் இளையன் என்று எண்ணி எதிாதத அரசர்கள எழுவரையும் அழிக்கச்செலலும் நெடுஞ்செழியன், அவ்வாறு செலவதற்குமுன் கூறிய வஞசினம ஒரு பாட்டாக அமைந்துளது. அப்பாட்டின் வழியாக அவனுடைய ஒபபுயாவற்ற குணஙகள் சில தோன்றும்.

"யாமோ யானையும தேரும் மாவும மறவரும் நிறைந்த பெருமபடையுடையேம; இவனோ இளையன்,'' என்ற பொருளறற புலலிய சொற்களை என் உளம புண்படுமாறு கூறிய, என் ஆற்றலறியா அவ்வரசாகளைப போாக்களததில பொனற வென்று, அவர்களையும் அவாகள் போா(முரசுகளையும ஒருஙகே கைப்பற்றி மீளேனாயின், என் ஆட்சியில் வாழும என குடிமக்கள தாஙகள சென்று பிழைப்பதற்காம் வழி காணாது கலங்கிநின்று, 'எஙகள் நாட்டு அரசன் மிகமிகக் கொடுங்கோலனாயினன்; நாஙகள் என் செய்வோம' எனச் செயலற்றுக்கூறிக் கண்ணீர் விட்டுத் தூற்றும் பழிநிறைந்த ஆட்சியை மேற்கொண்டான்போல் இழிநதேனாகுக! ஓங்கிய சிறபபினையும், உயர்ந்த புகழினையும உடைய மாஙகுடி மருதன் முதலாம் புலவர் பெருமக்கள் என் நாட்டையும என்னையும் பாடிப் போற்றாராகுக! அவர் போற்றாமைக்குரிய பழியுடையேனாகுக! என்னால் புரக்கப்படவேண்டியவாகளாய பாணனும், பொருநனும், கூத்தனும் முதலாம் இரவல மக்கள், கண்ணீர்

விட்டுக் கலங்கிநிற்குமாறு அவர்களுக்கு உதவிசெய்யத் தகுதியற்றவனும் அளவு வறுமை என்னை வந்தடையுமாக !”

இஃது அவன் கூறிய வஞ்சினம் :

‘‘‘நகுதக்கனரே நாடுமீக் கூறுநர் ;
இளையன் இவன்’ என உளையக் கூறிப்
‘படுமணி யிரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாம்’ என்று
உறுதுப் பஞ்சாது உடல்சினம் செருக்கிச்
சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி, முரசமொடு
ஒருங்ககப் படேஎ னாயின், பொருந்திய
என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது,
‘கொடியன் எம்இறை’ எனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலே னாகுக !
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைக[1] என்னிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க்கு ஈயா இன்மை யான் உறவே.’’

(புறம்: எ௨.)

நெடுஞ்செழியன் வஞ்சினம் உரைக்கும் இப்பாட்டு, அவன் பகைவர் கூறும் பழிச்சொல் பொறுப்பண்புடையவன், குடிபழிதூற்றும் கொடுங்கோலனைக் காணவும் நாணும் கருத்துடையவன், புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின் வலவன் ஏவா வானவூர்தி எய்துப என்பதறிந்து, புலவர் பாடலைப் போற்றிப்பெறும் பேருள்ளம் உடையவன், ‘இரப்போர்க்கு ஒன்று ஈயாமை இழிவு; இரந்தானுக்கு ஈயேன் என்றல் ஈ என்று இரத்தலினும் இழிந்தது’ என்ற ஈகைக் குணமுடையவன் என்று, அவன் புகழ் நிறைஉருவை முன்னிறுத்திக் காட்டல் அறிக.

## உ௪. நல்வழுதியார்

'ஓங்கு பரிபாடல்' என உயர்த்திக் கூறப்பெறும் பரிபாடலில், வையையாறு குறித்துப் பாடிய புலவர்களுள் இவரும் ஒருவர் என்பதல்லது, நல்வழுதியார் வரலாறு ஒன்றும் தெரிந்திலது; வையையாறுகுறித்த அப்பரிபாடல், பண்டைத் தமிழகமக்கள் ஆற்றில் புதுப்புனல் வருங்கால் மேற்கொள்ளும் புனல்விழா நன்கு புனைந்து உரைக்கப்பட்டுளது.

மேற்குமலையில் மழைபொழியப் புனல் மிகுந்து, மலைச்சாரல் மலர்களையெல்லாம், 'புனல்யாறு அன்று, பூம்புனலயாறு' என்னும்படி, வாரிக்கொண்டு, கரையில் உள்ள அகில சந்தனம் முதலாம் மரங்களை வீழ்த்தி அடித்துக்கொண்டு கடல் பொங்கி வருவதேபோல் வரும் வையையாற்றின் வருகையினையும்,

வையையில் புதுப்புனல் வரவு கேட்ட மதுரை மாநகர் மக்கள் எல்லாம், அழகிய ஆடையும் அணியும் அணிந்து, யோசனை தூரம் கமழும் வாசனை யுடையராய்க் குதிரைமீதும், யானைமீதும், தேர்மீதும் இவர்ந்து வையைக் கரை சேர்தலையும்,

வையைக்கரையில், குழல், முழவு, மத்தரி, தடாரி, தண்ணுமை, மருளி முதலாம் பல்வேறு இசைக்கருவிகளினின்றும் எழும் இன்னிசைகளுக் கிடையே, ஒன்றையொன்று ஒவ்வாத நிலையில் மக்கள் வழங்கும் பல்வேறு உரையாடல்களையும், புனல்விழாக் காண வந்தோர்தம் கண்கள் களிகொள்ள நிகழும் பல்வேறு காட்சிகளையும் புலவர் நல்வழுதியார் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

புனல்விழாக் காணத் தன்னோடு வந்திருக்கும் தன் கணவனை வேறு ஒருத்தி நோக்கினாள் என்பதற்கே, 'அவள் நோக்குமளவு பிழையுடையான் போலும் இவன்' என்று எண்ணி, அவன்மீது சினம்கொண்டு, தன் மலர் மாலையால் புடைத்தும், முத்துவடத்தால் கைகளைப்

பிணைத்தும் அவனைக் கொடுமை செய்தாளாக, அவள் அவ்வாறு தண்டித்தற்குத் தான் செய்த தவறு யாது என்று அறியாது கலங்கும் ஆண்மகன் ஒருவனைக் காட்டிக் "கற்பெனப்படுவது பிறர் நெஞ்சு புகாமை! அஃது ஆடவர்க்கும் உண்டு" என உரையாது உணர்த்தும் அவர் ஓவியம், இக்கால ஆண் உலகிற்கோர் அரிய வழிகாட்டியாதல் அறிக. இதுபோன்ற அரிய காட்சிகளும், அரிய அறிவுரைகளும் மிளிரவிளங்கும் அவர் பரிபாடற் சிறப்பைப் படித்து உணருங்கள்:

"அமிர்தன நோக்கதது அணங்கொருத்தி பார்ப்பக்,
கமழ்கோதை கோலாப் புடைத்துத தன்மார்பில்
இழையினைக் கையாத்து இறுகிறுக்கி வாங்கிப்
'பிழையினை' என்னப் பிழையொன்றும் காணான்
தொழுது பிழைகேட்கும் தூயவன்" (பரி:கஉ:மஎ-சுக)

இன்னும் இன்பமிக்க மணந்தரும் பல்வகை மலர்களையும் ஆய்ந்தெடுத்து உரைத்துக்காட்டி, அம் மலர்களின் மணங்கமழும் சிறப்புடையதென வையையாற்றின் பொய்யா நலனைப்பாராட்டிக் கூறியிருப்பது கற்கக் கற்க வற்றா இன்பந்தருதலைக் கண்டு களிமின்:

"மல்லிகை மௌவல் மணங்கமழ் சண்பகம்
அல்லி கழுநீர் அரவிந்தம் ஆம்பல்
குல்லை வகுளம் குருகத்தி பாதிரி
நல்லிணர் நாகம் நறவம சுரபுன்னை
எல்லாம் கமழும் இருசார் கரைகவிழத்
தேறித் தெளிந்து செறியிருள் மால்மாலைப்
பாறைப் பரப்பிற் பரந்த சிறைநின்று
துறக்கத தெழிலைத்தன் நீர்நிழற் காட்டும்
காரடு காலைக் கலிழ்செங் குருதித்தே
போரடு தானையான் யாறு." (பரி. கஉ: எஎ - அக)

# உரு. பன்னாடுதந்த பாண்டியன் மாறன் வழுதி

குறுந்தொகை பாடிய புலவர்கள் வரிசையில் வரும் பாண்டியன் பன்னாடுதந்தான் என்பவனும், நற்றிணையில், பாடிய புலவர்களாக வரும மாறன்வழுதி, பாண்டியன் மாறன்வழுதி என்பவர்களும், நற்றிணை நூலைத் தொகுத்த பன்னாடுதந்த பாண்டியன் மாறன் வழுதியே என முடிவு செய்வர் ஆராய்ச்சியாளர்கள். நற்றிணை நூலைத் தொகுப்பித்த சிறப்புடையான் என்பதல்லது வேறு எதுவும் அறிந்துகொள்வதற்கில்லை; பன்னாடுதந்த என்ற அடையால் மாறன்வழுதி பல நாடுகளை வென்றான் என அறிந்து கொள்கிறோம். ஆனால், அவன் வென்ற அந்நாடுகள் யாவை என்பது விளங்கவில்லை தான் தொகுத்த நற்றிணையில், அவன் பாடிய பாக்கள் இரண்டுள.

பிரிந்துறையும் தலைவன் தலைவியர்க்கு மாலைக்காலமும் மனக்கினிய காட்சிகளும துயர்தருவனவாம் என்ப; இதைத் தனித்துறையும் தலைமகள் ஒருத்தி வாயிலாகப் பன்னாடுதந்த பாண்டியனார் விளக்கும முறை மிகமிக நன்று: பிரிந்து சென்ற தலைவனை நினைந்து வருந்தும் ஒருத்தி, ஒருநாள் மாலைக்காலததே, தன் தோழியை அழைத்து அருகிருத்திக்கொண்டு, "தோழி! குயிலினங்கள் சோலைகளில் நின்று தம் இனிய குரலெடுத்துக் கூறுகின்றன; அக்குரல், நெடுங்காலத்திற்கு முன்னே உண்டாய புண்ணில் கூரிய வேற்படையினைப் பாய்ச்சினாற் போன்ற துன்பத்தைத் தருகின்றது; காதலர்கள் கூடி விளையாடுதற்கேற்பப் பளிங்கு போன்று தெளிந்த நீர் நிறைந்து ஓடுகிறது ஆறு; இவ்வாற்றின் காட்சி, குயிலின் குரல் கேட்டு அடைந்த துன்பத்தைக் காட்டினும் மிக்க துன்பத்தைத் தருகிறது; மாலை நேரததில் மகளிர் சூடிக் கொள்வதற்கேற்ற பசுமையான குருக்கத்தி மலருடனே விரவிக் கட்டப்பெற்ற சண்பகமலர் மாலையை விற்றுக் கொண்டு இதோ வருகிறாள் இளமகளொருத்தி; இவளை ஆற்றை வெறுப்பதினும் மிகுதியாக வெறுக்கின்றேன்" என்று கூறுகிறாள் எனப் பாடிய புலவர்தம் புலமையைப் பாருங்கள்:

“ அழுந்துபடு விழுப்புண் வழூம்புவாய் புலரா
எவ்வ நெஞ்சத்து எஃகெறிந் தாங்குப்
பிரிவில புலம்பி நுவலும் குயிலினும்,
தேறுநீர் கெழீய யாறு நனி கொடிதே;
அதனினும் கொடியாள் தானே, மதனின்
துய்த்தலை இதழ பைங்குருக்கத்தியொடு
பித்திகை விரவுமலா கொள்ளீரோ என
வண்டுசூழ் வட்டியள் திரிதரும்
தண்டலை உழவா தனிமட மகளே ’ (நற்: ௯௭)

தலைவிக்குத் துயர் விளைக்கும் இக்காட்சிகள், இப் பாட்டைப் படிப்பார்க்குப் பண்டைய தமிழகத்தின் மாலைக் காட்சி யொன்றை மனத்திரையில் படம்பிடித்துக் காட்டி மகிழ்ச்சி அளித்தலை அறிந்து மகிழ்க.

அறத்தால் பொருளும், பொருளால் இன்பமும் பெற்ற தமிழர்கள, ‘ தாம்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் ’ என்ற உயர் நோக்குடையராய், ஏனைய மக்களும், அம் மூன்றனையும் பெற்று வாழ்தற்குத் துணைபுரியும் மழை பெய்யவேண்டி வாழ்த்துவர் என்ற உண்மையினைப் பொருள்பெற்று மீண்டு தலைவியோடு கூடியிருக்கும் தலைமகன் ஒருவன் ‘ பெய்க பெருமழை ’ என வேண்டினன் எனப்பாடி உணர்த்தியுள்ளார்; அத்தலைவன், ‘ பெரிய மேகமே! இருள் கெடுமாறு மின்னி, குளிர்ந்துவிழும் மழைத்துளிகளை மக்கள் மனம் மகிழ வீசி, முரசுபோல் இடித்துப் பெய்வாயாக ’ என வேண்டுவது காண்க :

“ தாழிருள் துமிய மின்னித, தண்ணென
வீழுறை இனிய சிதறி, ஊழின்
கடிப்பிகு முரசின் முழங்கி, இடித்திடித்துப்
பெய்தினி வாழியோ ! பெருவான் !” (குறுந்: ௨௭0)

மக்கள், தாம் துயர்நிலையினராயவழிப் பிறரும் துயருற விரும்புவர்; அவ்வாறு துயருறாது மகிழ்வாரைக் காணின் சினப்பர் என்பதால் உள்ளத்தின் இயல்பு இது என உணர்த்தும் அவர் புலமை நலத்தை உன்னுக.

## உ௬. முடத்திருமாறன்

குமரியாற்றிற்கும், தாம்பிரபரணி யாற்றிற்கும் இடைப்பட்ட பாண்டியநாட்டைக் கபாடபுரத்தைத் தலை நகராகக்கொண்டு ஆண்ட அரசர்களுள் முடத்திருமாறனும் ஒருவன்; கபாடபுரத்தே இருந்த இடைச்சங்கத்தைப் போற்றிப் பேணிய பாண்டிய அரசர்கள் ஐம்பத்தொன்பதின்மருள் இறுதியில் வாழ்ந்தோன் இவனே ஆவன். இவன்காலத்தே நிகழ்ந்த ஒரு பெருங்கடல்கோளால், பாண்டிநாட்டின் பெருநிலப்பரப்பும், அதன் தலைநகராய கபாடபுரமும் அழிந்தொழிந்தன; இக்கடல்கோளால் அழிவுறாது பிழைத்திருந்த பாண்டியன் முடத்திருமாறனும், தமிழ்ப்புலவர்களும் சிறிது வடக்கே சென்று மணலூர் என்னும் சிற்றூர் ஒன்றில் சின்னாள் வாழ்ந்து பின்னர்க் கூடன்மா நகரடைந்து வாழ்ந்தனர்; முடத்திருமாறன் புலவர்கள் துணைகொண்டு, ஆங்கே கடைச் சங்கத்தை அமைத்துச் செந்தமிழ் வளரத் துணைபுரிந்தான். தமிழ்மொழிக்கு நேர இருந்த பெருங்கேட்டை நீக்கி, அது வளரத் துணைபுரிந்த பெருமை உடையோன் நம் முடத் திருமாறன்.

முடத்திருமாறன் சங்கம் அமைத்துத் தமிழ் வளர்த்த தோடு தானும் ஒரு புலவனாய்ப் பாடியும் தமிழ் வளர்த் துளான்; அவன் பாடிய பாக்கள் இரண்டு நற்றிணையில் தொகுக்கப்பெற்றுள்ளன. பாலை, குறிஞ்சி நிலங்களின் பண்பு நன்கு பாடப்பட்டுளது; குட்டுவனையும், அவன் குடவரையில் உள்ள சுனையினையும் பாராட்டியுள்ளார்.

> “நெஞ்சே! அஞ்சில் ஓதி அரும்படர் உற,
> அருஞ்சுரக் கவலைய என்னாய் நெடுஞ்சேண்
> பட்டனை”

என்று கூறும் தலைமகன் சொற்கள், அவன் உள்ளத்துயரை உணர்த்துதல் காண்க.

## உஎ. ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன்

ஆரியரையும், அவர் பழக்க வழக்கங்களையும் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னரே, தமிழர்கள் அறிந்திருந்தனர்; பிடியானை பழக்கும் ஆரியரையும், கழைக்கயிற்றின்மேல் நின்று ஆடும் ஆரியக்கூத்தரையும் தமிழ்ப்புலவர்கள் பார்த்துப் பாராட்டியுள்ளனர்; ஆரியப்பொருநன் என்பவன் தமிழகத்தே வந்து, தமிழரசர்களால் பெருவீரன் என மதிக்கப்பெற்று விளங்கினன். தமிழகத்தின் தனிச் சிறப்புணர்ந்த ஆரியர் சிலர் ஆங்கே தங்கள் நிலையை உறுதியுடையதாக்கி உயர்த்திக்கொள்ளப் பெரிதும் முயன்றுள்ளனர்; அதனால் அவ்வாரிய அரசர்களுக்கும் தமிழரசர்களுக்கும் இடையில் போர் பல நடைபெற்றுள்ளன; அந்நிகழ்ச்சிகளைத் தமிழ்நூல்கள் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றன; ஆரிய அரசர்களை வென்ற ஆண்மைச் சிறப்பைத் தம் பெயர்களோடு இணைத்துப் பெருமைகொண்ட அரசர்களும் உளர்; தமிழரசர்கள், ஆரிய அரசர்களோடு போராடிப்பெற்ற வெற்றியைப் புலவர்களும் பாராட்டியுள்ளனர்; அவ்வாறு பாராட்டிய புலவர்கள், அத்தகைய போர்கள் நிகழ்வதை விரும்பாது, அதை எவ்வாற்றானும் தடுக்கவே விரும்பியுள்ளார்கள்; நடக்க இருந்த போர்களை நடைபெறவொட்டாது தடுத்து நிறுத்திய புலவர்களும் உளர்.

காரியின் முள்ளூர் மலையை ஆரியர் முற்றுகையிட்டனர்; அவர்களை வேற்படை கொண்டுவென்று துரத்தினன் காரி என்பதை அறிந்த கபிலர், ஆரிய அரசர் சிலர், தமிழ்நாட்டிற்கு அண்மையில் எங்கோ வாழ்கின்றனர்; அவர்கள் தமிழ், தமிழர் இவர்களின் தகுதி, திறமைகளை அறியாத காரணத்தினாலேயே தமிழரசர்கள் மீது போர் தொடுக்கின்றனர்; அவர்கள் தமிழர்களின் இயல்பினை அறிந்தாராயின் அவ்வாறு போரிடத்துணியார் என்று எண்ணினர்; அவர்களுக்குத் தமிழின் அருமை பெருமைகளை அறிவித்து நாட்டில் போர் நிகழ்வதைத் தடுத்தல்வேண்டும் என்று

விரும்பினுர்; உடனே அவ்வாரியர் வாழ் இடத்தை அறிந்து சென்று அவர்கள் அரசன் பிரகத்தனைக்கண்டார்; அவனுக்குத் தமிழின் அருமையை அறிவிக்க, தமிழ் நாட்டு மக்களின் இயல்பினை ஒருவாறு உணர்த்தவல்ல கருத்துக்களடங்கிய குறிஞ்சிப்பாட்டைப் பாடிக்காட்டினுர்; அது கேட்டறிந்த அவ் வாரிய அரசனும் தமிழறிவு பெற்றுத் தமிழ் மொழியைப் போற்றினுன் அவனைத தொடர்ந்து ஆரியர் சிலா, தமிழறிந்து தமிழ்ப்புலவராய்த திகழ்ந்தனர்.

குறுந்தொகையைப் பாடிய புலவர்கள் வரிசையில் ஆரியவரசன் யாழ்ப் பிரமதத்தன் என்போனெருவனும் இடம பெற்றுளளான், ஆரியவரசன் யாழ்ப் பிரமதத்தன் என்ற இப் பெயரையும், கபிலரால் தமிழறிவு பெற்ற ஆரியவரசன் பெயராகிய ஆரியவரசன் பிரகத்தன் என்ற பெயரையும், ஒன்று நிறுத்தி ஒப்புநோக்கிய வழி இவ்விரு பெயராலும் குறிப்பிடப்படுவோர் இருவரல்லர் ஒருவரே எனக் கொள்ளுதல் கூடும்.

ஆரியவரசன் யாழ்ப் பிரமதத்தன் பாடிய, 'கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது' என்ற துறை தழுவிய குறுநதொகைப பாடல் மிகவும நயம் செறிநது காணப் படுகிறது.

தன் உள்ளத்தை அழகிய ஓர் இளமங்கைபால் பறி கொடுத்து உளம் கலங்கி மீண்டான் ஒரு ஆண்மகன்; அவன் கலஙகிய நிலைகண்டு, அதற்காம் காரணத்தை அறிந்த அவன் நண்பன், அவன் செயல் கண்டு கடிந் துரைத்தான்; அவனுக்கு அவ்வாண்மகன் விடை கூறு கிருன்: "கடற் கரையில், நுண்ணிய வலைத்தொழிலில் வலல பரதவர் குலததில் ஒரு மடமகள் உள்ளாள்; அவள் மயிற்பீலியின் கண்களைப்போல் அழகிய முடியுடையாள்; பாவைபோல் அழகுடையாள்; ஆண்டுச்செல்வார், அவள் கண்வலையில் அகப்படாமல் மீளுதல் அரிது; ஆண்டுச் சென்ற என் நெஞ்சமும் அவ்வலையுள் அகப்பட்டுக் கொண்டது; உடனே, இப்பொருளுக்கு இப்பொருள்

மாட்சிமையுடையது என ஆராயும தன் மாண்பை இழந்துவிட்டது; அதனால், அது என்னோடு வருவதை விடுத்து ஆண்டே நின்று விட்டது; நடந்தது இது; தாம் கண்டறிந்த ஒன்றை மறைத்துப் பொய்கூறுதல் சான்றோர்க்கு இயல்பாகாது; ஆகவே யான் கூறியது முழுதும் உண்மை; அக்கானலை அடுத்த அச்சிற்றூர்க்குச் செல்வதை நீ விரும்பாதே; சென்றால் நீயும் என்போல் வருந்துவை; பின்னர் இவ்வாறு என்னை இடித்துரையாய்".

"அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கில்லை;
குறுகலோம்புமின் சிறுகுடிச செலவே,
இதற்கிதுமாண்டது என்னாது அதற்பட்டு
ஆண்டொழிந்தன்றே மாணதகை நெஞ்சம,
மயிற்கண் அன்ன மாண்முடிப் பாவை
நுணவலைப் பரதவா மடமகள்
கணவலைப்படூஉம கான லானே" (குறுந்: கஅச)

இந்தச் சிறு பாட்டிலேயே வலைஞர் மகளாதலின் அவள் கண்களை வலையாக உருவகப்படுத்திய சிறப்பையும், "அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கில்லை" எனச் சான்றோர் இயல்புரைத்த சிறப்புப பொருந்தியுள்ள புலமைத்திறத்தையும் போற்றுக.

## உஅ. இளந்திரையன்

காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு அதைச் சூழ உள்ள நாடு, பண்டு அருவாநாடு எனப் பெயர்பெற்று விளங்கிற்று; அந்நாட்டில் வாழ்மக்கள் அருவாளர் என அழைக்கப் பெற்றனர்; கரிகாலன் காலத்திற்குப் பிறகு அந்நாடு தொண்டையர் என்பார் ஆளுகைக்கு உட்பட்டதால், அது தொண்டையர் நாடு அல்லது தொண்டைநாடு என்ற பெயர் பெற்றது; அத்தொண்டைநாடு வடவேங்கடம்வரை பரவியிருந்தது அத்தொண்டையர் வழியில் திரையன் என்பானொருவன் தோன்றி, பவத்திரி என்ற ஊரை உரிமைகொண்டு வேங்கடத்தைச்சூழ உள்ள அந்நாட்டை ஆண்டு வந்தான். இவனே பெரும்பாணாற்றுப்படைபெற்ற தொண்டைமான் இளந்திரையனுவன்; இவனைத் "தொண்டையோர் மருக!" எனப் புலவர் அழைப்பதும் காண்க.

> "இருநிலங் கடந்த திருமறு மார்பின்
> முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்
> திரைதரு மரபின் உரவோ னும்பல்."
>
> (பெரும்பாண் : உ௯-௩௧)

என்ற பெரும்பாணாற்றுப்படைத் தொடரால், இவன் முன்னோர் திரைகடல் வழியாகப் போந்து தொண்டை நாட்டிற்கு அரசராய்த் 'திரையர்' என அழைக்கப் பெற்றனர் என்பது அறியலாம்.

வென்வேற்கிள்ளி என்னும் சோழனுக்கும் நாக நாட்டு அரசன் மகள் பீலிவளைக்கும் பிறந்து கடலில் கலமூர்ந்து வருங்கால் கலம் அழிய, திரையில் மிதந்து கரையடைந்தமையால் 'திரையன்' என்றும், அரசன் மகள் என்பதற்கு அடையாளமாகத் தொண்டைக்கொடி அணிந்து வந்தமைபற்றித் தொண்டைமான் என்றும் அழைக்கப் பெற்றான் என்றும் கூறுப.

திரையன், முரசு முழங்குதானை மூவருள்ளும் சிறந்தோன்; அல்லது கடிந்து அறம்புரி செங்கோலினன்; முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும் வேண்டுப வேண்டுப வேண்டினோர்க்கு அருளுவன்; இவனை மலைந்தோர தேயம் மன்றம் பாழ்படும்; நயநதோர் தேயத்தில் நன்பொன் பூக்கும்; இவன்பால் நட்புக்கொளவேண்டி நயந்தோரும, துப்புக்கொளவேண்டிய துணையிலோரும் கல்வீழ் அருவி கடற்படர்ந்தாங்கு காஞ்சிவந்து குவிவர்; இவன் நாட்டில் அத்தம் செல்வோரை அலறத்தாக்கிக் கைப்பொருள்வெளவும் களவேர் வாழ்க்கைக் கொடியோர் எவரும இலர் என்று பலவாறு புகழ்ந்து கூறுவர் பெரும் பாணாற்றுப்படை நூலாசிரியராகிய கடியலூர் உருத்திரங் கண்ணனார்.

இவ்வாறு புலவர் போற்றத்தக்க புகழ் நிறைந்த அரசு மேற்கொண்டோனாகிய திரையன், புலவர் போற்றும் புலமை மிக்கோனாய் விளங்குகிறான்; அரசியல் நிலைகுறித்து அவன் பாடிய புறநானூற்றுப் பாடல் புலவர்க்கோர் நல்விருந்து; அரசர்க்கொரு அறநூல்.

ஒருவண்டி கேடுறுவது, அவ்வண்டியின் திண்மை யின்மையாலன்று; ஒருவண்டியின், கேடு, கேடின்மைக்கு, அவ் வண்டியின் திண்மையின்மை, திண்மை காரணங்க ளாகா; அதன் கேடும் கேடின்மையும் அதை ஓட்டுவோனைப் பொறுத்துளது; ஓட்டும் அவன் அத்தொழிலறிந்தோ னாயின், அவன் ஓட்டும் வண்டி திண்மை குறைந்து தோன்றினும கேடுறாது; அவன்பால் அவ்வாற்றல் இன்றாயின், அவன் ஓட்டும் வண்டி எத்துணைத் திண்ணி தாயினும் கேடுறல் உறுதி.

இதைப்போலவே ஒரு அரசு தாழ்வதும் வாழ்வதும் அவ்வரசை நடத்துவோர் அறிவின்மை உண்மைகளி னாலேயேயாம்; ஓர் அரசின் தாழ்வு வாழ்வுகளுக்கு அவ் வரசின் சிறுமையும் பெருமையும் காரணங்களாகா; அதன் வாழ்வும் தாழ்வும் அதைத் தலைமைதாங்கி நடத்திச் செல்

வோன் ஆற்றல் ஆற்றலின்மைகளினுலேயேயாம்; ஆள் வோன், ஆளும் நெறியறிந்தோனுயின், எத்துணைச் சீர் கேடுற்ற அரசும் சீர்பெற்றுயரும; அவன்பால் அவ்வாற்றல் இன்றுயின், அவனுல் செலுத்தப்படும் அரசு எத்துணைப் பலம் பொருந்தியதாயினும அஃது அழிதல் உறுதி.

அரசியல் பற்றிய இக்கருத்தை விளக்க வந்த இளந் திரையன், "உருளையும் பாரும கோக்கப பெற்று நிலத்தில் நன்கு ஓடும் உறுதி வாய்நத வண்டி, அதை ஓட்டுவோன் அத்தொழிலறிந்து மாண்புற்றோனுயின், கேடொன்று மின்றி வழியில் இனிது செல்லும; அவன் அதனை ஓட்ட அறியானுயின், அது நெறியல்லா நெறி சென்று சேற்றிலும் மணலிலும் சிக்கிச் சீரழிநது பெருந்துன்பத்தைத் தரும்" என வண்டியின் இயல்பை எடுத்துரைதது விளங்க வைக்கும் திறம வியக்கத் தக்கதாமன்றோ?

"கால்பார் கோதது ஞாலத்து இயக்கும்
காவற்சாகாடு உகைப்போன் மாணின,
ஊறின்றாகி ஆறினிது படுமே;
உயததல் தேற்றுனுயின், வைகலும்
பகைககூழ் அள்ளற் பட்டு
மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே." (புறம · கஅரு.)

நற்றிணையில் வரும அவன் பாக்கள் மூன்றனுள், தலைவன் குறித்துச் சென்ற பருவம் வந்துற்றமை கண்டு வருநதும் தலைமகளைத் தோழி, 'இது பருவமன்று' எனக் கூறி ஆற்றும் துறையமைந்த பாடல் மிகவும நயம் செறிநது விளங்குகிறது. காாகாலத்தே மலரும் இயல்புடையன பிடவு, கொன்றை, காந்தள முதலாயின; அவை மலர்ந்து விட்டதைக் கண்டுகொண்ட தலைவி, கார்காலம் வந்துற்றது என எண்ணி, கார்காலம் தொடங்கியும் அவர் வந்திலரே! என வருந்தினள். இந்நிலையில் அவளைத் தேற்ற வழியறியாத தோழி, "நம் தலைவர் பொய் கூறுர் என்பதை நீ அறிவாய்; ஆகவே அவர் கார்காலத் தொடக்கத்தே நில்லாது வருவார்; ஆனுல், கார்காலம்

இதோ வந்துற்றதே; இன்னும் அவர் வந்திலரே என வருந்துகின்றனை; இது உண்மையில் கார்காலமன்று; அவ்வாறாயின் கார்காலத்தே மலரும் இயல்புடைய மலர்கள் மலர்ந்து விட்டனவே எனக் கேட்டல் கூடும்; இம்மலர்கள் காலமல்லாக் காலத்தே மலர்ந்துள்ளன; மழை பெய்வது கார்காலத்தில் என்ற கருத்துடைய அம்மலர்கள் மழை பெய்தது கண்டு மலர்ந்து விட்டன; ஆனால், இது கார் காலத்து மழையன்று; அறிவில்லாமையால் இது எந்தக் காலம் என்பதை மறந்து விட்ட மேகம், இந்தக் காலத்தைக் கார்காலம் என்று எண்ணிக் கடல்நீரைக் குடித்துவிட்டது; பின்னர் இது கார்காலமன்று என்பதை உணர்ந்தும், உண்டநீரைத் தாங்கி நிற்கமாட்டாமல் பெய்து விட்டது; அதனால் உண்டாய மாறுதல் இது; உண்மையில் இது கார் காலமன்று ஆகவே அவர் வநதிலரே என்று எண்ணி வருந்தற்க" என்று கூறினாள் எனப் பாடியுள்ள அழகைப் பாருங்கள்;

> வெஞ்சுரம் இறந்தோர்
> தாம்வரத் தெளித்த பருவங் காண்வர
> இதுவோ என்றிசின் மடந்தை! மதியின்று
> மறந்து கடல்முகந்த கமஞ்சூல் மாமழை
> பொறுத்தல் செல்லாது இறுத்த வணபெயல்
> கார்என்று அயர்ந்த உள்ளமொடு தேரவில
> பிடவும் கொன்றையும் கோடலும்
> மடவ வாகலின் மலர்ந்தன பலவே." (நற்: கக.)



# சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை

## ஆசிரியர்: திருவத்திபுரம் கா. கோவிந்தன், எம். ஏ.

### க. கபிலர்

*பாரிவேளின் உயிர் நண்பரும், புலனழுக்கற்ற அந்தணாளருமான கபிலர் பெருமானின் வாழ்வும், பணியும இலக்கிய மேற்கோளுடன் விளக்குகின்றது* ரூ. 1 12

### உ. பரணர்

*பரணர் பெருமகனார் நடுநிலை தவறா நன்னெஞ்சினர்; நுணணிய கலைஞர்; அவர்தம் வாழ்க்கை வரலாற்றை இந்நூல் பளிங்கெனத் தெளிவிக்கின்றது.* ரூ. 1 12

### ங. நக்கீரர்

*"நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே," என்று இறைவனையும் எதிர்த்துச் சொற்போராடிய நக்கீரர் பெருமகனாரின வரலாற்றை இந்நூல் இனிது விளக்குகின்றது.* ரூ. 1 12

### ச. ஔவையார்

*தகுதியாற் சிறந்து, பண்பால் உயர்ந்து தமிழர் உள்ளங்களில் என்றென்றும் நிலைத்துநிற்கும் ஔவை நல்லாளின் அரிய வாழ்க்கை வரலாற்றை விளக்குகின்றது.* ரூ. 1 12

### ரு. பெண்பாற் புலவர்கள்

*சங்கம் சார்ந்து தமிழ்வளர்த்த பெண்புலவர்களில் ஔவையாரன்றிப் பலருளர். அன்னார் வாழ்க்கை வரலாறுகளையும், புலமை நுணுக்கங்களையும் இந்நூல் இனிது விளக்குகின்றது.* ரூ. 1 12

### சா. உவமையாற் பெயர்பெற்றோர்

*தாம் பாடிய உவமைகளே சிறப்புப் பெயராக வழங்கப்பெற்ற பழந்தமிழ்ப் புலவர்கள் பலர். அவர்கள் வரலாறுகளை இந்நூல் இனிது விளக்குகின்றது.* ரூ. 1 12

கழக வெளியீடு: ௯௮௪

சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை - ௮

# கிழார்ப் பெயர்பெற்றோர்

புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.,

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

பழங்காலத் தமிழகம், கற்பிற் சிறந்த பொற்றொடி மகளிரையும் புலத்துறை முற்றிய நலத்துறை ஆடவரை யும் பெற்று நிலவியது. அந் நாள் நம்நாடு நாடா வளத்த தாகத் திகழ்ந்தது.

புலத்துறை நலத்தினர் பல்வகைச் சிறப்புப் பெயர் களைப் பெற்று விளங்கினர். அப் பெயர்களுள் 'கிழார்' என்னும் பெயர் கொண்டு நிலவியோரும் பலராவர். கிழார் என்னுஞ் சொல், கிழமை யென்னும் பண்படி யாகத் தோன்றியது. அதற்கு உரிமை யென்பது பொருள். கிழார், உரிமையுடையார். புலவர் பெருமக்கள் 'யாதும் ஊரே' என்ற குறிக்கோளுடன் பல்லூர்களில் வாழ்ந்தவ ராவர். எனவே, தாம் பிறந்தகத்தை மறவாராய்த் தம் இயற்பெயராகவே தம் ஊர்ப்பெயரை அமைத்துத் தம் பெயராகச் சூட்டி மகிழ்ந்தனர்.

இப் பெயருடைய புலவர் அரிசில்கிழார் முதல் வெள்ளூர்கிழார் மகனார் வெண்பூதியார் ஈருக நாற்பத் தொருவர் வரலாறுகள் இதில் கிளத்தப் பெற்றுள்ளது. இதற்குக் 'கிழார்ப் பெயர்பெற்றோர்' எனப் பெயர்சூட்டிச் சங்கத் தமிழ்ப் புலவர் வரிசையில் எட்டாவதாக இந்நூலை வெளியிட்டுள்ளோம். இதனையும் புலவர், திரு. கா. கோவிந்தன் அவர்கள் ஆக்கியுதவியுள்ளார்கள்.

இந் நூலைத் தமிழ் நன்மக்கள் வாங்கிக் கற்று நற்பயன் எய்துவார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# கிழார்ப் பெயர்பெற்றோர்



## தோற்றுவாய்

தமிழகத்தில் சங்ககாலத்தே வாழ்ந்த மக்கள், ஆயர், வேட்டுவர் எனவும், பாணன், பறையன் எனவும், அந்தணன், அரசன் எனவும தொழில்பற்றிப் பிரித்து அழைக்கப்பட்டுள்ளனர். எனினும, அப் பிரிவுணர்ச்சி, அவர்கள், வாழ்க்கையில் மகிழ்ந்து வாழ்தற்கு வழிசெய் வனவாய கல்வி, பொருள் ஆகிய இவைகளைப் பெறுதற்குச் சிறிதும் தடையாய் நிற்கவில்லை. பிரிததுணர்ந்து பாழ் செய்யும் பொல்லாங்கில்லா நல்வாழ்வு பெற்றிருந்த கார ணத்தால், பல்வேறு குடிகளில் பிறநத அவர்களுள் பலர், அந்தணர்க்கும், அரசர்க்கும் அறமுரைக்கவல்ல அறிவு சான்ற புலவர்களாய்ப் பெருநிலைபெற்று விளங்கினர்.

படிக்க ஓர் இனம்; பாடுபட ஓர் இனம் என்ற நிலை, நிலைபெறுவதால் ஓர் இனம், படித்துப் பாராண்டு உயர, ஏனையோர், எழுத்தறிவுபெறும் வாய்ப்பும் இலராய்ப், பாட்டாளிகளாய்ப், பசியும், பிணியும் உற்றுப் பாழுறும் இழிநிலை இன்றி, எக்குடிபபிறப்பினும், யாவரேயாயினும், அக்குடிவந்தார் அனைவரும் கற்றற்குரியர் என்ற உயர்நிலை பெற்றுத் திகழ்ந்த காரணத்தால், பண்டைத் தமிழகத்து எல்லாக் குடிகளினும், இறப்ப உயர்ந்த கல்வியறிவு பெற்றுக் கவினுற்று வாழ்ந்தாரைக் காணுகின்றோம்.

அக்கால அரசர்களும் பிறரும், அப்புலவர்கள் எக்குடிப் பிறந்தாராயினும், அவர்தம் குடிகொண்டு குறை

காணாது, அவர்தம் அறிவறிந்து, அருகழைத்து, அவர் வேண்டுவ அகமகிழ்ந்தளித்துப் போற்றிப் பாராட்டு வாராயினர்.

கல்வி, வாழ்வை வளமாக்குதற்காம் செல்வந்தரும் கருவி எனக்கொண்டு கற்கும் இக்கால மக்களைப்போன்றவரல்லர் பழந்தமிழர்; கருத்து விளக்கத்திற்காகவே, அவர்கள் கல்வி கற்றனர்; தம்மை வாழவைக்கும் வழித்துணை, கல்வி ஒன்றே என்றும் கருதினாரல்லர்; வாழ்வளிக்கும் வளம்பெற அவர்கள் வேறுவழிகளைக் கண்டிருந்தனர்; முயற்சி திருவினை ஆக்கும் என்ற முதறிவினராதலின் உழவு, நெசவு போன்ற கைத்தொழில்களையும், வாணிபத்துறை மேற்கொண்டு வளம்பல பெற்று வாழ்ந்தனர்; இவ்வாறு செல்வம்சேர்க்கும் வழிகளைச், சிறக்க உணர்ந்திருந்த அவர்கள், செல்வம் ஒன்றே, எல்லாம், என்ற எண்ணமுடையராய் இருந்துவிட்டாரல்லர்; செல்வம், உடல்வாழ்த் துணைபுரிவனவற்றுள் தலையாயதே எனினும், உயர்ந்தோர் போற்றும் உயரிய வாழ்வுபெற, அதன் துணை ஒன்றே போதாது; உயிர்க்குணங்களை வளர்த்து உயர்ந்தோராகக் கல்வியின் உறுதுணைவேண்டும், என உணர்ந்து, கல்வியை விரும்பிக் கற்றனர், இதனால், வயிறுவளர்க்க என்றே கற்கும் இக்காலமக்களினும், வாழ்வு வளம்பெற வேண்டி, வரிசை பலபெற்று விளங்கவேண்டிக் கற்ற பண்டையோர் பலராற்றானும் சிறந்து விளங்கினர்; அதனால் உழவர், நெசவாளர், பொற்கொல்லர்போன்ற தொழிலறிந்தாரிடையேயும், படைத்தொழில் மேற்கொண்டு பார்காக்கும் படைவீரர்களிடையேயும் சிறந்த புலவர்கள் பலர் தோன்றித் தொண்டாற்றிப் புகழ்பெற்றனர்.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டுப் பாடிய புலவர்களுள், பலர் கிழார் எனும் சிறப்புப்பெயர் மேற்கொண்டுள்ளனர்; "ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும், யாரும் சார்த்தி அவை அவை பெறுமே" என்ற தொல்காப்பியம் மரபியற் சூத்திரத்திற்கு உரைவகுத்த பேராசிரியர், அவ்வுரைக்கண் "அம்பர்கிழான் நாகன், வல்லங்கிழான் மாறன்

என்பன வேளாளர்க்குரியன" என்று கூறியுள்ளதை யுட்கொண்டு, கிழார் என்ற சிறப்பு வேளாளர்க்குரியது; ஆகவே, கிழார் என அழைக்கப்படுவோர் வேளாளராவர் என்று முடிவு கொள்வர்; தாம்கொண்ட முடிவினை உறுதி செய்யும் சான்றாக,

"நாடெங்கும் சோழன்முனந் தெரிந்தே ஏற்றும்
நறகுடி நாற் பதெண்ணா யிரத்து வந்த
கூடல்கிழான, புரிசைகிழான், குலவுசீரவெண
குளப்பாக் கிழான்வரிசைக் குளத்தூ ழான்முன்
தேடுபுக ழாரிவரும சிறந்து வாழச
சேககிழாா குடியிலிந்தத் தேச முய்யப்
பாடல்புரி அருணமொழித்தே வரும்பின் னந்தம்
பாலறு வாயருமவந் துதித்து வாழ்ந்தாா"

என்ற திருத்தொண்டர் புராண வரலாற்றின் 12-ம் செய்யுளையும காட்டுவா.

கல்வெட்டுக்களில், "கொங்கானவீர சோழமண்டலத்தில் வெள்ளாளரில் நீலங்கிழார் மஸ்தக குடாரி மகுட சூடாமணி மன்னர் வணங்கிலும் வணங்காத முடியான," "அனுக்காவூரில் இருக்கும வெளளாளன் களத்தூர் கிழவன் உடையான" (S I I. Vol. No 19, 88) என்ற தொடர்கள் காணப்படுவதால், கிழார் என்ற சிறப்புப் பெயர் வேளாளாக்குரியதாக வழஙகப்பட்டுளது என்று கொள்ளலாம எனினும, இக்காலக் கல்வெட்டுக்களிலேயே "புலியூர்க் கோட்டத்து மயிலாப்பில் வியாபாரி விளத்தூர் கிழவன அரையன் அரிவலன் (S. I. I. Vol. No. 711), "மெய்யூர் கிழான் சீரிளங்கோ ஸ்ரீ கிருஷ்ணனும், தண்டலங்கிழான் ஸ்ரீ வாசுதேவன் ஸ்ரீ கிருஷ்ணனும்.... உள்ளிட்ட இத தெருவியாபாரிகளோம" (S. I. I. Vol. S No 994), "வியாபாரி ஆர்வலங் கிழான் வீதி விடங்கன் சிறுநம் பாடிகள" (H. Ep. A. R. No. 137 of 1919) என்ற தொடர்கள் காணபபடுவதால், கிழான் என்ற சிறப்புப் பெயர் வணிகர்க்கும் உரியதாக வழங்கப்பட்

டுள்ளது என்றும், "சுத்தமலி வளநாட்டுப் பாம்புணிக் கூற்றத்துப் பாம்புணிகிழான் மல்லாண்டானான சேர கோன்" (S. I. I. Vol. S. No 652) என்றுவரும் தொடரால், கோன் என வழங்கப்பெறும் இடையர்க்கும், கிழார் என்பது சிறப்புப் பெயராக வழங்கப்பட்டுள்ளது என்றும் கொள்ளவேண்டியிருப்பதால், கிழார் என்பது வேளாளரைக் குறிக்கவரும் பெயராம் என்பதை ஏற்றுக் கோடற்கில்லை எனவும், எருக்கங்குடி கல்வெட்டொன்று, பாண்டியன் நெடுமாறன் ஸ்ரீ வல்லபன் காலத்தில் எட்டிச் சாத்தன் என்பவன், இருஞ்சோணாட்டுக் கூடற்குடி, குளத்தூர், தழையூர், இருப்பைக்குடி, வெளியங்குடி, ஆலங்குடி என்ற ஊர்கட்குத் தலைவனாய், பாண்டிவேந்தனால் இருப்பைக்குடி கிழான் என்று சிறப்பிக்கப் பட்டான் எனக் கூறுவதால், கிழார் என்ற பெயர், அக்கால அரசர்களால், அக்கால மக்களுக்கு யாதோ ஒரு காரணம் பற்றி வழங்கிய சிறப்புப் பெயராம் எனவும் கூறுவர் திருவாளர் ஔவை. சு. துரைசாமி பிள்ளையவர்கள். (செந்தமிழ்ச் செல்வி: சிலம்பு: 23, பக்கம் 185).

இறையனார் களவியலுரையில் சங்கப் புலவர்களின் தகுதி, திறமை அறிய நின்றோன் எனச் சிறப்பிக்கப் பெறும், உப்பூரிகுடி கிழார் மகனான உருத்திர சன்மனை, அவ்வரலாறு உரைக்கும் நூல்கள் செட்டிமகன் என்றே கூறுவதால், களவியலுரை எழுந்த சங்க காலத்திலேயே, கிழார் என்ற சிறப்புப் பெயர், வணிகர்க்கும் உரியதாக வழங்கப்பட்டுள்ளது என்று அறிகிறோம்.

"ஊரும் பெயரும்" என்ற சூத்திரப் பொருளையும், அதன் உரையில், அந்தணர், அரசர், வணிகர் ஆகிய குலத்து வந்தார் பெயர்களோடு அவர் ஊர் முதலாயின அறிவிக்கும் தொடர் இணைய வந்து வழங்கும் வழக்கத்திற்கு எடுத்துக் காட்டாகக் காட்டப்பெற்ற பெயர்களையும் ஊன்றி நோக்கியவழி, கிழார் என்ற சிறப்புடையார் வேளாளரிலும் உளர் என்பதல்லது, கிழார் என்ற சிறப்பு வேளாளர்க்கே உரியது என்பது பேராசிரியர்க்கும் கருத்தன்று என்பது புலனும்.

நல்லதன் நலனும், தீயதன் தீமையும் உள்ளவாறு உணர்ந்து அடங்கிய பண்பினராய், அன்பும் அறனும் அகலாது காத்துப், பழி ஒழித்துப் புகழ் மேற்கொண்டு பிறர் போற்ற வாழ்ந்த பெரியார்களுக்குக் "காவிதி" என்ற சிறப்புப் பெயரினையும், கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறை கொடாது பல் பண்டம் பகர்ந்து வாழும் பண்பினராய வணிகர் தலைச் செல்வர்க்கு "எட்டி" என்ற சிறப்புப் பெயரினையும், பெய்யும் பெருமழையைத் தான் தாங்கித் தன்னை உடையான் மீது ஒரு சிறு துளியும் விழா வண்ணம் காத்துத் துணைபுரியும் குடையே போல், தன் அரசன் மீது பகைவர் அம்பொன்றும் அழுந்தா வண்ணம், அவர் எவும் அம்புகள் அனைத்தையும் தாம் ஏற்றுக்கொண்டு தலைவனைக்காக்கும் கடமை வழுவாப் படை வீரர்க்கு "ஏனாதி" என்ற சிறப்புப் பெயரினையும் அளித்துப் பாராட்டுவது அக்கால அரசர் மரபு.

பண்டைய தமிழகத்து, பிறப்பால் ஒரு தொழிலிற்கு உரிமை செய்யப் பட்டவரல்லர், பிறப்பால் அவர்கள் அனைவரும் ஒருவரே; தாம் தாம் விரும்பிய தொழிலை மேற்கொள்ள அவர்கள் உரிமை பெற்றிருந்தனர்; அந்தணர் மகன், அரசாளவும் படைத்தொழில் மேற்கொள்ளவும், பண்ட வாணிபம் நடத்தவும், பயிர்த் தொழில் மேற்கொள்ளவும் செய்வன், அரசன் மகன், அறநூல் ஓதவும், அக்காலத் தொழில் பல அறியவும் செய்வன்; வணிகர் மகன், அந்தணர், அரசர், வேளாளர்க்காம் தொழில் பலவும் அறிந்திருப்பன்; அதைப் போன்றே, பயிர்த் தொழில் மேற் கொண்டோன் மகன் பாராளவும், படைத் தொழில் பயிலவும், கலம்பல செலுத்திக் கடல் வாணிபம் புரியவும், வேதம் ஓதவும் உரிமை பெற்றிருந்தான். அதனால், அரசர்கள், மக்கள் பிறந்தகுடி கண்டு சிறப்பிக்காது, அவர் மேற்கொண்ட தொழிலின் திறம்கண்டு சிறப்பித்தனர். சிறந்த கல்வியும், சீரிய ஒழுக்கமும் பெற்றுத் திகழ்ந்தார், எக்குடிப் பிறந்தாராயினும், அவர்க்குக் "காவிதி"ப் பட்டத்தினையும், படைத்

தொழிலிற் சிறந்தார் எக்குடியில் வந்தாராயினும் அவர்க்கு "ஏனாதி"ப் பட்டத்தினையும், வணிகத் தொழில் புரிந்து சிறந்தார்க்கு, அவர் வந்தகுடி நோக்காது, அவர்தம் தொழிலின் நேர்மையும் திறமும் நோக்கி "எட்டி"ப் பட்டத்தினையும் இட்டுச் சிறப்பித்தனர்; அதைப் போன்றே, அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், ஆயர் ஆகிய இக்குடிகளிற் பிறந்து, உழவுத்தொழில் மேற் கொண்டு சிறந்தார் அனைவரையும், "கிழார்" என்ற பட்டம் வழங்கிச் சிறப்பித்தனர் என்று கொள்வது பொருந்தும் என்க, இதனால், கிழார் என்பது குடிபற்றி வந்த பெயரன்று; தொழில்பற்றி வந்த பெயராம் என்பது உறுதி செய்யப்படும்.

இவ்வாறு, உழவுத்தொழில் மேற்கொண்டுயர்ந்து, உலகாளும் அரசர்களாலும், பிறராலும் சிறப்பிக்கப் பெற்று, அவர் பாராட்டி வழங்கிய "கிழார்" என்ற பட்டத்தையும் மேற்கொண்டு வாழ்ந்த மக்கள் பலருள், புலமையிற் சிறந்து புகழ்பெற்றவர் எனச் சங்கநூல்களால் அறியப் பெற்றவர் நாற்பத்தொருவராவர்; அவர்கள் வரலாற்றினை அவர்கள் பாடிய பாக்கள் துணைகொண்டு ஒரு வாறு வகுத்துரைப்பதே இச்சிறுநூல்.

# ௧. அரிசில்கிழார்

தமிழகத்து ஊர்கள் ஒவ்வொன்றும் பெரும்பாலும் யாதோ ஒரு காரணம்பற்றியே பெயர் பெற்றிருக்கும். பொதுவாகத் தம்மைச் சார்ந்துள்ள மலைகள், காடுகள், ஆறுகள் இவற்றின் பெயர் பெற்றிருப்பது பெருவழக்காம். வெண்குன்றம், நெடுங்குன்றம், பரங்குன்றம் என்பன, மலைகளால் பெயர்பெற்ற ஊர்கள்; திருப்பனங்காடு, திருவாலங்காடு என்பன காடுகளால் பெயர்பெற்ற ஊர்கள்; குமரிக்கோடு, குமரிமலை என்பன குமரியாற்றை அடுத்திருப்பதால் பெயர் பெற்றன; வடார்க்காடு மாவட்டத்தில் ஓடும் சேயாற்றின் கரைக்கண் அமைந்த திருவோத்தூர், சேயாறு எனவும் வழங்கப்பெறுதல் ஆற்றின் பெயரைத் தன் பெயராக் கொண்ட ஊருக்கு ஓர் எடுத்துக்காட்டாம். இவ்வாறு தம்மை அடுத்துப் பாயும் ஆற்றின் பெயரே பெயரெனக் கொண்ட பேரூர்களுள் அரிசில் என்பதும் ஒன்று.

தமிழகத்தின் பேராறுகளில் தலைமைக்கண் நிற்கும் தகுதிவாய்ந்த ஆறு காவிரி. அவ் யாற்றோடு வந்து கலக்கும் ஆறுகளும், அதினின்றும் பிரிந்து பாயும் ஆறுகளும் பல. அவ்வாறு பிரிந்து பாயும் ஆறுகளுள் அரிசிலாறு என்பதும் ஒன்று. இவ்வரிசிலாற்றங்கரையில், அரிசில் என்ற அவ்யாற்றின் பெயர் தாங்கிய ஓர் ஊர் பண்டு இருந்தது எனப் பழந்தமிழ்ப் பாடல்கள் பகருகின்றன.

ஆறுகள், என்றும் ஒருவழியே மேற்கொண்டு ஓடும் என எதிர்பார்த்தல் இயலாது; காலம் செலச் செல்ல, அவை இடம் மாறி ஓடுதலும் உண்டு ஆனால் ஆறுகள் இடம் மாறுவதேபோல, அவ் யாறுகளின் கரைக்கண் அமைந்த ஊர்கள் இடம் மாறுவது இயல்பன்று. இதனால் ஒரு காலத்தில், ஆற்றின் கரைக்கண் அமைந்து, அவ் யாற்றின் பெயர்பெற்றிருந்த ஓர் ஊர், பிற்காலத்தே அவ் ஆற்றிற்கு மிகச் சேய்மைக் கண்ணதாய், அவ் ஆற்றுத் தொடர்பற்றுத் தோன்றுதலும் உண்டு. இந்தக் காரணத்

களால், அவ்வூர்களின் இருப்பிடத்தை உள்ளவாறு அறிந்துகொள்வதிலும், அவ்வூர்ப் பெயர்களுக்கான காரணங்களை அறிந்துகொள்வதிலும், பிற்காலத்தார்க்கு ஐயங்கள் பல தோன்றும். அத்தகைய ஊர்களுள் இவ் அரிசிலாறும் ஒன்று.

அரிசிலாறு எது என்பதை அறியமாட்டாது இக்கால அறிஞர் பலரும் மயங்குகின்றனர். அயல், அசல் என்ற சொற்களில், சகரமும் யகரமும் மயங்குவதைப்போல், அரியில் என மாறி வழங்கியிருத்தலும் கூடும், என உட்கொண்டு திருச்சி மாவட்டத்தில் கொள்ளிடத்தின் வடபால் உள்ள அரியில் அல்லது அரியிலூரே அரிசிலூராம் என்பர் சிலர், மைசூர் நாட்டில் உள்ள அரிசிற்கரை என்ற ஊரே அரிசிலூராம் என்பர் வேறு சிலர், தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திற் கணித்தேயுள்ள கல்வெட்டொன்று, அரிசிலூரைக் குறிப்பதாக கூறுகின்றது (Annual Report on Madras Epigraphy. No 255 of 1911). ஆகவே, அரிசிலூர் சோழநாட்டுக் குடந்தை நகர்க்கு அண்மையில் இருந்த ஓர் ஊராம் என்று கூறுவாரும் உளர்.

இவ்வாறு, இடம் அறியப்பெறாமல், பாக்களில் இடம் பெற்றுப் பெருமைவாய்ந்த அரிசிலூரிற் பிறந்து, வேளாண்மைத்தொழில் மேற்கொண்டு வாழ்ந்து வளமார் புகழ் பெற்று விளங்கி, அக்காரணத்தினாலேயே, இருமுது குரவர் இட்ட இயற்பெயர் மறைய, ஊர்ப்பெயரும், சிறப்புப் பெயரும் ஒருங்கே இணைய அரிசில்கிழார் என்ற பெயர்கொண்டு வாழ்ந்த புலவர், பழம்பெரும் புலவர்கள் வரிசையில் வைத்துப் பாராட்டத்தக்க பண்புவாய்ந்தவராவர்.

அரிசில்கிழார், அரிசில் என்ற ஊரிற் பிறந்து, அரசர்கள் அளித்த கிழார் என்ற சிறப்புப்பெயர் பெற்று விளங்கிய பெரும்புலவராவர் என்பதல்லது, அவர் வரலாறுகளில் வேறு எதுவும் விளங்கவில்லை. அவர் பாடிய பாக்களுள் சில, அவர் அக்கால அரசர் சிலரோடு கொண்டிருந்த

தொடர்புகள் சிலவற்றைக் குறிப்பிடுகின்றன. சோழ நாட்டு ஊர்களுள் ஒன்றாகிய அரிசிலை வாழ்விடமாகக் கொண்டவர் எனக் கூறப்பெறும் அரிசில்கிழார், சோழ நாட்டில் வாழ்ந்தவராகவோ, அச் சோணாட்டு அரசர்களைப் பாராட்டியதாகவோ அவர் பாக்கள் அறிவித்தில; அரிசில் கிழார், பாண்டி நாட்டுத் தலைவர்களுள் ஒருவராகிய பேகனையும், சேரநாட்டுத் தலைவர்களாகிய தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, அதியமான் நெடுமானஞ்சி போன்றாரையும் பாடிப் பாராட்டியுள்ளார் என அவர் பாக்கள் அறிவித்தலின், அவர், பாண்டியநாட்டிலும், சேர நாட்டிலும் பயில வாழ்ந்தவராவர் என்று கொள்ளுதல் கூடும்.

அரிசில் கிழார் பாக்களால் பாராட்டப்பெறும் பெருமைவாய்ந்தோர், வையாவிக் கோப்பெரும் பேகனும், தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையும், அவன் பகைவர்களாகிய அதியமானெடுமான் அஞ்சியும், ஆயர் தலைவன் கழுவுளும் ஆவர்.

வையாவிக்கோப்பெரும் பேகன், கடையெழுவள்ளல்களுள் ஒருவனாவன் இவன், கொடைவள்ளல் குமணனுக்கும், சிறுபாணாற்றுப்படைத் தலைவனாகிய ஓய்மாநாட்டு நல்லியக்கோடனுக்கும் காலத்தால் முற்பட்டவன் என்று பெருஞ்சித்திரனார் பாட்டும், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாட்டும் அறிவிக்கின்றன. பேகன், பொதினி மலை என வழங்கப்பெறும் பழனிமலைக்கும், அம்மலையைச் சூழ உள்ள சிறு நாட்டிற்கும் தலைவனாவன். பழனிமலையில் உள்ள ஒரு நீர்நிலை, வையாவிக்குளம் என இவன் பெயரையே இன்றும் கொண்டிருப்பது, இவனுக்கும், இம் மலைக்கும் உள்ள தொடர்பை உறுதிசெய்தல் காண்க. பொதினி மலையை ஆண்ட ஆவியர் என்பார் குடியில் வந்தார் பலருள், பேகன் புலவர் பாராட்டும் பெருமை வாய்ந்தவனாவன்.

பேகன் பெரிய கொடையாளி; ஒருநாள் சோலையில் உலாவிவரச்சென்ற பேகன், அங்கே கார்முகில் வரக்கண்டு

களித்து, தோகைவிரித்து ஆடும் மயில் ஒன்றைக்கண்டான்; அதன் ஆடலைக்கண்டு மகிழ்ந்த அவன், தன்னைப்போன்றே அதுவும் குளிரால் நடுங்குகிறது; ஆகவேதான் அவ்வாறு ஆடுகிறது என்று எண்ணினான்; உடனே தான் அணிந்து வந்திருந்த விலைமதிக்க ஒண்ணா அழகிய போர்வையை அதன்மீது போர்த்திவிட்டு அரண்மனை சென்றான்; பேகனின் அருள் உள்ளத்தையும், அவன் கொடைச் சிறப்பையும் விளக்கும் இச்செயலை அக்கால மக்கள் அனை வரும் அறிந்து மகிழ்ந்து பாராட்டினர்.

கொடையாலும், கொற்றத்தாலும் சிறந்த பேகன்பால் தீயொழுக்கம் ஒன்றும் குடிகொண்டிருந்தது; பேகன், அழகே உருவெனவந்த, கற்பே காரிகையர்க்குப் பொற் புடை அணியாம் எனக் கருதும் கண்ணகி என்பாளை மனைவியாகப் பெற்றிருந்தும், அவள் உண்ணாதும், உறங் காதும், நல்லன உடாதும் இருந்து ஓயாது அழுது நிற்கு மாறு அவளைக் கைவிட்டு, நல்லூரில் வாழ்ந்த பரத்தை யொருத்தியோடு உறவுகொண்டு, அவளோடு, அவள் ஊரில் வாழ்வதை விரும்பி மேற்கொண்டிருந்தான்.

பேகனின் கொடையும், கொற்றமும்கண்டு பாராட்டிய புலவர்கள், அவன் தீயொழுக்கம் உடையான் என்பது கண்டு அவன்பால் வெறுப்பும், அவன் தீச்செயலால் வருந்தி வாடும் அவன் மனைவிபால் இரக்கமும் கொண்ட னர்; பேகன் தவறினான் எனினும், திருத்தி நல்வழிப் படுத்தல்கூடும் என்று நம்பினர்; உடனே, பேகன் வாழும் நல்லூர் சென்றனர்; அவனுக்கு அறிவுரை பல கூறினர்; புலவர்கள் அறிவுரை கேட்டும், அவர்வழி நடவாது மறுக்கும் மதியிலான் அல்லன் பேகன்: தேர் ஏறித் தன் வீடடைந்தான். வழுக்கிவீழ்ந்த வையாவிக்கோவை வாழ வைத்த புலவர்களுள், அரிசில்கிழாரும் ஒருவராவர்; அவர் அவனுக்குக்கூறிய அறிவுரை அடங்கிய அழகிய பாட் டொன்று புறநானூற்றில் இடம் பெற்றுளது.

“நின்நாடு நோக்கி வந்து, செவ்வழிப்பண் இசைத்து, நின்னையும், நின் நாட்டையும் பாடிநிற்க, அதுகேட்டு

மகிழ்ந்து நீ அளிக்கும் பரிசாக, அரிய அணிகலன்களை அன்று யான் விரும்புவது; அவற்றை ஏற்றுக்கொள்ளும் சிறுமையுடையேனல்லன்; உண்மையில் என்னைப் பாராட்டிப் பரிசளிக்க நீ விருமபுவையாயின், நின் அன்பைப் பெற மாட்டாது, மிகமிக வருந்தி வாடித் துயருறும் நின் அரும் பெறல் மனைவி, நின்னை அடையப்பெற்ற மகிழ்ச்சியால், இதுகாறும் முடிக்காதிருந்த தன் கூந்தற்கு அரிய மணம் ஊட்டி, அழகாகச் சீவிமுடித்து, மலர்சூடி மகிழுமாறு இன்றே தேர்ஏறி நின்னூர் செல்க. அதுவே நீ மகிழ்ந்தளிக்கும் பரிசாக அமைதல்வேண்டும்," இதுவே, அரிசில் கிழார் கூறிய அறவுரை

" அன்னவாக நின் அருங்கல வெறுக்கை;
அவைபெறல் வேண்டேம ; அடுபோர்ப் பேக!
சீறியாழ் செவ்வழி பண்ணி, நின் வன்புல
நன்னாடு பாட, என்னை நயந்து
பரிசில நல்குவையாயின், குரிசில்! நீ
நல்காமையின் நைவரச சாஅய்,
அருந்துயர் உழக்கும நின் திருந்திழை அரிவை
கலிமயில் கலாவம கால்குவித் தன்ன
ஒலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇத்,
தண்கமழ் கோதை புனைய,
வண்பரி நெடுந்தோ பூண்கநின் மாவே." (புறம்: கசகூ)

சேரமரபினருள் இரும்பொறை என்ற பெயர் தாங்கிய ஒரு கிளையினர் இருந்தனர்; அவர்களுள் செல்வக் கடுங்கோ வாழியாதன் எனபானொருவன் இருந்தான்; அவன் சேர வேந்தருள் சிறந்தோனாகிய செங்குட்டுவன் சிற்றன்னையாகிய வேளாவிக்கோமான் பதுமன் தேவியாரின் உடன் பிறந்தாளை மனைவியாகப் பெற்றிருந்தான். அவனுக்குப் பெருஞ்சேரலிரும்பொறை என்ற பெயருடைய மகனொருவன் இருந்தான். பெருஞ்சேரலிரும்பொறை, கொடை, கொற்றம், குணம் ஆகிய எல்லாததுறையாலும் சிறந்த நல்லோனுவன்; அவன் உயரிய பண்புகளைப் பலர் உரைக்க உணர்ந்த புலவர் அரிசில்கிழார், அவன் அவையடைந்து,

அவன் சிறப்பெலாந்தோன்றப் பாக்கள் பல பாடிப் பாராட்டி வாழ்வாராயினர்.

ஒரு நாட்டில் வாழும் மக்கள் அனைவரும் ஒன்று முற்றும் அறிந்தவராகவோ, அன்றி முற்றும் அறியாதாராகவோ இருத்தல் இயல்பன்று; ஒரு சில நாட்டில் ஒரு சிலர் அறிந்தாராக, ஏனையோர் அறியாதாராக இருப்பதும், வேறு சில நாட்டில், மிகப் பலர் அறிந்தாராக, எஞ்சியோர் அறியாதாராக இருப்பதும் உலகியற்கை; உலகியலின் இவ்வியல்புணர்ந்து, மக்கள் தம் அறிவும், அறியாமையும் எண்ணிப்பார்த்து, அறிவுடையாரைத் தழுவிக்கொண்டு அவர்வழி ஆட்சி மேற்கொள்வதையும், அறியாதார் அறிவு திருந்த ஆவன மேற்கொள்வதையும் அரசர்கள் தம் கடனாகக்கொள்ளுதல் வேண்டும் நல்லரசின் பண்பு இது. இந்தப் பண்பு, பெருஞ்சேரலாதன்பால் சிறந்து விளங்கும்; அவன்மாட்டு இந்தப் பண்பு நிலைபெற்றிருப்பதாலேயே, அவன் கீழ்வாழ் உலகம் நின்று நிலைபெறுகிறது என்று பாராட்டினர்:

> "உரவரும் மடவரும் அறிவுதெரிந் தெண்ணி
> அறிந்தனை அருளா யாயின்
> யாரிவண் நெடுந்தகை வாழுமோரே" (பதிற்றுப். ௭௧)

'சுடர்விளக்காயினும் நன்றாய் விளங்கிடத் தூண்டுகோல் ஒன்று வேண்டும்' என்ப. நற்குடிப்பிறப்பும், நாடாள் அறிவும் நன்கு வாய்க்கப்பெற்று,

> "பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
> எழுபது கோடி யுறும்" (குறள் ௬௩௯)

என்பவாதலின், அரசர்க்கு என்றும் நல்லனவே எண்ணும் பண்பு கொண்டுவிளங்கும் அமைச்சர்களைப் பெற்றிருத்தல் நல்லாட்சிக்கு நற்றுணையாம்; அந்நாட்டாட்சி நன்கு நீளும். அரசன் நல்ல அமைச்சர்களைப் பெற்றிருக்கவே நலமெலாம் பெருகும் எனின், அவ்வமைச்சர்பால் அமைந்திருக்கும் அருங்குணங்கள் அனைத்தும், அவ்வரசனிடத்தி

லேயே அமைந்துவிடின், அவ்வரசின் பெருமையை அளவிடற்கரிதாம்; பெருஞ்சேரலாதனும் அரசர்க்கு என்றும் நல்லனவே எண்ணும் உள்ளம்கொண்ட உயர்ந்த அமைச்சர்பால் அமைந்த பண்புகள் எல்லாவற்றையும் தானும் பெற்றுப் பேரரசாய்த் திகழ்ந்த சிறப்பையும் பாராட்டினார்:

" நின், முனை திணைமுதல்வர்க்கு ஓம்பினர் உறைந்து
மனபதை காப்ப அறிவு வலியுறுத்து
நன்றறி உள்ளத்துச சான்றோர அனைனநின் பணபு"

(பதிற் எஉ)

அரசர் பகைவர் எதிர்த்தவழி, இரக்கமற்ற அரக்கரே போன்று அழிவுதொழில் மேற்கொள்வர் எனினும், தமமைச் சேர்ந்துவாழ்வார் அனைவரும் எல்லையற்றதோர் இன்பவெள்ளத்தில் இருந்து மகிழுமவண்ணம் இனிய பலவாற்றல் அறிவும், அறமும், அழகுமாம். சேரலாதன் பகையொழிந்து வாழுமகாலத்தில், தன் நாட்டுமக்கள் பெருவிழாக் காணச் சென்றோர் எத்துணைப் பேரின்பம் கொள்வரோ அத்துணைப் பேரின்பத்தை அடையுமாறு அவர் உவப்பன ஆற்றி மகிழ்விக்கும் மாண்புடையான் என்று பாராட்டியுள்ளார்:

" அமசாறுபுரையும் நின் தொழில்" (பதிற்: எஉ)

கற்கத்தொடங்கிய ஒருவர் எல்லா நூல்களையும் கற்றல் இயலாது; கல்வி கரையில; கற்பவர் நாள்சில; மெல்ல நினைக்கின் பிணிபல; ஆதலின் ஆராய்ந்து அமைவுடையனவற்றையே கற்றல்வேண்டும்; ஆதலின், ஒவ்வொருவர் ஒவ்வொரு துறையிலேயே வல்லராதல் இயலும்; ஆதலின், ஒருவர் இயன்ற அளவு கற்பதோடு, ஒவ்வொரு துறையில்வல்லார், அவ்வத்துறையில் தாம அறிந்த அரிய உண்மைகளை உரைக்க, அவற்றைக் கேட்பதைக் கடமையாக மேற்கோடல்வேண்டும்; இதனாலேயே,

" கற்றிலனாயினும் கேட்க,"

என்றும்,

"கற்றலில் கேட்டலே நன்று"

என்றும்,

"செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்"

என்றும் பெரியோர்கள் உரைத்துச் சென்றனர். ஒருவர், இவ்வாறு கற்பதாலும், கேட்பதாலுமே அவர் கடமை தீர்ந்துவிடாது; கற்றவழியும் கேட்டவழியும் ஒழுகுதல் வேண்டும்; அவை கூறிய கடமைகளை மேற்கொண்டு செயலாற்றுதலவேண்டும்; இதுவே, உயர்ந்தோர் பண்பு என உரைக்கப்பெறும்; "கற்றபின் நிற்க அதற்குத்தக" என்றன்றோ வள்ளுவரும் கூறிச்சென்றுள்ளார்? பெருஞ்சேரலாதனபால் இப்பண்பு பொருந்தியிருக்கக் கண்டு,

"கேள்விகேட்டுப் படிவம் ஒடியாது
வேள்வி வேட்டனை உயர்ந்தோர் உவப்ப" (பதிற் எச)

என்று பாராட்டினார் அரிசில்கிழார்.

ஒருவர் திருந்திய வாழ்க்கை மேற்கொண்டு வாழ்வது சிறந்தது; அவ்வாழ்க்கையினைத் தாம மேற்கொண்டு வாழ்வதோ, பிறரையும் திருத்தி அவவாழ்வு மேற்கொள்ளச் செய்வது அதனினும சிறந்தது, பெருஞ்சேரலாதன் இத்தகைய சிறந்த வாழ்வுடையான் என்பது மட்டுமன்று; இவற்றினும் மேலாயதொரு சிறப்பு அவன்பால பொருந்தியிருந்தது; சேரலாதன் அரசவையில் அறமுரைக்கும நல்லோன் ஒருவன் இருந்தான்; அரசற்கு அறமுரைத்தோனும் அவனே; நரைதோன்றுமளவு ஆண்டாலும நிறைந்தவன். இவ்வாறு அறிவாலும், ஆண்டாலும் நிறைந்திருந்தும், உலக வாழ்வில் ஒரு சிறிதும் பற்றுக் குறையாதவனாய், உலகின்பமே உயர்ந்த இன்பம் எனக்கொண்டு வாழ்ந்திருந்தான்.

"காமம சான்ற கடைக் கோட்காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே" (தொல். கற்பு: ௫௧.)

இது தொல்காப்பியர் கண்ட அறநெறி; இவ்வற நெறியை மறந்துவிட்ட அறிவுடையோன் செயல், சேரலாதனுக்கு வியப்பளித்தது; அறவோன், உலகில், கொடை, புகழ், செல்வம், மகப்பேறு இவற்றால் உண்டாம் இன்பத்தில் திளைத்து இவற்றினின்றும் செல்லமாட்டா உள்ளத்தனாய் விளங்குகின்றான்; அதனாலேயே, துறந்து செல்லும் துணிவு அவனுக்குத் தோன்றவில்லை என உணர்ந்து, அவனை அணுகி, "ஆசிரியப் பெருந்தகையீர்! கொடை, புகழ் இவற்றால் உண்டாம் இன்பம நிறைந்த வாழ்வே சிறப்புடைத்து என்று எண்ணி மயங்கும் நின் அறிவுடைமை என்னே! உலகிற்குச் சிறப்பளிக்கும், இக் கொடை, புகழ் எல்லாம் தவமுடையார்க்கு எளிதில் எய்தும்; அஃதுடையார்க்கே இவையெல்லாம் உண்டாம் என்பதை அறிய மறந்தது ஏனோ?" எனத் தவத்தின் அருமையினை எடுத்துக்கூறி அறிவூட்டி, அவன் துறவறம் மேற்கொள்ளத் துணைபுரிந்தான். இவ்வாறு தனக்கு அறிவுறுத்திய தன் ஆசிரியன் அறியாமையையும் போக்கவல்ல அறிவுத் தெளிவுடையான் பெருஞ்சேரலாதன் எனப் புலவர் பாராட்டுகின்றார்:

"முழுதுணர்ந் தொழுக்கும் நரைமூதாளனை
'வண்மையும், மாண்பும், வளனும, எச்சமும்,
தெய்வமும் யாவது தவமுடையோர்க்கு' என
வேறுபடு நனந்தலைப் பெயரக்
கூறினை பெரும! நின்படிமையானே" (பதிற்: எ௪.)

வந்தார்க்கு இலையும, வருவார்க்கு உலையும வைத்து வழங்கிச் சிறந்தது தமிழகம் என்ப. இந்தக் கொடைக் குணம், சேரலாதன்பாலும் குடிகொண்டிருப்பதைப் புலவர் பாராட்டிப் புகழ்கின்றார். சேரலாதன், தன்பால்வந்து பொருள்வேண்டி இரந்து நிற்பார்க்குப் போரில் தான் கைபபற்றிய யானைகளை, அவை போரில்பெற்ற புண்களை மருந்திட்டுப்போக்கிப் பரிசாக அளிபபன்; மேலும் வந்து இரப்பாரை எதிர்நோக்கி, அவர் வேண்டுமளவு கொடுப்ப

தற்காகக் குதிரைகள் எண்ணற்றனவற்றை ஈட்டிவைத திருப்பன் என்று கூறிப் பாராட்டுவதைக் காண்க.

"புன்ஒரீஇப்
பெருங்கைத் தொழுதியின் வன்துயர் கழிப்பி
இரந்தோர் வாழ நல்கி, இரப்போர்க்கு
ஈதல் தண்டா மா சிதறிருக்கை
கண்டனென் செல்கு வந்தனென்" (பதிற்: எசு.)

சேரலாதன், இவ்வாறு அறிவாலும் கொடையாலும் சிறந்து விளங்குவதைக் கண்ட புலவர், உலகில், அறிவுடையாரையும், கொடுக்கும் தொழிலில், இவர்க்கு இது கொடுக்கலாம், இவர்க்கு இது கொடுக்கலாகாது என எண்ணிப் பார்க்கும் அறிவின்றி, எவர்க்கும் எதையும் அளிக்கும் அறிவுமடம் பட்ட கொடைத் தொழிலுடையாரையும் நோக்கிய வழி, அவர்க்கு இவனை உவமையாக எடுத்துக் காட்டிக் கூறவேண்டியுளதே யன்றி, இவனுக்கு நிகராகக் கூறவல்லார் உலகில் ஒருவரும் இலர் என்று அவன் அறிவையும், கொடையையும் ஒருங்கே பாடிப் புகழ்ந்துள்ளார் புலவர் :

"உரவோர் எண்ணினும் மடவோர் எண்ணினும்
பிறர்க்கு நீவாயினல்லது! நினக்குப்
பிறருவம மாகா வொருபெரு வேந்தே!" (பதிற் : எடு.)

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை, அறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற" (குறள் : சுக.)

என்றும்,

"எழுபிறப்பும் தீயவை தீண்டா, பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்" (குறள் : சுஉ.)

என்றும் மக்கட் பேற்றின் மாண்பினைப் பாராட்டுவர் பெரியோர். மக்கட்பேறு பெறாதாரும், சிறப்பிலா மக்களைப் பெற்றாரும், பிற பேறுகளை எவ்வளவு சிறக்கப் பெற்றிருப்பினும், அப்பேறுகளால் பயன் இன்றாம்; ஆதலின்,

மக்களைப் பெறுவதையும், பிறந்த மக்கள் மாண்புடைய ராதலையும், பெறற்கரிய பேறுகள் அனைத்தினும் சிறந்த பேறுகளாக மதிப்பர். பெருஞ்சேரலாதன் இதிலும் குறை யுடையானல்லன்; இயற்கையறிவோடு கூடிய செயற்கை யறிவும, சால்பு, செம்மை என்று சொல்லப்பெற்ற, சான்றோரால் இருக்கவேண்டிய குணங்களும் நிறைந்து, நாடாளும நல்லறிவும நன்கு வாய்க்கப பெற்ற நன்மகனைப் பெற்றவன் பெருஞ்சேரலாதன், அவன் புகழைப் புலவர் பாடி மகிழ்வதில வியபபுண்டோ?

"ஏறறிவு புரிந்து
சால்பும், செம்மையும் உளப்படப் பிறவும்
காவற் கமைந்த அரசுதுறை போகிய
வீறுசால் புதல்வற் பெற்றனை" (பதிற்றுப் பத்து: எச.)

குணங்களால் நிறைந்து குன்றென நின்ற பெருஞ் சேரலாதன், போர் அறிவும, அதற்கேற்ற பேராண்மையும் நன்கு வாய்க்கப்பெற்று விளங்கினன்; அவன் படையின் பெருமையினையும், அதன் அருமையினையும, அப்படைத் துணைகொண்ட அவன் பேராண்மையினையும், அதனால் அவன் பெற்ற வெற்றிச் சிறப்புக்களையும, அவன் ஆற்றல் அறியாது எதிர்த்த அவன் பகைவர் பட்ட பாட்டினையும் புலவர் பலவாறு பாராட்டி மகிழ்ந்துள்ளார்.

சேரலாதன் படையில் உள்ள தேர் எத்தனை? குதிரை எத்தனை? வீரர் எத்தனை? என்பார்க்கு விடையாகப் புலவர் அரிசில்கிழார், அவற்றை எண்ணிக் கணக்கிட்டுக் கூறல் எவர்க்கும இயலாது; ஆதலின், அவற்றை யானும் எண்ணிப் பார்த்தேனல்லன்; ஆயினும் ஒன்று கூறு கின்றேன்; அதைக்கொண்டு அவன் படையின் பெருமை யினை ஒருவாறு உணர்ந்து கொள்ளுதல் கூடும்; அவன் நாட்டில், மாடுமேய்த்தல் தொழில் மேற்கொண்ட கொங்கர் என்பார் ஒரு இனத்தாருளர்; அவர்களிடத்தில் பெருந் திரளான மாடுகள் உள. அக் கொங்கர்பலரும், தங்கள் மாடுகளை ஒன்றுசேர்த்து மேய விடுதல் வழக்கம்; அக்காலை

ஆம்மாடுகளின் எண்ணிக்கையினை எண்ணிக்காணல் எவர்க்கும் இயலாது; சேரலாதன் நால்வகைப் படைகளும் ஒன்றன்பின் ஒன்றாகச் செல்லும்பொழுது, அவற்றின் இடையே செல்லும் யானைப் படையினை நோக்கினோர்க்கு, அக்காட்சி, அவன் நாட்டுக் கொங்கர்களின் ஆனிரைக் காட்சியினையே நினைப்பூட்டும், அவ்வளவு பெருந்திரளாகச் செல்லும் அவன் படையைச் சேர்ந்த யானைகள், யானைப் படையே இத்துணைப் பெரிதாயின், அவன், தேர், குதிரை, வீரர் படைகளின் பெருமை எத்துணைப் பெரிதாம் என்பதை நீங்களே உய்த்துணர்ந்து கொள்வீராக; மேலும், யானைப்படை அவன் நாட்டு ஆனிரைகளை நினைப்பூட்டும் என்றால், அவன் குதிரைப்படை, ஆனிரைகளினும் மிகுத் தோன்றும் ஆட்டுமந்தைகளை நினைப்பூட்டும்; அத்துணைப் பெருமையுடையது அவன் குதிரைப்படையும் இவ்வாறு தான் அவன் படையின் பெருமையினை மதிப்பிடலாகுமே யன்றி, அதை எண்ணிக்காணல் இயலாது" என்று கூறுகின்றார்:

"சேணுபரல் முரம்பின் ஈர்ம்படைக் கொங்கர்
ஆபரந்தன்னபல செலவின
யானைகாண்பல அவன் தானையானே"

"தம் நாட்டு
யாடுபரந்தன்ன மாவின்
ஆபரந்தன்ன யானையோன் குன்றே"

(பதிற்றுப்பத்து : எஎஅ.)

பெரும்படையும், பேராற்றலும் பெற்ற பெருஞ்சேரலாதன் புகார், பூழி, கொல்லி முதலாய இடங்களை வென்று உரிமையாக்கினான்; ஆயர்களுக்குத் தலைவனாகிய கழுவுள் என்பானோடு போரிட்டு அவன் ஆனிரைகளைக் கைப்பற்றினான்; நாள்பல ஆகியும், தங்கள் தலைவன், தம் ஆனிரைகளை மீட்டுத் தாராமையுணர்ந்த ஆயர்கள், தங்கள் தலைவனை அறியாதே பெருஞ்சேரலாதன் படைத்தலைவர் முன்வந்து அவர் விரும்பும் ஏறுகளும், கன்றுகளும் நிறைந்த நிரைகள் சில அளிப்ப, படைத்தலைவர்களும் அவர்

அளித்தன ஏற்றுத் தாம் கைப்பற்றிய அவர் நிரைகளை விடுத்தனர்; தம் இனத்தார் செயலறிந்த ஆயர் தலைவன் கழுவுள், செய்வதறியாது திகைத்து, பலர் அறியப் பணியவும் நாணி, எவரும் எழுந்து நடமாடா இருள் சூழ்ந்த விடியற்காலையில் வந்து, சேரலாதனைப் பணிந்து பகையொழிந்து வாழ்ந்தான்

> "எஃகொடு, கன்றுடையாயம் தரீஇப், புகல்சிறந்து
> புலவுவில் இளையர் அங்கை விடுப்ப
> மத்துக்கயிறு ஆடா வைகற்பொழுது நினையூஉ
> ஆன்பயம் வாழ்நர் கழுவுள் தலைமடங்க" (பதிற்று: எக.)

தர்மபுரி என இக்காலத்தே வழங்கப் பெறும் தகடூரில் இருந்து ஆட்சிபுரிந்தோனும், ஔவையாருக்கு அரிய நெல்லிக்கனி அளித்துச் சிறப்புற்றோனுமாகிய அதியமான் நெடுமான் அஞ்சி மீது பெருஞ்சேரலாதனுக்கு ஏதோ பகை வளர்ந்து விட்டது; பெருஞ்சேரலிரும்பொறை, படையுடன் தகடூர் சென்று, தகடூர்க் கோட்டையை முற்றி நின்றான்; அதியமானுக்குத் துணையாகச் சோழபாண்டியராகிய இருபெரு வேந்தரும், சில வேளிர்களும் வந்திருந்தனர்; இருந்தும், பெருஞ்சேரல் இரும்பொறையின் பெரும் படையை எதிர்த்து நிற்கும் ஆற்றல் இழந்து தகடூர்க் கோட்டையும் அழிவுற்றது; அதியமானும் இறந்து விட்டான். தகடூரில் பெருஞ்சேரல் இரும்பொறை பெற்ற வெற்றியை, அரிசில் கிழாரேயன்றி வேறு பல புலவர்களும் வியந்து பாராட்டினர்; அவனும் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை எனச் சிறப்பிக்கப் பெற்றான்.

இவ்வாறு பெருஞ்சேரல் இரும்பொறைபால் தாம் கண்ட சிறப்புக்களை, ஏற்ற இடந்தோறும் எடுத்துப் பாராட்டியும் அமையாத அரிசில்கிழார், அவன் சிறப்புக்களையெல்லாம் ஒருங்கே திரட்டி, ஓரிடத்தே வைத்துப் பாராட்டி மகிழ்வாராயினர்:

> "உயிர் போற்றலையே செருவத் தானே;
> கொடை போற்றலையே இரவலர் நடுவண்;

பெரியோர்ப் பேணிச் சிறியோரை அளித்தி ;
நின்வயிற் பிரிந்த நல்லிசை கனவினும்
பிறர்நசை யறியா ; வயங்கு செந்நாவின்
படியோரத் தேய்த்த வாண்மைத், தொடியோர
தோளிடைக் குழைந்த கோதை மார்ப!
அனைய அளப்பருங் குரையை." (பதிற்று: எக.)

பாக்கள்பல புனைந்து, தன் புகழ்பாடிய புலவர் அரிசில் கிழாரின் அறிவுநலம் கண்டு வியந்த பெருஞ்சேரலிரும்பொறை, அவர்க்கு ஒன்பது நூறாயிரம் காணம் நல்கியதோடு அமையாது, அரசமாதேவியாரோடும், அரண்மனை விட்டு வெளியேறி நின்று, புலவரை அழைத்து, இவ்வரண்மனையும், ஆட்சிப்பொறுப்பும் இனி நின்னுடைமையாம் ஏற்றருள்க என வேண்டி நின்றான் ; அரசன் அன் புள்ளத்தை அறிந்த புலவர் பெருந்தகையாரும், அவன் விருமபியாங்கே, அவற்றை ஏற்றுக்கொண்டு அடுத்த கணமே, "அரசே! என உடைமையாகிய இவ்வாட்சியினை நினக்கு யான் அளிக்கின்றேன் ; ஏற்றருள்க," என, வேண்டி அளித்து அகமகிழ்ந்தார், அரசனும், புலவனும் வளர்த்த அன்புத் தொடர்பின் சிறப்பே சிறப்பு!

அதியமான் தகடூரை அழித்து வெற்றிபெற்ற சேர வேந்தன் அவைக்களப் புலவராய அரிசில் கிழார், அவன் பகைவனும் அத்தகடூர்ப்போரில் அவனால் அழிவுற்றோனும் ஆய எழினியின் பிரிவு கண்டு மனம்மிக இரங்கி அழுது பாராட்டியுள்ளார் அவர், அவன் ஆண்ட தகடூர், அத்தகடூரில் அவன் மேற்கொண்டிருந்த ஆட்சி, அவன் பிரிவு கண்டு பொறாது பொருமிஅழும் அவன் குடிகள் அவன் மாட்டுக் கொண்டுள்ள அன்பு, அவன் ஆண்மை ஆய பலவற்றையும் அழகாகப் பாடியுள்ளார் :

"வாழ்க்கைக்கு வேண்டும் பயன்கள் முற்றும் நிறைந்த ஊர்கள் பல நிறைந்தது அவன் நாடு ; வெற்றியல்லது தோல்விகண்டறியா ஆண்மை நிறைந்தவீரர், போரில் தாம் பெறும் வெற்றிப் புகழ் அல்லது அதற்குக் கைம்மாறாகப்

பெறும் கூலியை எண்ணிப் பாராமல் காத்து நிற்கும் காவற்காட்டையுடையது அவன் தகடூர்," எனத் தகடூரின் கவினும், காவலும் விளங்கப் பாராட்டினார் :

"பல்பயன் நிலைஇய கடறுடை வைப்பின்
வெல்போராயவா மறம் புரிந்து காக்கும்
வில்பயில் இறும்பின் தகடூர்" (பதிற்று : எஅ)

காட்டிற் சென்று மேயும் ஆனிரைகள், அங்கே தமக்கு ஊறு செய்யும பகைவிலங்குகள் இல்லாமையால், மேய்ந்து மாலைவந்ததும், வீடுநோக்கி வருவதொழிந்து தம் கன்றுகளோடு அக் காட்டிலேயே தங்கும்; நடந்து நடந்து வெந்த காலுடைய வழிபோவார், வழி ஆறலை கள்வர் அற்றது ஆதலின், அவர் அலைப்பரே என அஞ்சி அரண் அமைந்த இடம தேடி ஓடி ஒளியாமல், தாம் விரும்பும் இடங்களிலே இருந்து இளைப்பாறுவர்; களத்தில் குவித்த நெல் முதலாம் குவியல்கள், நாடு கள்வர் அற்றது ஆதலின், காப்பார் எவரையும பெறாமல் தனித்தே கிடக்கும்; என அகப்புறப் பகைகளைக் கடிந்து ஆளும் அவன் ஆட்சிச் சிறப்பைப் பாராட்டினார் :

"கன்றமர் ஆயம் கானத்து அல்கவும்,
வெங்கால் வம்பலர் வேண்டுபுலத்து உறையவும்,
களமலி குப்பை காப்பில வைகவும்
விலங்குபகை கடிந்த கலங்காச செங்கோல்" (புறம்:உ௲0)

எழினி இறந்தான் என்று கேட்ட அவன் நாட்டு மக்கள், பெற்றுப பாலூட்டி வளர்க்கும் தாயை இழந்த சேய் எவ்வாறு ஏங்கித் துன்புற்று அழுமோ, அதைப் போல் அழுது அரற்றினர் என்று அவனுக்கும், அவன் குடிகட்கும உள்ள அன்பின் தொடர்பினைப் பாராட்டினார் :

"பொய்யா எழினி பொருதுகளம்சேர
ஈன்றோள் நீத்த குழவிபோலத்
தன்னமர் அற்றம் தலைத்தலை இனைய" (புறம் : உ௲0.)

"எழினியின் உயிர்குடித்த கூற்றமே! நீ சிறிதும் அறிவற்றவன் ஆயினை; உழவன் பசித்துயர் வந்துற்ற காலையும், நிலத்தில் விதைக்க வைத்திருக்கும் விதையினை உண்ணாது வைத்துப் பேணி, பின்னர் விதைத்து, அவ் விதையினும் பன்மடங்கு, பெற்று மகிழ்வதேபோல், நீ எழினியின் ஓர் உயிரைமட்டும் உண்ணாது விட்டிருப்பை யாயின், இவனைத் துணையாகக் கொண்டு இவன் பகைவர்க ளின் பல உயிர்களை அவன் கொண்டுதரப்பெற்று உண்டு பசியாறியிருப்பை பண்ணாள், ஆனால், அந்தோ! அப்பேற் றினை இழந்துவிட்டனையே; இவனைக் கொன்றதால் பெரு நட்டம் உறுவோன நீ ஒருவனே யன்றோ? என்னே நின் பேதைமை!" என்று கூறி எழினியின் ஆற்றலை எடுத்துக் காட்டி அழுது பாடியுள்ளார்:

"நோய் உழந்து வைகிய உலகினும் மிகநனி
நீயிழந் தனையே அறனில் கூற்றம்!
வாழ்தலின் வரூஉம் வயல்வளன் அறியான்
வீழ்குடி உழவன் வித்துண் டாங்கு
ஒருவன் ஆருயிர் உண்ணா யாயின்
நேரார் பல்லுயிர் பருகி
ஆர்குவை மன்னோ அவன் அமரடு களத்தே" (புறம்·உ௩௰.)

அரிய அழகிய பாக்கள்பல புனையும் பண்புவாய்ந்த அரிசில் கிழார்பால் பாராட்டத்தக்க பண்புகள் பலவும் பொருந்தியிருந்தன. அரிசில் கிழார், அரசரை அடைந்து, அவர் புகழ்பாடி, அவர் அளிப்பன ஏற்று வாழ்வதொன்றே புலவர் கடன் என எண்ணும் குறுகிய உள்ளமுடையவ ரல்லர்; அவர் தம்மால் பாராட்டப்பெறும் தலைவர்கள் போற்றத்தக்க பண்புடையராதல் வேண்டும் என்று எண் ணும் பேருள்ளமுடையவராதலின், அத்தகைய தலைவர் கள் தவறிய வாழ்க்கையினராயின், அவர்பால் அமைந்து கிடக்கும் அத்தவற்றினை எடுத்துக் காட்டித் திருத்தி அவர் நல்வாழ்வு வாழச் செய்வது புலவர்தம் கடனும் என்று எண்ணும் இயல்பினராய்க் காட்சியளிக்கின்றார்; அரிசில்கிழார்பால் அமைந்து கிடக்கும் இப்பண்பு, அவர்

பேகனைத் திருத்தி நல்வழிப்படுத்திய செயலால் நன்கு புலனாதல் காண்க.

அரிசில்கிழார் உயிர்களிடத்தே பேரன்புகொண்டவர்; நாட்டில் வாழும் மக்கள் நல்வாழ்வு வாழவேண்டும் என்ற நல்லெண்ணம் உடையவர், நலவாழ்வுபெற்ற மக்கள் வாழ் நாட்டையும், அந் நாடாள் அரசனையும் போற்றும் பண் புடையவர்; அதியமான் நெடுமான் அஞ்சியின் நாட்டில், 'பல் குழுவும், பாழ்செய்யும் உட்பகையும், வேந்தலைக்கும் கொல்குறும்பும்' இல்லாமையினை, அந்நாட்டுக் காடுகள், கொல்லும் கொடுவிலங்கின்றிக் கிடப்பதால், ஆனினங்கள் ஆரமேய்ந்து, அச்சமின்றி அக்காடுகளிலேயே துயிலும்; அந்நாட்டு வழிகளில் ஆறலைகள்வர் இல்லாமையால், அவ் வழிச்செல்வோர், தாம் வேண்டுமிடத்தே விரும்பி உறைவர்; அவன்நாடு கள்வர் அற்றது ஆதலின், அந் நாட்டார், தங்கள் பொருள்களை அரண் அமைந்த இடத்தே வைத்துக் காக்க எண்ணார் என்றெல்லாம் பாராட்டி யுள்ளார்.

நாட்டின் நல்வாழ்வுகண்டு மகிழ்ந்து பாடும் அரிசில் கிழார், நாட்டிற்குக் கேடு உண்டாம் என்பதறியின் எரியின் இழுதாய் இரங்கித் துடிப்பர், துடிப்பதோடு அமைந்து விடாது, அத்துயர் தடுக்கத் தம்மாலாவன எல்லாம் முயன்று பார்ப்பர்; தம்மால் ஆகாது எனக் கண்டவழி, கையற்று நின்றுவிடார், தம்மினும் வல்லார் துணைகொண்டு அதைப்போக்கத் துணிவர், பெருஞ்சேரல்இரும்பொறை பெரும்படையும், பேராற்றலும் உடையவன்; அத்தகையா னோடு ஒரு சில அரசர்கள் பகைத்தனர்; அதுகண்ட அரிசில்கிழார், பெரிதும் வருந்தினார்: இவனோடு பகைக் கின்றனரே; இவன் பெரும்படையால் அவர் நாடு அழிந்து விடுமே; இதற்கு என்செய்வேன்? இதை எவ்வாறு தடுப் பேன்? அவர்க்கு இவன் படைவன்மையினை விளக்கக் கூறியும் அவர்கள் ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனரே; என்சொல் மறுக்கும் இவர்கள், சான்றோர் பிறர் உரை

கேட்டாவது தம்பகை ஒழியாரோ? அவர் கேட்குமாறு உரைக்கவல்ல சான்றோர் எவரும் இலரோ?—

> "பன்னாள்
> யான் சென்றுரைப்பவும் தேறார் பிறரும்
> சான்றோர் உரைப்பத் தெளிகுவர் கொல்!" (பதிற்று: எ௩)

என்றெல்லாம் எண்ணி எண்ணி வருந்தினார்.

வருந்துவதோடு அமைந்தாரல்லர்; பகைவர்க்கு உரைத்தல் இயலாது என உணர்ந்த அரிசில்கிழார், பெருஞ்சேரல் இரும்பொறைபால் சென்றார்; "அரசே! நின்னொடு போர் வந்திருக்கும் இவர்களோடு போரிடுதல் நினக்கு அழகன்று. இவர்கள் நின் ஆற்றல் அறிந்து வந்தவரன்று, அவர்கள் நின்பால் பெரும்பகை கொண்டிருக்கின்றனர்; ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு என்ப. அதனால் அவர்கள் அறிவிற்கு நின்படையின் பெருமை புலப்பட்டிலது; பகை மிக்கதனால், அவர்கள், தம் உள்ள அறிவினையும் இழந்துவிட்டனர்; ஆகவே, பகைத்தற்குரிய பண்புடையானல்லன் பெருஞ்சேரல் இரும்பொறை; பழகற்கினியன் என உணராராயினர்; ஆதலினாலேயே நின்னைப் பகைத்து வந்துள்ளனர்; அறியாது வந்தாரை எதிர்த்து அழித்தல் நினக்கு அழகன்று; அறிந்தார், அறியாதார் இருவர் இயல்புகளையும் உள்ளவாறுணர்ந்து அதற்கேற்ப நடத்தலன்றோ நின்னொத்த பேரரசர்க்கு அழகு! அரசர்கள் அவ்வாறு ஆராய்ந்து ஆட்சிபுரிவதாலன்றோ உலகம் நடைபெறுகிறது? அவர்கள்மாட்டு அவ்வறிவு இன்றாயின், உலகில் உயிர்வாழ்வோர் ஒருவரும் இலராவரன்றோ?"

> "இகல்பெருமையின் படைகோள் அஞ்சார் ...
> நன்றறி உள்ளத்துச் சான்றோர் அன்ன நின்
> பண்புநன் கறியார் மடம் பெருமையின்" (பதிற்று: எ௨)

> "உரவரும், மடவரும் அறிவு தெரிந்தெண்ணி
> அறிந்தனை அருளாயாயின்
> யாரிவண் நெடுந்தகை! வாழுமோரே" (பதிற்று: எக

என்றெல்லாம் கூறி, அவன் உள்ளத்தே பகையுணர்வு ஒழியும்வண்ணம் உரைத்தார்.

அரிசில்கிழார், அக்கால மக்களால் பெரிதும் விரும்பி மேற்கொள்ளப்பெற்ற உழவுத்தொழில் நுட்பங்களை நுணித்தறிந்திருந்தவராவர் என்பதற்கான சான்றுகள் அவர்பாக்களில் பல உள. உழவனுக்கு விதையே முதல்; அவன் உண்ண உணவின்றி உயிர்விடும்போதும் தன்பால் உள்ள விதையினை எடுத்துண்ண எண்ணான்; மாறாக அவ்விதையை உண்பவன், உண்மையில் உழவனாகான்; உழவால் அவன் உயர்வடையான்; அத்தகையான் அழிந்துபோகவே தகுதியுடையவனாவன், இந்த உண்மையினை ஓரிடத்தே கூறியுள்ளார். தமிழகத்தில் நீர் வளம் குறைவு; உழவர் நீர்வளத்திற்கு வானையே எதிர்நோக்கி நிற்பர்; அவ்வானம் எப்போது வாய்க்கும் என்பதை எவரும் முன்கூட்டி உணரார், ஆகலின், அது வாய்க்கும்போது தம் தொழிலை மேற்கொள்ளத் தகுதியோடு என்றும் வாழ்தல் வேண்டும் இத்தகைய நிலை உள்ள நம்நாட்டில், நிலத்தை மிகுதியாகப் பெற்று, அவற்றை உழுதற்காம் ஏரைக் குறைவாகப் பெற்றவர் நல்ல உழவராகார்; இந்த உண்மையினை மற்றோர் இடத்தே எடுத்துக் கூறியுள்ளார்,

"வாழ்தலின் வரூஉம் வயல்வளன் அறியான்:
வீழ்குடி உழவன் வித்துண் டாங்கு" (புறம்: உ௩௦.)

"கருவி வானம் தண்டளி சொரிந்தெனப்
பல்விதை உழவின் சில்லே ராளர்" (பதிற்று: எசு.)

அரிசில் கிழார்பால் அமைந்துள்ள அருங்குணங்களை இவ்வாறே கூறிச் செல்லின் ஏடு விரியும்.

அரிசில்கிழார் பாக்களில் அழகிய உவமைகள்பல ஆங்காங்கே அமைந்து அணி செய்கின்றன; தேனடையைச் சூழத் தேனீக்கள் மொய்த்திருக்கும் காட்சிக்கு, அடித்துக் குவித்த நெற்குவியலில், அந்நெல்லை அளக்க ஆளும் மரக்கால்கள் பலவற்றைச் செருகிவைத்திருக்கும் காட்சியையும்,

"நெல்லின்
அம்பண அளவை உறைகுவித் தாங்குக்
கடுந்தேறு உறுகிளை மொசிந்தன துஞ்சும்
செழுங்கூடு" (பதிற்று: எக.)

பெருஞ்சேரல் இரும்பொறையின் பேராற்றல் அறியாது பகைத்துவந்து போரிட்டு, அவனால் துன்புற்றுத் தோற்றோடும் பகைவர்க்கு, தம் இளமையால் அறியாது, தேன்கூட்டினை அழிக்கச் சென்று, அக்கூட்டில் வாழ் தேனீக்கள் எழுந்து கொட்டத்தொடங்கியதும் துன்புற்று ஓடும் இளஞ் சிறார்களையும்,

"செழுங்கூடு கிளைத்த இளந்துணை மகாரின்
அலந்தனர் பெரும! நின் உடற்றி யோரே" (பதிற்று: எக.)

பகைவர் நாட்டின் மீது படைகொண்டு சென்று, அவர் நாட்டைப் பாழ் செய்வது கண்ட பகைவர், பணிந்து திறை தந்தாராக, அதை ஏற்றுக்கொண்டு அவரை அழிக்காது விடுத்து மீளும் பெருஞ்சேரல் இரும்பொறைக்கு, மக்களைப் பிடித்துத் துன்புறுத்தி, அம்மக்கள் தம் நோய் நீங்கப் பலி கொடுத்தாராக, அவர் அளித்த பலியினை ஏற்றுக்கொண்டு அவர் உயிர்க்கு ஏதம் விளைக்காது விட்டுச் செல்லும் பேயினையும்,

"பலிகொண்டு பெயரும் பாசம்போலத்
திறைகொண்டு பெயர்தி" (பதிற்று: எக.)

கோபத்தால் சிவந்து சுழலும் வீரன் ஒருவன் கண்ணிற்கு, ஓர் அகலில் இடம்பெற்று ஓயாது சுழலும் குன்றிமணியினையும்,

'அகற்பெய் குன்றியிற் சுழலும் கண்ணன்" (புறம்: ௩00.)

உவமைகளாகக் கூறியுள்ள அவர் புலமை நலத்தைப் போற்றுவோமாக.

அரிசில்கிழார் பாடிய பாக்களுள், அகத்துறைப் பொருள் தழுவிய பாடல் ஒன்றே உளது; அவ்வொரு-

பாட்டிலேயே, அவர் அக்காலத் தமிழ்மகளிரின் மாண்பு களைத் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார்; காலம் முழு தும் கணவன் தன் அண்மையில் இருந்துகொண்டே, தனக்கு வேண்டுவன எல்லாவற்றையும அளித்தல் வேண்டும் என எண்ணும இக்கால மகளிரைப்போலல் லாமல், கணவன் எபபோதோ செய்த ஓர் உதவியை உள்ளததில் என்றும் எண்ணி மகிழ்நது அமையும் அருங் குணமுடையவள் பழந் தமிழ்மகள எனப பாராட்டி யுள்ளார் பழநதமிழ்ப பெணணொருததி மணநது கணவன் வீடுசென்று வாழகின்றாள , அவளைக் காணவநதாள் அவள் தோழி, ஆங்கு, அவள் பெருநலம சிறிதும் குறையாதே இருபபதுகண்டு வியநது நின்றாள்; தோழியின் வியப் புணர்நத அவள், "தோழி! தலைவர் முன்னொருநாள் செய்த தலையளியே இன்றும எனக்கு இன்பமளிக்கிறது; பண்டொரு முழுநிலா நாளன்று, தலைவர் அன்புசெய்து சென்றனரன்றோ? அன்று, என்தோள் பெற்ற மணம் இன்றும் மங்காது மணக்கிறது," என்று கூறினாள் எனப் பாடியுள்ளார்:

> "நாடன், தொல்லைத திங்கள் நெடுவெண் நிலவின்
> மணந்தனன் மன்நெடுந் தோளே;
> இன்றும முல்லை முகை நாறும்மே" (குறுந் ககூ)

புறநானூற்றில் காணப்படும், மகட்பாற்காஞ்சி, தொடாக்காஞ்சி, தானைமறம், குதிரைமறம் முதலாய துறை தழுவிவந்த அரிசிலகிழார் பாடல்கள, அரிய நயம் பல செறிந்து அவர் புலமையின் சிறப்பிற்குச் சான்று பகர்ந்து நிற்கின்றன.

## ௨. ஆர்க்காடுகிழார் மகனார் வெள்ளைக்கண்ணத்தனார்

வடார்க்காடு மாவட்டத் தலைநகராகிய வேலூர்க்குக் கிழக்கே பாலாற்றங்கரையில், ஆர்க்காடு என்ற பெயருடையதோர் ஊர் உளது, அதன்பெயரை, ஆர்+காடு எனப்பிரித்து, ஆத்திமரங்கள் நிறைந்தமையால் இது ஆர்க்காடு எனப் பெயர்பெற்றது என்பர் சிலர்; ஆறு+காடு எனப்பிரித்து, ஆறு காடுகளைக்கொண்டு விளங்கியமையால் இது ஆற்காடு எனப் பெயர்பெற்றது, இப்பெயர் வடமொழியில் ஷடாரண்யம் என வழங்கப்பெறும் என்பர் வேறு சிலர்; ஆல்+காடு எனப்பிரித்து, ஆலமரங்கள் நிறைந்தமையால் இது ஆற்காடு என அழைக்கப்பெற்றது போலும் என்பர் மற்றும் சிலர். தமிழ் நூல்களிலும், கல்வெட்டுக்களிலும் ஆர்க்காடு என்ற படிவமே வழங்கப் பெற்றுள்ளது. ஆர்க்காடு, சேந்தன் என்பானொருவனுடைய தந்தையாகிய அழிசி என்பானுக்கு உரியது; அது நெல் விளையும் நிலங்களைச் சூழக்கொண்டது என்று பழந் தமிழ் நூல்கள் பகர்கின்றன:

“சேந்தன் தந்தை
அரியலம் புகவின் அந்தோட்டு வேட்டை
நிரைய ஒள்வாள் இளையர் பெருமகன்
அழிசி ஆர்க்காடு” (குறுந்: ௨௫௮)

“சேந்தன் தந்தை
தேங்கமழ் விரிதார் இயல்தேர் அழிசி
வண்டுபடு நெடுதல நெல்லிடை மலரும்
அரியலம் கழனி ஆர்க்காடு” (நற்: ௧௯0)

இவ்வாறு இலக்கியச் சிறப்புற்று விளங்கும் ஆர்க்காட்டில் பிறந்து, அரசர்கள் பாராட்டி அளித்த கிழார் என்ற சிறப்புப்பெயர் பெற்றுப் பெருமையுற்ற பெரியார் ஒருவருக்கு மகனாய்ப் பிறந்த பேறுடையவராவர், நம் புலவர் வெள்ளைக்கண்ணத்தனார். இத்துணையே இவர்

வரலாறுபற்றி அறியத்தகும். இவர் பெயரால் காணப்பெறும் பாடல் ஒன்றே; அது தலைவியைப் பிரிந்து வினைமேற்சென்று, அவ்வினை முடித்துநின்ற தலைமகன் ஒருவன், தன் பாகனை நோக்கி, விரைந்து வீடுசெல்லுதல் வேண்டும்; அதற்கேற்ற குதிரைகளைப் பூட்டுக; அதற்கேற்ற ஓட்டந் தெரிக எனக்கூறும் துறைமேற் கொண்டுளது. அப்பாட்டில், தலைவியைக் காணத்துடிக்கும் அத்தலைமகன் கண்முன், மாலையில், பசுவோடு இணைபிரியாது கலந்து ஊர் திரும்பும் காளைகளைக்கொண்டு நிறுத்தும் புலவரின் புலமைத்திறம் போற்றத்தக்கதாம் :

“களையும் இடனால் பாக உளை அணி
உலகுகடப் பன்ன புள்ளியற் கலிமா
வகையமை வனப்பின் வள்புநீ தெரியத்
தளவுப்பிணி அவிழ்ந்த தண்பதம் பெருவழி
ஐதிலங்கு அகலிலை நெய்கனி நோன்காழ்
வென்வேல் இளையர் வீங்குபரி முடுகச்
செலவுநாம் அயர்ந்தனம் ஆயின் பெயல
கடுநீர் வரித்த செந்நில மருங்கின்
விடுநெறி ஈர்மணல் வாரணஞ் சிதரப்
பாம்புறை புற்றத்து ஈர்ம்புறங் குத்தி
மண்ணுடைக் கோட்ட அண்ணல் ஏஎறு
உடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ
ஊர்வயின் பெயரும் பொழுதில் சேர்புடன்
கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரும்
ஆபூண் தெண்மணி ஐதியம் பின்னிசை
புலம்புகொள் மாலை கேட்டொறுங்
கலங்கினள் உறைவோள் கையறு நிலையே.” (அகம்: சுச)

## ௮. ஆலத்தூர் கிழார்

ஆலத்தூர் என்ற பெயருடைய ஊர்கள், தமிழகத்தில் பல உள. பாண்டிநாட்டில், மதுரோதய வளநாட்டில் ஓர் ஆலத்தூரும், தொண்டைநாட்டில், புலியூர்க்கோட்டத்தில் ஓர் ஆலத்தூரும், பல்குன்றக்கோட்டத்தில் ஓர் ஆலத்தூரும், சோழநாட்டில் ஓர் ஆலத்தூரும் இருக்கின்றன. ஆலத்தூர்கிழார் என்ற இப்புலவர், சோழநாட்டு அரசர்களையே பாடியுள்ளமையால், இவர் பிறந்த ஆலத்தூர், சோழநாட்டில், காவிரியாற்றின் தென்கரைக்கண் உள்ள ஆலத்தூராம் என்று கொள்ளலாம். இந்த ஆலத்தூர், ஆவூர்க்கூற்றத்து விக்கிரமசோழன் பேராலத்தூர் என்றும், தென்கரை நித்த விநோத வளநாட்டு ஆலத்தூர் என்றும், நித்தவிநோத வளநாட்டு ஆவூர்க்கூற்றத்து ஆலத்தூர் என்றும் கல்வெட்டுக்களில் வழங்கப்பட்டுளது.

ஆலத்தூர்கிழார், ஆலத்தூரில் பிறந்த ஒரு பெருநிலக் கிழவராவர் என அவர் பெயர் அறிவிக்கும் வரலாறும், ஆலத்தூர்கிழார், குளமுற்றத்துத் துஞ்சியகிள்ளிவளவன், நலங்கிள்ளி ஆகிய இரு சோழ அரசர்களையும், போர் அறியாப் போர்வீரன் ஒருவனையும் பாராட்டியுள்ளார் என அவர் பாக்கள் அறிவிக்கும் வரலாறும் தவிர, அவர்பற்றிய பிறவரலாறு எதையும் விளங்க உணர்தற்கில்லை.

திருமாவளவன் ஆட்சிக்குப் பின்னர், சோழநாடு இரு கூறுகளாகப் பிரிவுண்டு, சோழர்மரபைச் சேர்ந்த இருகிளையினரால் ஆளப்படலாயிற்று; புகார் என வழங்கப் பெறும் காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக்கொண்டு கடலைச் சார்ந்திருந்த நாட்டை ஒருகிளையினரும், உறையூரைத் தலைநகராகக்கொண்டு, உள்நாட்டிலிருந்த நாட்டை மற்றொரு கிளையினரும் ஆளலாயினர்; உறையூரைத் தலைநகராகக்கொண்டு ஆண்ட சோழர்களுள் கிள்ளிவளவன் சிறப்புடையவனாவன்; கிள்ளிவளவன் என்ற பெயருடையார் பலர் இருந்தமையாலும், இவன் தன் வாழ்வின் இறுதிக் காலத்தே, குளமுற்றம் என்ற இடத்தே இருந்து உயிர்

விட்டானாதலினாலும், இவனைக் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் என்று அழைப்பாராயினர்.

கிள்ளிவளவன் நல்ல பல பண்பாடுகள் பெற்று விளங்கினான். அவன் புலவர் பாராட்டும் பெருமை வாய்ந்தவன்; "தாங்கள் யாண்டுளீர்? எந்நாட்டுறைகின்றீர்?" என்று வினவிய வளவனுக்கு, "நாங்கள் நின்பகைவர் தேயத்தே வாழினும், அப்பகைவர் நாடெல்லாம் நின் நாடே எனக்கருதும் உள்ள முடையேமாதலின் நின்னையே எண்ணி வாழ்வேம்; ஆதலின், நாங்கள் எந்நாட்டினராயினென்?" என்று ஒரு புலவர் விடை கூறுகின்றார் எனின், புலவர்மாட்டு அவன் கொண்டிருந்த அன்புத் தொடர்பு எத்துணை ஆற்றல்வாய்ந்தது என்பனை உணருங்கள். தன் நிலத்திற்கு அரசிறையாகத் தரவேண்டிய பொருளைத் தர இயலாமை உண்டாய காலத்தே, அரசவை வந்து, இயலா நிலையினை எடுத்துக்கூறி வருந்திய புலவர் ஒருவர்க்கு, அவர் தரவேண்டிய நிலவரியை நீக்கியதோடு, பெரும் பொருட்கொடையும் கொடுத்தளித்தான் கிள்ளிவளவன் எனின், 'கிள்ளிவளவன் காட்சிக் கெளியன்; கருணை உள்ளத்தன்' எனக் கூறுவதில் தவறுண்டோ? குலப்பகையாய் வாழ்வோன் குடியை முற்றும் அழிப்பதே தமகுடிக் கடனாகக் கொண்டு வாழ்ந்த அரசர் மரபிலே வந்த கிள்ளிவளவன், புலவர் ஒருவர் வேண்டினார் என்பதற்காகவே, கொல்லவேண்டித் தன் யானையின் காற்கீழ் இட்ட, தன் பகையரசன் ஒருவனின் இரு மக்களையும் உயிரோடு போக விடுத்தான் எனின், அவன் புலவர் சொற்கு எத்துணைப் பெருமதிப்புத் தரும் பேருள்ளங்கொண்டு விளங்கினான் எனபதைக் காணுங்கள்; கிள்ளிவளவன், புலவர்களிடத்தில் இத்துணைப் பெருநட்பும், பெருமதிப்பும் கொண்டிருந்தமையாலன்றோ ஆடுதுறை மாசாத்தனார், ஆலத்தூர்கிழார், ஆவூர் மூலங்கிழார், எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார், ஐயூர் முடவனார், ஔவையார், கோவூர் கிழார், மாறோக்கத்து நப்பசலையார், வெள்ளைக்குடி நாகனார் முதலாய புலவர் பெருமக்கள் பெருந்திரளாய்க்கூடி நின்று

அவனைப் பாராட்டினார். கிள்ளிவளவன் புலவர் பலர் பாராட்ட வாய்ந்தவன் என்பதோடு அவனும் ஒரு புலவனவன்; தன் உயிர்த் துணைவனாய், உயர்ந்த படைத் தலைவனாய் விளங்கிய சிறுகுடிகிழான் பண்ணன் என்பானின் பெருங் கொடைவளம் விளங்க அவன் பாராட்டிய பாட்டொன்று, புறநானூற்றில் பெரும் புலவர் பாக்களோடு ஒப்பவைத்துப் பாராட்டப் பெற்றுள்ளது.

கிள்ளிவளவன் புலமையும் பெருமையும் பிறர் உரைக்க உணர்ந்த புலவர் ஆலத்தூர் கிழார், அவனைச் சென்று பாராட்டிப் பரிசுபெறுதல் அவனுக்கேயல்லாமல் தமக்கும் பெருமைதரு செயலாம் என்று எண்ணினார்; அவன் அரசிருக்கையாம் உறையூர் சென்றார், ஆங்கே, பகைவர் யானைப் படைகளை அழிப்புழிப் பெற்ற புண்ணால் பெருமை கொள்ளும் அவன் வீரர்கள் வாழும் பாசறைப் பெருமையினையும், பகைவர் நாட்டைப் பாழ்செய்து பெறும் வெற்றி விரும்பிக் கொள்ளும் அவன் போர்க் கோலக் காட்சியினையும், போர் நோக்கிப் புறப்படும் அக் காலத்திலும் தன் வாயில் நின்று வறுமை உரைத்தார்க்குத் தேர்பல வழங்கும் அவன் வள்ளன்மையினையும் கண்டார்; கண்டுகளித்த அவன் வெற்றிச் சிறப்பையும், வண்மையின் ஒண்மையினையும் ஒருங்கே பாராட்டிப் பாட்டொன்று அமைத்தார்; அப்பாட்டிலேயே தம் வறுமையின் கொடுமையினையும் எடுத்துக்கூற எண்ணினார்; ஆனால், 'என் வறுமையின் கொடுமையிது; இதுபோகப் பொருள் தர வேண்டுகின்றேன்' எனல் தம்பெருமைக்கு இழுக்காம் என உணர்ந்தார்; உடனே, கையில் யாழும், அரையில் வேற்று நூல் கொண்டு தைக்கப்பெற்ற கிழிந்து நைந்துபோன ஆடையும் கொண்ட பாணன் ஒருவன், பசித்துயர் வருத்த வந்து, 'வறுமையால் வாடும் எம் சுற்றத்தின் துயர்போக வழங்குவார் எவரும் இவ்வுலகில் இலரோ?' எனத் தன்னை வினவியதுபோலவும், வினவிய பாணனுக்கு, வளவன் வாயில் வந்து இரப்போர் ஆண்டு நெடிது நிற்றலும், தம் வறுமையினை வாயால் கூறி வருந்தலும் வேண்டுவதின்று;

அவர்களைத் தன் வாயில் கண்ட அப்போதே, அவன் அவர்க்கு வேண்டுவ பலவும் அளிப்பதோடு, அவர்க்குப் பொற்றாமரைப் பூச்சூட்டிச் சிறப்பிக்கவும் செய்வன் என வளவன் பீடும் பெருமையும் கூறி அவன்பால் போக விடுவார் போலவும் கற்பனை ஒன்றை அமைத்து, அக்கற்பனை வழியே, தன் வறுமையின் கொடுமையினையும், அதைப் போக்கவேண்டிய அவன் கடமையினையும் எடுத்துக் கூறினார் :

" கையது கடனிறை யாழே ; மெய்யது
புரவலர் இன்மையின் பசியே ; அரையது
வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர் ;
ஓம்பி உடுத்த உயவற் பாண !
பூட்கையில்லோன் யாக்கை போலப்
பெரும்புல்லென்ற இரும்பே ரொக்கலை ;
வையகம் முழுதுடன் வளைஇப் பையென
என்னை வினவுதி யாயின், மன்னர்
அடுகளிறு உயவும் கொடிகொள் பாசறைக்
குருதிப் பரப்பிற் கோட்டுமா தொலைச்சிப்
புலாக்களம் செய்த கலாஅத் தானையன் ;
பிறங்குநிலை மாடத்து உறந்தை யோனே ;
பொருநாக் கோக்கிய வேலன் ; ஒருநிலைப்
பகைப்புலம் படர்தலும் உரியன் ; தகைத்தார்
ஒள்ளெரி புரையும் உருகெழு பசும்பூண்
கிள்ளி வளவற் படர்குவை யாயின்,
நெடுங்கடை நிற்றலும் இலையே ; கடும்பகல்
தேர் வீசிருக்கை ஆர நோக்கி
நீ அவற்கண்ட பின்றைப் பூவின்
ஆடும் வண்டு இமிராத் தாமரை
சூடா யாதல் அதனினும் இலையே. (புறம் : ருக.)

ஆலத்தூராரின் அரிய பாடல் கேட்ட வளவன், அவர் புலமை நலம் அறிந்து மகிழ்ந்து, அவர் உள்ளம் மகிழு மாறு, பால் உலையிட்டு ஆக்கித் தேனொடு கலந்த வரகரிசிச் சோற்றினையும், குறுமுயலின் வளம் நிறைந்த இறைச்சி

பினையும், காலை மாலை இரு வேளைகளினும் ஊட்டியும், உள்
ளத்தொடு கலந்து வெளியாம் நல்லுரை பல கூறியும்,
என்றும் குறைதலில்லாப் பெருஞ்செல்வம் பல அளித்தும்
சிறப்பித்தான்; வளவன் வழங்கிய வளம் கண்டு மகிழ்ந்த
புலவர், "இத்தகையானை வாழ்த்தாதார் வாழுமவகை
அறியாதாராவர்; செய்ந்நன்றி கொன்ற கொடியராவர்;
அத்தகையார் உலகில் வாழவும் உரிமையிலராவர்; அவர்
களை இவ்வுலகம் தாங்குவதும் செய்யாது; அவர்கள் வாழும்
உலகில், உலகிருள் போக்கும் ஞாயிறு தோன்றவும் அஞ்சும்
ஆதலின், வளவன் வாழ்க! இமயத்துச்சியில் இன்
குரல் எழுப்பிப் பெய்யும் பெருமழைத் துளிகளின் எண்
ணிக்கையினும் பலவாண்டு வாழ்க!" என வாழ்த்துரை
வழங்கி, அவன் அரசவையில் வாழ்ந்திருந்தார்.

வளவன் வெற்றிச்சிறப்பு விரும்பும் வேந்தனவன்;
பெருவேந்தனாய் விளங்கும் தன்முன், பிற பெருநா
டொன்றின் அரசராய் வாழ்வதைப் பொறாது அவன் உள்
ளம்; இத்தகு உள்ள ஊக்கமுடையோனாய வளவன் தன்
நாட்டை அடுத்துள்ள சேரநாட்டை வேந்தனொருவன்
சிறக்க ஆண்டிருப்பதைக் கண்டு வெகுண்டான்; அவன்
தலைநகர்க் கருவூரை அழித்து, அவன் தன் அடிபணிதலைக்
காண விரும்பினான்; உடனே சோழர், பெரும் படை
யொன்று கருவூர் அடைந்து கோட்டையினை வளைத்துக்
கொண்டது; சோழன் வரவுணர்ந்த சேரன் நெடுநாள்
முற்றுகைக்கு வேண்டும் பொருளோடு கோட்டையை
அடைத்துக்கொண்டு உள்ளிருக்கலாயினன்; முற்றுகை
நெடுநாள் நீளலாயிற்று; சேரன் வெளிப்போந்து
போரிடுவதோ, அன்றிப் பணிவதோ செய்யாது அடங்கி
இருப்பானாயினன்; சேரன் செயல் கண்டு சினந்த சோழர்
படை, கோட்டையைச் சூழ உள்ள காவற்காட்டினுட்
புகுந்து மரங்களை வெட்டி வீழ்த்தி அழிக்கலாயிற்று.
அழிக்கும் அந்நிலையினும் சேரன் சினந்து வெளிவந்தா
னல்லன்; சேரன் செயலறிந்து வளவனும் முற்றுகையினை
விட்டானல்லன்; வேந்தர் இருவரின் இச் செயலினை, வள

வன் அரசவையில் வாழ்ந்துவரும் ஆலத்தூர்கிழார் உணர்ந் தார்; ஆலத்தூர்கிழார், கருவூர்க் கோட்டையின் சிறப்பை யும், அக்கருவூரைச் சூழ்ந்தோடும் ஆன்பொருநை ஆற் றின் தூய வெண்மணல் பரந்துவிளங்கும் அழகையும், அவ் வாற்று மணலில் காலில் சிலம்பொலிக்க ஓடிவந்தமர்ந்து, பொன்னாலாய கழங்கினைக் கைவளை ஒலிக்க ஆடி மகிழும் கருவூர்ப் பெண்களின் கவினையும் கண்டுகண்டு களித்தவர்; அக் காட்சிகளைக் கண்டுகளித்த அவர்க்கு, கருவூர் முற் றுகையால் அந்நாட்டு மக்கள் படும் துன்பமும், அக் கரு வூர்க் கோட்டையும், அதைச் சூழ்ந்தோடும் ஆனபொரு நையும் அழகிழந்து அழிவதும் பெருந்துயர் தருவவாயின; அவ்வழிவினைத் தடுக்க விரும்பிற்று அவர் உள்ளம்; அவ் வழிவைத் தருவதோ, அதைத் தடுப்பதோ உள்ளிருக்கும் சேரவேந்தனால் இயலாது என்பதைப் புலவர் அறிவாராத லின், அவர் அவனிடம் செல்ல விரும்பினாரல்லர்; தன் மாட்டுப் பேரன்பும் பெருமதிப்பும கொண்டு விளங்கும் கிள்ளிவளவன்பால் சென்றார்; அவனோ கருவூர் அழிவு கண்டு மகிழும் ஆர்வம் நிறைந்து நிற்கின்றான்; அந்நிலை யில், கருவூர் அழிவுகுறித்து வருந்தித் தடுத்தல் இயலாது; அவன் உள்ளம் உவப்பன உரைத்தலே உறுபயன் பெறும் வழியாம்; அரசர், பகை அரசரைத் தமமுன் பிறர் பழித் துரைப்பக் கேட்டு மகிழ்ந்து, அவ்வாறு பழித்துரைப் பார்க்குப் பெருஞ் சிறப்புச் செய்வர்; அரசர்தம் இம் மன வியல்புணர்ந்த ஆலத்தூர்கிழார், வளவனை நோக்கி, "அரசே! ஓர் அரசன், தன்னொத்த ஆற்றல்வாய்ந்த அரச னோடு போர்புரிவதையே விரும்புவன்; அதுவே அவன் வீரத்திற்கும் அழகாம்; தனக்கு நிகரல்லாதானோடு போரிடுதல் அரசர்க்கு இழுக்காம்; இவ்வுண்மை நீ அறி யாததொன்றன்று; ஆனால், இன்று நீ அவ்வறிவிழந்து நிற்பது காண வருந்துகின்றேன்; நின் பெரும்படையால் வளைக்கப்பெற்ற கருவூர்க் கோட்டையினுள் வாழ்வோன் இயல்பினைச் சிறிதும் எண்ணிப் பார்த்திலைபோலும்; பகை வர்படை பல நாளாகச் சூழ்ந்திருப்பதே பழியெனக் கருது வர் சிறந்த வீரர்; நின்படை இக்கோட்டையினை இது

இவ்வளவு நாட்கள் சூழ்ந்திருப்பது கண்டும், சேரன் வெகுண்டு வெளிவந்தானல்லன்; அம்மட்டோ! நின் படை, கோட்டையை வறிதே சூழ்ந்து கிடக்கவும் இல்லை; காவற்காட்டு மரங்களை வெட்டி வீழ்த்தி அழித்துக் கொண்டிருக்கிறது; இவ்வாறு மரங்களை வெட்டி வீழ்த்தும் ஓசை, உள்ளிருப்போன் காதுகளிற் சென்றும் நுழைகிறது; அது கேட்டும் அவன் வெளிவந்தானல்லன்; அத்துணை அச்சமுடையோனுவன் அவன்; அத்தகையா னொடு போரிடல், ஆற்றல் வாய்ந்த பெரு வீரனுய நினக் கும் பெருமை தரும் செயலாகாது, இம்முற்றுகையால் நின் பெருமை குன்றுவது காண வருந்துகின்றேன்; என் உள்ளம் உணர்ந்தவற்றை உணர்த்திவிட்டேன் நான்; இனி, மேலும் விடாது முற்றி அழிப்பதே மேற்கொண்டு பழி மேற்கொள்வதோ, முற்றுகை ஒழித்துப் புகழ் மேற் கொள்வதோ நின் செயலாம்,'' என்று நயம்படக்கூறி அறிவுறுத்தினர்:

"அடுநை யாயினும், விடுநை யாயினும்,
நீ அளந்தறிதி நின் புரைமை; வார் கோல்,
செறியரிச் சிலம்பின், குறுந்தொடி மகளிர்
பொலஞ்செய் கழங்கின் தெற்றி யாடும
தண்ணான் பொருநை வெண்மணல் சிதையக்
கருங்கைக் கொல்லன் அரஞ்செய் யவ்வாய்
நெடுங்கை நவியம் பாய்தலின் நிலையழிந்து
வீகமழ் நெடுஞ்சினை புலம்பக் காவுதொறும்
கடிமரம் தடியும் ஓசை தன்னூர்
நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப
ஆங்கினிதிருந்த வேந்தனொடு ஈங்கு நின்
சிலைத்தார முரசங் கறங்க
மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே''

(புறம்: ௩௬)

பதிபெழுவறியாப் பழங்குடி கெழீஇய பொதுவறு சிறப்பின் புகார் எனப் போற்றப்படும் காவிரிப்பூம் பட்டினமாய கடற்கரை நகரை அரசிருக்கையாகக்கொண்டு

ஆண்ட அரசர்களுள் நலங்கிள்ளி சிறப்புடையோனுவன் ; நலங்கிள்ளி நல்லிசைப்புலமை வாய்ந்த நல்லோனுவன் ; முன்னோர் பேணித்தந்த பெரும்பொருளே அரும்பொருளாம் என எண்ணுவோன் உள்ளம் இழிந்தோன் உள்ளமாம் ; தான் முயன்று ஈட்டும் பொருளே புகழ்மிகு பொருளாம் என எண்ணுவோன் உள்ளம் உயர்ந்தோன் உள்ளமாம் ; இக்கருத்தமைய அவன் பாடிய பாட்டொன்று அவன் புலமைக்கும், ஊக்கமுடைமைக்கும் உரிய எடுத்துக்காட்டாய் விளங்குவது காண்க. நலங்கிள்ளி, நல்லிசைப்புலமையோடு நல்லொழுக்கமும் உடையனுக விளங்கினுன் ; "என்னை எதிர்த்த பகைவர்களைப் பாழ்செய்து வெற்றிகொள்ளேனுயின், காதல் கருதாது பொருள் ஒன்றே கருதி வாழும் பரத்தையரொழுக்கம மேற்கொளவார் பெறும் பெரும்பழியுடையேனுகுக," எனக்கூறும் வஞ்சினம் அமைந்த அவன் பாட்டு, அவன் ஒழுக்கமுடைமையினை உணர்த்தி நிற்றல் காண்க அறிவும், ஒழுக்கமும் கொண்டு உயர்ந்து விளங்கிய நலங்கிள்ளி, ஆற்றல் வாய்ந்த பேரரசனுகவும் வாழ்ந்தான் ; நலங்கிள்ளி எந்த நேரத்தில் தம்மீது போர் மேற்கொண்டுவந்துவிடுவனே என்ற அச்சத்தால் வடநாட்டரசர்கள் உறங்குவதொழித்து விழித்திருப்பர் எனின், அவன் ஆற்றலுக்கோர் எல்லைகூறல் இயலுமோ?

இத்தகைய பேரரசனுகிய நலங்கிள்ளி இறந்துவிட்டதறிந்த ஆலத்தூர் கிழார், அவன் படையின் பெருமையினையும், அப்படைத்துணைகொண்டு அவன் ஆற்றிய அரும் போர்களையும் எண்ணி எண்ணி வருந்துவாராயினர்.

நலங்கிள்ளியின் நால்வகைப்படை மிகமிகப் பெரிதாம் ; அப்படைப் பெருமையினை விளக்கப் புலவர் ஆலத்தூர் கிழார், அழகிய ஒரு கற்பனையினை மேற்கொண்டுள்ளார். அவன் படை ஓரிடம் நோக்கிச் செல்லத் தொடங்கி, ஒரு பனந்தோப்பினிடையே நுழைந்து செல்வதாயின், அப்படையின், முதற்கண் வருவோர் அத்தோப்பினுள் நுழையுங்கால் நுங்குக்காலமாம் ஆதலின்,

அவர்கள் நுங்குண்டு செல்வர்; படையின் இடையில் நிற்போர் ஆண்டுவருங்கால், நுங்குக்காலம் கழியப் பழக் காலம் வரும் ஆதலின், படையிடை வருவார், நுங்கு உண்ணல் இயலாது பழமே உண்பர்; படையின் இறுதி யில் நிற்போர் ஆண்டுவருங்கால் பழக்காலமும் பழங்கால மாய்க் கழிய, கிழங்கு தோன்றும் காலமாம் ஆதலின், அவர்கள் கிழங்கே உண்பர். இவ்வாறு, நுங்குக்காலத்தில் நுழைந்த ஒரு படையின் கடைப்பகுதி, கிழங்குக்காலம் தோன்றிய பின்னரே அவ்விடத்தைவிட்டுக் கழியும் எனின், அப்படை எத்துணைப் பெரிது என்பதைப்பாருங் கள். இத்துணைப் பெரும்படையுடையான் நலங்கிள்ளி என்று கூறும் புலவரின் புலமைநலத்தைப் போற்றுவோமாக.

வேந்தர்கள் தம் வெற்றிவிளங்க வலம்புரிச்சங்கு களை முழக்குவது பழந்தமிழ்ப் பண்பாடாம்; நலங்கிள்ளி யின் காலத்தே தமிழகத்தில் வேறு பல அரசர்களும் வாழ்ந்திருந்தனர் எனினும், அவர்கள் எல்லாம் அவனுக்கு அடங்கி ஆள்பவரே அன்றித் தனியரசு செலுத்தும் தகுதி யுடைவரல்லர், அவர்களிடத்திலும் வலம்புரிச்சங்குகள் இருந்தன எனினும், அவற்றை முழக்கினால், அவ்வொலி கேட்டு நலங்கிள்ளி சினப்பன் என அஞ்சி அவற்றை முழக்காது, அரண்மனையின் ஒருபால் வறிதே தொங்கவிட் டிருந்தனர் என்று கூறி நலங்கிள்ளியின் ஆற்றலை விளக்கி வியந்தார் புலவர் ஆலத்தூரார்.

இவ்வாறு நலங்கிள்ளியின் படைப் பெருமையினையும், ஆண்மைச் சிறப்பினையும் அகமகிழ்ந்து பாராட்டும் புலவர், அவன் இறந்த பின்னர், இறந்தான் நலங்கிள்ளி எனக் கேட்டுத் தம் அச்சம் நீங்கிய தமிழரசர்கள், இதுகாறும் முழக்காது கிடந்த தம் வலம்புரிகளை முழக்கும் ஒலி கேட்டு, "அந்தோ! இவ்வொலி கேட்டு இறவாது உயிர் வாழவேண்டியுளதே! என்னே கொடுமை!" என்று கூறி வருந்துவாராயினர்:

" தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய,
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர், விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர,
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ
வேந்துபீடழிதத எந்துவேல் தானையொடு
ஆற்றல் என்பதன் தோற்றம் கேள்;இனிக்
கள்ளிபோகிய களரியம் பறந்தலை
முள்ளுடை வியன்காட்டதுவே; நன்றும்
சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன் கொல்! என
இன்னிசைப் பறையொடு வென்றி நுவலத்
தூக்கணங குரீஇத தூஙகு கூடேய்ப்ப
ஒருசிறைக் கொளீஇய திரிவாய் வலம்புரி
ஞாலங் காவலர் கடைத்தலைக்
காலைத தோன்றினும நோகோ யானே." (புறம்: உஉ௫)

ஆலத்தூர் கிழார் பாடியனவாக இரண்டு பாக்கள் குறுந்தொகைக்கண் காணப்படுகின்றன; அவற்றுள் ஒன்று வரைவு நீட்டித்தவழி ஆற்றாத தலைமகள் தன் ஆற்றாமையினைத் தோழிக்குரைக்கும் துறை அமைந்து வந்துளது.

நற்குடிவந்த பெண் ஒருத்தி; பெண்மைக்குரிய குணங்களில் ஒன்றும் குறைவின்றிப் பெற்றவள்; அத்தகையாள் தன் உள்ளம் விரும்பிய நல்லோன் ஒருவனைக் காதலித்துத தம காதல் வாழ்வினைத் தன் உற்றார் உறவினர் எவரும் அறியாவண்ணம் களவில் மேற்கொண்டு வாழ்கிறாள்; களவின்பமே பேரின்பமாய்த் தோன்றுதலினால் அவனும் அக்களவொழுக்கத்தினை மேலும் சில நாள் நுகர விரும்பி வரைந்து கொள்வதில் விரைவு காட்டானாயினன். இதனால் அவர்கள் களவுக் காலத்துக் காதல் வாழ்வு நீளவும், புறத்தார்க்குப் புலனாகவும் வழியாயிற்று; ஊரில் அலர் எழுந்தது; தலைமகள் உயர்குடிப் பிறப்புடையாள்; பிறர் கூறும் பழிச்சொல் அஞ்சும் பண்பினள்; தாயிற் சிறந்தது நாண்; நற்குடிவந்தார்க்கு நாணே நல்லுறுப்பாம் என எண்ணும் இயல்பினள்; ஆதலின், அலர்உரை கேட்க அவள் உள்ளம்

நடுங்கிற்று ; நாணழிய வாழும் வாழ்வும் ஒரு வாழ்வாமா? என எண்ணித் துயருற்றாள் ; நாணழிவு காணப்பொறாது, அந்நாணழிவுக் காரணமாய தன் காதலை மறந்துவிடலாம் எனிலோ, நாணினும் செயிர்தீர்கற்பே சேயிழையார்க்கு சிறந்தது ஆதலின், காதல் வாழ்வை—கற்புநெறியைக் கைவிடவும் இயலவில்லை. நாணும் அழியாமல், கற்பும் கெடாமல் வாழ்வதோ இயலாது. ஒன்று நாணை இழத்தல் வேண்டும், அல்லது கற்பைக்—காதலை—இழத்தல்வேண்டும்; இரண்டும் ஒருங்கே இருப்பது அரிது ; ஒன்று நிற்கும் இடத்தில் மற்றொன்று நிற்பதில்லை :

"காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு" (திருக். கஉ௪எ)

என்பது குறள்.

இவ்வாறு செய்வதறியாது வருந்தும் தன்பால் வந்த தன் உயிர்த்தோழியிடத்தில் தன் துயர்நிலை கூறி வருந்தலாயினள் ; "தோழி! ஊரார் கூறும் பழிச்சொல் அஞ்சி, தலைவனோடு கலந்துறைவதை மறந்து வாழ்வேனாயின், என் காதல் மெலிவுறும் ; பிறர் கூறும் பழிச்சொல் ஒழிக ; என் காதலும் அழிக என எண்ணின், அதனால் பெரும்பயன் இன்றாம் ; அவ்வாழ்வால் மிஞ்சுவது நாண் ஒன்றே, இழந்த என் நலனை முழுதும் பெறுதல் அரிது ; தழை உணவு விரும்பிய யானை முறிக்க முறிந்த கிளை, ஓங்கி உயர்ந்திருந்த தன் பண்டைநிலையினை இழந்துவிட்டதாயினும், கிளையின் நார்ப்பகுதி அறாதிருந்தமையால் அடியோடு முறிந்து நிலத்தில் வீழ்ந்து பாழாகிவிடாமல், மரத்தினின்று தொங்கிக்கொண்டே இருத்தலே போல், தலைவனால் நுகரப்பெற்று அழிந்த என் நலன், அவன் விரைவில் வரைந்துகொள்வன் என்ற நம்பிக்கையால் சிறிது அளவே நிலைபெற்றுளது ; ஆதலின் இந்நிலையில் செய்வதறியாது மயங்குவதல்லது வேறு என் செய்வேன்?" என்று கூறி வருந்தினாள் :

"கௌவை அஞ்சின் காமம் எய்க்கும்;
எள்ளற விடினே உள்ளது நாணே;

பெருஙகளிறு வாங்க முறிந்து நிலம்படாஅ
நாருடை ஒசியலற்றே
கண்டிசின் தோழி! அவர் உண்ட என் நலனே.''
(குறுந்: ககஉ)

இப்பாட்டில் உயர்குடிப் பிறந்து ஒழுக்கத்திற் சிறந்த ஒரு பெண்ணின் உள்ளத் துடிப்பினையும், தன் உள்ளத் துடிப்பை உணர்ந்த அவள் காட்டும் உவமைக் காட்சியினையும், புலவர் ஆலத்தூர் கிழார் எவ்வளவு அழகாகத் தீட்டியுள்ளார் காணுஙகள்.

ஆலத்தூர் கிழார்பால் அரும்பெருங் குணங்கள் பல அமைந்து காணப்படுகின்றன; வறுமையிற் செம்மை; பெருக்கத்திற் பணிவு; சுருக்கத்தில் உயர்வு; பழியஞ்சல் ஆய பண்புகள் அவர்பால் பொருந்தியிருந்தன என்பதை அவர்பாக்களை அறிந்தார் அறிவர்; ஆலத்தூரார் அற முரைக்கும் நல்லாசிரியராவர் என்பதைக் கருவூர் முற்றி யிருந்த கிள்ளிவளவனுக்கு அவர் வழங்கிய நல்லுரையால் நன்கு விளங்கும் மற்றோரிடத்தே, அவர், அக்கிள்ளி வள வனுக்கு உரைத்த அறவுரை, அறிவுடைப் பெருமக்களால் பாராட்டப்பெறும் பெருமை வாய்ந்த தொன்றும்; அவ் வறவுரையினை அறிந்து அதன்வழி ஒழுகி உயர்வீராக!

“ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்,
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கின் கழுவாயும உள என,
நிலம்புடை பெயர்வ தாயினும், ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல் என,
அறம் பாடிற்றே;'' (புறம்: கூச.)

“எந்நன்றி கொன்றார்க்கும உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு''

என்ற குறளுரைக்கு விளக்கம் போல் அமைந்த இவ்வற வுரையின் திண்மை உணர்ந்து மேற்கொள்வோமாக.

## ௪. ஆவூர் கிழார்

ஆவூர் என்ற பெயருடைய ஊர்கள் தமிழ்நாட்டில் பல உள்ளன; சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் ஓர் ஆவூர் உளது; அது மருதவளம் நிறைந்தது; தொண்டைநாட்டில், திருவண்ணுமலேக்கு அணித்தே ஓர் ஆவூர் உளது; அது முல்லேவளம நிறைந்தது; ஆவூர்கிழார், தாம்பாடிய பாட்டில், முல்லே மருதம் ஆகிய இருதிணை இயல்புகளேயும் எடுத்து இயம்பியுள்ளாராதலின், இவர் பிறந்த ஆவூர் எந்நாட்டது என்பதை எளிதில் அறிதற் கில்லேயென்ருலும், இவர் மருதத்திணையினும், முல்லேத் திணையினேயே சிறிது மிகுதியாக விரித்துரைத்துள்ளா ராதலாலும், இவர் மகஞகிய கண்ணஞர், முல்லேயைச் சார்ந்து நிற்கும் திணையாகிய குறிஞ்சித் திணையினேயே பாடியுள்ளாராதலாலும் இவர் ஊர், முல்லேவளம் நிறைந்து, திருவண்ணுமலேக்கு அணித்தே விளங்கும் தொண்டை நாட்டு ஆவூராகவே இருத்தல் கூடும் எனறு கொள்ளுதல் நலமாம்.

ஆவூர்கிழார், வேந்தரும் அஞ்ச வாழ்ந்த வீரன் ஒரு வன் ஊரின் சிறப்பையும், அவன் ஆண்மையின் பெருமை யையும் பாராட்டும் பொருளமைந்த 'வல்லாண்முல்லே' என்ற துறைதழுவிய புறப்பாட்டொன்றைப் பாடியுள் ளாா. அதில், வரகுக்கொல்லேயைச் சூழ அமைந்த கள்ளி வேலியினேயும, அவ்வேலியின் அடியிலே ஆடி மகிழும் அவ் வூர்ச்சிருரகளேயும், வரகு அரியப்பெற்ற கொல்லேயில், அதன் அரிதாள்களில் இரைதேடி வாழும் எலிகளேக்கண் டதும, சிறுவர் தம் ஆடல் மறந்து வில்வளேத்து ஆர வாரிப்பதையும், அவா ஆரவாரம்கேட்ட குறுமுயல்கள் அஞ்சி ஓடும் மனேமுன்றில்களேயும், அவை அவ்வாறு ஓடுங்கால் அவற்றின் கால்பட்டு உருண்டோடும் மட்கலன் களேயும் கொண்ட முல்லேநிலக்காட்சிகளேயும், கரும்பாலே கள் கரும்பாட்டும் ஒலிகேட்டு, அக்கரும்பாலேகளுக்கு அருகே உள்ள நீர்நிலேவாழ் வாளேமீன்கள் துள்ளிப்

பாயும் வளம் நிறைந்த மருதநிலக் காட்சிகளையும் விளங்க உரைத்த ஆலூர்கிழார், அம்முல்லைநில வீரனின் பேராண்மைப் பெருமை யுணர்ந்த மருதநில வேந்தர்கள், அவனால் எப்போது தமக்கு ஊறு நேர்ந்துவிடுமோ என அஞ்சி உறங்குவதொழிந்து வாழ்வர் என்றுகூறி வீரவணக்கமும் செலுத்துவாராயினர் :

"உழுதூர் காளை ஊழ்கோ டன்ன
கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்திப்
புதுவரகு அரிகால் கருப்பை பார்க்கும்
புன்தலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பின்
பெருங் கணக்குறு முயல் கருங்கலன் உடைய
மன்றிற் பாயும் வன்புலத் ததுவே,
கரும்பின் எந்திரம் சிலைப்பின் அயலது
இருஞ்சுவல் வாளை பிறழு மாங்கண்
தண்பணை யாளும் வேந்தர்க்குக்
கண்படை ஈயா வேலோன் ஊரே."       (புறம்: ௩௨௨)

## ரு. ஆவூர்கிழார் மகனார் கண்ணனார்

அருந்தமிழ்ப்புலவர் பலரைப் பெற்றெடுத்த பெருமை மிக்க ஆவூர் இவர் பிறந்த பேரூராம்; இவர் ஆவூரில் வழி வழித் தமிழ் வளர்த்த குடியில் வந்த பெரும்பேறுடையவ ராவர்; இவர் தந்தையார் ஆவூர்கிழார் நல்லிசைப் புலவர் களுள் ஒருவராவர். கண்ணனார் பாடிய பாடல்கள் எத் தனையோ! ஆனால் இன்று, நெடுந்தொகையில் குறிஞ்சித் திணை தழுவிய பாட்டொன்றே அவர் பெயரால் நமக்குக் கிடைத்துளது.

களவுக்காலத்து இரவில், கடத்தற்கரிய கொடுவழி யைக் கடந்துவரும் தலைமகனுக்கு ஏதம் யாதேனும் உண் டாமோ என்ற அச்சத்தால் உறங்காது துயருறும் தலைவி யின் நிலையினை எடுத்துக்கூறி, இந்நிலை நீங்க விரைவில் வரைந்து கொள்வாயாக எனத் தலைமகனுக்குத் தோழி அறிவுரைகூறும பொருளமைந்துளது அச்செய்யுள்.

அதில், தன் பிடியும் பிறயானைகளும் மகிழுமாறு புலியைக்கொன்ற ஆண் யானை, அப்போராட்டத்தில் பெற்ற புண்ணால் துயர்உற்றுத் தன் கையை உயரத்தூக்கிப் பெருமூச்சு விட்டதாக, அக் கை, அருகேயுள்ள வேங்கை யின் கிளைகளை மோத, அக்கிளைகளில் மலர்ந்து மணக்கும் மலர்கள், கொல்லன் துருத்தியினின்றும் தெறித்து எழும் தீப்பொறிகளைப்போல் சிதறி எழுந்து, சிறியபல மின்மினிப் பூச்சிகளைப்போல் கீழே படர்ந்திருக்கும் புதர்மீது பரவி வீழும் குறிஞ்சிநிலக்காட்சியினை நன்கு காட்டியுள்ளார்.

> “கயந்தலை மடப்பிடி இனனேர மாப்பப்
> புலிப்பகை வென்ற புண்கூர் யானை
> கல்லகச் சிலம்பில் கையெடுத்து துயர்ப்பின்
> நல்லிணர் வேங்கை நறுவீ கொல்லன்
> குருகூது மிதியுலைப் பிதிர்விற் பொங்கிச்
> சிறுபன் மின்மினி போலப் பலவுடன்
> மணிநிற இரும்புதல் தாவும்” (அகம். ௨0௨)

## ௬௱. ஆவூர் மூலங்கிழார்

பழந்தமிழ்ப் புலவர் வரிசையில் ஆவூர்கிழார், ஆவூர் மூலங்கிழார், ஐயூர்கிழார், ஐயூர் மூலங்கிழார் என்ற பெயர்கள் காணப்படுகின்றன; ஆவூர் மூலங்கிழார், ஐயூர் மூலங்கிழார் என்பவர் முறையே ஆவூரிலும், ஐயூரிலும் பிறந்து, மூலம் என்ற நாண்மீனாற் பெயர் பெற்றவராவர் என ஒரு சிலரும், ஆவூர் வேறு; ஆவூர் மூலம் வேறு; ஐயூர் வேறு; ஐயூர் மூலம் வேறு; ஆவூர் மூலம், ஐயூர் மூலம் என்பன ஊர்ப் பெயர்களாம்; ஆகவே, இவர்கள் ஆவூர் மூலம், ஐயூர் மூலம் என்ற ஊர்களிற் பிறந்து கிழார் என்ற சிறப்பும் பெற்ற புலவர்களாவர் என வேறு சிலரும் கூறுவர். இதனால் ஆவூர் மூலங்கிழார், எந்நாட்டினர், எவ்வூரினர் என்பதை அறிந்து கூறுதற்கில்லை.

ஆவூர் மூலங்கிழார், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் என்ற இரு பெருவேந்தர்களையும், பாண்டியன் கீரஞ்சாத்தன், மல்லிகிழான் காரியாதி என்ற பெரு வீரர்களையும், சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் என்ற அந்தணர் ஒருவரையும் பாராட்டிப் பாடல்கள் புனைந்துள்ளார். இவையேயன்றி, கையறுநிலை, தானைமறம் போன்ற புறத்துறைப் பாடல்களும், வேறுசில அகத்துறைப் பாடல்களும் அவரால் பாடப்பெற்றுள்ளன.

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் வரலாறும் பண்பும் முன்னர் ஆலத்தூர்கிழார் வரலாறு உரைத்தவழி உரைக்கப்பட்டுள; ஆதலாலும், மீண்டும் கோவூர்கிழார் வரலாறு உரைப்புழி, உரைக்கவேண்டியுளது ஆதலாலும், அவன் வரலாறு அனைத்தினையும் ஈண்டு ஒருமுறை கூற வேண்டுவதின்று. ஆதலின், அவன், ஆவூர் மூலங்கிழார் பால் கொண்டுள்ள தொடர்பினை விளக்கும் வரலாற்றுப் பகுதிகளைமட்டுமே கூறுவோமாக.

நாடாவளத்தனநாடு என்ப; ஆளும் அரசர், தம் ஆட்சிக்குட்பட்ட நாட்டுமக்கள் நல்வாழ்வு வாழவேண்டுவர்; நாட்டார் நல்வாழ்வினராதல் வேண்டின், அந்நாடு நிலத்தாலும், நீராலும் நிறைந்து வளங்கொழிக்கும் வாய்ப்புடைத்தாதல் வேண்டும். சோழநாடு அவ்வளத்தை இயற்கையிலேயே பெற்றிருந்தது; அவ்வளம் மேலும் பெருக வழிசெய்தான் திருமாவளவன். அதனால், அந்நாடு அன்று தொட்டு வளத்திற் சிறந்து, "சோழவளநாடு சோறுடைத்து," என்ற சிறப்புற்றுத் திகழ்வதாயிற்று கிள்ளிவளவன் காலத்தில் சோழநாடு பெருவளம்பெற்றிருந்தது; வளத்தின் அளவு எவவளவு என்பாரக்கு விடையாக, இவ்வளவு பரப்பு நிலம் இவ்வளவு உணவுப் பொருள் தரும் என்று கூறுதல்வேண்டும்; கிள்ளிவளவன் காலத்துச் சோணாட்டு நிலங்கள், பெண்யானையொன்று படுத்தற்குப் போதிய சிறுநிலததில், ஏழு ஆண் யானைகளுக்கு ஓர் ஆண்டு முழுதிற்கும் வேண்டும் பெரும்பொருள் தரும் வளம்பெற்றிருந்தன. இத்தகைய வளங்கொழிக்கும பெருநாட்டினையும், அந்நாடாளும பேறுபெற்ற கிள்ளிவளவனையும் கண்டு மகிழ விரும்பினார் ஆவூர் மூலங்கிழார். சோணாடு புகுந்தார்; அதை, "ஒருபிடி படியும் சீறிடம் எழுகளிறு புரக்கும் நாடு" என வாயார வாழ்த்தினார்; கிள்ளிவளவன் அரசிருக்கையாம் உறையூர் சென்று அவனைக் கண்டார். ஆவூர் மூலங்கிழாரை அரசன் அதுகாறும் பார்த்திலாமையினாலோ, அல்லது, அவர் பெருமையறிந்து அவரைக் காண நாள்பல காத்திருப்பவும் அவர் நெடிதுநாள் கழித்து வந்தார் என்ற உள்ள வெறுப்பாலோ, வந்த புலவரை "தாங்கள் இதுகாறும் எந்நாட்டில் வாழ்ந்தீரோ? அந்நாட்களில் ஒரு நாளிலாவது என்னை நெஞ்சால் நினைத்தாவது பார்த்துளீரோ? "எம் முள்ளீர்? எந் நாட்டீர்?" என்று வினவினான்.

உடனே புலவர் ஆவூர் மூலங்கிழார், "அரசே! நின் நாட்டின் வளத்தையும், நின் ஆற்றலின் பெருமையினையும், அறியாதவனல்லன் நான்; உலகில் சிறந்தது தேவருலகு

என்ப; அத்தேவருலகு சென்று வாழ்மக்கள், தாங்கள் மண்ணுலகில் செய்த நல்வினையின் பயனும் இன்பத்தையே ஆண்டு நுகர்தலல்லது, ஆண்டிருந்தே அறம் செய்தலோ, அவ்வறத்தாலாம் இன்பம் பெறுதலோ இலராதலின், அத் தேவருலகினும், ஈதலும், இரத்தலும் ஆகிய இருபெரும் தொழில்களும நிகழும் இவ்வுலகே சிறந்ததாம்; இவ்வாறு சிறப்புற்ற இவ்வுலகத்திலும், பிறநாடுகளுக்கில்லாச் சிறப் பொன்று நின்நாட்டிற்குளது. நின்நாடு, ஈவோர் இரப்போ ராய இருவரையும் ஒருங்கே கொண்டு சிறப்புற்று விளங்குவ தோடு, ஆற்றல் மிக்க அரசனைக்கொண்ட சிறப்பும் உடை யது; எண்ணிய எண்ணியாங் கெய்தும் திண்மை நின்பால் உண்டு; நீ விரும்பினுல், ஞாயிறு நிலவொளிவீசி மகிழ் வூட்டும்; திங்கள் வெப்புற்றுக் காயும்; நின் அருள் நோககுப் பெற்றவர், பொன்னும் பொருளும் பெற்றுப் பொலிவு பெறுவர்; நின்னுல் சினந்தோர் நாடு தீவாய்ப்பட்டு அழிந் தொழியும். ஆதலின் பரிசிலர் பலரும், நின்பகைவர் நாட்டில் வாழ்வாராயினும், நின்நாட்டையும், நின்னையுமே நினைந்து வாழ்வர் என்ருல், நின்னிழல் பிறந்து, நின்னிழல் வளர்நத என்னைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமோ?" அவன் ஆற்றலும், அவன் நாட்டின்சிறப்பும், தம் புலமையின்பெருமையும் ஒருங்கே தோன்ற விடைகூறிப் பாராட்டினர்:

"வியன் தானை விறல் வேந்தே!
நீ, உடன்று நோக்கும்வாய் எரிதவழ,
நீ, நயந்து நோக்கும்வாய் பொன்பூப்பச்,
செஞ் ஞாயிற்று நிலவு வேண்டினும்,
வெண் திங்களுள் வெயில் வேண்டினும்
வேண்டியது விளைக்கும் ஆற்றலை; ஆகலின்
நின்னிழல் பிறந்து நின்னிழல் வளர்ந்த
எம்மளவு எவனே? மற்றே; இன்னிலைப்
பொலம்பூங் காவின் நன்னாட் டோரும்
செய்வினை மருங்கின் எய்தல் அல்லதை,
உடையோர் ஈதலும், இல்லோர் இரத்தலும்

கடவதன்மையின் கையறவுடைத்து என
ஆண்டுச்செய் நுகர்ச்சி ஈண்டும் கூடலின்,
நின்றோடு உள்ளுவா பரிசிலர்
ஒன்றா தேஎத்தும் நின்னுடைத் தெனவே.''

(புறம்: ௩௮)

புலவர் பாராட்டிய பாடற்பொருள் உணர்ந்த அரசன், அவர் புலமையின் பெருமையினையும, அவரும, அவரொத்த புலவர்களும தன்பால் கொண்டிருக்கும அன்பின் பெருக்கையும் உணாந்து, அவரைத் தன் அவையில் சிலநாள் இருததிச் சிர் பல அளித்து வாழ்ந்திருந்தான்.

வளவன் வாழ்த்த வாழ்ந்திருந்த ஆவூர்மூலங்கிழார், பகைவர் தம கடததற்கரிய அரண்கள பலவற்றையும், அரிய என எண்ணுது சென்று அழித்து, தோறற பகையரசர்களின் தலையில் விளங்கும் பொன்னலாய முடிகளைக் கைக்கொண்டு அழித்து, அப்பொன்னல் கழல்செய்து காலில் புனைந்து பேராண்மை தோன்ற வாழும் வளவன் செயலறிந்து, அவன் உள்ளம் இவ்வாறு மறமே நிலைபெற இருத்தல் அறத்தாறன்று எனக்கொண்டு, அவன் உள்ளம் அன்பு மேறகொண்டு அறவழிச் செல்வதை விரும்பி, அரசனை அணமி, "அரசே! நின்னை இகழ்ந்தோர் எவரும் எழில்பெற விளங்கியதைக் காண்கிலேன்; அவரனைவரும், நின்னல் ஆற்றல் குன்றி அடங்கி அழிந்தே போயினர்; அதைப்போலவே, நின்புகழ் பாடியோரெல்லாம் பொலிவுற்று வாழ்வதைக் காண்கின்றனனே அன்றி, அவருள் நிலையில் தாழ்ந்தார் எவரையும் காண்கிலேன்; இத்துணை ஆற்றல் வாய்ந்த நினக்கு யான் ஒன்று கூற விரும்புகின்றேன்; நின்பெயர், இவ்வுலகில் என்றும் நின்று வாழ வேண்டுமாயின், அதற்கு நீ பெற்றிருக்கும் ஆற்றல் ஒன்றே போதுவதன்று; காட்சிக்கெளியனுய்க் கடுஞ்சொல்லன் அல்லனுய் வாழும் மன்னனையே உலகத்தார் உயர்த்திக் கூறுவர்; ஆதலின், வலியரான் நலிவெய்தி முறைவேண்டி வந்தார்க்கும், வறுமையால் தம் குறைகூறி வந்தார்க்கும், பேரத்தாணிக்கண், அமைச்சர், சான்றோர் உள்ளிட்டா

ரோடு காண்டற்கு எளியனாகி, எவரிடத்தும், எக்காலத்தும் கடுஞ்சொல் கடிந்தும் வாழ்தலை விரும்புகின்றேன்," என்று அறிவுரைகூறி நல்வழிப்படுத்தி வாழ்ந்திருந்தார் :

"நீயே, பிறர்ஓம்புறு மறமன் னெயில்
ஓம்பாது கடந்து அட்டு, அவர்
முடிபுனைந்த பசும் பொன்னின்
அடிபொலியக் கழல் தைஇய
வல்லாளனை, வய வேந்தே!
யாமே,நின் இகழ்பாடுவோர் எருத்தடங்கப்
புகழ்பாடுவோர் பொலிவு தோன்ற
இன்று கண்டாங்குக காண்குவம; என்றும
இன்சொல் எண்பதத்தை ஆகுமதி பெரும!"

(புறம்: ௪௦)

தட்பவெப்பக் காலநிலைகளுக்கேற்ப தங்கள் வாழ் விடங்களை மாற்றி அமைத்து வாழும் வகையறிந்தவராவர் தமிழர்கள்; வேனிற்காலத்தில் வேண்டுமளவு தென்றல் நுழைதற்காம் சாலேகங்கள் அமைந்த வேனிற்பள்ளி களில் வாழ்வர்; குளிர்காலத்தில் வாடை நுழையாவாறு அமைந்த வாயில்கள் கொண்ட கூதிர்ப்பள்ளிகளில் குடி யிருப்பர்; அதைப்போன்றே, தங்கள் ஆண்டுநிறை காலத்தே இருந்து ஓய்வுபெறுவதற்காம் இனிய இடங் களைத் தேர்ந்து வாழும் வகையினையும் அவர்கள் அறிந் திருந்தனர்; சோலைகளிடையே வாழிடம் அமைத்து வாழ்ந்த பண்டையோர் வாழ்க்கையினை வகுத்துக்கூறும் தமிழ்நூல்கள், அவ்வாழ்விடங்களுக்கு இலவந்திகைப் பள்ளி எனப் பெயரிட்டு அழைக்கின்றன. அரசர்கள் அப்பள்ளிகளில் வாழும் காலம் ஆண்டுநிறைந்த முதுமைக் காலமாதலின், அவர்கள் வாழ்நாள் பெரும்பாலும் ஆண்டே முடிந்து போதலும் உண்டு. அவ்வாறு இறந்தார் பெயர்க ளோடு, அந்நிகழ்ச்சியை நினைப்பூட்டி வழங்கினர் தமிழர்; இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளிசேட்சென்னி என்ற பெயரைக் காண்க. அத்தகைய இலவந்திகைப் பள்ளியொன்றில் இறந்து, இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய

நன்மாறன் என்ற பெயர்பெற்ற பாண்டியன் நன்மாறனை நம் ஆவூர்மூலங்கிழாரும் பாடியுள்ளார்.

1575 இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் கடவுள் பால் பேரன்புடையான்போலும்; இவனைப் பாராட்டிய மதுரை மருதன் இளநாகனாரும், நக்கீரனாரும், இவனை ஒரு கணையால் மூவெயில் அழித்த முக்கண்ணனும் சிவனோடும், பனைக்கொடியோனும் பலராமனோடும், கருடக்கொடியோனும் கண்ணனோடும், முருகனோடும் ஒப்புமைகூறிப் பாராட்டியுள்ளனர் நன்மாறன் கடுஞ்சினக்களிறும், கதழ்பரிக் குதிரையும், நெடுங்கொடித் தேரும், மறமசெறி மறவரும் கொண்ட படையுடையவன். பெறுதற்கரிய பேறுகளுள், அறிவன அறிந்த நன்மக்கட்பேற்றினை நன்கு வாய்க்கப்பெற்றவன், "நின்னோரன்ன நின் புதல்வர்" என்றும், "இவர்பெறும் புதல்வர்க் காண்டொறும் நீயும், புகன்ற செல்வமொடு, புகழினிது விளங்கி, நீடு வாழிய" என்றும் புலவர்கள் இவன் புதல்வர்ப்பேற்றினைப் போற்றுவர்.

பாண்டியன் நன்மாறன் இவ்வாறு வீரத்தாற் சிறந்தும், புதல்வராற் பொலிந்தும் விளங்கிய காரணத்தால் செருக்குமிக்கு எவரையும் மதியாது வாழலாயினன்; தன்னைப் பாடிவரும் புலவர்களையும் உடனே பாராட்டிப் பரிசளியானாயினன், இவ்வாறு அவன்பால் சென்று பரிசில் பெறாது மீண்டோர் வடமவண்ணக்கன் பேரிசாத்தனாரும், ஆவூர் மூலங்கிழாருமாவர். இவன்பால் இவ்விழிகுணம் இருப்பக்கண்ட புலவர் பலரும், யாதேனும் ஒருவகையில் இவனுக்கு அறவுரை கூறாது சென்றாரல்லர்.

> "அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
> அதனால், நமரெனக் கோல் கோடாது"
> "பிறர் எனக்குணம் கொல்லாது வாழிய"

என மருதன் இளநாகனாரும்,

> "இரவலர்க்கு அருங்கலம் அருகாது ஈக"

என நக்கீரனாரும் அறிவுரை கூறியிருத்தல் காண்க.

இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் பெருக வாழும் வாழ்வினைக் கேட்டல் அறிந்த ஆவூர் மூலங்கிழார், அவன் பால் சென்று பரிசில்பெற்று மீள எண்ணினர்; அக்காலை அவர் வாழ்விலும் வறுமை தலைதூக்கி நின்றது; அதனால் அவனூர் சென்று அவனைக் கண்டார். அவனோ தன் செல்வ வாழ்வில் செம்மாந்து புலவர் சிறப்பினைப் போற்று ஞயினன். புலவர்க்குச் செவ்வி கிடைத்திலது; செவ்வி பெறுதல் வேண்டிச் சின்னாள் தங்கினர்; செவ்வி பெற்றுத் தம் புலமையின் சிறப்பையும் புலப்படுத்தினர்; நன்மாறன் ஒரொருகால் அவரைச் சிறப்பிக்க எண்ணினன்போல் நடந்துகொண்டானேயன்றிப் பரிசில் நல்கினனல்லன். அவன் இகழ்ச்சி புலவர் பொறுமையை அழித்தது; உள் ளம் வெம்பினர்; வெதும்பிய அவர் உள்ளத்தினின்றும் வெளிப்போந்த சொற்கள், அவர் மனத்துயரைப் படம் பிடித்துக் காட்டின.

“அரசே! தன்னால் கொடுத்தற்கு இயலும் பொருள் களை இயலும் எனக் கூறிக் கொடுத்தலும், தன்னால் கொடுக்க இயலாததொன்றை இயலாது என முதலிலேயே கூறி மறுத்துவிடலும் நல்லோர் மேற்கொள்ளும் நற்செயல் களாம்; தன்னால் இயலாததனை இயலும் எனக் கூறி ஏமாற் றலும், இயல்வதனை இயலாதெனக் கூறி மறைத்தலும் இரப்போர்க்குத் துயர் தருவதோடு, ஈவோர்க்கும் இகழ்ச்சி தரும். யான் இதுகாறும் எத்தனையோ வள்ளல்களை வாழ்த்தி வந்துளேன்; இத்தகைய இழிசெயலை யான் இன்றுவரை கண்டதில்லை; அதை நின்பால் இன்று கண் டேன்; அதனால் என் உளம் மிக வருந்துகின்றது; அவ் வருத்தத்தால் நினக்கோ, அன்றி நின் மக்கட்கோ யாதேனும் குறை நேர்ந்துவிடுமோ என்று அஞ்சுகின் றேன்; அவ்வாறு ஒன்றும் நிகழாது நின்மக்கள் நோயின்றி வாழ்வாராக; நீயும் நெடிதுநாள் வாழ்வாயாக. வீசும் காற்று உட்புகாவண்ணம் தடுத்து நிறுத்தும் சுவரல்லது மேற்கூரை பெறாத என் வீட்டில், நாண் அல்லது, வேறு நல்ல அணிகலன் எதுவும் பெறாத, கற்புடைய என்

மனைவியை நினைந்து, வெயில், பனி, மழை இவற்றால் இடைவழியில் உண்டாம் இடையூற்றினை எண்ணாது செல்கின்றேன்."

"ஒல்லுவது ஒல்லும் என்றலும், யாவர்க்கும்
ஒல்லாது இல்லென மறுத்தலும் இரண்டும்
ஆள்வினை மருங்கிற் கேண்மைப் பாலே;
ஒல்லாது ஒல்லும் என்றலும், ஒல்லுவது
இல்லென மறுத்தலும் இரண்டும் வல்லே
இரப்போர் வாட்டல்; அன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயில் அத்தை;
அனைத்தா கியாஇனி; இதுவே எனைத்தும்
சேய்த்துக் காணாது கண்டனம்; அதனால்,
நோயிலராக நின்புதல்வர். யானும்
வெயிலென முனியேன்; பனியென மடியேன்;
கல்குயின் றன்ன என் நல்கூர் வளிமறை
நாணல தில்லாக் கற்பின், வாணுதல்,
மெல்லியற் குறுமகள் உள்ளிச்
செல்வல் அத்தை சிறக்கநின் நாளே." (புறம்: ககூ)

ஆவூர் மூலங்கிழார் பாராட்டைப்பெற்ற மற்றொரு பாண்டியன், பாண்டியன்கீரஞ்சாத்தன் என்பவனாவன். பேரரசர் வழிவராது, அவர் ஆட்சியில் அங்கம்பெறும் பிறரும், அப்பேரரசர் பெயர்களை மேற்கொள்வது வழக்காறும். இங்குக் கூறப்பெற்ற இவன், அவ்வாறு வந்த பாண்டியனே ஆவன்; கீரன், சாத்தன் என்பன அக்கால மக்கள் பயில மேற்கொள்ளும் மக்கட்பெயர்களாம்; கீரஞ்சாத்தன் என்ற தொடர், கீரன் மகன் சாத்தன் என்று பொருள்படும். ஆகவே, இவன் பெயரால் அறியப்படும் இவன் வரலாறு, இவன் பாண்டிய அரசிற்குக் கீழ்ப்பட்ட ஒரு குறுநில மன்னனாவன்; கீரன் என்பானின் மகன்; சாத்தன் என்னும் இயற்பெயருடையான் என்பதாம்.

ஆவூர் மூலங்கிழார், பாண்டியன் கீரஞ்சாத்தன் வாழ் பேரூர் சென்று அவன் வாழ்மனையினைக் கண்டார்; ஆங்குக்

கட்டுத் தறிகளில் கட்டப்பெற்றுள்ள அவன் யானைகள், மதம் மிக்கு, கட்டுண்டிருப்பதை வெறுத்துப் பெருமூச்சு விட்டு அசைந்தாடுவதையும், அவன் குதிரைக் கொட்டிலில் வாழ் குதிரைகள், ஆங்கு அடைபட்டிருப்பது பொறாது கனைத்துப் பெருங்குரல் எழுப்புவதையும் கண்டு அவன் படைப் பெருமையினை வியந்து நின்றார்; பின்னர் அவன் மனையடைந்து, புதுமணல் பரப்பி அழகு செய்யப்பெற்ற முன்றிலைக்கண்டு மகிழ்ந்தார்; அம்மகிழ்ச்சியோடு அவன் மனையுட் புகுந்தார்; ஆங்கு, "பசியில்லை; இப்போது உணவு வேண்டாம்," என்று உரைபபாரையும் விடாளுய், "என்னோடமர்ந்து உண்ணத்தான் வேண்டும்; என்மேல் ஆணை" என்று கூறி, அவரை உண்பித்து மகிழும் சாத்தனைக் கண்டார். இரப்பார்க் கெளியனும் அவன் பெருமையை வாழ்த்தினர்; இவ்வாறு இரப்பார்க்கு இனியனுகிய இவன் போர்க்களம புகினும் இரக்க உள்ளத்தால், எதிரிகளை அழித்தல் ஒழிந்து அடங்கி மீள்வனே என அஞ்சினர்; அவ்வெண்ணத்தால் அறிவு கலங்கி அமர்ந்திருந்த காலை, சிலர் ஓடிவந்து, "நின்வீரர், போர்க்களம் நோக்கிப் போங்கால் கூறிய வஞ்சினம் மறந்து, பகைவர் படைக்குப் புறங்காட்டிவிட்டனர்" என்று சாத்தன்பால் கூறினர்; அவர் கூறியன கேட்ட சாத்தன், சரேலெனப் பாய்ந்து, போர்க்களம் புகுந்து, புறங்காட்டி ஓடிவரும் தன் படை வீரரைத் தடுத்து நிறுத்தி, அப்படைக்குத் தானே தலைமை தாங்கிச்சென்று, கடும்போரிட்டுக் களம் வென்றான். கீரஞ்சாத்தன் சிறிது நாழிகைக்கு முன்னர்க் காட்டிய அன்புள்ளமும், இப்போது காட்டிய மறவுள்ளமும், ஆலூர் மூலங்கிழார்க்குப் பெருமகிழ்ச்சி அளித்தன. தம் மகிழ்ச்சியை ஒரு பாட்டின்வழிப் புலப்படுத்தினர்:

"கந்துமுனிந்து உயிர்க்கும் யானையொடு, பணைமுனிந்து
காலியற்புரவி ஆலும் ஆங்கண்,
மணல்மலி முற்றம புக்க சான்றோர்
உண்ணுராயினும், தன்னொடு சூளுற்று
உண்மென இரக்கும் பெரும்பெயர்ச சாத்தன்,
ஈண்டோ இன்சாயலனே; வேண்டார்

எறிபடை மயங்கிய வெருவரு ஞாட்பில்
கள்ளுடைக் கலத்தர் உள்ளூர்க் கூறிய
நெடுமொழி மறந்த சிறுபேராளர்
அஞ்சி நீங்கும் காலை
ஏம மாகத் தாம் முந்துறுமே." (புறம்: கஎஅ.)

காரி என்ற பெயர் தமிழ்நூல்களில் பல்வேறிடங்களில், பல்வேறு தொடர்புகளில் ஆளப்பட்டுள்ளது; காரியாறு என ஓர் ஆற்றிற்கும், காரி நாடு என ஒரு நாட்டிற்கும், காரிக்குதிரை என ஒரு குதிரைக்கும், மலையமான் திரு முடிக்காரி என ஒரு வள்ளலுக்கும், காரி கிழார் என ஒரு புலவர்க்கும் பெயராக வந்துளது. இத் துணைச் சிறப்பு வாய்ந்த காரி என்ற சொல்லைத் தன் பெயரின் ஒரு பகுதியாகக்கொண்ட ஒருவன், வீரனும், கொடையாளியுமாய் மல்லி என்ற ஊரில் வாழ்ந்திருந் தான். அவன் முழுப்பெயர், மல்லிகிழான் காரியாதி என்பது. அவனைப் பாராட்டிய பாடலில் குடநாடு குறிப் பிடப்பட்டிருப்பது கொண்டு, அவனுக்குரிய நாடு குடநாடு என்பர் சிலர்; காரியாதிக்குரிய மல்லிநாடு, இப்போதுள்ள சீவில்லிபுத்தூரைச் சூழ உள்ள நாடாம்; சீவில்லிபுத்தூர்க் கோயிற் கல்வெட்டுக்கள், சீவில்லிபுத்தூரை, மல்லி நாட்டுச் சீவில்லிபுத்தூர் என்றே குறிப்பிடுகின்றன எனி னும், மல்லிநாட்டுப்புத்தூரே, மல்லிபுத்தூர் எனவும், பிற் காலத்தே வில்லிபுத்தூர் எனவும் மருவியது என்று கூறு வாரும் உளர்.

காரியாதிக்குரிய மல்லிநாடு சிறிய பல அரண்களை நெருங்கக் கொண்டிருப்பது ஆதலின், அந்நாட்டுள், அவ னுக்குவேண்டியோரும், போரின்றி அமைதி நிலவும் காலத்திலேயே நுழைதல் இயலும்; போர்க்காலத்திலோ, எங்கும் திரியும் திங்களும் அந்நாட்டுள் நுழைதல் இயலாது; அத்துணைச் சிறந்த காவலமைந்தது; அந் நாட்டுத் தலைவனாகிய காரியாதி, குடநாட்டு மறவர் கொன்று கொணர்ந்த எய்ப்பன்றியின் கறிவிரவிச் செய்த வெண்சோற்றினை விடியற்காலையில், பனைபோலையால்

முடைந்து செய்யப்பெற்ற உண்கலத்தில் இட்டு வருவார் அனைவர்க்கும் வழங்கி மகிழ்விப்பன்; காரியாதியின் இக் கொடைச் சிறப்பினைக் கண்டு களித்த ஆலூர் மூலங்கிழார், இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைப்போன்ற பேரரசர்களின் அரண்மனை வாயிலில், பலநாள் பாடி நின்று, அவர்களைக் காணப்பெறாமல் கண்ணொளியும் கெட வருந்திக் காத்திருந்து, இறுதியில், 'இவனோர் புலவன்; இவனுக்களிக்காது போயின் பழிப்பன்' என அஞ்சி அளித்த யானைப் பரிசிலைப்பெற்ற நிகழ்ச்சியை நினைந்து கொண்டார்; உள்ளன்புடன் உவந்தீயும் காரியாதியின் கொடைய பொருளாம் இச்சோற்றின் முன், பன்னாள் பாடிப்பெற்ற அவ் யானைப் பரிசில் சிறிதும் ஒவ்வாமையினை உணர்ந்தார்; உடனே, காரியாதியின் கொடைச்சிறப்புத் தோன்ற ஒரு பாடல்பாடி மகிழ்ந்தார்:

" ஒளிறுவாள் மன்னா ஒணசுடர் நெடுநகர்
வெளிறுகண் போகப் பன்னாள் திரங்கிப்
பாடிப்பெற்ற பொன்னணி யானை,

பெரும்பெயராதி பிணங்கரில் குடநாட்டு
எயினர் தந்த எய்ம்மான எறிதசைப்
பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் அமலை
வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
இரும் பனங்குடையில் மிசையும்
பெரும்புலர் வைகறைச சீர்சாலாதே." (புறம்: ௧௭௭)

பேரரசர்களையும், குறுநிலத்தவர்களையும் பாராட்டிப் பழகிய ஆலூர் மூலங்கிழார், அந்தணர் குலத்துவந்தார் ஒருவரையும் பாராட்டியுள்ளார். சோழநாட்டில், முடிகொண்டானுற்றங்கரையில் உள்ள பூஞ்சாற்றூர் என்ற ஊரில் கௌணியப் பார்ப்பனர் குடியில், விண்ணந்தாயன் என்ற அந்தணர் ஒருவர் இருந்தார்; அவர் முன்னோர், வேதியர்க்கழகு வேதமோதுதல் என்ற கொள்கையினராய், வேதநூற் பொருளுணர்ந்து, அப்பொருளைப் புறச்சமயத் தாரும் ஏற்கும் வகை எடுத்தியம்பவல்ல அறிவுத்தெளிவின

ராவர். அவர் வழிவந்த விண்ணந்தாயனும், தன் குல வொழுக்கத்திற்கு மாறுதலின்றி, தன் மனைவிமார் ஏவல் செய்ய, வேதநூல் முறைப்படி வேள்வி பல செய்து, அவ் வேள்வி முடிவில், வந்திருந்தார் அனைவர்க்கும் விருந்தளித் துப் போற்றினன். ஆவூர் மூலங்கிழார், அந்தணன் சிறப்பும், அவன் ஆற்றும வேள்வியின் பெருமையும் உணர்ந்தவராதலின், அவ்வேள்வி காணச்சென்று, உட னிருந்து கண்டு களித்ததோடு அவனால் பெரிதும் சிறப்புச் செய்யப்பெற்ருர்; உண்பதற்கும், தின்பதற்கும் ஆம் பல்வேறு வகைப்பொருள் பல பெற்றதோடு, ஊர்ந்து செல்வதற்காம் ஊர்திகள் பலவும் பெற்றுக்கொண்டு தம் ஊர் அடைந்து மகிழ்ந்துவாழ்ந்தார்.

அந்தணன் முன்னேர் பெருமையும், அவன் செய்த வேள்வியின் சிறப்பும், அவன் அளித்த கொடையின் பெருமையும் தோன்றி விளங்கப் பாடிப் புகழ்ந்த புலவர், அதில் தம் ஊர், காவிரிபாய் நாடாம் என்றும் கூறித் தம் வரலாறு பற்றியும் சிறிது உணர்த்தியுள்ளார்.

> "பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும
> தண்புனற் படப்பை எமமூ ராங்கண்
> உண்டும, தின்றும், ஊர்ந்தும ஆடுகம்." (புறம்: கசுசு)

தாமே போருக்குச் செல்லார்; வலியவந்த போரை விடார்; போர்க்களம் புகுந்தவிடத்தும், வந்த பகைவர் தம்மொத்த பெரு வீரராவர் எனக் கண்ட பிறகே அவ ரோடு போரிடுவர்; தம்மினும் ஆற்றல் குறைந்தார் மாட்டுப் போரிடுவதையும, தோற்றுப் புறங்காட்டி ஓடு வாரை, மேலும் ஓட ஓட விரட்டிச்சென்று வெற்றி கொள்வதையும் வெறுப்பர்; ஆற்றல் குறைந்து அழிந் தோடும் பகைவர்மீது படையெடாமையினைப் பேராண்மை யெனப் பாராட்டுவர்; அஞ்சிய பகைமீது அம்பேவுதலைப் பேடிச்செயல் எனப் பழிப்பர். பழந்தமிழரிடையே காணப் படும் இப்போர்ப் பண்புகளை, வீரன் ஒருவனைப் பாராட்டு வார்போல் எடுத்துக்காட்டியுள்ளார் ஆவூர் மூலங்கிழார்.

"எங்கள் வீரன், உங்கள் அரசன் ஏறிவரும் யானையைக் கொல்ல வேலெடுப்பனே அன்றிப் பிறர்மீது ஏவ வேலேந் தான்; பகைத்துப் படையெடார்மீது படையெடுத்தல் எங்கள் வீரன் பண்பன்று", என்று கூறி அன்றைய தமிழ கத்தின் அறவழி இயன்ற போர்நெறியினைப் போற்றி யுள்ளமை காண்க:

> "எறியார் எறிதல் யாவணது?
> வெந்துர யானைககலலது
> எந்துவன் போலான் தன் இலங்கிலை வேலே"
>
> (புறம்: ௩0௧)

பெயர் அறியாப் புரவலன் ஒருவன், தன் மனை நோக்கி வருவார்க்கு வாரிவழங்கும் வண்மையுடையவன்; அவனை அறிந்தவர் ஆவூர் மூலங்கிழார்; அவன் வாழ்ந்த காலத்தில், அவன் மனைநோக்கிச் சென்றவர், அவன் மனையை அடைதற்கு முன்பே, அவன் மனைமுன்றிலில் நிற்கும் யானைவிடும் பெருமூச்சின் ஒலிபோல் கேட்கும், அவன் வீட்டினுள் நெய்யுலையில் கறி பொரித்தலால் எழும் ஒலியைக்கேட்டு மகிழ்வர்; அவன் மனை முன்றிலில் கட்டப் பெற்ற குறடு, ஆங்கு உண்ண வருவார் ஏறி ஏறிச் சென்றமையினாலேயே முறிந்துகிடக்கும் காட்சியினைக் கண்டும் மகிழ்வர். அத்தகைய பெரு வள்ளல் இறந்து விட்டான்; அதனால், அவன் மனை நோக்கிச் செல்வார் இலராயினர்; இந்நிலையில் அவன் மனையினைக் காணும் நிலை வந்தது. புலவர் ஆவூர் மூலங்கிழார்க்கு அப்போதைய அவன் மனை, நீரற்ற ஆற்றில் கொன்னே வீழ்ந்துகிடக்கும் ஓடத்தைப்போலவும், கணவனை இழந்தமையால், அணி கலன்கள் இன்றி, அழகு குன்றிய கைம்பெண்களைப் போலவும் காட்சி அளித்துப் புலவர் கண்களைக் குளமாக்கி விட்டது:

> "அஃதோ! எந்தை அடையாப் பேரில்!
> வண்டுபடு நறவின் தண்டா மண்டையொடு
> வரையாப் பெருஞ்சோற்று முரிவாய் முற்றம்
> வெற்று யாற்று அம்பியின் எற்று, அற்றக்

*கண்டனென் மன்ற! சோர்க என் கண்ணே!*
..............................................
வென்வேல் விடலை இன்மையின், புலம்பிக்
கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉப் போலப்
புல்லென் றனையால் பல்லணி இழந்தே.” (புறம்: உகக)

ஆலூர் மூலங்கிழார் பாடிய அகத்துறைப் பாடல்கள் மூன்று. களவொழுக்க இன்பம் வேட்டு வரையாது வந்தொழுகும் தலைமகனைக் களவொழுக்கத்தால் தலைவிக்குண்டாம துயர் கூறி, விரைவில் வரைந்து கொள்ளுமாறு தோழி வேண்டும துறையமைந்த பாடல் ஒன்று; தலைமகனைப் பிரிந்துறையும் தலைமகள், வேனிற்கால வரவறிந்து வாடியுரைக்கும் துறைதழுவிய பாடல் மற்றொன்று; நாடுகாவற் பொருட்டுப் பிரிந்து சென்ற தலைமகன், தன் தொழில் முடிந்த அளவில் தலைவியை நினைந்து வருந்தும் துறையமைய வந்த பாடல் மூன்றுவது. இவற்றுள் ஒரு செய்யுளில், குதிரைத்தலையில் அணிபெறச் சூட்டிய கவரிமயிரைப்போல் கதிர்களைவிட்டு வளர்ந்து நிற்கும் கந்தசாலி நெற்பயிரைத் தங்கள் வயது முதிர்ந்த பசு உண்டுவிடுமோ என அஞ்சிய உழவர், அப்பசுவிற்குக் கரும்பை உணவாக அளித்து, அருகே உள்ள காஞ்சி மரத்தில் கட்டிவைப்பர் என்று கூறித் தமிழகத்தின் வளம் விளங்கக் கூறிய நயம் பாராட்டத்தக்கதாம்:

“முரசுடைச செல்வர் புரவிச சூட்டு
மூட்டுறு கவரி தூக்கி யன்ன
செழுமசெய் நெல்லின சேயரிப் புனிற்றுக்கதிர்
மூதா தின்றல் அஞ்சிக், காவலர்
பாக லாய்கொடிப் பகன்றையொடு பரீஇக்
காஞ்சியின அகத்துக் கரும்பு அருத்தியாக்கும்
தீமபுனல் ஊர”  (அகம்: கருசு)

இதுகாறும் கண்ட அவர் பாக்களால், ஆலூர் மூலங்கிழார், வறுமை வாழ்வு வாழ்ந்தவர்; நாளும், கற்பும்நிறை

நல்லாளை இல்லாளாகப் பெற்றவர்; உண்டும், தின்றும், ஊர்ந்தும் வாழும் பெருமிதவாழ்வு வாழும் விருப்பினர்; அவ்வாழ்வுவேண்டி, விரும்பாது அளிப்பார் அளிக்கும் பொருளையும் விரும்பும் உள்ளத்தவரல்லர்; அத்தகையார் அளிக்கும் பொருளை விரும்பாமையோடு, அவர்க்கு, அவர் தவற்றினை எடுத்துக்காட்டி இடித்துரைக்கும் இயல்பினர்; வேள்விபோற்றலும், தேவருலக வாழ்வு வாழ்த்தலும் ஆகிய வைதீக உணர்வுடையவர் என்பன அவர் வரலாற்றில் காணப்பெறும் பண்புகளாம் என்பது அறிய முடிகின்றது.

# எ. ஆவூர்மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார்

இவர், பேரரசர்கள், குறுநிலத்தலைவர்கள், அந்தணர் முதலாய பெருமக்களைப் பாடிப் புகழ்பெற்ற ஆவூர் மூலங்கிழாரின் அரிய மகனாவர். பெருந்தலைச் சாத்தனார் என்ற பெயருடையவர்; இவர் பெயர்க்கு முன்வரும் பெருந்தலை என்ற அடை, இவர்க்கு உறுப்பானன்றி, அறிவுப்பெருக்கங் கருதிக் கொடுக்கப்பட்டுள்ளது என்ப; அகநானூற்றில் வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது என்ற துறை தழுவிவந்த பாடல் ஒன்றே இவர்பெயரால் வந்துளது. இப்பாட்டைப் பாடியோர் பெயராக, ஆவூர் கிழார் மகன் பெருஞ்சாத்தன் என்பது சில ஏடுகளில் காணப்படுகிறது; ஆவூர்கிழார் மகன்பெயர் கண்ணனார் என அறியப்படுதலால் அப்பாடம் பொருந்தாது என்ப.

தலைவன் குறித்துச் சென்ற பருவம் வந்துற்றமை உணர்ந்த தலைவியின் உள்ளத்தில் தலைவனைப்பற்றிய எண்ணமே தலைதூக்கி நின்றதாகலின், அவள் ஈண்டிருப்பினும் ஆண்டுள்ளாள் போலாயினள்; அதனால், ஆண்டு, அவன் தேரில் குதிரைகளைப் பூட்டுவதும், அக்குதிரைகள் கொல்லன் உலையினின்றும் எழும் ஒலியேபோல் பெருமூச்சுவிட்டுக் காற்றுப்போல் கடுகநடப்பதும், அதனால், அவற்றின் வாயில் வெண்ணுரை வெளியாவதும், அவை ஓடுமவேகத்தால், அந்நுரை உள்ளிருக்கும் தலைவன் மார்பில் தெறித்து வீழ்வதும், வழியில் மரையா முதலாயின தேரின் விரைவஞ்சி ஓடுவதும் ஆய ஆண்டு நிகழ் காட்சிகள் எல்லாம் அவள் கண்முன் நிற்பவாயின; அவள் அரிசியைப் பதமாக உலர்த்தி உரலில் இட்டு அரைக்குங்கால் எழும் ஓசை, அவன் தேராழி பெருமணலில் பதிந்து ஓடுங்கால் எழும் ஒலியினை நினைப்பூட்டுவதாயிற்று. ஆண்டிருக்கும் அவனும், அவள் நம்செயல்களையெல்லாம் அகக்கண்ணால் கண்டுகொண்டே நிற்பள்; மேலும் இரவும் வந்துவிட்டது; ஆகவே, பாக! தேரை விரைந்து ஓட்டு

வாயாக எனக்கூறி, ஆண்டிருப்பினும் ஈண்டுள்ளான் போன்றே எண்ணலாயினன்; தலைவன், தலைவி ஆகியோரின் இவ்விருபெரும் நிலைகளையும நன்கு எடுத்துக்காட்டிக், காதல் இருவர் கருத்து ஒருமித்து வாழும் அன்பு வாழ்க் கையின் இயல்பினை அழகாக விளக்கிய புலவர், ஆவூர் மூலங்கிழார் மகனார், பெருந்தலைச் சாத்தனாரின் அறிவும், பெருமையும் அறிந்து பாராட்டற் குரியதன்றோ?

"செல்க பாக! எல்லின்று பொழுதே!

ஐதுணங்கு வல்சி பெய்து முறுக்குறுத்த
திரிமரக் குரலிசை கடுப்ப வரிமணல்
அலங்குகதிர்த் திகிரி ஆழி போழ
வருகவெனல் தோழி! நம இன்னுயிர்த்துணை எனச்
சில்கோல் எல்வளை யொடுக்கிப் பல்கால்
அருங்கடி வியனகர் நோக்கி
வருந்துமால்; அளியள்; திருந்திழை தானே."

(அகம்: ௨௨௪)

# அ. இடைக்குன்றூர் கிழார்

இடைக்குன்றூர் கிழார், இடைக்குன்றூர் என்ற ஊரினர்; தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாராட்டியவர்; இவையல்லது, இவர் வரலாறாக வேறு எதையும அறிந்துகொள்வதற்கில்லை. இவர் நெடுஞ்செழியனின் இளமைக் கோலத்தைக் கண்டு பாராட்டியவராதலின், இவர் அவன் தலைநகராம் மதுரைக்கு அருகேயுள்ள ஊரினராவர் என்று கொள்ளலாம்; கழிகளுக்கு இடைப்பட்ட நாடு, இடைக்கழி நாடு என அழைக்கப் பெறுதல்போல், குன்றுகளுக் கிடைப்பட்ட ஊர், இடைக் குன்றூர் என அழைக்கபபெறும் என்று கொண்டால், பாண்டிநாட்டில் குன்றுகள நிறைந்த பழனிமலைத் தொடரைச் சார்ந்தோ, அல்லது திருப்பரங் குன்றுகளைச் சார்ந்தோ இவர் ஊர் அமைந்திருத்தல் கூடும் என்றும் கொள்ளலாம். இவரால் பாடப்பெற்றோன், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஒருவனே.

சஙககாலப பாண்டிய மனனாகளுள, தலையாலங கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தலைசிறந்தோனவன்; இவனைபபாடிய புலவர் பலராவர்; பத்துப்பாட்டுள் நெடுநல்வாடையும், மதுரைக்காஞ்சியும் இவன் புகழ் பாடவந்த பாடல்களாம்; இவ்வாறு இவன் புலவர் பலர் பாராட்டைப் பெறுதற்குக் காரணமாயது, அவ்ன் தலையாலங்கானத்தே பெற்ற பெருவெற்றியே யாகும்; நெடுஞ்செழியன், அரியணை ஏறுங்கால் மிகமிக இளையன்; பொதியமலைப் பல்வளமும், கொற்கைத்துறை முத்தும் பெற்று, பாண்டிய நாடு பெருஞ் செல்வத்தால் செழிப்புற்றுத் திகழ்ந்தது; இதைக் கண்ணுற்றனர் அவன் பகையரசர்கள்; யானைக்கண்சேய் மாந்தரம் சேரலிரும்பொறையும், ஒரு சோழனும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகியோரும் அவன் பகைவராவர். இவர்கள் எழுவரும், "நெடுஞ்செழியன் கடிதிளையன்; அவனை வென்று பெறும்பொருளோ மிகப்

பல” என்று எண்ணி, அனைவரும்கூடி, அவனை அவனூர் வாயிலிடத்திலேயே எதிர்த்தனர்; இளைஞனே எனினும், ஈடில்லாத் திறனுடையனாதலின், அவர் செயல்கண்டு நாணி, “அவர்களை அழித்து, அவர்கள் முரசொடு, அவர்களையும் கைப்பற்றேனாயின், கொடுங்கோலன் எங்கள் அரசன் எனக் குடிகள் என்னைப் பழிதூற்றுவாராக! புலவர்கள் என் நாட்டைப் பாடாதொழிக! இரப்போர்க்கு ஈயலாகா இழிநிலையினை நானும் எய்துவேனாக!” என்று வஞ்சினம் கூறித், தன் வாயில்வந்து நின்ற அவர்களை எதிர்த்துப் போரிட்டான்; அவன் போர்வன்மைக்காற்றாது, அரசர்கள் தோற்றோடலாயினர்; தோற்றோடும் அவர்களைத் துரத்திச் சென்று, தஞ்சைமாவட்டத்தில், தலையாலங்கானம் என்னும் இடத்தில் மடக்கிப் போரிட்டு வென்றான். எதிர்த்த ஏழரசர்களையும் இளமைக்காலத்திலேயே வென்ற சிறப்பறிந்து, அவ் வெற்றிச்செயலை அவன் பெயரோடு இணைத்து வழங்கினர்; தன் நாட்டுள் புகுந்து நலிவுசெய்ய முயன்ற பகைவர்களைப் பாழ்செய்து வென்ற நெடுஞ்செழியன், பின்னர்ப் பகைவர் நாடுகளுள் தான் புகுந்து போரிடலாயினன்; ஒருமுறை கொங்குநாடு நோக்கிச் சென்று, வழியிற்கிடந்த நாடு பலவற்றையும் கைக்கொண்டு இறுதியில் கொங்கரையும் ஓட்டி வெற்றிபெற்றான்; இவ் வெற்றி குறித்து அவன் கூடல்நகரில் விழாவும் கொண்டாடினர்; கொங்கரொடு நடத்திய இப்போரில், பாண்டியர் படைத்தலைவனாகிய அதிகன் என்பான் இறந்தான்; பகைவர்படைத்தலைவன் பட்டான் என்று கேட்டுக் கொங்கர்கள் ஆரவாரமும் செய்தனர்; மற்றொருமுறை செழியன் சேரநாடு சென்று, செல்வததாற் சிறந்த அவன் முசிறித் துறையை முற்றிச் சேரன் யானைப்படைகளை அழித்து வென்று மீண்டான்; இவ்வாறு சேயபல நாடுகளையும் வெற்றிகொண்ட செழியன், தன் நாட்டின் அணித்தே, நீடூர் என்னும் ஊரில் அரசிருந்த எவ்வி என்பானை வென்று அவனுக்குரிய மிழலைக்கூற்றத்தையும், வேளிர்க்குரிய முத்தூர்க்கூற்றத்தையும் தன் ஆட்சிக்குட்படுத்திக்கொண்டான்.

நெடுஞ்செழியன், தன் பாசறையில் போர்வீரர்களோடு வாழும் பாசறைவாழ்க்கை வியந்து போற்றற்குரியதாம். பகைவர் யானைப்படைகளை, அழித்த போரில் நெடுஞ்செழியன் வீரர்களில் பலர் வாட்புண் பெற்றுவிட்டனர்; இதை அறிந்தான் அரசன்; அறிந்த நேரம், இரவின் நடுயாமம்; குளிர்ந்த வாடைக்காற்று வீசிக்கொண்டிருக்கும் குளிர்காலம்; மழைத்துளிகள் மாறாது வீழ்ந்துகொண்டே இருக்கும் மழைக்காலம்; எனினும், காலத்தின் கொடுமையினைக் கருதினானல்லன்; புண்பட்ட வீரரைக் கண்டு ஆறுதல் உரைத்து அன்புகாட்டி வரவேண்டும் என்ற ஆசை, காலத்தின் கொடுமையினை மறக்கச் செய்து விட்டது; வாடை வீசுவதால், தெற்கே சாய்ந்து விளங்கும் அழல்களைக்கொண்ட பெரிய பாண்டில் விளக்குகளை ஏந்திய பலர் முன்னே நடந்தனர்; தலையில் வேப்பந்தாரும், கையில் நெடிய வேலுமகொண்ட படைத்தலைவன் முன்வர, மழைத்துளி மன்னன்மீது வீழாமை குறித்து எடுத்த வெண்கொற்றக் குடையேந்தியோன் பின்வர, நெடுஞ்செழியன், காற்றால் அலைப்புண்டு கீழேவிழும் மேலாடையினை இடக்கையால் பற்றிக்கொண்டு, தோளில் தொங்கும் வாள்மீது வைத்த வலக்கையனாய், வழியில் வரிசையாக நிற்கும் குதிரைகள் உடல் சிலிர்த்து உதறுவதால், அவற்றின் உடல்மேல் தங்கிய மழைநீர் தன்மேல் சிதறச் சேறு நிறைந்த தெருவில் நடந்துசென்று, படைத்தலைவன் புண் பெற்ற வீரர்களையும், அவர்கள் பெற்ற புண்களின் நிலையினையும் காட்டிக்கொண்டே செல்ல, அவ் வீரர்களுக்கு அன்புரை வழங்கி வரலாயினன்; இவ்வாறு பேயும் உறங்கும் நடுயாமத்திலும் உறக்கம் ஒழித்துப் போர்மேல்சென்ற எண்ணமும், சூழ்ச்சியும் உடையனாய் வாழும் நெடுஞ்செழியன் பாசறை வாழ்க்கையினை ஆசிரியர் நக்கீரனார், 'நெடுநல்வாடை'யில் நன்கு விளக்கியுள்ளார்.

இவ்வாறு சிறப்புற்று விளங்கிய நெடுஞ்செழியன் புகழ் நின்று விளங்குதற்குக் காரணமாயது, அவன் கன்னிப்போராம் தலையாலங்கானத்துப் போரேயாதலின்,

அப்போர் மேற்கொண்ட காலத்திய அவன் இளமைச் செவ்வியினையே புலவர் இடைக்குன்றூர்கிழார் தம் பாடற் பொருளாக மேற்கொண்டார்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போர்க்களம் நோக்கிப் போகப் புறப் பட்டுவிட்டான்; தொன்றுதொட்டு தன் மரபினோர் தலை நகராம் பெருமை வாய்ந்த மதுரைமா நகரின் வாயிலிடத் தமைந்த குளத்துநீரில் மூழ்கி எழுந்து, தம் குலமாலையாம் வேப்பந்தார் பூண்டு, முன்னே போர்ப்பறை முழங்க, பெரு மதக் களிறேபோல் பெருமித நடைபோட்டுச் செல்ல லாயினன்; அவன் செல்வதனையும், அவன் அரண்மனை வாயிற்புறத்தே வந்து தங்கிய பகைவர் படைப்பெருமை யினையும் நோக்கினார் புலவர் இடைக்குன்றூர்கிழார்; வந் துள்ளவர் மிகப் பலர் எனினும் இவன் ஆற்றல்முன் அவர் என்னாவர்? அவர்கள் அத்தனைபேரும் அழிந்தொழிவது உறுதியே; ஆனால், பகற்பொழுது சிறிதே இருப்பதை உணர்ந்தார். அவர்களில் ஒருசிலர் உயிர்பிழைத்து உய்த லும் கூடும் போலும் என்று எண்ணினார்.

> "மூதூர் வாயில் பனிக்கயம் மண்ணி,
> மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து
> தெண்கிணை முன்னர்க் களிற்றின் இயலி
> வெம்போர்ச் செழியனும் வந்தனன்; எதிர்ந்த
> வம்ப மள்ளரோ பலரே;
> எஞ்சுவர் கொல்லோ? பகல்தவச் சிறிதே!" (புறம்: எ௯)

இவ்வாறு எண்ணிக்கொண்டிருக்கும்போதே அவர் முன் தேரொன்று வந்து நின்றது; அதில் நெடுஞ்செழியன் இருப்பதைக் கண்டார்; அப்போதைய அவன் தோற்றம் அவருக்குப் பேரையத்தை உண்டாக்கிவிட்டது; தேர்த் தட்டில் இருப்பவன் நெடுஞ்செழியன்தானா என்று எண்ண லாயினர்; நெடுஞ்செழியன் கடிதிளையனாயிற்றே; இளமை யில் அவன் தாய்தந்தையர் அணிவித்த கிண்கிணியினை நீக்கிவிட்டு வீரக்கழல் புனைந்ததும் இன்றே அன்றோ?

முன்மயிர் கழித்த தலையில் வேம்பின் தளிரும், உழிஞைக் கொடியும் அணிசெய்ய, கையில் வளை களைந்து, வில்லேந்தி நிற்கும் இவ்வீரனு இளைய நெடுஞ்செழியன்! அவன் மாலை யணிந்தானேயன்றி, தீதுநீங்க என்று அவன் பெற்றோர் பிள்ளைப் பருவத்தே கட்டிய ஐம்படைத் தாலியை அவன் இன்னமும் நீக்கினன் அல்லனே! பாலுணவு மறந்து சோற்றுணவு உட்கொள்ள இன்றன்றோ கண்டேன்; அவனு இவன்? தேர்த்தட்டில் இதோ நிற்கும் இவ்வீரன், தன்மேல் பகைத்து வரிசை வரிசையாக வரும் புதிய வீரர்களின் ஆற்றல் கண்டு அதிசயிப்பதோ, அவர் ஆற்றாமை கண்டு பழிப்பதோ செய்யானாய், அவர்களை வெல்வது ஒன்றே குறிக்கோளாய், ஒருசேர வளைத்து, ஆரவாரம் செய்து, ஒருவரும் எஞ்சாதவாறு அழித்து வெற்றிகொண்டும், அவ்வாறு வெற்றிபெற்ற அந்நிலையிலும், தன் வெற்றி கண்டு மகிழ்ச்சியோ, செருக்கோ கொண்டிலன்; என்னே இவன் போர் அறிவு! இத்துணைப் பேர் அறிவு, இளையனாய இவனுக்கு எப்படி உண்டாயிற்று? அதை இவன் எப்போது பெற்றான்? பெறுதற்காம் பருவமும் அன்றே இவன் பருவம்! என்றெல்லாம் வியந்து நிற்பாராயினர்.

> " கிண்கிணி களைந்தகால் ஒண்கழல் தொட்டுக்,
> குடுமி களைந்தநுதல் வேம்பின் ஒண்தளிர்
> நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து,
> குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி,
> நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்
> யார்கொல்? வாழ்க அவன்கண்ணி! தார்பூண்டு,
> தாலி களைந்தன்றும் இலனே! பால்விட்டு
> அயினியும் இன்று அயின்றனனே!! வயின்வயின்
> உடன்று மேல்வந்த வம்ப மள்ளரை
> வியந்தன்றும், இழிந்தன்றும் இலனே! அவரை
> அழுந்தப் பற்றி அகல்விசும்பு ஆர்ப்பெழக்
> கவிழ்ந்து நிலம்சேர அட்டதை
> மகிழ்ந்தன்றும் மலிந்தன்றும் அதனினும்! இலனே !!"

(புறம்: எஎ)

அவன் பெற்ற வெற்றியும், அவ்வெற்றி பெற்ற அவன் பெருந்தகைமையும், அவருக்கு அந்த அளவோடு அமைதி தரவில்லை; "இவன் இளையன் என்பது மட்டுமன்றே! இவனுக்குத் துணையாக நின்றவரும் ஒருவரும் இலரே! மேற்சென்று தாக்குமளவு பெரும்படையினைச் சேர்த்து வைத்தவனும் அன்றே! அதற்கு வேண்டும் காலமும் அவனுக்கு இல்லையே! இவன்நிலை இதுவாயின், வந்த பகைவர்களின் பெருமையினை வாய்விட்டுக் கூறுதற்கும் இயலாதே; வந்த பகைவர் எழுபெரும் அரசராவர்; அவ்வேழரசர்களின் எழுபடைகளும் ஒன்றுகூடியன்றோ இவனை எதிர்த்தன? மேலும், அவர்கள் களம் பல கண்டு போர் அறிவுபெற்ற பேரறிவாளராவர்; பகைவன் நாட்டுட் புகுந்து தாக்குமளவு பேராற்றல் வாய்ந்தவர்; அத்தகையார் வந்து தாக்கினர் இவனை; இவ்வொருவனை எதிர்க்க ஏழரசர்கள் வந்தனர் என்பதே இவன் பெருமைக்கோர் எடுத்துக்காட்டாம் என்றால், அவ்வாறு கூடி எதிர்த்த ஏழரசர்களையும், இவன் ஒருவனாகவே எதிர்த்துப் போரிட்டு வெற்றியும்பெற்றான் எனின், இவன் பேராண்மையினை என்னென்பது? இஃது எங்கும் நிகழாத நிகழ்ச்சியன்றோ? காணாதன கண்டன எம்கண்கள்! ஒருவனை ஒருவன் தாக்குவதும், ஒருவனை ஒருவன் வெற்றி கொள்வதும் உலகியல்; எங்கும் நிகழக்கூடியது; அந்நிகழ்ச்சி உலகிற்குப் புதியதன்று; ஆனால், ஏழரசர் கூடி ஒருவனை எதிர்ப்பதும், அவ்வொருவன், அவ்வேழரசர்களையும் வென்று அழிப்பதும் அம்மம்ம! அரிது அரிது! அதிசயம் அதிசயம்!! இதுபோன்ற நிகழ்ச்சி நிகழ்ந்ததாக யாம் இது வரை கண்டதும் இல்லை; கேட்டதும இல்லை;" என்று வாய் விட்டுக்கூறி வியந்து பாராட்டினார்:

"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவதன்று; இவ்வுலகத்து இயற்கை
இன்றின் ஊங்கோ கேளலம்; ... .....

நாடுகெழு திருவின் பசும்பூட் செழியன்

பீடும் செம்மலும் அறியார் கூடிப்
பொருதும் என்று தன்தலை வந்த
புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க
ஒருதானாகிப் பொருது களத்து அடலே!" (புறம்: எசு)

நெடுஞ்செழியன் பெற்ற வெற்றிச்சிறப்பினை இவ்வாறு பாராட்டிக்கொண்டிருக்கும்போதே, சிலர் ஓடிவந்து, "செழியன் அவர்களை ஈண்டு நின்றும் துரத்தியதோடு அமையானாய், அவர்களை அவர்கள் நாடுவரை துரத்திச் சென்று, ஆங்கே, அவர்கள் மனைவிமார் தங்கள் கணவன்மார் தோற்றுப் பின்வாங்கி வந்து அழிவுறுதலைக் கண்டு நாணித் தலைகவிழ்த்து இறக்கும் வண்ணம், அவர்கள் ஊர் அருகிலேயே அழித்து மீள்கின்றான்," என்ற செய்தியைக் கூறினர்; கேட்ட புலவர் இடைக்குன்றூர் கிழார், "அந்தோ! அப்பகைவர் வந்த பெருமிதநிலை என்னே! அவர்க்கு உண்டாய இறுதிநிலை எத்தகைத்து? 'எவ்வாற்றானும் சிறந்தோரா நாம்; மேலும் பெரியதோர் படையும் நம்பால் உளது; செழியனோ மிகவும் இளையன்; போர் அறியாப் பருவத்தன்; இவனை வென்றால், பெறும் பொருளோ, அது பெரும்பொருள் எனக் கூறலாமேயன்றி இவ்வளவு என எண்ணி மதிக்கவொண்ணாப் பெருமையுடையது' என எண்ணி இறுமாந்தன்றோ வந்தனர்? அவர்களைப் புறமுதுகுகாட்டச் செய்த செழியன், அவர்களை இங்கேயே அழித்திருக்கலாகாதா? அந்தோ! அவர்கள் பிறந்து வளர்ந்த மண்மேலேயே, அவர்கள் மனைவிமார் கண் முன்னரே, அதுவரை துரத்திச்சென்று அங்கேயா அழிப்பது? கொடுமை! கொடுமை!!" என்று பகைவர்க்குப் பரிந்து பேசுவார்போல் செழியன் சிறப்புத் தோன்றப் பாராட்டி மகிழ்ந்தார்:

"................................................................
விழுமியம்; பெரியம்யாமே; நம்மில்
பொருநனும் இளையன்; கொண்டியும் பெரிது என
எள்ளிவந்த வம்ப மன்னர்
புல்லென் கண்ணர் புறத்திற் பெயர

ஈண்டு அவர் அடுதலும் ஒல்லான்; ஆண்டு அவர்
மாணிழை மகளிர் நாணினர் அழியத்
தந்தை தம்மூர் ஆங்கண
தெண்கிணை கறங்கச் சென்று ஆண்டு அட்டனனே."

(புறம்: எ௬)

புலவர் இடைக்குன்றூர் கிழார் பாடிய பாடல்கள் இந்நான்கே எனினும், இந்நான்கும், அவர் புலமைச் சிறப்பைப் போற்றும் பொன்னுரைகளாய் அமைந்து புகழ் பெறுதலைக் காண்க.

# ௯௰. உகாய்க்குடி கிழார்

தமிழ்நாட்டுப் புலவர்கள் பிறந்து வளர்ந்த பேரூர்களில் உகாய்க்குடியும் ஒன்று; ஆனால், புலவர் ஒருவரைப் பெற்றுத்தந்த இப்பேரூர், தன் பெயரை மட்டும் தமிழகத்திற்கு அளித்ததே யன்றி தன் இடம் இயல்பு பற்றிய எதையும் அறிவித்திலது.

பொருள் தேடப் புறநாடு செல்லத்துணிந்த ஓர் ஆண் மகன், தன் மனைவியைவிட்டுப் பிரியமாட்டாது வருந்திக் கூறிய அவன் கடனறி உள்ளம் விளங்க உரைத்த ஒரு பாட்டே உகாய்க்குடி கிழார் பெயரால் கிடைத்துளது; அவ்வொரு சிறு பாட்டிலேயே அரிய பெரிய அறவுரைகள் சிலவற்றை அவர் அளித்துள்ளார்.

> "இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம், விருந்தோம்பி
> வேளாண்மை செய்தற்பொருட்டு" (திருக்: அக)

என்ப. இவ்வுலகில் வாழ்கின்ற வரையிலும், இன்ப வாழ்வு வாழ்தலும், ஈண்டிருந்து மாய்ந்து மறைந்த வழித் தம் பெயர் அழியாது நிற்றல் கருதி அறமாற்றுவதும் மக்கட் பிறவியின் பயன் என்ப; அத்தகைய மக்கட் பயனும் இன்பத்திற்கும், அறத்திற்கும் பொருள் மிக மிக இன்றியமையாததாம்; பொருள் பெற்றார்க்கே அவ்விரண்டும் வாய்க்கும்; அது வாய்க்கப் பெறாதார், அவற்றை அடைதல் இயலாது; அத்தகைய பொருள், முயற்சியின்றி முடங்கிக் கிடப்பார்க்குக் கிடைத்தல் அரிது; இவ்வுண்மையினை அறிந்த தலைமகன் ஒருவன், அப்பொருள் தேடப் புறப்படத் தொடங்கினான். கடனறிந்து செல்லத் துணிந்த அவனை, அவன் மனைவிபாற் கொண்டுள்ள அன்பு தடுத்து நிறுத்துகிறது; இவளை உடன்கொண்டு செல்வது நின்னால் இயலாது; அது முறையுமன்று; இவளை ஈண்டுவிட்டுத் தனித்துச் சென்று துயர்தாங்கும் வன்மை நினக்கு உண்டாகுமோ என்று அவனை யாரோ கேட்பதுபோல் உணர்ந்தான்; அந்தக் கேள்விகளையே, அவன், பொருள்வேண்டிப் பிரிய எண்

னும் தன் நெஞ்சினைக் கேட்பதாகப் பாடிக் காதல், கடமை இரண்டையும் வழுவாது போற்ற விரும்பும் ஓர் ஆண்டகையின் உள்ளம் உணர வழிவகுத்துள்ளார் உகாய்க்குடியார்:

"ஈதலும், துய்த்தலும், இல்லோர்க்குஇல் எனச்
செய்வினை கைம்மிக எண்ணுதி, அவ்வினைக்கு
அம்மா அரிவையும் வருமோ?
எம்மை உய்த்தியோ? உரைத்திசின் நெஞ்சே."

(குறுந்: கசு)

## ௬௦. உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார்

தமிழகத்தின் வரலாற்றில் ஒரு பகுதி உணரத் துணை புரிந்த உமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனார், தம்மைப் பற்றியோ, தாம் பிறந்த உமட்டூர் பற்றியோ ஒன்றும் உரைத்தாரல்லர்.

பரங்கொற்றனார், பழந்தமிழர் பொருள் தேடும் முயற்சியால் தமிழகத்தின் எல்லை கடந்தும் செல்வர்; அவ்வாறு சென்று பொருள் தேடல், அப்பொருளால் தாம் இன்பம் துய்த்தற்கு அன்று; வறியராய் வந்து இரந்தார்க்கு ஈந்து, அவர் அது பெற்று மகிழ்வது கண்டு தாம் மகிழ்வதற்கே என்று கூறுகிறார்.

> "ஈதல் இன்பம் வெஃகி, மேவரச
> செய்பொருள் திறவராகி.........
> அறையிறந்து அகன்றனர"

பரங்கொற்றனார் உணர்த்தும் தமிழக வரலாற்றுக் குறிப்புகள் இரண்டு; ஒன்று தமிழகத்தின் உள்நாட்டு வரலாறு; ஏனையது அத்தமிழகம் பிற நாடுகளோடு கொண்டிருந்த தொடர்பினை விளக்குவது.

இம்மைச் செய்தது மறுமைக்கு ஆகும் என்ற குறிக்கோள் இன்றிக் கொடை மேற்கொளளும் குணத்தனாய ஆஅய், பகைவர் அரண்களைப் பாழ்செய்து, ஆங்குக் கைப்பற்றிய அருங்கலன்களைத் தன்னைப் பாடிவரும் பாணர்க்கும் பொருநர்க்கும் போற்றாது கொடுக்கும் புகழுடையான் எனத் தமிழ்நாட்டுக் குறுநில மன்னன் ஒருவன் வரலாற்றினை உணர்த்தினார்;

> "அரண்பல நூறி
> நன்கலம் தரூஉம் வயவர் பெருமகன்
> சுடாமணிப் பெருமபூண ஆஅய்."

தமிழகத்தின் வடக்கே மிகச் சேய்மைக்கண் வாழ்பவராகிய மோரியர் என்ற அரச இனத்தார், தமிழகத்தின்

மீது படையெடுத்து வந்து, தாம் கொண்டுவந்த கருத்து நிறைவேறப்பெறாமல் வறிதே மீண்டனர் என்ற வரலாற்றினைத் தமிழ் நூல்கள் உணர்த்துகின்றன. அம்மோரியர், வானத்தை அளாவி உயர்ந்த பெரிய தேர்ப்படை உடையவர்; அவர்கள், தங்கள் தேர்ப்படை எளிதில் செல்லாவாறு இடையில் தடையாக நின்ற பெருமலைகளை வெட்டி வழி செய்தனர் என்ற வரலாற்றுக் குறிப்பினைக்கொடுத்துள்ளார் பரங்கொற்றனார்:

> "விண்பொரு நெடுவரை இயல்தேர் மோரியர்,
> பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த
> அறை."  (அகம்: ருக)

பரங்கொற்றனார், தாம் பாடிய ஒரு பாட்டிலேயே இரு வரலாற்றுண்மைகளை வகுத்துக் கூறியவராவர். மேலும் பல பாக்களைப்பாடி, அப்பாக்களெல்லாம் நமக்குக் கிடைத்திருக்குமானல், நம் தமிழகத்தின் வரலாறுகளில் பலவற்றை உணரும் வாய்ப்பு நமக்குக் கிடைத்திருக்கும்; ஆனால், அந்தோ! அவ்வரிய வாய்ப்புதான் தமிழகத்திற்கில்லையே!

## ௧௧. ஐயூர் மூலங்கிழார்

தமிழ் நாடாண்ட அரசர் மூவரேயாயினும், அவருள் தமிழ் வளர்த்த பெருமையுடையார் பாண்டியரேயாவர்; மொழி வளர்த்த பெருமை, பொதுவாகப் பாண்டி நாடாண்ட முடி மன்னர் அனைவர்க்கும் உரித்து எனினும் அவர்களுள் கடைச்சங்கம் இரீஇய பாண்டியர் நாற்பத் தொன்பதின்மருள் ஒருவன், எட்டுத்தொகை நூல்களுள் ஒன்ருகிய அகநானூற்றைத் தொகுப்பித்தோன்; திருக் குறள் அரங்கேறிய அவைக்குத் தலைமை தாங்கினேன் என்ற சிறப்பினை உடையோன்; உக்கிரப்பெருவழுதி என்ற பாண்டியன் ஒருவனே.

பழந்தமிழ் அரசர்கள், ஒற்றுமை குன்றி ஒருவரோ டொருவர் பகைத்துப் போரிட்டு வந்தமையினலேயே தமிழகம் தன் பெருநிலை இழந்து பாழுற்றது என்ற பழிச் சொல் பெறும் பெருமையும், பாண்டிய அரசர்களுள் இவ் வொருவனுக்கே உண்டு. தன் காலத்தே சேர நாடாண் டிருந்த சேரமான் மாரிவெண்கோவையும், சோணுடாண் டிருந்த இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியையும் தன் நண்பர்களாகக்கொண்டு கலந்து வாழ்ந்து அருந்தமிழ்ச் செல்வியாம் ஔவையாரின் பாராட்டைப் பெற்றுளான் உக்கிரப் பெருவழுதி.

இவன்பால் இத்துணைச் சிறப்புக்கள் உளவாகவும், இவன் காலத்தார், அவற்றுள் எதையும் இவன் பெயரோடு இணைத்துப் பாராட்டாது, அவன் வேங்கைமார்பன் என்பானுக்குரிய, காவல் செறிந்த கானப்பேரெயில் என்ற கோட்டையைக் கைப்பற்றிய வெற்றிச்சிறப் பொன்றையே இணைத்து, கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி என வழங்கிப் பாராட்டினர் என் ருல், அவன் பெற்ற இவ்வெற்றியாலாம் புகழ், அவனின் ஏனைச் செயல்களால் ஆம் புகழினும் சிறந்தது என்றன்றே பொருள்?

உக்கிரப்பெருவழுதியின் உயர்விற்குக் காரணமாய இச்செயலறிந்து பாராட்டிய பெருமை புலவர் ஐயூர் மூலங்கிழார்க்கே உரித்து; அவர் அக்கோட்டையின் அகழி, மதில், காவற்காடு இவற்றின் அருமையினையும், அதைக் கைக்கொண்ட உக்கிரப்பெருவழுதியின் ஆற்றற் பெருமையினையும் அதை இழந்த வேங்கைமார்பன், காய்ச்சிய இரும்புண்ட நீரை எவ்வாறு மீண்டும் பெறல் இயலாதோ, அவ்வாறே, உக்கிரப்பெருவழுதி கைப்பற்றிய இக்கோட்டையை மீட்டலும் இயலாதே:

> "கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
> இரும்புண் நீரினும் மீட்டற்கு அரிது" (புறம்: உக)

என ஏங்கும் ஏக்கத்தையும் நன்கு எடுத்துப் பாராட்டியுள்ளார்.

## கஉ. கருவூர் கிழார்

மதுரை பாண்டியர்க்கும், உறந்தை சோழர்க்கும் தலைநகரங்களாய் அமைந்து சிறப்புற்றதேபோல், சேரர்க்குத் தலைநகராய் அமைந்து சிறப்புற்ற நகரம் கருவூர்; சோழபாண்டிய தலைநகரங்கள் எவ்வாறு புலவர் பலரின் பிறப்பிடமாய்ப் பெருமையுற்றனவோ, அவ்வாறே கருவூரும் புலவர் பலரைப் பெற்றுப் பெருமையுற்றுளது; புலவர் பெருமக்கள் பன்னிருவர் கருவூர்க்கண் பிறந்து வாழ்ந்திருந்தனர்; இவ்வாறு சிறப்புற்ற கருவூர் யாண்டுளது என்பதில் தமிழ்நாட்டு அறிஞர்கள் இன்றும் ஐயங் கொண்டிருப்பது வியப்பினும் வியப்பே. அது, "கொங்கு நாட்டுத் தலங்களுள் ஒன்றும், இப்போதைய திருச்சிராப் பள்ளி மாவட்டத்தைச் சார்ந்துள்ளதுமாகிய கருவூரே" என்பர் சிலர்; மலைநாட்டில், மேற்குத்தொடர்ச்சி மலை அடிவாரத்துப் பேரியாற்றங்கரையிலுள்ள திருக்கரூராம் என்பர் மற்றும் சிலர்.

சேரநாட்டின் சிறந்த ஊர்களுள் ஒன்றாய கருவூரில் பிறந்த நம் கிழார், தன் கணவன் அன்பில் ஐயுற்று நம்பிக்கை இழக்காத இல்லாள் ஒருத்தியின் உயரிய உள்ளத்தை உயிரோவியமாக்கித் தந்துளார்.

ஆண்மகன் ஒருவன் ஒருபெண்ணை மணப்பதாக வாக்குறுதி அளித்து, அம்மணவினைக்காம் பொருள்தேட வேண்டி வெளிநாடு சென்றுவிட்டான்; சென்றவன் விரைவில் வந்திலன்; அவன்வாராமை உணர்ந்த ஊரார், அவன் அன்பில் ஐயுற்று அவன் ஒழுக்கத்தைப் பழித்துப் பேசலாயினர்; அவர்கள் அவ்வாறு கூறுவதை, அப்பெண்ணிடம் அவள்தோழி எடுத்துக் காட்டினள்; அது:

"பலரும் கூறுக அஃது அறியா தோரே;

மலைகெழு நாடன் கேண்மை
தலைபோகாமை நற்கறிந்த னென் யானே." (குறுந்: கஎ0)

## கரு. காட்டூர்கிழார் மகனார் கண்ணனார்

நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களில் மிகப் பல பாக்களைப் பாடிய எருக்காட் காட்டூர்த் தாயங் கண்ணனார் என்பார்க்கும், இவர்க்கும் ஒப்புமைகள் பல உள; ஊர்ப் பெயர், இயற்பெயர் ஒற் றுமைகளோடு, இருவரும், வேங்கடமலையையும், அம் மலை யைச் சூழஉள்ள நாடாண்ட, தொண்டையர், திரையர்களை யும் பாராட்டிக் கூறும ஒற்றுமையும் உடையராவர்; இதனால், இவ்விரு பெயர்களும ஒருவரையே குறிக்கின்றன எனக் கொள்வாரும் உளர்.

சங்ககாலத் தமிழகம், சேர, சோழ, பாண்டியர்களை அறிந்துள்ளதுபோன்றே, பல்லவர்களையும் அறிந்திருந்தது என்பதற்கான அகச்சான்று அளித்தாருள் காட்டூர் கிழார் மகனார் கண்ணனாா தலைசிறந்தவராவர். "வேங்கடமலை திரையனுக்கு உரியது ; அத் திரையன் வேற்படை மிக்க வன்" என்ற செய்திகளை அளித்துள்ளார். "வென் வேல் திரையன் வேங்கட நெடுவரை."

தன்னை அடைந்தார் வருந்தப் பிரிந்துபோதல் அற மன்று என்று தலைவி கூறினாள் ; அவர் அறமறியார் அல் லர் ; அவர் வருவேன் எனக் கூறிச்சென்ற காலத்தே தவறாது வருவார் ; அக்காலம வந்திலது எனக் கூறினாள் தோழி எனப் பாடியுள்ளார் புலவர்.

> "இன்னம் ஆகவும் இங்கு நத்துறந்தோர்
> அறவர் அல்லர் : அவர் எனப் பலபுலந்து
> ஆழல் வாழி தோழி............
>
> தண்கார், வருதும் யாம் எனத் தேற்றிய
> பருவம் காண் அது பாயின்றால் மழையே." (அகம் : அகூ.)

## கசு. காரி கிழார்

காரி கிழார்க்குரிய காரி என்ற ஊர் தொண்டை நாட்டில் உளது; அவ்வூர் இப்போது இராமகிரி என வழங்கப்படுகிறது என்று கூறுகிறார் டாக்டர். உ. வே. சாமிநாதையர் அவர்கள். காரிகிழார் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்திய செய்யுளில், முக்கட்செல்வன் கோயிலை வலம்வருங்கால் நின் குடை தாழ்க; நின்னை வாழ்த்திய அந்தணரை வணங்குக என்று அறிவுரை உரைப்பதை நோக்கின், காரிகிழார், சிவனை வழிபடுகடவுளாகக்கொண்ட சைவர்; வைதீக வொழுக்கினர் என்பது புலனும். இவர் பெயரும், சிவபிரான்பால் இவர் காட்டும் அன்பும், பெரிய புராணத்திலும், திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்திலும் கூறப்பெறும் காரிநாயனார், காரியார் என்பவர் பெயர்களை நமக்கு நினைப்பூட்டுகின்றன.

பழங்காலத்து அரசியலில் அரசனே எல்லாம்; அவன் நல்லனாயின் நாட்டில் நல்லாட்சி நிலவும்; அவன் தீயனாயின் நாட்டில் கொலையும், கொள்ளையும் நின்று ஆட்சி புரியும் ஆதலின், அக்கால மக்கள் தங்கள் அரசன் நல்லனாதலை விரும்பினர்; அக்கால அறிஞர்களும், அரசன் நல்லனாக வேண்டியதன் இன்றியமையாமையினை அவனிடத்திலேயே எடுத்துக்கூறி அறிவுறுத்தினர்; முதுகுடுமிப் பெருவழுதியைப் பாராட்டிய காரிகிழார், அவன் மக்கட் பயனும் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கினையும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க என வாழ்த்துதற்குமுன், அவன் அவ் வாழ்வு பெறுதல், அவன் நல்லாட்சி மேற்கொண்ட வழியேயாம் ஆதலின், "நின் குடைநிழல் வாழ்வார் அனைவரையும் காய்தல், உவத்தல் அகற்றி ஒப்பமதித்து நடத்துவாயாக; வேண்டுவார்க்குப் பரிந்து பழிபுரியாது, துலாக்கோல்போல் நின்று நீதி செலுத்துவாயாக," என்று அறிவுரை கூறினார்; இவ்வாறு அறிவுறுத்தி நல்லனாக்கியபின்னரே, அறநூல் அறிந்த அந்தணர் நின்னை வாழ்த்துங்கால் அவரைப்

பணிந்து அறமுடையோனாகுக; பகைவர் நாடுகளை, நின் தலைமாலை வாடுவதையும் அஞ்சாது எரித்து அழித்து வெற்றிகொண்டு பொருளுடையோனாகுக; நாடு காவல் கருதி எப்போதும் பிரிந்தே வாழ்வதால் நின்பால் ஊடி நிற்கும் நின்மனைவிபால் சினம் தணிந்து, அன்புரை வழங்கி இன்பம் உடையோனாகுக: முக்கட்செல்வன் பெருங் கோயிலை நின் குடை தாழ்த்தி வலம்வந்து வணங்கி வீடு பேற்றுச்செல்வத்தினைப் பெறுவாயாக," என்று வாழ்த்

"தெரிகோல் ஞமன்ன் போல ஒருதிறம்
பற்றல் இலியரோ!"
"பரிசின் மாக்கட்கு வரிசையின் நல்கிப்
பணியி யரத்தை நின் குடையே, முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே;
இறைஞ்சுக பெரும! நின் சென்னி, சிறந்த
நான்மறை முனிவா ஏந்துகை எதிரே;
வாடுக இறைவ! நின் கண்ணி. ஒன்னார்
நாடுசுடு கமழ்புகை எறித்த லானே;
செலியரத்தை நின்வெகுளி, வாலிழை
மகளிர் துனித்த வாணுமுகத் தெதிரே;" (புறம்: ௬.)

## ௬௫. கிள்ளிமங்கலங் கிழார்

கிள்ளிமங்கலம் பாண்டிநாட்டகத்ததோர் ஊர்; இவர் அவ் வூரினராதலின் கிள்ளிமங்கலங் கிழார் எனப் பட்டார்; இவருக்குச் சேரகோவனார் என்ற இயற்பெய ருடைய மகனார் ஒருவர் இருந்தார்; அவரும் ஓர் உயர் தமிழ்ப் புலவராவர்; கிள்ளிமங்கலங் கிழார் பாடிய பாக் கள் நான்கு, குறுந்தொகைக்கண் இடம் பெற்றுள்ளன; அவர் பாடல்கள், அவரோர் ஆழ்ந்த சிந்தனையாளர் என் பதை அறிவிக்கின்றன; காதலின் இயல்பு குறித்து அவர் கூறும் விளக்கம் அவரின் அறிவின் பெருமைக்கு விளக் கம் தந்து நிற்கின்றது.

யாமைப் பார்ப்பு தாய்முகம் நோக்கி வளரும் இயல் புடையது; தாய் முகம் நோக்கும் வாய்ப்பிலாதுபோயின், அது வளர்ந்து வாழாது இறந்து அழியும்.

தாய்ப்பறவை யிட்ட முட்டை, அப் பறவை அதை அடுத்தடுத்துப் பாதுகாப்பதினாலேயே குஞ்சாகிப் பய னுறும்; தாய்ப்பறவை அவ்வாறு காவாதுவிடின் அது அழுகி அழிந்துபோகும்.

இவ்விரு உயிர்களின் இயல்புகளைக் காதலுக்கு உவமை யாக்கி, காதலின் உண்மை இயல்பினை உணர்த்தியுள்ளார் புலவர். யாமைப் பார்ப்பு, தாய்முகம் நோக்கி வளர்வதே போல், காதலும், தம் காதலரைப் பல்கால் காண்பதினா லேயே வளரும், பார்ப்பு தாய்முகம் நோக்காதவழி அழி வதேபோல், காதலரைப் பார்ப்பதின்றேல் காதலும் சிறுகச் சிறுகக் குறைந்து மறையும். முட்டை, தாய்ப்பறவை அடுத்தடுத்துப் பாதுகாப்பதால் குஞ்சாகிப் பயன்பெறு வதேபோல், காதலும், காதலர் இருவரும் மணந்து பிரி வின்றிக் கலந்து வாழ்ந்தவழியே வளர்ந்து இல்லறப்பயனை அளிக்கும்; தாயின் பாதுகாவலைப் பெறாத முட்டை அழிவதேபோல், காதலும், காதலர் மணந்து இடையீடு இன்றி வாழாராயின், இல்லறப் பயனளிக்காதே அழிந்து விடும் என அவர் கூறும் நயத்தை நோக்குங்கள் :

"தாய் இல் முட்டை போல, உட்கிடந்து
சாயின் அல்லது, பிறிது எவன் உடைத்தோ ?
யாமைப் பார்ப்பின் அன்ன
காமம், காதலர் கையற விடினே." (குறுந் : ௧௫௨.)

கணவன் பரத்தையரொழுக்கம் மேற்கொண்டு தவறிய வழி, அவன் பிரிவாலாம் துயர் தன்னை வருத்து மாயினும், அந்நிலையினும் தன் கணவனைப் பிறர் பழிப்பது காணப் பொறுமை உயர்குலப் பெண்டிர்க்கு ஒழுக்கமாம்; இவ்வுண்மை தோன்ற ஒரு கட்சியினைக் காட்டுகின்றார் நார்.

ஓர் ஆண்மகன் பரத்தை வீடு சென்றுவிட்டான். அதனால், அவன் மனைவி, மனத்துயர் கொண்டு மாழ்கினாள். அவள் துயர் போக்குதற்காம் வழி தேடும் அவள் தோழி, 'அவள் முன் அவனைப் பழிப்பின், அவள் தன் முன் தன் கணவனைப் பிறர் பழிக்க நேர்ந்தது. அவன் பிரிவு கண்டு வருந்தியதாலன்றோ என எண்ணித் தன் துயர் மறைத்துப் பொறுப்பார்' என எண்ணினாள்; அவ்வாறே அவனை அவள் முன் பழிக்கலாயினர்; உடனே தலைவிக்குக் கோபம் பிறந்தது; "தோழி! வீட்டில் நமக்குரிய கடமைகளோ மிகப் பல; அவற்றைத் தவறாது ஆற்றி இல்லறப்பயனைப் பெறுதலை ஒழித்துப் பிறரைப் பழி கூறிக்கொண்டிருத்தலா நமக்கு அழகு?" என்று கூறி அவள் வாயடைத்துவிட்டு, அத்துடன் அமையாது, "அவர் பரத்தையர் வீட்டில் வாழினும், அவர் அன்பெல்லாம் இல்லறத்திற்குரியராய நம்பாலன்றோ உளது" என்றும் கூறி அவனைப் பாராட்டவும் செய்தாள். ஆனால், அவனைப் பாராட்டியதை வெளிப்படையாக விளங்க உரைத்தாளல்லள். "தான் ஈன்ற கன்றின் அருகிலேயே கட்டப்பெற்ற எருமை, அக்கன்றை விட்டு அகலாமலே, அருகிலிருக்கும் புற்களை மேயும் நாட்டிற்குரியவன் நம் தலைமகன்," என்று கூறி, எருமை தன் பசி போக அருகேயுள்ள புல்லை மேயினும், தன் கன்றை விட்டுப்பிரியாதிருப்பதே போல், நம் கணவன், தன் வேட்கை நீங்க

வேறிடம் செல்லினும், நம்பால் கொண்டுள்ள அன்பிற் குறையான்; ஆகவே, அவனைப் பழித்துரைப்பதை இனி மேற்கொள்ளற்க," எனக் கொள்ள வைத்து அவன் குணம் பாராட்டும் இல்லறத்தின் இயல்பறிந்த அந்நல்லாளைப் பாராட்டுவோமாக; அவ் இல்லாளை நமக்கு அறிமுகமாக்கும் புலவரைப் போற்றுவோமாக:

"இதுமற்றெவனோ தோழி! துனியிடை
இன்னா என்னும் இன்னாக் கிளவி
இருமருப் பெருமை ஈன்றணிக் காரன்
உழவன் யாத்த குழவியின் அகலாது
பாஅற் பைம்பயிர் ஆரும் ஊரன்
திருமனைப் பலகடம் பூண்ட
பெருமுது பெண்டிரேம் ஆகிய நமக்கே." (குறுந்: கஅக.)

## கசு. கிள்ளிமங்கலங் கிழார்மகனார் சோகோவனார்

சோகோவனார் என்ற இயற்பெயருடையராய இவர், கிள்ளிமங்கலம் கிழார் என்ற பெரும் புலவரின் மகனாவர்; இவ்விருவர்க்கும் உரிய கிள்ளிமங்கலம் பாண்டிநாட்டில் உளது என்ப; தமிழ்நாட்டில் மங்கலம் என்ற பெய ருடைய ஊர்கள் பல உள ஆதலின், இவ்வூர் கிள்ளி மங்கலம் எனச் சிறப்பிக்கப்பட்டுளது; ஊரைச் சிறப்பிக்க வரும் கிள்ளி என்பதோ, கோவனார் பெயரைச் சிறப்பித்து நிற்கும் சோ என்பதோ எப்பொருள் குறித்து வந்துளது என்பது விளங்கவில்லை; இவர் பாடிய குறிஞ்சித் திணைச் செய்யுளொன்று நற்றிணைககண் வந்துளது.

"உடம்பும் உயிரும் வாடியக் காலும், என்னுற்றன கொல் இவை? யெனினல்லது, கிழவோற் சேர்தல் கிழத்திக்கில்லை" என்பது விதி. நற்குடிவந்த மகளிர், இவ்விதிக்கு மாறுபட்டு நடவார்; ஆனால், உண்மையி லேயே உயர்குடிவந்த பெண்ணொருத்தி இவ்விதியை மதியாது, தலைமகனார் செல்ல விரும்புகின்றாள் எனின், அச் செயல், அவள் அவன்பால் கொண்டுள்ள அன்பின் பெருமையினையும், அவ்வன்பு நிறைவேறா வண்ணம் அகன் றிருக்கும் அவன் அறியாமையினையும், அவன் வரினும் அவளைக் காணுவாறு அவள் தாய் மேற்கொண்டுள்ள காவற் கொடுமையினையுமன்றோ உணர்த்துகின்றது?

இவ்வாறு, தலைவனார் சென்று வரலாமா என்று எண்ணுமளவு துயருறும் அப் பெண்ணைப் புலவர் சோகோவனாரின் சொல்லோவியம் நம் கண்முன் கொணர்ந்து காட்டுகிறது.

ஒரு தலைமகன், களவொழுக்கத்தில் கன்றிய உள்ளத் தனாய் விரைவில் வரைந்து கொள்ளானாயினன். தலை வியோ இற்செறிக்கப்பட்டுளாள்; அவளைச் சூழ அமைந்த

காவலோ கடத்தற்கரியது; இவற்றைக் கடந்து அவனைக் காணலோ அரிது; காணுது வாழ்தலோ அதனினும் அரிது; இத்துயர்நிலை போக்க வழிசெய்தல் அவளால் ஆகாது; அது செய்யவல்லவன் அவனே; ஆனால், அவனே அது செய்யாதே கழிகின்றான்; இதனால் அவளுக்கு அவன்மீது மாறாச் சினம் பிறந்தது; அதனால் ஒருநாள் அவன் தன்மனை நோக்கி வந்துளான் என்பதறிந்து, அவன் கேட்குமாறு தோழியிடம் "தோழி! வரையாது வந்து செல்லும் தலைவன் நம் நிலையினை அறியாதுள்ளானாதலின், அவன் அறிவுடையனல்லன் என்பதை அவனிடம் கூறி அறிவுபெறச் செய்தல்வேண்டும்; அதைச் செய்வதற்காக வேண்டி, நம் அன்னையும், அண்ணன்மாரும் அமைத்திருக்கும் அரிய காவலை எவ்வாறாவது கடந்து, நம் நாணத்தையும் மறந்து ஊர்மக்கள் கூடி நிற்கும் பொதுவிடத்தே சென்று, ஆங்குள்ளார்பால் அவனூர் எது? அது யாண்டுளது? என வாய்விட்டுக் கேட்டாவது வருவோமா?" என்றாள். என்னே அவள் துயர்க் கொடுமை! அஃதறியாத அவ்வாண்மகன், அவள் கூறுமாறு சான்றோனல்லன் என்பது உண்மையேயன்றோ?

"அருங்கடி யன்னை காவல் நீவிப்
பெருங்கடை இறந்து, மன்றம் போகிப்,
பகலே, பலரும் காண, வாய்விட்டு,
அகல்வயல் படப்பை அவனூர் வினவிச்
சென்மோ வாழி! தோழி!...
வான்தோய் மாமலை நாடனைச்
"சான்றோயல்லை" என்றனம் வரற்கே." (நற்: கூ௬௫)

# கஎ. குறுங்கோழியூர் கிழார்

சோழவேந்தர்களின் பழைய தலைநகராம் உறையூர்க்குக் கோழி அல்லது கோழியூர் என்பதும் ஒரு பெயராம்; இக் கோழியூர்க்கும் குறுங்கோழியூர் கிழார் பிறந்த குறுங்கோழியூர்க்கும் யாதேனும் தொடர்பிருக்குமோ அறியோம். குறுங்கோழியூர் கிழார், தாம் பாடிய பாக்கள் மூன்றினும் சேர அரசன் ஒருவனையே பாடியிருத்தலின், இவர் பிறந்த ஊர் சேரநாட்டைச் சேர்ந்ததாகவும் கொள்ளலாம்.

குறுங்கோழியூர் கிழாரால் பாடப்பெற்றோன், சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையாவன்; பாண்டிய மன்னர்களுள் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பேராற்றல் வாய்ந்தவனாவன்; அவனைப் பகைத்தார் எவரும் அழியாது உயிர் பிழைத்தாரல்லர்; அத்துணை ஆற்றலுடையானவன்; அவனால் வெற்றிகொள்ளப்பட்டோருள் சேரமான் யானைக்கண்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையும் ஒருவனாவன்; எனினும், இவன் அவனின் ஏனைப் பகைவர்களைப் போல் அழிந்து போகாமல் உயிர் பிழைத்திருந்ததோடு, அவன் தன்னை அடைத்து வைத்திருந்த சிறையினின்றும் தன் ஆற்றலால் தப்பி வந்து தன் ஆட்சியினையும் மேற்கொண்டான் எனின், இவன் பேராற்றல் வாய்ந்தவன் என்பதில் பிழையுண்டோ? சேர வேந்தனின் இச் செயல், தமிழகம் முழுதும் பரவிப் புகழ் தரலாயிற்று; அஃதறிந்த குறுங்கோழியூர் கிழாரும், அவனைக் கண்டு பாராட்ட அவன் அரசிருக்கையாம் தொண்டிநகர் சென்றார்.

சிறுகுன்றுகளிலும், பெருமலைகளிலும், காட்டிலும், நாட்டிலும் அமர்ந்து நாடாண்ட அரசர்கள் எல்லாம் பணிந்து வாழ, நாட்டில் கொடிது நிகழாது செங்கோல் நடத்தி, குடிகளிடத்து வருந்தப் பெறும் பெருவரி பெறாது, அவர் உண்டு எஞ்சிய ஆறிலொன்று பெற்று, நீதியை எவர்க்கும் ஒப்ப வழங்கி உலகாண்ட அவன்

முன்னோர் பெருமையும், வயலும், வேலியும், கழியும், கானலும் பொருந்தக் கவினுற விளங்கும் தொண்டிநகர்ப் பெருமையும், தன்னைப் பிடிப்பார் செய்த குழியிலே விழுந்த களிறு, அக் குழியைத் தன் கோட்டால் குத்தித் தூர்த்துக் கரையேறித் தன் இனத்தோடு சேர்ந்து இன் புற்றாற்போல், செழியன் சிறையினின்றும் தன் ஆற்றலால் தப்பிப் போந்து அரசுகட்டிலேறிய யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் ஆண்மையும், செழிய னால் சிறைப்படுதற்கு முன் தன்னால் அழிந்த அரசர்களுள் சிலர், "இவன் உள்ளம் விரும்பியன செய்யின், இவன் கைப்பற்றிய நம் நாட்டையும் பொருளையும் நமக்கு உவந் தளித்தலும் கூடும்" என்ற எண்ணமுடையவராய்ப் பணிந்து வாழவும், "சேரன், செழியனால் சிறைசெய்யப் பெற்றான்; இனி, அவன் கைக்கொண்ட நம நாடுகளை நாமும் கைக்கொள்வோமாக" எனக் கைக்கொண்ட அரசர் தான் மீண்டுவந்தமை அறிந்து "இனி நம் அரணும் அரசும் அழியவேண்டி வருமே" என அஞ்சி வாழவும் நாடாண்ட அவன் ஆற்றற்பெருமையும் தோன்றப் பாராட்டிப் பாடி வாழ்ந்தனர்.

"குன்றுமலை காடு நாடு
ஒன்றுபட்டு வழிமொழியக்
கொடிது கடிந்து, கோல்திருத்திப்,
படுவதுண்டு, பகலாற்றி
இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல!
குலையிறைஞ்சிய கோள்தாழை,
அகல்வயல், மலைவேலி
நிலவுமணல் வியன்கானல்,
தெண்கழி மிசைச சுடர்ப்பூவின்
தண்தொண்டியோர் அடுபொருந!
மாப்பயம்பின் பொறை போற்றாது,
நீடுகுழி அகப்பட்ட
பீடுடைய எறுழ் முன்பின்

கோடுமுற்றிய கொல்களிறு,
நிலைகலங்கக் குழிகொன்று,
கிளைபுகலத் தலைக்கூடி யாங்கு,
நீபட்ட அருமுன்பின்
பெருந்தளாசரி பலா உவப்பப்
பிறிதுசென்று மலா தாயத்துப்
பலா நாப்பண மீக்கூறலின்,
" உண்டாகிப உயர் மண்ணும்
சென்றுபட்ட விழுக்கலனும்
பெறல்கூடும இவன் நெஞ்சுறப் பெறின்" எனவும்,
ஏந்துகொடி இறைப்புரிசை
வீங்குசிறை வியலருப்பம்
இழந்து வைகுதும் இனிநாம, இவன்
உடன்று நோக்கினன் பெரிது எனவும்
வேற்றரசு பணிதொடங்கும நின்
ஆற்றலொடு புகழேதகிக
காண்டு வந்திசின் பெரும!" எனவும் (புறம் : கஎ)

அவன் அவையில் சிலநாள் வாழ்ந்திருந்த புலவர், அவன்பால் காணலாம் நலமெலாம் உணர்ந்தார்; " அவன் அறிவும், அன்பும், அருளும் உடையன்; அவற்றை அறிந்து காணல் அரிதாம்; அத்துணைப் பெரியவாம் அவன் அறிவும், அன்பும், அருளும கடலாழமும், ஞாலத்தகலமும், திசைகளும், ஆகாயமும அளந்து காணற்கு அரிய என்ப; அவற்றை அளநதறிதலும் கூடும்; இவன் அறிவையும், அன்பையும், அருளையும் அளந்தறிதல இயலாது; அவன் நாட்டு மக்கள், சோறுக்கும் தீயாலும், ஞாயிற்றின் ஒளியாலும் உண்டாம் வெப்பம் அறிவரேயன்றி, பகைவர்தம் நாட்டைப் பற்றியக்கால் வைத்த தீயாலாம் வெப்பம் அறியார்; அவர்கள் வானவில்லன்றித் தம்மை அழிக்கப்படும் பகைவர் கைவில்லைக் கண்டறியார்; தம் நிலங்களை உழுதற்காம் நாஞ்சிற்படை அல்லது, தம் நாட்டுமீது பகைத்து வருவார் ஏந்திய படையினைப் பார்த்தறியார். "பகைவர் நாட்டைப்பற்றி அந்நாட்டு மண்ணுண்டல்லது உணவு

உண்ணேன்" எனச் சூளுரைத்துச் சென்று, அந்நாட்டைக் கைப்பற்றிய சேரன், அப்பகைவர் நாட்டு மண்ணை உண்டிலனேயன்றி, இவன் நாட்டு மண்ணை, கருவுற்ற இவனாட்டு மகளிர் தம் வேட்கைதீர உண்டிருப்பரே அல்லால், பகைவர் எவரும் உண்டறியார்:

"வேலன்று வென்றி தருவது; மன்னவன்
கோல்; அதூஉம் கோடாதெனின்" (திருக். ௫௪௬)

என்ப ஆகலின், அவன் அரண், வரிசையாக அம்புகளைக் கொண்டிருப்பதோடு, அறம் நிலைபெறுதற்கு ஏதுவாம் செங்கோலாலும் சிறந்து காக்கப்பெறும் என்று தாம் உணர்ந்தன உரைத்துப் பாராட்டினார்:

"இருமுந்நீர்க் குட்டமும்,
வியன்ஞாலத்து அகலமும்,
வளிவழங்கு திசையும்,
வறிதுநிலைஇய காயமும், என்றாங்கு
அவை அளந்தறியினும் அளத்தற்கரியை;
அறிவும், ஈரமும், பெருங்கண் ணோட்டமும்;
சோறுபடுக்கும் தீயொடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது,
பிறிதுதெறல் அறியாரநின் நிழல்வாழ் வோரே;
திருவில் அல்லது கொலைவில் அறியார்;
நாஞ்சில் அல்லது படையும் அறியார்;
திறனறி வயவரொடு தெவ்வர் தேயஅப்
பிறர்மண் உண்ணும் செம்மல் நின்னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணின் அல்லது
பகைவர் உண்ணா அருமண் ணினையே;
அம்புதுஞ்சும் கடியரணால்
அறம்துஞ்சும் செங்கோலையே." (புறம்: ௨௦)

இவ்வாறு சேரன் சிறப்பும், அவன் முன்னோர் சிறப்பும், அவன் நாட்டின் வளமும், அவன் நாடாள் திறமும் விளங்கப்பாடிய புலவர், அவன் தன்பால் வந்து இரந்தவர், மீண்டும் வேறிடம் சென்று பொருள்வேண்டி இரந்து

நிற்கும் நிலையிலராமாறு நிறைய அளிக்கும் கொடைக்குண முடையான் என அவன் கொடைச் சிறப்பையும் பாராட்டு வாராயினர் :

> "வேழ நோக்கின் விறல்வெஞ் சேஎய்!
> வாழிய பெரும! நின் வரம்பில் படைப்பே;
> நிற்பாடிய வயங்கு செந்நாப்,
> பிறரிசை நுவலாமை
> ஓம்பாதீயும் ஆற்றல் எங்கோ
> மாந்தரஞ் சேரல் இரும்பொறை." (புறம் : ௨௨)

சேரனைச் சிறக்கப் பாடிய இச் செய்யுட்கள், புலவர் குறுங்கோழியூர் கிழாரின் புலமைநலம் பொன்றாது விளங்க, அவர் புலமை நலம் கண்டு பின்னுள்ளோர் பாராட்டப் பெரிதும் துணையாய் அமைந்து விளங்கு கின்றன.

## ௧௮. குன்றூர்கிழார் மகனார் கண்ணத்தனார்

குன்றூர்கிழார் என்றமையால் அறிந்துகொள்ளலாம்; அத்தகைய பெருமை வாய்ந்த பெரியார் ஒருவரின் மகனாராகிய கண்ணத்தனார், மகட்பாற் காஞ்சித்துறை தழுவிய புறப்பாட்டொன்றையும், குறிஞ்சித்திணை குறித்துவந்த அகப்பாட்டொன்றையும் பாடியுள்ளார்.

புறப்பாட்டில், நெடுவேளாதன் என்பானுக்குரிய போந்தை என்ற நகர், ஏர்கள் உழுத வயல்களையும், நீர் நிறைந்து நிற்கும் கழனிகளையும், நெல் நிரம்பிய வீடுகளையும், பொன் நிறைந்த தெருக்களையும், வண்டுகள் ஒலிக்கும் மலர்கள் நிறைந்த சோலைகளையும் உடையது என்று உயர்த்திக் கூறி, பழங்காலப் பேரூர்களின் பண்புணர வழி செய்துள்ளார்:

> "ஏர்பரந்த வயல் நீர்பரந்த செறுவின்,
> நெல்மலிந்த மனை, பொன்மலிந்த மறுகின்,
> படுவண்டார்க்கும் பன்மலர்க் காவின்
> நெடுவேளாதன் போந்தை."

தாம் ஒற்றைப்பதியில் அமைந்த ஊரில் வாழ்பவரே எனினும் தம் பகைவராகக் கருதி நோக்கி இரந்து வேண்டினாலல்லது, மூவேந்தரே வரினும், அவர் வணங்கிக் கேளாது வாள்காட்டிக் கேட்பின் அளிக்கார் என அக்காலத் தந்தையரின் மானவுணர்வினைப் புலப்படுத்தியுள்ளார்:

> "கொற்ற வேந்தர் வரினும் தற்றக
> வணங்கார்க்கு ஈகுவன் அல்லன் ....
> ஓரெயில் மன்னன் ஒருமட மகளே."                (புறம்: ௩௩௮)

அகப்பாட்டில், தலைமகன் நாள்தோறும் தவறாது வந்து தலைவிக்கு அன்புகாட்டிச் செல்கின்றானாகவும், அத்தலைமகள் வருந்தி வாடுவதறிந்த அவள் தோழி, "அவன் தவறாது வருகின்றானாகவும், நீ வாடுவது ஏன்?" என்று வினவினாளாக, "தோழி! அவன் நாள்தோறும் வருகின்றான்; ஆதலின் வருந்தற்க என்று கூறுகின்றனை; நான் அவ்

வாறு அவன் நாள்தோறும் வருவதை எண்ணியே வருந்து
கின்றேன். அவன் வந்து அன்புகாட்டுகின்றான் எனினும்,
அவன் புலிபல கூடிவாழும் கொடிய வழியினைக் கடந்
தன்றோ வரவேண்டியுள்ளது? அவ்வழியில் அவனுக்குண்
டாம் ஏதத்தை எண்ணிப் பார்ப்போர், வருந்துவதல்லது
மகிழ்வர் செய்வர்? அவர் வந்து அன்பு காட்டுவதால்,
அவர்க்கு ஆங்குண்டாம் ஏதத்தை மறந்துவிடல் இயலுமா?
எனக் கூறினாள் என்பபடி, அக்காலப் பெண்ணுலகம்,
கணவர் நலமே தம் நலம், தம் துயர்கண்டு வருந்துவதி
னும், தம் கணவன்மார் துயர்கண்டே பெரிதும் துயருறு
வர் என்ற உண்மையினை உரைத்த திறம் உளங்கொளற்
பாலதன்றோ?

"இகுளைத் தோழி இஃது என்னெனப் படுமோ?
குவளை குறுநர் நீர்வேட்டாங்கு
நாளும்நாளுடன் கவவவும், தோளே
தொன்னிலை வழீஇய நின்தொடி எனப் பன்மாண்
உரைத்தலான்றிசின் நீயே ....

ஆரிருள் வருதல் காண்பேற்கு
யாங்காகும்மே இலங்கிழை செறிப்பே' (நற். ௩௩௨)

இதில் தலைவன் தவறாது தலையளி செய்யவும் தலைமகள்
தளர்கின்ற நிலைக்கு, நீர் நடுவே நின்று குவளைமலர் பறிப்
போர் நீர்வேட்கையால் வருந்துகின்றமை என்று கூறும்
நிலையினை உவமையாகக் கூறி இரண்டும் இயல்பன்று என
விளங்கவைத்த புலமைச்சிறப்பையும் போற்றுக.

## ௧௧. கூடலூர் கிழார்

கூடலூர் கிழார்க்குரிய கூடலூர், மலைநாட்டில் பொறை நாட்டுப் பாலைக்காட்டு வட்டத்து நெடுவட்டம் என்ற நாட்டில் உளது என்ப. கூடலூர்கிழார், யானைக்கண் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை வேண்டிக்கொள்ள, ஐங்குறுநூற்றினைத் தொகுத்த பேரறிவாளராவர்; இவரைப் புலத்துறை முற்றிய கூடலூர்கிழார் எனப் புலவர்களே பாராட்டுவர் எனின், இவர் புலமையின் பெருமையினை என்னென்பது? கூடலூர்கிழார், ஐங்குறுநூறு தொகுக்கத் துணைபுரிந்தோனாகிய யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையினையும், அவனுக்குரிய கடற்கரைப் பட்டினமாகிய மாந்தை மாநகரையும் பாராட்டியுள்ளார். கூடலூர் கிழார் கணித நூலிலும் வல்லவராவர். ஒருநாள் நாண்மீன் ஒன்று விழக்கண்ட இவர், இந்நாண்மீன் இன்னநாளில் வீழ்ந்ததாக, சேரமான் இன்னநாளில் இறப்பன் என அறிந்து அஞ்சி, அவனும் அவ்வாறே இறந்தமைகண்டு கலங்கிக் கண்ணீர்விட்டுப் பாடிய பாட்டு புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது.

> "ஒருமீன் விழுந்தன்றால் விசும்பி னானே,
> அதுகண்டு, யாமும் பிறரும் பல்வேறு இரவலர்
> பறையிசை அருவி நன்னாட்டுப் பொருநன்
> நோயில னாயின் நன்றுமன் இல்லென
> அழிந்த நெஞ்சம் மடியுளம் பரப்ப
> அஞ்சினம், எழுநாள் வந்தன்று, இன்றே
>
> மேலோர் உலகம் எய்தினன்." (புறம் ௨௨௯)

அகத்துறைப் பாட்டொன்றில் அண்மையில் மணந்த கணவன் வீடுவந்த தமிழ்ப் பெண்ணொருத்தி ஆற்றும் இல்லறச் சிறப்பினை எடுத்துக்காட்டி ஏற்றிப் போற்றியுள்ளார்.

கணவன் விரும்பி உண்ணும் உணவு புளிக்குழம்பு என அறிந்த அப்பெண், அக்குழம்பினைத் தன் வீட்டில்

பிறர் செய்யின், அவன் வேண்டும் சுவையறிந்து செய்யார் என்று கருதித் தானே செய்யத் தொடங்கினாள்; அதற்கு வேண்டிய தயிரை எடுத்தாள்; அது நன்றாக இறுகி, "பாறைபடுதயிர்" என்று போற்றுமாறு காணப்பட்டது; அதைத் தன் கைகளால் பிசைந்தாள்; அவ்வாறு பிசைந்து கொண்டிருக்கும்போது, தான் கட்டியுள்ள ஆடை நழுவு வதை உணராதாள்; விரைவில் உணவாக்குதல் வேண்டும் என்ற வேட்கை அவளுக்கு; அவ் வேட்கையால், தன் ஆடை மாசுபோகக் கழுவப்பெற்ற கைகளாலேயே தொடக் கூடிய மென்மையும், நுண்மையும் அமைய நெய்யப்பெற்ற அருமை வாய்ந்தது என்பதையும், தன் கை தயிர்பிசைந்த கறையுடையது என்பதையும், அக்கையினைக் கழுவவேண் டும் என்பதையும் மறந்தாள்; அப்படியே ஆடையைப் பற்றிச் சரிசெய்து கொண்டாள், அடுப்பருகே அமர்ந் தாள்; தாளிப்புப்புகை தன் கண்களைத் தாக்குவதையும் பொருட்படுத்தாது தாளித்துத் துழவி முடித்தாள். கண வன்முன் அமர்ந்து அவன் உண்ண ஊட்டினாள்; அவனும், "குழம்பு மிக மிக நன்று" என்று பாராட்டுரை பகர்ந்து கொண்டே உண்ணலாயினன் அவன் பாராட்டு அவள் உள்ளத்திற்கு உவகை அளித்தது; அவ்வுவகை, சிறு முறுவல் தோற்றத்தில் அவன் வாய்வழித் தோன்றி நின்றது. இவ்வரிய காட்சியினைக் காணும் பேறுபெற்ற செவிலி, தான் கண்ட தன்மகள் நடத்தும் இல்லறச் சிறப் பினை நற்றாய்க்கு எடுத்துக்கூறி இன்புறுத்தி இன்புற்றாள்:

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்
இனிது எனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே."

(குறுந்: கசுஎ)

## ௨௦. கொடியூர்கிழார் மகனார் நெய்தல்தத்தனார்

தத்தனார் என்ற இயற்பெயருடைய இவர் நெய்தல் திணையைப் பாடிய சிறப்பால் நெய்தல்தத்தனார் என அழைக்கப்பெற்றார், இவர் தந்தையார் கொடியூரிற் பிறந்து அரசரால் கிழார் என்று சிறப்புப்பெயர்பெற்ற மூதறிவினராவர்.

பரதியர் அலைகொண்டு வந்து கொழித்த பால் போலும் தூய மணல்மேட்டில் ஆடி மகிழ்வர், முடியிட்ட வலையால் பற்றப்பெற்ற இறால்மீன்களைப் பகல்பொழுது போமளவரை காத்துக்கிடப்பர்; பரதவர் சுறாபோன்ற பெருமீன்கள் கிடைக்கப்பெற்றால் அம்மகிழ்ச்சியால் சின்னாளவரை வேட்டைமேற் செல்வதைவிட்டு, வீட்டுள் உறங்கிக் கிடப்பர்; அப்பரதவர் முன்றில் புன்னைமலரின் மணமும், தாழையின் மணமும், கலந்து மணக்கும் என நெய்தல்நிலத்தின் இயல்பினை நன்கு எடுத்துப்பாடி, நெய்தலைப்பாடவல்லவர் என்பதை (நற்: ௪௯) நாட்டியுள்ளார்.

தனித்திருக்கும் தலைவியின் இயல்பினை விளக்கும் நெய்தல் பாடவல்ல தத்தனார், பிரிவை பொருளாகக் கொண்ட பாலையும் பாடவல்லவராவர். அவர் பாட்டின் பொருளாழத்தை உணர்க

கடிதுவந் திறுத்த கணைஎழில் வாடை
நெடிதுவந் தனையென நில்லாது ஏங்கி
பல்புலந் துறையும் துணையில் வாழ்க்கை
நம்வலத் தன்மை கூறி அவர்நிலை
அறியும் ஆயின் நன்றுமன் இல்ல
பனிவார் கண்ணேம் ஆகி இனியது
நமக்கே எவ்வம் ஆகின்று
அனைத்தால் தோழிநம் தொல்வினைப் பயனே.”

(அகம்: ௨௪௩)

## ௨௧. கோவூர் கிழார்

அறிவுநலம் சான்ற ஆன்றோர்களுள் கோவூர் கிழாரும் ஒருவர். 'சான்றோர் உடைத்து' என்ற சிறப்பினை உடைய தொண்டை நாட்டில், செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள கோவூரே நம்புலவர் பெருந்தகையார் பிறந்த பேரூராம். கோவூர் கிழார், சான்றோர்கள் நிறைந்த தொண்டை நாட்டில் தோன்றிய சிறப்பினால், சான்றோர்பால் அமையலாம் அருங்குணங்கள் பலவற்றையும் ஒருங்கே பெற்று உயர்ந்து விளங்கினார்; வாழப்பிறந்த உலக உயிர்கள் வாழாது வீணே மடிவது காண இவர் உள்ளம் பொறார்; ஆதலின், அவ்வுயிர்கள் அழிவதைத் தடுக்கத் தம்மாலாவன செய்வதே அறிவுடையோர் கடனாம் என்ற கொள்கையினராய் வாழ்ந்தார்; இவர் தலையிட்டால் தடையுற்ற போர்களும் அதனால் பிழைத்து உயிர் வாழ்ந்த உயிர்களின் தொகையும் மிகப்பலவாம்.

தமிழகம், தன்னேரில்லா அரசுபெற்றுத் தழைத்திருந்த காலம், மூவேந்தர் அரசோச்சிய காலமாம் என்ற பாராட்டுரைகளுக்கிடையே, தன்னேரில்லா அரசோச்சிய தமிழகம் தாழ்ந்தமைக்கும், அம்மூவேந்தர்களும், அவர்கள் காலத்தே தமிழ்நாட்டின் சிறுபகுதிகளை ஆங்காங்கே ஆண்டிருந்த குறுநில மன்னர்களுமே காரணமாம் என்ற பழியுரைகளையும் எழுத வேண்டிய நிலையிலேயே அன்றைய அரசியல் அமைந்திருந்தது.

மூவேந்தர்கள் ஒற்றுமைகொண்டு ஊராண்டவரல்லர்; அவர் ஒவ்வொருவரும் பிறரை அடக்கி ஆள வேண்டும் என்ற எண்ணமுடையராவர்; ஒருகுடியில், ஒரு காலத்தே ஆற்றல்மிக்க அரசனொருவன் தோன்றிவிட்டால், அவன் பிற அரசுகளை எல்லாம் பணியவைத்துப் பேரரசனாய் வாழவேண்டும் என்று எண்ணுவதும், அவன் ஆற்றலும் செல்வமும் கண்டு மனம் பொறாத ஏனைய அரசர்கள் அனைவரும் ஒன்றுகூடி அவனை அழிக்க வழிகோலுவதும்

அக்கால வழக்கமாம். ஒருகுடியிற் பிறந்தார், பிறகுடியிற் பிறந்தாரோடு பகைத்து வாழ்தலோடு நின்றாரல்லர்; ஒரு குடியிற் பிறந்தவர்களே ஒருவரோடொருவர் பகைத்துப் போர் மேற்கொள்வர்; அம்மட்டோ? தந்தை மகனை எதிர்ப்பன்; மகன் தந்தைமேல் போருக்கு எழுவன்; இதுதான் பழைய தமிழகத்தின் அரசியல் நெறி.

இவ்வரசியல் முறையால் தமிழகம் முழுதும் அழிந்து மண்ணோடு மண்ணாய் மறைந்து போகாமல், தமிழகம் என்ற பெயரால் இன்றும் ஒரு நாடு உளது என்ற இந்நிலைக்குக் கோவூர்கிழார் போன்ற புலவர்களே காரணமாவர்; அவர் போன்ற புலவர் பலர், பாடிப் பிழைப்பதே தம் தொழில் என்று அடங்கியிராராய், அக்கால அரசர்கள் நெறிதவறுந்தோறும், அஞ்சாது முன்வந்து, ஏற்ற வகையில் இடித்துக்கூறித் திருத்தியதனாலேயே தமிழ்மொழி கேட்கும் நாடு ஒன்று உலகின் ஒரு பகுதியாகத் திகழ்கின்றது; வாழ்க அப்புலவர் பெருமக்கள்

தமிழகத்தில் மருதவளம் சான்ற மாண்புடையது சோழநாடாகும்; அந்நாடு காவிரியாறு பாய்ச்சலால் பலவளம் கொழிக்கத் திகழ்ந்தது. "சோழநாட்டு நன்செய்கள், நெற்பயிருக்கு வேலிபோல் வளர்ந்திருக்கும் கரும்புகள் நின்ற பாத்திகளில் மலர்ந்த பல நிறமலர்களின் மணம் நாறும்; புன்செய்நிலமாம் மேட்டுநிலங்கள், புல் மேயும் பல்வகை ஆனிரைகளோடு, அவற்றிற்குக் காவலாய் அமைந்த வில்வீரர் உறையும் பல அரண்களைக் கொண்டிருக்கும்; நெய்தல் நிலப் பகுதிகள், காற்று இயக்க இயங்கிக் கரை சேர்ந்த கலன்களை எண்ணிக் கணக்கிடும் எழில் மிகு மகளிர், நிழல் கருதியிருக்கும் கானற் சோலைகளைக் கொண்டிருக்கும்; கழியிடை ஊர்கள், வெள்ளுப்பினை, உள்நாடுகளிலும் சென்று விற்கும் உப்புவணிகராம் உமணர் வாழ்க்கையால் வளமுற்றுத் திகழும்" எனத் தாம் கண்ட சோழநாட்டு வளத்தைப் புலவர் கோவூர் கிழார் போற்றிப் புகழ்வது காண்க:

"வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன்மலர்ப் பூத்ததும் பின்று;
புறவே, புல்லருந்து பல்லாயத்தான
வில்லிருந்த வெங்குறும் பின்று;
கடலே, கால்தந்த கலன் எண்ணுவோர்
கானற் புன்னைச் சினையலைக்குந்து;
கழியே, சிறுவெள் உப்பின் கொள்ளை சாற்றிப்
பெருங்கல் நன்னாட்டு உமண் ஒலிக்குந்து" (புறம். ௩அ௬)

இத்துணை வளம் செறிந்த சோணாடு, கோவூர்கிழார் காலத்தே இருநாடுகளாகப் பிரிவுண்டு, அம்மரபைச்சேர்ந்த வேறு இரு கிளையினரால் ஆளப்பட்டு வந்தது. புகாரைத் தலைநகராகக் கொண்ட கடற்கரையை ஒட்டிய நாட்டை ஒருவரும், உறையூரைத் தலைநகராகக் கொண்ட உள்நாட்டை வேறு ஒரு திறத்தாரும் ஆளலாயினர். கோவூர் கிழார் சோணாடு நோக்கிப் போங்கால், உறையூரில் கிள்ளி வளவன் என்பவன் அரசாண்டிருந்தனன். கிள்ளிவளவன், புலவன், புரவலன், புலவர்போற்றும் பண்பாளன், பொரு பகை அஞ்சாப் போர்வல்லான் என்பன எல்லாம் ஆலத்தூர் கிழார், ஆவூர் மூலங்கிழார் வரலாறு உரைத்தவழி விளங்க உணர்த்தப்பட்டுளது. புலவர் பலர் போற்ற வாழ்ந்த வளவனைத் தாமும் சென்று பாராட்ட விரும்பினார்; அவ்வாறே சென்றும் கண்டார்; 'புலமிக்கவரைப் புலமை தெரிதல் புலமிக்கவர்க்கே புலனாம்' என்ப. கோவூர் கிழாரின் புலமைப்பெருமையினைப் புலமை மிக்கோனாகிய வளவன் உணர்ந்தான்; அவர் உவக்கும்வகை உணவு முதலாயின அளித்துச் சிறப்பித்தான்; அவன் தமக்களித்த வரவேற்புவிருந்தினை வாழ்த்திக்கூறிய புலவர் நல்லுரைகள் பொன்னுரைகளாம்:

பெரிய நீர்நிலையில் பெய்த மழைநீர் துள்ளித் தெறித்தலே போல், நெய் துள்ளத்துள்ள வறுக்கப்பட்ட வறுவல்களையும், சூட்டுக்கோலால் கிழித்துச் சுடப்பட்ட ஊனையும், மண்டையோடு நிறைய வார்த்த பாலையும் சுடச்சுட உண்டு வியர்த்தலல்லது, வேலைசெய்து வியர்க்கா

வண்ணம் வேண்டுவ எல்லாம் எமக்களித்துப் புகழை எல்லாம் தனதாக்கிக்கொள்ளும குணமுடையான் கிள்ளிவளவன் வளவன் வண்மை கண்டளித்த வாழ்த் துரை இது :

“நெடுநீர் நிறைகயத்துப்
படுமாரித் துளிபோல
நெய்துள்ளிய வறைமுகக்கவும்,
சூடுகிழித்த வாடூன் மிசையவும்,
ஊன்கொண்ட வெண்மண்டை
ஆன்பயத்தான் முற்றளிப்பவும்,
வெய்துண்ட வியர்ப்பல்லது,
செய்தொழிலான் வியர்ப்பறியாமை
ஈத்தோன் எந்தை இசைதனதாக’ (புறம் ௩௮௬)

கோவூர்கிழார், கிள்ளிவளவன் தரும கொடைப் பொருள் ஒன்றே கருதி வந்தவரல்லர்; அவன் கொற்றம் காணவும் வந்தவராவர். ஆதலின், அவன்பால தாம கண்ட வெற்றிச் சிறப்புக்களையும விளங்க உரைத்துள்ளார்.

“உயிர்களைக் கொல்வதே தொழிலாகக் கொண்ட கூற்றுவனும, தான் விருமபியாங்கு, விரும்பியபோதே, விருமபிய உயிர்களைக் கொல்லான்; அவ்வுயிர்களைக் கொல்லுதற்காம காலம பார்த்தே கொல்வன்; ஆனால் கிள்ளிவளவனோ, அவவாறு காலம எதையும பாரானாய், தான் அழிக்க விருமபிய பகைவர்களைத் தான் வேண்டிய வாறு, வேண்டிய இடததிலேயே அழிக்கும கொடியனுவன்; ஆதலின், கிள்ளிவளவன் பகைபெற்ற நாட்டில்வாழ் அரச ரும் வீரரும், தம் மக்களைப் பிரிந்து மாளவேண்டுமே என்ற எண்ணத்தால், அமமக்களை வாரியெடுத்து வாய்நிறைய முத்தம் அளித்தும, நாட்டிற்கும் தமக்கும் உண்டாம் ஏதத்தைத் தம் மனைவிமார் அறியின் பெரிதும் வருந்துவ ராதலின், அதை அவர் அறியாவண்ணம் மறைத்தும் துன் புறுவர்,” என்று அவனைப் பாராட்டி அவன் பேராண்மை தோன்றச் செய்தார் :

“ காலனும் காலம் பார்க்கும்; பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத்து அடூஉம் வெல்போர் வேந்தே!

........நின்ன வருதிறன் நோக்கி
மையல் கொண்ட ஏமமில் இருக்கையர்,
புதல்வர் பூங்கண் முத்தி, மனையோட்கு
எவ்வம் காக்கும் பைதன் மாக்களொடு
பெருங்கலக் குற்றன்றாற் றானே, காற்றோடு
எரிநிகழ்ந் தன்ன செலவின்
செருமிகு வளவ! நிற் சினைஇயோர் நாடே ” (புறம: ௪௧)

‘புல்லிதழ் பூவிற்கும உண்டு’ என்ப குணத்தால், கொடையால, கொற்றத்தால சிறந்தானாகிய கிள்ளிவளவன் பால் ஒரு தீசெயல நிகழ இருந்தது. கிள்ளிவளவன், மலையமான் திருமுடிக்காரிபால் ஏதோ பகை கொண்டிருந்தான்; அதனால அவன், அக்காரியின முள்ளூர் மலையினை முற்றி அழித்து அவனையும கொன்றுவிட்டான்; வளவன் அவ்வெற்றியோடு அமைந்தானல்லன்; அவன் இருமக்களையும் கைப்பற்றிக் கொணர்ந்து தன் யானையின் காற் கீழிட்டுக் கொல்லத் துணிந்தான், அரசன் கொடுஞ் செயல் அறிந்த உள்ளத்தைத் துயர்க்கடலில ஆழ்த்திற்று. அச்செயலால் வளவனுக்கு நீங்காப பழியுண்டாம என்பதோடு, வள்ளல் ஒருவனின் மக்கள மாளவதை, அவன் அளித்தன ஏற்றுவாழும் தமமொத்த புலவா பார்த் திருப்பதா? என்றும எண்ணினார்; அவர்களை எவ் வாற்றானும் தப்புவித்தல்வேண்டும் என்று துணிந்தார். அரசனை அடைந்து, அவன் உளம் திருந்தும் உரைகளை ஆராய்ந்துகொண்டு, “ அரசே! நின்முன்னோர், ‘உற்ற துயர் தீர்த்து அருள்செய்ய வேண்டுகின்றேன்’ எனக் குறைகூறும ஆற்றலற்ற புறப்போன்ற சிற்றுயிர்க்குற்ற துயரையும் போக்கும் உயர்குணமுடையராவர்; இதோ, நின் யானையால் கொல்லப்படவிருக்கும் இவர்களோ, அறி வுடைப் பெருமக்கள் வறுமையால் வாடுவதஞ்சி, தம்மிடத்

துள்ளவற்றை அவர்க்குப் பகிர்ந்தளித்து வாழும் அருட் குணமுடையோர் வழிவந்தவராவர்; இவ்வாறு அடைக்கலம் புகுந்தாரை ஆதரிக்கும் அருட்குணமுடையோர் வழிவந்த நீ, அண்டியோரை ஆதரிக்கும் அக்குணமே உடையோர் வழிவந்த இவரை அழிக்க எண்ணுதல் அறச் செயலாமோ என்பதை எண்ணிப் பார்ப்பாயாக, மேலும், இவர்கள் நின்னொடு பகைத்துப் போரிடும் பருவமுற்றாரும் அன்றே: தாம் எங்கே இருக்கிறோம்? எத்தகைய துயர் நிலை தமக்கு வரப்போகிறது என்பதை அறியாமல், அறிமுகம் இல்லா இடத்தில் வந்துள்ளமையால் வருந்தி அழுது, தம்முன் வந்து நிற்கும் யானையை, அது தம்மைக் கொல்ல வந்து நிற்கிறது என்பதையும் அறியாமல், கண்டு களித்து அக்களிப்பால் தம் அழுகையை மறந்து, மறுவலும் தம்மைச் சூழ்ந்திருப்பார் முகங்களைப் பார்த்து, அவற்றுள் தாம் அறிந்த முகம் ஒன்றும் இல்லாமை கண்டு மீண்டும் அழுகை மேற்கொள்ளும் அத்துணை இளையரன்றோ! இத்துணை இளையரைக் கொல்வது நினக்கு இழுக்கன்றிப் புகழாமோ என்பதையும் எண்ணிப் பார்ப்பாயாக" என்று கூறி முடித்தார்; கோவூர்கிழார் கோவைபட எடுத்துக்காட்டிய காரணங்களைக் கேட்ட பின்னரும் தான் துணிந்ததே செய்யும் தகுதியிலானல்லன் அவன்; அவர் சொல்கொண்டு அம்மக்களைப் போகவிட்டான்:

"நீயே, புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை;
இவரே, புலனுழு துண்மார் புன்கண் அஞ்சித்
தமது பகுத்துண்ணும் தண்ணிழல் வாழ்நர்,
களிறுகண்டு அழூஉம் அழாஅல் மறந்த
புன்தலைச் சிறாஅர்; மன்று மருண்டுநோக்கி
விருந்திறப் புன்கணோ வுடையார்;
கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே."

(புறம்: ௪௬)

இவ்வாறு அவன் தவறு கண்டு திருத்தி, நல்லாட்சி நிற்கத் துணைபுரிந்து வாழ்ந்திருந்தார் கோவூர்கிழார்.

உறையூரில் வாழ்ந்திருந்த கோவூர்கிழார், புகாரைத் தலைநகராகக்கொண்டு சோணாடாண்ட நலங்கிள்ளியைக் காண எண்ணினர்; நலங்கிள்ளியும் நல்லிசைப் புலவருள் ஒருவனாவன். 'ஊக்கமுடையாரிடத்திலேயே உறுபொருள் நிற்றல்வேண்டும்; ஆற்றல் மிக்காரிடத்திலேயே ஆட்சி இருத்தல்வேண்டும்' என்ற கருத்துக்கள் அமைய அவன் பாடிய பாக்களின் பெருமையினைப் பாராட்டாதார் ஒருவரும் இலர்; நலங்கிள்ளி, நல்லொழுக்கமுடைய நல்லோனவன்; இவ்வாறு குணங்களால நிறைந்தமையோடு நாடாளதிறமும் நன்கு வாய்க்கப்பெற்றவன்; அதற்காம் பெருமபடையும் அவன்பால் இருந்தது; இவ்வாறு எல்லா வகையானும சிறந்தோனாகிய அவன் உறவு வேண்டினர் கோவூர்கிழார்; உறந்தை நீங்கி புகாருட் புகுந்தார், அரசனும், புலவரைப் போற்றி அழைத்துப் பொன்னும் பொருளும அளித்தான்; அவன் அளித்த பொருள்கள் தம் வாழ்நாளிறகு மேலும் வரும் பெருமபொருளாதல் அறிந்த கோவூர்கிழார், "இனி, நான், பொருளவேண்டிப் பிறரைப் பாடேன்:

> "நலங்கிள்ளி நசைப் பொருநரேம
> பிறாபாடிப் பெறல் வேண்டேம்;
> அவற்பாடுதும அவன்தாள வாழியஎன" (புறம் ௩அஉ)

எனப் பாடிப் பாராட்டியதோடு, வள்ளியோர்த் தேடி வருவார்க்கும், 'நலங்கிள்ளி, பிறரிடம சென்று பின்னரும் இரக்காவண்ணம் பெரும்பொருள தருமஅருங்கொடை உடையான்; அவனைச் சென்று பாடுக'—"பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே" என்று கூறி அவன் வண்மைக் குணத்தினை வாயார வாழ்த்தினர்

நலங்கிள்ளியின் வண்மைதோன்ற வாழ்த்திய புலவர், அவன வெற்றிச்சிறப்பினையும விளங்க உரைத்துளார்; அவன் போர்வேட்கையும் அவ்வேட்கை தணிவிக்கும் அவன் படைச்சிறப்பும், அபபடை கண்டு அஞ்சும் பகையரசர்களின் அவலநிலையும் ஒருங்கு தோன்ற உயர்த்திக்

கூறியுள்ளார் ஒருபாட்டில் "வேந்தே! வெற்றியாலாம் புகழே விரும்பிய நீ, அதைப் பெறுங்கருத்துடையையாய், எப்பொழுதும் படைகளோடு பாசறையில் வாழ்வதை விரும்புகின்றனையே யன்றி நகர்வாழ்தலை நச்சுகின்றாயல்லை; பகைவர் தம் பேரரண்களைத் தம் கோடும் மழுங்குமாறு குத்தி அழிக்கும் நின் யானைப்படையும் போர் ஆர்வம் மிக்குளது. போர் என்றவுடனே பூரிக்கும் தோளுடைய நின் வீரர்கள், பகைத்துச் செல்லும் நாடு, காடுகளுக்கப்பால் மிகச் சேய்மைக்கண் உளது. ஆகலின் ஆண்டுச் செல்லேம் என்று கூறார்: இத்தகைய நின் இயல்பும், நின் படையின் இயல்பும் உணர்ந்த வடநாட்டில் வாழும் நின் பகையரசர்கள், நலங்கிள்ளியின் பெரும்படை எந்த நேரத்திலும் வந்துவிடும் என்ற அச்சமுடையராய், உறக்கம் ஒழித்து அழிவர," என்று கூறிய இப்பாராட்டுரை நலங்கிள்ளியின் படைப்பெருமையினைப் பாரோர் உணரப் பயன்படுமன்றோ?

"நல்லிசை வேட்டம் வேண்டி, வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் லாயே;
நுதிமுகம் மழுங்க மண்டி ஒன்னார்
கடிமதில் பாயும் நின் களிறடங் கலவே;
போர் எனிற் புகலும் புனைகழல் மறவர்
'காடிடைக் கிடந்த நாடு, நனிசேய,
செல்வேம் அல்லேம்' என்னார்;

வலமுறை வருதலும் உண்டு என்று அலமந்து
நெஞ்சு நடுங்கு அவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே" —(புறம் ௩௧)

நலங்கிள்ளியின் வெற்றிச் சிறப்பினை இவ்வாறு பொதுவாகப் பாராட்டிய புலவர், அவன் சேரர் தலைநகராம் வஞ்சிமாநகரையும், பாண்டியர் தலைநகராம் மதுரைமாநகரையும் வென்று கைக்கொண்ட நிகழ்ச்சிகளையும் எடுத்துக்கூறிப் போற்றியுள்ளார்; அவ்வெற்றியை அவர் அறி

விக்கும் திறம் அறிவுடைப் பெருமக்கள் அறிந்து பாராட்டத்தக்கதாம்.

“குயவன் திகிரியின்கீழ், அவன் சிறுவர்கள் பிசைந்துவைத்த மண், அக்குயவன் எண்ணிய வடிவமாகவே மாறிப் பயன் அளித்தலேபோல், இந்நாடு நலங்கிள்ளி ஆட்டியபடியெல்லாம் ஆடும் இயல்புடையது ஆதலின், நலங்கிள்ளி தன்பால் வந்து பொருள்வேண்டி நிற்கும் பாணர்க்குப் பொருள் அளிப்பதற்கு மாறாக, அப்பொருட்குரிய விலையாக, சேரர்க்குரிய வஞ்சிமாநகரை வென்று கொடுப்பான், பாணர்பின் பாடிநிற்கும் விறலியர்க்குத் தரும் பூவிற்கு மாறாக, அப்பூவின் விலையாக, பாண்டியர்க்குரிய மதுரையைவென்று தருகுவன்,” என்று, அவன் கொடையும், கொற்றமும் ஒருங்கே விளங்கப் பாராட்டியுள்ளமை உணர்க:

“கடும்பின் அடுகலம் நிறையாக நெடுங்கொடிப்
பூவா வஞ்சியும் தருகுவன் ஒன்றோ;
வண்ணம் நீவிய வணங்கிறைப் பணைத்தோள்
ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுகென
மாட மதுரையும் தருகுவன்

வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த
பசுமட் குரூஉத்திரள் போல, அவன்
கொண்ட குடுமித்து இத்தண் பணைநாடு”

—(புறம். ௩௨)

கோவூர்கிழார், புகார்நகரத்தே வாழ்ந்திருக்குங் கால், உறையூர் அரசியலில் மாறுதல் உண்டாயிற்று. உறையூர் ஆண்டிருந்த அரசன் இறந்து விட்டான்; அவ்வரியணையை அடைவதில் அரசர்களிடையே ஒற்றுமை உண்டாகவில்லை. அதைத் தானே கைப்பற்றி ஆள எண்ணினான் நெடுங்கிள்ளி என்பவன்; நெடுங்கிள்ளிக்கு, உறையூர் ஆட்சியைக் கைப்பற்றுவதற்கு முன்னர், ஆவூர்க் கோட்டைக்குரியனாய் ஆண்டிருந்தான். உறையூர் ஆட்சி

உரிமையைத் தனதாக்கிக்கொள்ள விரும்பினான் நலங்கிள்ளியும்: இதனால் நெடுங்கிள்ளிக்கும், நலங்கிள்ளிக்கும் பகை உண்டாயிற்று; பகைவன் படைப்பலம் பெற்று வளர்தற்கு முன்னரே அவனை அழித்து விடுவதே போர் நுணுக்கமாம் ஆதலின், நெடுங்கிள்ளி உறையூர் செல்லாவாறு, அவனை அவன் வாழும் ஆவூர்க்கோட்டையிலேயே அழித்துவிட எண்ணினான்; அவ்வாறே பெரும் படையோடு சென்று ஆவூர்க்கோட்டையை முற்றுகையிட்டான்; நெடுங்கிள்ளி, நலங்கிள்ளியின் பெரும்படையை எதிர்த்துத் தாக்கும் வன்மை தன் படைக்கு இல்லாமையால், ஆவூர்க்கோட்டையுள் அடைத்திருப்பானாயினன்; முற்றுகை பல நாள் நீடித்தது, உள்ளிருப்போர்க்கு வேண்டும் உணவு முதலாம் பொருள்கள் கிடைப்பது அரியவாயின: அந்நிலையை எண்ணியும், அவன் அரண் திறந்து வெளிவந்து போரிட்டானல்லன்; நலங்கிள்ளியும் முற்றுகையினைத் தளர்த்தினானல்லன்; உள்ளிருப்போர் வருந்தலாயினர், இந்நிலையினை உணர்ந்தார் கோவூர்கிழார். இம்முற்றுகையால், உள்ளே வாழ்வோர் துன்புறுவதை விரும்பினாரல்லர்; இந்நிலையை மாற்ற எண்ணினார்; ஒரு அரசன் தன்னைத் தாக்க வருகின்றான் எனின், ஆற்றல் இருந்தால் வருவோனை எதிர்த்துத் தாக்குதல் வேண்டும்; இன்றேல் அடங்கிப் பணிந்து போதல் வேண்டும்; இரண்டும் செய்யாது அரணுக்குள் அடங்கியிருப்பது அரசர்க்கு அழகன்று; ஆதலின், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி இருவரில் தவறு செய்வோன் நெடுங்கிள்ளியே என்று உணர்ந்தார், உடனே அரணுள் சென்றார், அவனை அழைத்து, “அரசே! உண்டற்குரிய உணவும், குடித்தற்குரிய நீரும் கிடைக்கப்பெறாமல் யானைகள் வருந்துகின்றன; பால் கிடைக்கப்பெறாத குழந்தைகள் கதறிக் கதறி அழுகின்றன; மகளிர், மலர் சூடுதலின்றியே தம் தலையினை வறிதே முடிக்கின்றனர்; வளம் வற்றிய மனைகளில் வாழ்வார் அழுது அரற்றுகின்றனர்; இவற்றையெல்லாம் கண்டும், கேட்டும் இனிதே அடங்கியிருத்தல் அழகன்று; அறம் நிற்கும் உள்ளத்தனாயின், மாற்றான் கை ஒப்பித்து

வெளியேறு; ஆற்றல் நிறைந்தோனாயின், வாளேந்திப் போரிட வெளியேறு; அறமோ, மறமோ இன்றி மறைந்து வாழ்தல் மாண்புடைத்தன்று," என்று அறிவுரை கூறினார்:

> "இன்னா தம்ம ஈங்கு இனிதிருத்தல்;
> துன்னருந் துப்பின் வயமான் தோன்றல்!
> அறவை யாயின் நினதெனத் திறத்தல்;
> மறவை யாயின் போரொடு திறத்தல்
> அறவையும் மறவையும் அல்லை யாகத்,
> திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்
> நீண்மதில் ஒருசிறை ஒடுங்குதல்,
> நாணுத் தகவுடைத்து இது காணுங் காலே." (புறம்: ௪௪)

அறிவுடைப் பெருமகனாராய கோவூர்கிழார் கூறிய அறவுரை கேட்டு, ஆவூர்க்கோட்டையை நலங்கிள்ளிபால் ஒப்படைத்து உறையூருட் புகுந்து வாழலாயினன்.

உறையூர் அரியணையில் அமர விரும்பிய நலங்கிள்ளி, எவ்வாற்றானும், அதைக் கைப்பற்றுதல் வேண்டும் என்ற கன்றிய உள்ளத்தனாய் வாழ்ந்திருந்தான் அக்காலை நிகழ்ந்த நிகழ்ச்சியொன்று கோவூர்கிழாரை உறையூர் செல்லப் பணித்தது.

இளந்தத்தன் என்ற புலவனொருவன், நலங்கிள்ளியைப் பாடிப் பரிசில் பெற்று, புகார்க்கும், உறையூர்க்கும் இடையே நிலவும் பகையினை உணரானாய், உறையூர் சென்று பரிசில்பெற நெடுங்கிள்ளியைப் பாடி நின்றான்; நலங்கிள்ளிபால் மாறாச் சினம் கொண்டு நிற்கும் மன்னவன், இளந்தத்தன் அவனிடத்தினின்றும் வந்துளான் என அறிந்தவுடனே, வந்தவன் புலவனல்லன்; பொருள் பெறுவதும் இவன் எண்ணமன்று, நலங்கிள்ளியின் ஒற்றனே இவன்; நம் படைப்பலம் அறிந்து போவதே இவன் எண்ணம் என்று கருதினான். உடனே அவனைக் கொல்லத் துணிந்தான்; இச்செய்தி கோவூர்கிழார்க்குத் தெரிந்தது; உறையூர்க்கு ஓடோடி வந்தார்; நெடுங்கிள்

ளியை நோக்கி "அரசே! இவன் உண்மையில் ஒற்ற னல்லன், என்னைப்போல் இவனும் ஒரு புலவன்; பழுமரம் தேடிச் செல்லும் பறவைபோல், பரிசில் நல்கும் பெருங் கொடையாளரை, கடத்தற்கரிய வழிகளைக் கடந்து தேடிச் சென்று அடைந்து அவரைத் தாம் அறிந்தாங்கு பாடி, அவர் கொடுப்பன பெற்று மகிழ்ந்து, பெற்ற பொருளைத் தமக்கெனப் பேணி வைத்துக்கொள்ளாது, பிறர்க்கும் கொடுத்து வாழும் இயல்பினராய புலவர் பிறர்க்குத் துயர் தர எண்ணியுமறியார். கல்வியால் மாறுபட்டாரைத் தம் புலமையால் வென்று, மண்ணாள் வேந்தரேபோல, இறுமாந்து வாழ்தலே அவர்க்கு இயல்பு; அத்தகைய புலவருள் ஒருவனாய இவன், நினக்குத் தீங்கு எண்ணுவா னல்லன், ஆதலின் இவனை உயிரோடு போக விட்டு அருள் பண்ணுவாயாக!" என்று கூறினார்.

"வள்ளியோர்ப் படர்ந்து, புள்ளிற் போகி,
நெடிய என்னாது சுரம்பல கடந்து,
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்,
பெற்றது மகிழ்ந்து, சுற்றம் அருத்தி,
ஓம்பாது உண்டு, கூம்பாது வீசி,
வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை,
பிறர்க்குத் தீதறிந் தன்றோ வின்றே; திறப்பட
நண்ணார் நாண அண்ணாந் தேகி,
ஆங்கினிது ஒழுகின் அல்லது, ஓங்குபுகழ்
மண்ணாள் செல்வ மெய்திய
நும்மோ ரன்ன செம்மலும் உடைத்தே. (புறம்: சஎ)

புலவர் சொல் போற்றும் பண்புடையன் ஆதலின், கோவூர்கிழார் கூறியன கேட்ட நெடுங்கிள்ளி, கொல்லக் கருதிய இளந்தத்தனைப் பிழைத்துப்போக விடுத்துப் புகழ் கொண்டான்

நெடுங்கிள்ளி, இளந்தத்தன்பால் நடந்துகொண்ட முறைகளை எண்ணிப் பார்த்த நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, பெரிதும் விழிப்பாயுளன்; காலம் கடத்தின், பின்னர்

அவனை உறையூரினின்றும் ஒழித்தல் அரிதாகிவிடும் ஆதலின், அவனை இப்போது எதிர்த்தல் வேண்டும் என்று துணிந்து படையோடு சென்று உறையூர்க்கோட்டையைச் சூழ்ந்துகொண்டான். நெடுங்கிள்ளி, ஆவூர்க்கோட்டையுள் அடங்கியிருந்தவாறே, உறையூர்க்கோட்டையுள் அடங்கியிருக்கலாயினன். முற்றுகை செய்து நாள் பல ஆயின; இருதிறப் படைகளிலும் எவ்வித மாறுதலும் நிகழவில்லை. நலங்கிள்ளி மதிலை அழித்து உட்புகவோ, நெடுங்கிள்ளி, மதிற்புறம் போந்து போரிடவோ எண்ணாது இருவரும் கொன்னே இருப்பாராயினர்.

ஆவூர்ப் போரைத் தடுத்து அழிவு நிகழா வண்ணம் காத்து வெற்றிபெற்ற கோவூர்கிழார், நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் மீண்டும் பகைத்து நிற்றலைக்கண்டு, இம்முறையும் போர் நிகழா வண்ணம் நாம் பணிபுரிதல்வேண்டும் எனத் துணிந்து உறையூர் சென்றார். உள்ளிருப்போன், முன்னரே ஒருமுறை தம் சொற்கேட்டு ஒரு கோட்டையைக் கைவிட்டுள்ளான்; மீண்டும் அவனுக்கு அறிவுரை கூறுதல் அறமன்று, என எண்ணி, முற்றி நிற்கும் நலங்கிள்ளிபால் சென்றார். அவன் தன்னையும், தன் குடியையும் உயரச்செய்யும் உறுதியுடையானாதல் அறிந்து அவன் ஏற்குமவகை சில சொற்களைக் கூறலானார்:

“நலங்கிள்ளி! நின்னால் வளைக்கப்பட்ட இக்கோட்டையுள் வாழ்வோன் கழுத்தை ஊன்றி நோக்கினேன்; அவன் கழுத்தில் பனைமாலையோ அல்லது வேப்பம்பூ மாலையோ காணப்படவில்லை. அவன் கழுத்தில் ஆத்திப்பூமாலையே இருக்கக் கண்டேன். அதனால், உள்ளிருப்போன் சோழர் குடிவந்தோன் என்பதை உணர்ந்தேன். வெளியேவந்தேன், இக்கோட்டையை வளைத்திருக்கும் நின்னைக்கண்டேன், நீ உள்ளிருப்போனைப் பகைத்துப் போர்மேற்கொண்டு வந்துளாய் ஆதலின், நீ உள்ளிருப்போனாகிய சோழனுக்குப் பகைவனாவன் என உணர்ந்தேன்; ஆகவே, நின் கழுத்தில், சோழர் குலப்பகைவர்

களாகிய சேரனுக்குரிய பனைமாலையோ, பாண்டியனுக்குரிய வேப்பமாலையோ இருக்கிறதா என்று ஊன்றி நோக்கினேன்; ஆனால் அவ்விரண்டினுள் எதுவும் இல்லை; மாறாக நின் கழுத்திலும், உள்ளிருப்போன் கழுத்தில் கண்ட ஆத்திமாலையே இருக்கக் காணுகின்றேன்; இதனால் நீயும் சோழர் குடிவந்தவனே என உணர்ந்தேன். ஆக இப்போது பகைத்து நிற்போர் இருவரும் சோழர் குடியாம் ஒரு குடியில் வந்தவரே ஆவர். இருவர் போரிடுகின்றனர் என்றால், இருவரும் வெற்றி கொள்வது இயலாது, ஒருவர் வென்றால் மற்றொருவர் தோற்றல் வேண்டும், இருவரில் யார் தோற்பினும், தோற்றோன் சோழர் குடிவந்தவனே ஆவன்; ஒரு சோழன் தோற்றான் எனப் பகையரசர் கூறி நின் குடியைப் பழிப்பதைப் பார்த்திருத்தல் நன்றா? பிறந்த குடிக்கு உயர்வு தேடித்தருதல் அக்குடிப் பிறந்தார் கடமையாகவும், அதற்கு மாறாக, தாம் பிறந்த குடிக்குப் பழி தேடித்தரும் நுங்கள் செயல் நன்றோ?" என்று கூறி நின்றார்.

"இரும்பனை வெண்டோடு மலைந்தோ னல்லன்;
கருஞ்சினை வேம்பின் தெரியலோ னல்லன்,
நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே; நின்னொடு
பொருநோன் கண்ணியும் ஆர்மிடைந் தன்றே;
ஒருவீர் தோற்பினும், தோற்பது உம்குடியே;
இருவீர் வேறல் இயற்கையு மன்றே; அதனால்
குடிப்பொருள் அன்று நும்செய்தி கொடித்தேர்
நும்மோ ரன்ன வேந்தர்க்கு
மெய்ம்மலி உவகை செய்யும் இவ் இகலே." (புறம். ௪௫)

புலவரைப் போற்றும் புலவோனாகிய நலங்கிள்ளி, கோவூர்கிழார் கூறிய பொருள் நிறைந்த இவ்வறவுரைகளைக் கேட்டு முற்றுகை ஒழித்து மீண்டான்.

பகைத்து நிற்கும் அரசர்களின் அகத்தே அடங்கியிருக்கும் பகையுணர்ச்சியை ஒழித்தல் அரிது என்ப; அவ்வரிய செயலைத் திறம்பட முடித்துப் போர் ஒழித்து

வெற்றிகண்ட கோவூர்கிழார், உலகத்தின் ஒவ்வொரு பகுதியிலும், உலகப்போர் நோக்கிப் போகுந்தோறும் தோன்றிப் போர் ஒழியத் துணைபுரிவாராக.

இவர் பாடிய பாக்களைக்கொண்டு நோக்கிய வழி, கோவூர்கிழாரின் அரிய பண்புகள் பல நமக்குப் புலனாகும்; அவரோர் சிறந்த புலவர்; புலவரைப் போற்றும் பேருள்ளம் வாய்ந்த புலவர்; மன்னுயிர்க் கிரங்கும் தண்ணருள் உடையவர்; அறம், பொருள், இன்பம் மூன்றனுள், பொருள் பெற்றார் ஏனையிரண்டையும் பெறுவர் எனக்கூறும் பொருளுடையார் போலாது, பொருளும், இன்பமும், அறத்தின் பின்னும் என்னும் அறமுடையாராவர் :

"சிறப்புடை மரபின் பொருளும், இன்பமும்
அறத்து வழிப்படூஉம்."

(புறம்: ௩௧)

## ௨௨. கோழியூர்கிழார் மகனார் செழியனார்

செழியன் என்ற பெயர் பாண்டியர்களைக் குறிக்க வழங்கும் பெயர். கோழியூர்கிழார் மகனாகிய இவர், பாண்டியர் மரபோடு யாதேனும் உறவுடைமையினாலோ, அல்லது, அப்பாண்டிய அரசின்கீழ் தொழிலாற்றியதினாலோ இவர் செழியன் என அழைக்கப் பெற்றுள்ளார்.

வேங்கைமலராலாய மாலைபோலும் தோற்றத்தை யுடைய குட்டிகளைப் பெற்றுப் பெண்புலி பசித்திருத்தல் அறிந்த ஆண்புலி, மத்தகம் பிளந்துபோகுமாறு ஆண்யானை யொன்றைக் கொன்று, கொன்ற வெற்றியால் இடிபோல் முழங்கும் கொடுவழிகளையும் தலைவிபால் தான் கொண்டுள்ள அன்பால் அஞ்சாது கடந்துவந்து நின்ற தலைவனை, தோழி, "தலைவ! நீ இவ்வாறு தவறாதுவந்து அன்பு காட்டிச் செல்வதால் அருளுடையான்போல் தோன்றுகின்றனை ஆயினும், இருளால் நிறைந்து, அவ்வழிச் செல்வார்க்கு அச்சத்தை விளைவிக்கும் பாம்புகள் நிறைந்த வழியாகவே வருகின்றனை யாதலின், உண்மையில் நீ அருளுடையானல்லன்" என்று கூறி, அவன் நாள்தோறும் வந்து அன்பு செய்யினும், அவ் அன்பால் மகிழாது அவன் வரும்வழி ஏதம்கண்டு அஞ்சும், தம் அருள் உள்ளத்தைப் புலப்படுக்கும் அரிய செய்யுளொன்று செழியனார் பெயரால் வந்துளது:

"வயப்புனிற்று இரும்பிணப் பசித்தென, வயப்புலி
புகர்முகம் சிதையத் தாக்கிக் களிறட்டு
உருமிசை உரறும் உட்குவரு நடுநாள்
அருளினை போலினும், அருளாய் அன்றே,
கனையிருள் புதைத்த அஞ்சுவரும் இயவில்
பாம்புடன் திரிதரும் உருமோடு
ஓங்குவரைநாட! நீ வருதலானே." (நற் : ௩௮௩)

## உ௬. செல்லூர்கிழார் மகனார் பெரும்பூதங்கொற்றனார்

கொற்றனார், பூதங்கொற்றனார் என்ற பெயர்கள், பழந் தமிழ்ப் புலவர்கள் பயில மேற்கொண்ட பெயர்களாம். இவருடைய பேரறிவு தோன்ற, இவர் பெரும்பூதங்கொற்றனார் என அழைக்கப்பெற்றார். செல்லூர் என்ற பெயரால் ஊர்கள் பலவுள, கோசாவாழும் நியமம் என்ற ஊருக்கு அருகே செல்லூர் உளது. அச்செல்லூரில் இளங்கோசர் பலர் ஒன்றுகூடிக் கடலாடு மகளிர் கொய்துதந்த புலிநகக் கொன்றையினையும், கழனியுழவர் பறித்துப்போட்ட குவளையினையும், காவற்காட்டில் மலர்ந்த முல்லையோடு கலந்துகட்டிய கண்ணியணிந்து விளையாடுவர். அச்செல்லூர் ஆதனெழினி என்பானுக்குரியது என்ற செய்திகளைத் தமிழ் நூல்கள் அறிவிக்கின்றன.

பெரும்பூதங்கொற்றனார் தாம் பாடிய நெய்தல் திணைப் பொருள் தழுவிவந்த ஒரு செய்யுளில், மலர்த்தாதுக்கள் உதிர்ந்து மணங்கமழும் புதிய மணல்மேட்டில், தோழிமாரோடுகூடி, மணல் வீடுகட்டி மகிழ்ந்திருக்குங்கால், தன் தேரையும், தன் உடன்வந்தாரையும் தொலைவில் நிறுத்தி விட்டு வந்து, நாம் கட்டிய மணல்வீட்டைப் பாராட்டிச் சென்றான் ஓர் ஆண்மகன் என்று, தாம் தலைவனை முதலிற் கண்ட நிலையினைத் தோழி கூறும் துறை அமைத்துப் பாடியுள்ளார்.

> " மணங்கமழ் இளமணல் எக்கர்க் காண்வரக்
> கணங்கொள் ஆயமொடு புணர்ந்து விளையாடக்
> கொடுஞ்சி நெடுந்தேர் இளையரொடு நீக்கித்
> தாரன் கண்ணியன் சேரவந்து ஒருவன்
> வரிமனை புகழ்ந்த கிளவியன்." (அகம் : உ௮0)

## உ௪. துறையூர் ஓடைகிழார்

துறையூர், திருச்சி மாவட்டத்தில் காவிரியாற்றின் கரையில் உள்ளதோர் ஊர். அவ்வூரினரான ஓடைகிழார், வறுமையால் வாடினார்; தம் வறுமை தீர்க்கும் வள்ளல் ஆய் ஒருவனே என உணர்ந்தார்: தமிழக மலைகளுள் தலைசிறந்ததாகக் கருதப்படும் பொதியமலைக்குரிய ஆய், கடையெழு வள்ளல்களுள் ஒருவனாவன், அப்பொதிய மலைச் சாரலைச்சேர்ந்த ஆய்க்குடி என்னும் ஊரும் அவன் உடைமை; ஆய், புலவர் பலர்தம் பாராட்டைப் பெற்றவன், 'மோசி பாடிய ஆய்' எனப் புலவர் ஒருவர் இவனைச் சிறப்பித்துள்ளார் ஆய் அமர்கடக்கும் ஆண்மையாளன்; தமிழகத்துட் புகுந்து தொல்லை விளைக்கும் கொங்கர் என்ற நாடோடிப் போர்வீரர் கூட்டத்தைப் பொதியமலையிலிருந்து மேலைக் கடற்கரைவரை துரத்திச் சென்றுவிட்டான் என்னின் அவன் வில்லாண்மைக்கு வேறு சான்று வேண்டா, ஆய் சிறந்த வள்ளன்மை உடையவன்; அவன் வள்ளல் தன்மையினை வியந்து பாராட்ட, அவன், தனக்கு நாகம் நல்கிய நல்லாடையொன்றை, ஆலமர் நீலகண்டனுக்கு அளித்து மகிழ்ந்தான் என்ற ஒரு கதையினையும் அக்கால மக்கள் கட்டிவிட்டிருந்தனர். அவன், தன்பால் வந்த இரப்பார்க்கு அவர் தகுதி நோக்காதே, களிறும் தேரும் கணக்கின்றி ஈவன்; அவன் கொடைப்பொருள்களுள், யானைக் கொடையே மிகுதியாக இருப்பது கண்ட புலவர் ஒருவர், "ஆய்! நின் நாட்டு யானைகள், ஒருமுறை கருவுற்றால் பத்துக் கன்றுகளைப் பெற்றுத் தருமோ?" என வியந்து வினவுவர்; இவ்வாறு கொடுக்கும் அவன், இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனக் கணக்கிடும் வாணிப உள்ளம் உடையான் அல்லன்.

ஆய், இவ்வாறு அருந்திறலும், பெருங் கொடையும் உடையனாதலை அறிந்து, அவன்பால் சென்றார் ஓடைகிழார்; "கிழிந்த உடையின் தையலுக்கிடையே வாழும் பேன் ஒருபால் துன்புறுத்துகிறது; என் சுற்றத்தோடு

என்னையும் வருத்தும் பசிநோய் ஒருசார் துன்புறுத்து
கிறது; எவரிடத்தேனும் சென்று பொருள்பெற்று
மீளின், வழியில் அதையும் பறித்துக்கொண்டு துயர் செய்
யும் ஆறலை கள்வர் அளிக்கும் கொடுமை ஒருபால் துயர்
செய்கிறது," எனத் தம் வறுமையின் நிலைமைகளை வகுத்
துக்காட்டிய பின்னர், "இறுதியில, இத்துயரெலாம் போக்
கித் துணைபுரிய வல்லோன் ஆய் என அறிந்து, வழிவருத்
தம் பாராது வந்துளேன், எங்கட்குக் கொடுப்பவரே,
உண்மையில் ஈவோராவர்; பிறர்க்குக் கொடுப்போர், ஒரு
பயன் கருதிக் கொடுப்பதாகு மாகையால், அவர் தமக்கே
கொடுப்பராவர்; கொடைத்தொழில் மேற்கொண்டோ
ராகார்; ஆகவே, ஆய்! நின் தகுதிக்கு ஏற்கும் வகை
அளித்துக் காப்பாயாக," என்று பாடி, பரிசில்பெற்று
வாழ்ந்தார்;

"ஆஅங்கு, எனைப்பகையும் அறியுநன், ஆய்
எனக் கருதிப் பெயரேத்தி
வாயார, நின் இசை நம்பிச,
சுடர் சுட்ட சுரத்தேறி
இவண் வந்த பெருநசையேம்;
எமக்கு ஈவோர், பிறர்க்கீவோர்,
பிறர்க் கீவோர் தமக்கீப என
அனைத்துரைத்தனென் யானாக,
நினக் கொத்தது நீநாடி
நல்கினை விடுமதி பரிசில்." (புறம்: கஙசு.)

# உரு. நல்லாவூர் கிழார்

நல்லாவூர்கிழாரைப்பற்றி நாம் ஒன்றும் அறிந்து கொள்ளுதற்கு இல்லை எனினும், அவர் அளித்த ஒரு பாட்டு இந்நாடுள்ள அளவும் நின்று நிலைபெறும் நற்புகழை அளித்துள்ளது, மணமுறையில் மாறுகொண்டு நிற்கும் மக்களுக்கு, முன்னோர் மேற்கொண்ட மணமுறை இது என எடுத்துக்காட்டி அறிவுறுத்திய பெருமையுடையார் நல்லாவூர்கிழார்.

“வரிசையாகக் கால் பல நாட்டிப் பெரியதோர் பந்தரமைத்து, புதுமணல் பரப்பி, மாலைகளைத் தொங்கவிட்டு மனைவிளக்கேற்றி ஒப்பனைசெய்த மணவீட்டில், உழுத்தம் பருப்புக் கலந்துசெய்த பொங்கலாம் சோற்றினை மணம் குறித்து வந்தார்க்கு வழங்கும் தொழில், ஒருபால் இடையறாது நடைபெற்றுக்கொண்டிருக்கும், மணம் நிகழ்தற்குக் குறித்த நல்ல நாழிகை வந்தவுடனே, மணத்தை முன்னின்று நடத்தும் ஆண்டு முதிர்ந்த மங்கலமகளிர், முறையாக எடுத்துத்தர, மக்களைப்பெற்று மாண்புற்ற மகளிர் நால்வர்கூடி, “கற்பில் வழுவாது, கணவற்கை நெகிழாது, பேறுபல பெற்று, பெருக வாழ்க” என வாழ்த்தி, நீராட்டி, நீரிற்பெய்த நெல்லையும் மலரையும் அவள் முடியில் சூட்டி வதுவை மணமுடிக்க, தமர்சூழ வந்த ஆன்றோர், ‘பேரில் கிழத்தி ஆகுக’ என வாழ்த்தி மணம்செய்து தருவர்,” என்று கூறிய பழங்கால மணநிகழ் முறைகளையும், அம்முறை அறியத் துணைபுரிந்த புலவர் அறிவுடைமையினையும் பாராட்டுவோமாக.

“உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப, நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி,
மனைவிளக்கு உறுத்து, மாலை தொடரி,
கனைஇருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்

கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக குடத்தர், புத்தகல் மண்டையர்,
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்,
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர.'' (அகம்: அசு)

## உகூ. நெய்தல் சாய்த்துய்த்த ஆவூர்கிழார்

ஆவூர்கிழார் என்ற பெயருடையார் பலராவர், ஆவூர் கிழார், நல்லாவூர்கிழார் என்ற பெயருடையார் இருவரை முன்னரே கண்டோம். இவ்வாறு அப்பெயருடையார் பலராதலின், அவரினப் பிரித்து அறிதற்கு இவர் நெய்தல் சாய்த்துய்த்த ஆவூர்கிழார் எனப்பட்டார். இவர் பெயர்க்கு முன்வந்துள்ள நெய்தல் சாய்த்துய்த்த என்ற அடை எதனால் வந்தது என்பதை அறிதற்கு இயலவில்லை.

"தலைவ! வழி ஏதம் நிறைந்தது என்ற எண்ணமின்றி வருவதே கருத்துடையாய் ஒழுகுகின்றனை; அவ்வாறு வருவதால், யாம் மகிழ்வதினும் துன்பமே பெரிதும் உறுகின்றோம், சான்றோர் பழியொடுவரும் இன்பம் விழையார் என்ப; ஆனால் நீயோ, நீவரும் வழியின் கொடுமைகண்டு நாங்கள் வருந்துவதை எண்ணுபல், நின் இன்பமே குறியாய் உள்ளாய். இதைக் கைவிட்டு வரைந்து கோடல் நன்றன்றோ?" என்று கூறி வரைவுடம்படுக்கும் தோழி, சான்றோர் பழியொடுவரும் இன்பம் விழையார் என்று கூறிய முகத்தான், தலைமகன் சான்றோனல்லன் என இடித்துக்கூறி, அறம் நிகழ்த்த துணைபுரிந்த அவள் அறிவுடைமையினைப் பாராட்டுவோமாக.

"நாளிடைப் படின் என்தோழி வாழாள்;
தோளிடை முயக்கம் நீயும் வெய்யை;
கழியக் காதல ராயினும், சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்
வரையின் எவனோ வான்தோய் வெற்ப!"

(அகம் ககஉ)

## உஎ. நொச்சி நியமங்கிழார்

இப்புலவர்க்கு நியமம் என்னும் ஊர் உரியதாகும்; இப் பெயருடைய ஊர்கள் தமிழ்நாட்டில் பல இருத்தலின், வேறுபாடு அறிதற்கு, இவ்வூர் நொச்சி வேலியால் சூழப் பட்டிருப்பதைக் கொண்டு நொச்சி நியமம் என வழங்கப் படலாயிற்று. திருச்சிராப்பள்ளியிலிருந்து முசிறிக்குச் செல்லும் வழியில் உத்தமர் கோயிலுக் கண்மையில் உள்ள நொச்சியம் என்ற ஊரே நொச்சி நியமமாம்.

நொச்சி நியமங்கிழார் ஆழ்ந்த அறிவுடையாராவர்; அவர் கருத்துக்களை இன்சுவை தோன்ற விளங்க வைக்கும் திறம் வாய்ந்தவர், இற்செறிக்கப்பட்ட தலைமகள், தான் தலைவனோடு கொண்டிருக்கும் தொடர்பினைத் தாய் அறியாது காப்பது எத்துணை அரிது என்பதை எடுத்துக் காட்டி, வரையாது ஒழுகும் தலைமகன் உள்ளத்தில் வரைதல் எண்ணம் தோன்றச் செய்யும் திறம் மிக மிக இனிதாம், தலைவி, எப்போதும் தலைவனையே எண்ணிக் கொண்டுள்ளாள். ஒருநாள், அவள் தலைவனை முதன் முதலாகக் கண்ட இடத்தை நோக்கினாள், அதனால் அவன் எண்ணம் உண்டாக, அவள் அடக்கவும் அடங்காது அவள் கண்கள் அழலாயின. அந்நிலையில் ஆண்டு வந்த அவள் அன்னை அவள் நிலை கண்டு, அவளை அன்போடு அணைத்துக்கொண்டு இவ்வாறு வருந்துவது ஏனோ என வினவினாள்; தாய் அவ்வாறு கேட்டபோது அவள் தலைவன் நினைப்பேயாய் நின்றிருந்தமையாலும், அந்நிலையில் தாய் காட்டிய ஆதரவால் தன்னை மறந்திருந்தமையாலும், தன்னையும், தன் பெண்மைக்குரிய நாணையும் மறந்து, இந் நோய் செய்தான் ஒரு ஆண்மகன் என்று கூறத் தொடங்கி விட்டுத் திடீரென அறிவு வந்தவளாய், அதை மறைத்து வேறு காரணம் கூறி நின்றுள் இத்தகைய இடர்ப்பட்ட நிலையினை எவ்வளவு நயமாகக் கூறியுள்ளாள் என்பதை நோக்குங்கள்; உற்றவிடத்துதவும் அறிவுடையர் அக் காலப் பெண்கள் என்பதைப் புலவர் அழகாகக் காட்டி யுள்ளார்:

"ஏந்தெழில் மழைக்கண் கலுழ்தலின், அன்னை
எவன் செய்தனையோ? நின் இலங்கெயிறுண்கென,
மெல்லிய இனிய கூறலின், வல்விரைந்து
உயிரினும் சிறந்த நாணும் நனி மறந்து
உரைக்க லுய்ந்தனனே தோழி! சாரல

வான்தோய் வெற்பன் மார்பணங் கெனவே." (நற் : கஎ)

வேங்கைப்பூ விரும்பிய குறப்பெண் ஒருத்தி, அவ் வேங்கைமீது ஏறிப் பறித்தல் தன்னால் இயலாது என்பதை உணர்ந்து, 'புலி! புலி! எனக் கூறின் வேங்கை தாழ்ந்து கொடுக்கும்' என முன்னோர் கூறியன கொண்டு 'புலி! புலி!' எனக் கூறினாள், அவ்வொலியினைக் கேட்ட அவ்வூர் வாழ் ஆடவர், இவ்வொலி, காட்டில் மேயும் ஆவினைப் புலி பற்றிக்கொண்டது கண்டோர் எழுப்பும் ஒலி எனக் கொண்டு, வில்லும், அம்பும் உடையராய் விரைந்தோடி வந்து கண்டு, ஆங்குப் புலியினைக் காணாது, பூப்பறிக்க முனைந்து நிற்கும் மகளைப் பார்த்து நகைத்து அவளுக்கு வேண்டும் மலர் பறித்துக் கொடுத்துச் சென்றனர் என்ற இக்காட்சி, புலியும் சிறுவனும் என்ற சிறுகதையினை நினைப்பூட்டி நகையூட்டுவது காண்க.

"வலந்த வள்ளி மரனோங்கு சாரல்
கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப்
பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள்
இன்னா இசைய பூசல் பயிற்றலின்,
ஏகல் அடுக்கத்து இருளளைச் சிலம்பின்
ஆகொள் வயப்புலியாகும் அஃதெனத்தம்
மலைகெழு சீறூர் புலம்பக் கல்லெனச்
சிலையுடை யிடத்தர் போதரும் நாடன்." (அகம் : டுஉ)

தமிழ்மகள், தன் உயிரினும் நாணமே சிறந்தது என்ற உயர்குணமுடையளாவள்; அது கெட அவள் வாழாள்; தலைவன் ஒருவனோடு உறவுகொண்டு, அவனை வரைந்துகொள்ளமாட்டாமையால் வாடிய தன் வருத்தத்

திற்குரிய காரணத்தைக் காணமாட்டாமல் வருந்தும் தாயிடம், நோயின் உண்மைக்காரணத்தை உரைத்தலே, தாயின் வருத்தமும், தன் துயரும் போதற்கு வழியாம் என உணர்ந்த தலைமகள், தாயிடம் அவ்வாறே உண்மையை உரைத்துவிடு எனத் தோழிபால் உரைப்புழி, உரைக்குங்கால், குறிப்புமொழியால் உணர்த்துவாயாக. நம் உயிரே போவதாயினும், நாணை மறந்து, அவன் தந்த நோய் இது என வாய்விட்டுக் கூறற்க எனக் கூறினாள் எனப் பாடிய பழந்தமிழ்மகளிரின் பண்பட்ட வாழ்க்கையினைப் பாரோர் உணர வழி செய்த புலவர் நொச்சிநியமங் கிழார்க்குத் தமிழ்ப்பெருமக்கள் தம் நன்றியறிதலை எவ் வழிக் காட்டுவரோ அறியேம்!

“நாடன்
நெஞ்சமர் வியன்மார்பு உடைத்தென அன்னைக்கு
அறிவிப்பேம் கொல்? அறிவியேம் கொல்” என
இருபாற்பட்ட சூழ்ச்சி, ஒருபாற்
சேர்ந்தன்று வாழி! தோழி! யாக்கை
இன்னுயிர் கழிவதாயினும், ‘நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காமநோய்’ எனச் செப்பாதீமே.” (அகம்: ௫௨)

பொருள் வயிற் பிரிந்தான் விரைவில் வந்திலனே என வாடும் ஒரு தலைமகளுக்கு,

“செல்வார் அல்லர் நம் காதலர், செலினும்
நோன்மார் அல்லர் நோயே; மற்றவர்
கொன்னும் நம்புங்குரையர் தாமே;
சிறந்த அன்பினர் சாயலும் உரியர்:
பிரிந்த நம்மினும் இரங்கி, அரும்பொருள்
முடியாதாயினும் வருவர்” (நற்: ௨0௮)

எனத் தலைமகளின் இனிய பண்புகளை நிரலே எடுத்துக் கூறி ஆற்றும் அவள் தோழியின் அறிவுடைமையினைப் புலவர் அழகாக எடுத்துக் காட்டியுள்ளார்.

புறத்தில் இவர் பாடிய பூக்கோட்காஞ்சி மிகவும் பொருள்செறிந்து காணப்படுகிறது. "நகரப்புறத்தே போர் தொடங்கிவிட்டது, போர்வீரர்களே! புறத்தே சென்று போரிட வருவார், அரசனிடம் சென்று காஞ்சிப் பூவினைப் பெறுவீராக" எனப் பறை யொலிப்பதும், அப்பறை யொலி கேட்ட அவ்வூர்ப் பூ விலைமகள், கணவரைப் போர்க்களம் போக்கிய மறக்குடி மகளிர் மலர்சூடி அணி செய்துகொள்ளார் என்ற ஏக்கத்தால், அம்மறவர்வாழ் தெருவுள் நுழையாது வேறிடம் செல்வள் என்ற அப் பாடற் பொருள் அக்காலப் போர்நிலையினையும், மறவர் குல மக்களின் மாண்பினையும் மாநிலத்தார் உணரச் செய்தல் காண்க.

"நிறப்புடைக் கொல்களி யானை மேலோன்
குறும்பர்க் கெறியும் ஏவல் தண்ணுமை
நாணுடை மாக்கட் கிரங்கு மாயின்
எம்மினும் பேரெழில் இழந்து வினையெனப்
பிறர்மனை புகுவள் கொல்லோ
அளியள் தானே பூவிலைப் பெண்டே.' (புறம் உகூங)

## ௨௮. புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர் கிழான்

கம்பூர் என்னும் ஊரில் பிறந்து, கிழான் என்ற சிறப்பினைத் தாங்கி வாழ்ந்த இப்புலவர், புதுக்கயம் என்னும் ஊரில் சென்று வாழ்ந்து, பொன் நாணயங்களை ஆராய்ந்து மதிப்பிடும் தொழில் மேற்கொண்டிருந்தமையால், இவர் இப்பெயர் பெற்றார்.

தலைமகனை மணந்து அவன் மனை வாழும் தலைமகளைக் காணச்சென்ற தோழி, அவள் புனைந்திருக்கும் அழகுமிக்குத் தோன்றுவது கண்டு பாராட்டியக்கால், தலைவி, "தோழி! தலைவன் வரையாது பிரிந்திருந்தவழி, நமக்குத் துயர் அளித்த அவன் மார்பே, அவன் இன்று மணந்து உடன் வாழ்தலினாலே இன்பத்தை அளிக்கின்றது, அதனால் பெற்ற அழகே இது," எனக் கூறுகின்றவள், துயர் அளிக்கவும், அதைத் துடைத்து இன்பம் நல்கவும் ஆற்றல் வாய்ந்த அவன் மார்பிற்கு, தீயைப் பெற்றுக் கொடுமை விளைத்தும், அத்தீயைத் தணிவிக்கும் காற்றைப்பெற்று இன்பம் விளைவித்தும் சிறக்கும் ஆகாயத்தை உவமை கூறினாளாகப் பாடி, ஆகாயத்தின் இயல்புணர்த் துணைபுரிந்துள்ளார் புலவர் :

"தீயும் வளியும் விசும்பு பயந்தாங்கு
நோயும் இன்பமும் ஆகின்று மாதோ

இலங்கு மலைநாடன் மலர்ந்த மார்பே" (நற். ௨௯௪)

## உ௯. பெருங்குன்றூர் கிழார்

பெருங்குன்றூர் கிழார், குடக்கோ இளஞ்சேரலைப் பாடியுள்ளமையால், சேரநாட்டிலும் வாழ்ந்தவர்; உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியைப் பாடியுள்ளமையால், சோழநாட்டிலும் வாழ்ந்தவர், பேகனைப்பாடியுள்ளமையால், பாண்டிநாட்டிலும் வாழ்ந்தவர் எனப் புலப்படுவதால், அவர் பிறந்தநாடும், ஊரும் இதுவென அறுதியிட்டுக் கூறுதற்கில்லை. பெருங்குன்றூர் கிழார், கடைச்சங்கத்தே அமர்ந்து தமிழாராய்ந்த புலவர்களுள் ஒருவராவர் என்ற புகழுடையவர்; அருள்நிரம்பிய உள்ளமுடையவர்; வறுமையில் உழன்றவர், வறுமையால் வாடிய காலத்தும், செம்மைக்குணத்தில் பிறழாப் பண்பாளர். இவராற் பாடப்பெற்றோர், சேரமான் குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையும், சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியும், பேகனுமாவர்.

பெருங்குன்றூர் கிழார் பொருளற்ற வறியராவர்; அவர் வீட்டில் வாழும் எலிகள், உண்ணுதற்காம் பொருளைக் காணவேண்டி அவ்வீட்டில் பலவேறு இடங்களையும் மாறிமாறி அகழ்ந்தும் ஒன்றும் கிடைக்காமையால் மடிந்து வீழ்ந்திருக்கும். அவர் இளையமகன், அவன் தாயிடத்தே பாலுண்ணவேண்டிப் பலகாலும் செல்லவும், உணவுண்டு பலநாளாகிய காரணத்தால் பாலசுரத்தல் நின்ற அவளிடத்தில் பால் இன்மையறிந்து பாலுண் வேட்கையினையே மறந்து விட்டான் எனின், அவர் வறுமையின் கொடுமையினை என்னென்பது!

வறுமையில் வாடிப் பலநாள் வாழ முடியாது; யாண்டேனும் சென்று பொருள்பெற்று வருதல்வேண்டும் என்று முடிவுகொண்ட பெருங்குன்றூர் கிழார், தமக்கு வேண்டும் பெரும் பொருள்கொடுக்க வல்லோன், சேரநாடாண்டிருந்த குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையே என உணர்ந்து சேரநாடடைந்து, இரும்பொறையைக் கண்டு, "புறஞ்செறிந்திருந்த தானையொடு தலைச்சென்று

அரைசுபடக் கடக்கும் உரைசால் தோன்றல்,'' என்றெல்லாம் பாராட்டிப் பாடினார். இருமுறையும் அவர் பாடற்பொருள் உணர்ந்து வியந்து இன்புற்றான்: பெருங்குன்றூர் கிழார், அவன் சிறந்த பரிசில் அளித்துவிடுவான் என எண்ணியிருந்தார். அவனும், அதற்கேற்றாற்போல், பரிசில் நல்குவான்போலும் செயல்கள் சில செய்தான்; நாள்பல கழிந்தன, ஆனால், அவன் பரிசில் ஒன்றும் அளித்தானல்லன். புலவர் ஏமாற்றமும் வருத்தமும்கொண்டார்; வருந்திய அவர் உள்ளத்தினின்றும் வெடித்தன சில சொற்கள். "அரசே! நீ தரும் பரிசில்பெறும் விருப்பால் வந்தோருள் நானும் ஒருவன். வள்ளன்மைக் குணம் வாய்க்கப் பெற்றோன் நீ எனக்கருதி, புலவர்க்குப் பரிசில்தர மறுக்கும் பழியுடையோர் செயலை நின்பால் உரைத்தேன்: கொடுப்பான் போலக் காட்டிக் கொடாது ஏமாற்றி விட்டனை; பாடிய புலவன் வறுமையால் வாடுகின்றனனே என்ற நாணம் நினக்கு உண்டாகவில்லை, யானோ நீ நாணுமாறு பலமுறை பாராட்டினேன் நின்னை. என்பாடல் கேட்டு மகிழும் நின்னை வணங்கி விடைபெற்றுச் செல்கிறேன்,'' என்றார்:

"நின், உள்ளிவந்த ஓங்கு நிலைப்பரிசிலென்,
வள்ளியை யாதலின் வணங்குவன் இவனெனக்
கொள்ளா மாந்தர் கொடுமை கூறநின்
உள்ளியது முடித்தோய் மன்ற. முன்னாள்
கையுள் ளதுபோல் காட்டி வழிநாள்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்தம்
நாணா யாயினும் நாணக்கூறி என்
நுணங்கு செந்நா வணங்க ஏத்திப்
பாடப் பாடப் பாடுபுகழ் கொண்ட நின்
ஆடுகொள் வியன்மார்பு தொழுதனென் பழிச்சிச்
செல்வலத்தை யானே'' —(புறம்: உகக)

'இரப்பன் இரப்பாரை யெல்லாம், இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று' —(திருக்: க0௬௭)

என்பர் வள்ளுவர். வாயில் வந்து நிற்போர்க்கும், புகழ் பாடிவருவார்க்கும் வாரிவழங்கும் வள்ளியோர் வாழ்வதினாலேயே, இரவலரும், புலவரும் இறவாது வாழ்கின்றனர்; அரசர்கள்பால் அவ்வருட்குணம் இல்லாது போனால் இரவலர் இல்லாது அழிவர்; ஆதலின் இரப்பார்க்கு ஒன்று ஈவதைக் கடப்பாடாகக் கொள்வது காவலர்க்கழகு. ஆனால், அரசரெல்லாம் நின்னைப் போல்வாராயின், என்னைப் போலும் புலவர்கள் பிறவாதொழிவாராக என்றும் பழித்து வெளியேறினார்.

> "நும்மனோரும் மற்று இனையர் ஆயின்,
> எம்மனோர் இவண் பிறவலர் மாதோ" (புறம். ௨௧௦.)

உளம் வருந்த வெளியேறிய புலவர் பெருங்குன்றூர் கிழார், தம் வறுமை தீர்க்கும் வள்ளியோன் யாவனோ என எண்ணிப் பார்த்து, அக்காலை சோணாட்டை ஆண்டிருந்த உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னிபால் அவ்வருட் குணம் இருப்பது அறிந்து சோணாடு நோக்கி நடந்தார்; சென்னியைக் கண்டார், அவன் சிறப்பும், அவன் நாட்டின் சிறப்பும் தோன்றப் பாராட்டினார். பெருங்குன்றூர் கிழாரின் புலமையை அறிந்து வியந்த அவன், அவரை விரைவில் அனுப்ப விருப்பம் இலனாயினான்; அதனால் புலவர் விரும்பும் பொருளை உடனே கொடானாயினான்; அவன் உளம் அறிந்த பெருங்குன்றூர் கிழார், இனி வாயடைத்து வாழின் வறுமை தீர்தற்கு வழியில்லை; நம் குறையினை வாய்விட்டுக் கூறவேண்டுமெனத் துணிந்து, "அரசே! நல்குரவால் மெலிந்துள்ளேன் நான்; இருந்து வாழ்வது விருந்து ஓம்புதற்கு என்ப; ஆனால் நானோ வீடு நோக்கி வந்த விருந்தினரைக் கண்டு உடனே வணங்கி வரவேற்பதற்கு நாணி, ஓடி ஒளிந்துக்கொள்கின்றேன்; காரணம் விருந்தேற்று உபசரித்தற்காம் பொருளின்மையே. இவ்வறுமைநிலை என் அறிவையும் அழித்து விடுகிறது; ஆதலின், அரசே! சான்றோர், அவையிடை வந்தார், வாய்விட்டுச் சொல்லாமுன், முகக் குறிப்பினாலேயே உள்ள குறையுணர்ந்து தீர்ப்பர் எனின், அச் சான்

றோர் கூடியிருக்கும் அவைநடுவே நின்று என் குறையிது; இதைத் தீர்த்து வைப்பீராக என்று ஒருவன் கூறினன் எனின், அவன் குறையினை அச் சான்றோர் அப்போதே தீர்த்து வைப்பர்; அதைப்போன்றே என் வறுமையினையும் விரைவில் போக்கித் தலைபுரிய வேண்டுகின்றேன்," என்று கூறினர்.

"சான்றோர் இருந்த அவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல
வல்லே களைமதி அத்தை, உள்ளிய
விருந்துகண் டொளிக்கும் திருந்தா வாழ்க்கைப்
பொறிப்புணர் உடம்பில் தோன்றியென்
அறிவுகெட நின்ற நல்கூர் மையே." (புறம் உசுசு)

புலவர் வாயவிட்டு வருந்துவதைக் கண்ட இளஞ்சேட் சென்னி, அவர் விரும்பிய பொருளெல்லாம் அளித்து மகிழ்ந்து வழிகொடுத்தான். சென்னி யளித்த பொருள் கொண்டு சிலநாள் சிறக்க வாழ்ந்தார். வாங்கிய பொருளை வைத்து வாழ்வேம் என்ற குறுகிய உள்ளமுடையவரல்லர் புலவர். தம்மைப்போல வறுமையால் உழலும் ஊரார்க்கும் உறவினர்க்கும் கொடுத்தமையால் பொருள் குன்றிவிட்டது; மீண்டும் வறுமை வந்துற்றது. வந்த வறுமைபோக வழங்கக்கூடிய வள்ளலைத் தேடிச் சென்றார்.

பாண்டிநாட்டில், பொதினி என்றோர் மலையுண்டு; அஃது ஆவிநன்குடி எனவும் வழங்கப்பெறும்: இவ் ஆவிநன்குடிக்கு உரியவன் பேகன். பேகன், பெருங்கொடை வள்ளலாவான். ஒருநாள் உலாப்போந்த பேகன், குளிர்ந்த வாடை வீசவும், விசும்பில் முகில்குலம் கறுத்துத் திரண்டு மூடிக்கொள்ளவும் கண்ட மயிலொன்று, தன் தோகை விரித்து ஆடுவதைக் கண்டான்; அது வாடையால் வருந்துகிறது என்று எண்ணினன். அதன்பால் இரக்கம் பிறந்தது; உடனே வாடைக்கு அஞ்சித் தான் அணிந்து வந்திருந்த அழகிய பொன்னாடையை அம் மயில்மீது போர்த்தினன். பேகனின் அருள் உள்ளத்தையும் கொடைச்

சிறப்பையும் உணர்த்தும் இவ் வரிய நிகழ்ச்சியினைப் புலவ ரும் பிறரும் பாராட்டுவாராயினர்.

பேகன் பெருமையுணர்ந்த பெருங்குன்றூர் கிழார், மலையிடை வழிகள் பலவற்றைக் கடந்துசென்று அவன் மனை யடைந்தார்; அம் மனைமுன்றிலில் ஒரு பெண், தனிய ளாய் நின்று வருந்துவதைக் கண்டார்; அவள் அருகே சென்று, அம்மையே, தனியே அழுதுநிற்கும் நீவிர் யாவிரோ? பேகன் நுமக்கு என்ன உறவினளோ? அழுது நிற்பதற்கு என்னையோ காரணம்? என்றெலாம் வினவி னார்; அதற்கு அவள், "ஐய பேகனுக்கு யாம் உறவின ரல்லேம், அவர், எம்போல் ஒருத்தியோடு உறவுகொண்டு நல்லூர்க்கண் வாழ்கின்றார்," என்று விடைகூறி வருந்தி நின்றாள்; அவள் நிலையும், அவள் அளித்த விடையும், அதை அளித்த முறையும், அவள் பேகன் பெருந்தேவி என்பதை உணர்த்தின, பெருங் கொடைவள்ளல் எனப் போற்றற்குரிய பேகன் பிழையுடையான் என்பதறிந்த புலவர் பெரிதும் வருந்தினார்; தம் வறுமைதீர அவனிடம் பொருள்பெற்று மீள்வதினும், அவனை நல்வழிப்படுத்தி அவன் மனைவி நல்லாளோடு வாழச்செய்வதே தம் முன் னிற்கும் பணியெனத் துணிந்தார்; தம் வறுமையை மறந்தார்; பேகன் வாழ் நல்லூர் சென்றார்; பேகனைக் கண்டு பாராட்டினார்; பாராட்டிய புலவனுக்குப் பரி சளிக்க முனைந்தான் பேகன்; அந் நிலையில், "பேக! எமக் குப் பரிசில் அளிக்க விருப்புவையாயின் யாம் வேண்டும் பரிசிலையே அளித்தல்வேண்டும்; யாம் வேண்டும் பரிசில் பொன்னும் பொருளும் அன்று, நின் பிரிவால் வாடிப் பொலிவு குன்றிநிற்கும் நின் மனைவி நலம் பெறுமாறு நீ இன்னே நின் மனை செல்லுதல்வேண்டும்; அதுவே எம் பரிசிற் பொருள்," என்று கூறினார்; அவனும் பெருங்குன்றூர் கிழாரும் பிற புலவர்களும் உரைத்த உரைவழி ஒழுகிச் சிறப்போடு வாழ்ந்தான். வறுமையால் வாடி அது தீரப் பொருள்வேண்டி வந்த புலவர், அதை மறந்து பிழைத்தாரைத் திருத்தும் பெரும்பணி மேற்கொண்டார்

எனின், அவர் அருள்உள்ளத்தை எவ்வாறு பாராட்டு வது?

> "கன்முழை அருவிப் பன்மலை நீந்திச்
> சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததைக்
> கார்வான் இன்உறை தமியள் கேளா,
> நெருநல் ஒருசிறைப் புலம்புகொண் டுறையும்
> அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை
> நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்
> மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
> புதுமலர் கஞல, இன்று பெயரின்,
> அதுமன் எம்பரிசில்; ஆவியர் கோவே!" (புறம்: கசஎ)

பேகன்பால் பொருள்பெறச் சென்று, அது பெறாது, அவனை அறவழிப்படுத்தி வரும் பெருங்குன்றூர் கிழார், தம்மால் ஒரு வள்ளல் குடி வாழ்கிறது என்று ஒருபால் மகிழ்ச்சியும், மனையில் மக்களும் மனைவியும் வறுமையால் வாடுவரே! அவர்க்கு வழியென்ன செய்வேன் என்று ஒருபால் வருத்தமும் கொண்டு வழி நடந்து வருவாராயினர்; ஊருள் நுழைந்து தம் இல் இருக்கும் இடம் சென்று நோக்கியக்கால், ஆங்கு முன்னிருந்த சிறுகுடில் காணப் பெறாது பெருமனை ஒன்றிருப்பது கண்டு நம் வீடு இருப்பது ஈண்டல்லபோலும் என எண்ணி அப்பால் செல்வாராயினர்; அந்நிலையில், அப்பெருமனையுள்ளிருந்த அவர் மனைவியார் அழைக்கும் குரல் கேட்டுத் திரும்பி அவ்வீட்டினுட் சென்றார்; ஆங்கு பொன்னும் பொருளும், நெல்லும் மணியும் மண்டிக்கிடப்பக்கண்டு ஒன்றும் புரியாராய் நின்றார். அப்போது அவர் மனைவியார், "இவையெல்லாம் குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறையின் கொடைப் பொருட்களாம்; அவன் நினக்கு ஒன்றும் அளியான் போல் காட்டி, நீ அறியாவாறு, முப்பதினாயிரம் காணமும் கொடுத்து, ஊரும், மனையும் வளமிகப் படைத்து, ஏரும் இன்பமும் இயல்வரப் பரப்பி, எண்ணற்காகா அருங்கல வெறுக்கையும் அளித்துளான்," என்று அறிவித்தார்.

இளஞ்சேரலின் பெருஞ்செயல் அறிந்த புலவர் பெருங்குன்றூர் கிழார், அவனை நேரிற் கண்டு பாராட்ட விரும்பி, விரைந்து சேர நாடடைந்தார்; அவன் பீடும் பெருமையும் எல்லாம் பாருளோர் அறியும் வண்ணம் பத்துப்பாடல்கள் பாடிப் பாராட்டினார்; அப்பாக்களில் அவன் வெற்றியும் கொடையும் விளங்கப்பாடினார்; அன்பும், அறிவும் ஆற்றலும் விளங்க வாழ்த்தி வணங்கினார்.

> "நல்லிசை நிலைஇய நனந்தலை உலகத்து
> இல்லோர் புன்கண் தீர நல்கும்,
> நாடல் சான்ற நயனுடை நெஞ்சின்
> பாடுநர் புரவலன்" (பதிற். ௮௬)

என அவன் கொடைச் சிறப்பினையும்,

> "ஈரம் உடைமையின் நீர்ஓர் அனையை;
> அளப்பருமையின், இருவிசும்பு அனையை;
> கொளக் குறைபடாமையின் முந்நீர் அனையை.
> பன்மீன் நாப்பண் திங்கள் போலப்
> பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை" (பதிற். ௯௰)

என, அவன் அன்பு, அறிவு, அருள், சுற்றம் போற்றலாம் பண்பு ஆகியவற்றையும் பாராட்டி,

> "பாடிக் காண்கு வந்திசின் பெரும!
> பாடுநர், கொளக் கொளக் குறையாச் செல்வத்துச்,
> செற்றோர்,
> கொளக் கொளக் குறையாத் தானைச், சான்றோர்
> வண்மையும் செம்மையும் சால்பும் மறனும்
> புகன்று புகழ்ந்து அசையா நல்லிசை
> நிலைதரு திருவின் நெடியோய் நின்னே" (பதிற்று: ௮௨)

என, அவன் பண்புகளைக் காண விரும்பிவந்த தன் வருகையின் காரணத்தையும் கூறி மகிழ்ந்தார். இரும்பொறையும், பெருங்குன்றூர் கிழாரும், அரிய நண்பர்களாய்ப் பெருக வாழ்ந்திருந்தனர்.

பெருங்குன்றூர் கிழார், இவ்வாறு அரசர்களைப் பாராட்டப் பாடிய பாடல்களை அல்லாமல், மேலும் பல பாடல்களைப் பாடியுள்ளார்.

தலைவன் வரைதலை விரைவில் மேற்கொள்ளானாகத் தலைவி பசலைநோயுற்று வருந்தலாயினள்; அந்நிலையில், தலைவன் தன் இல்லின் ஒருபால வந்திருந்தானாக, அது உணர்ந்து, தோழியை விளித்து, "தோழி! தலைவன் இத் தன்மையன்; பேரன்புடையன்," என்றெல்லாம் இரவலர் பாராட்டும் பாராட்டுரைகளை யான் இருந்து கேட்குமாறு என்னை உயிரோடு வாழவிடுமோ? அல்லது அழிக்குமோ? இப்பசலையின் எண்ணத்தை அறிவாரார்," என்று கூறித் தலைவன் உள்ளத்தில் வரைதல்முயற்சி தோன்றச் செய்தாள் என்ற கருத்தமைந்த அவர் பாட்டொன்று நற்றிணையில் காணப்படுகிறது:

"பெருவரை நாடன், ,
இன்ன நிலையன, பேரன்பினன் எனப்
பன்மாண் கூறும் பரிசிலர் நெடுமொழி
வேனில் சேரையின் அரிய
காணவிடுமோ தோழி! என்நலனே?" (நற்: ௩௪௭)

பெருங்குன்றூர் கிழார்பால் போற்றற்குரிய பண்பொன்று இருக்கக் காண்கிறோம்; புலவர்கள் பொறாமை மிகுந்தவர் எனப் பழியுரைப்பர் சிலர்; பழந்தமிழ்ப்புலவர்களின் பாக்களை அறிந்த வழி, அவர்களிடத்தில் இப்பழி இல்லாதிருத்தலோடு, புலவரைப் போற்றும் பெருந்தகைமை அப்புலவர்கள்பால் அமைந்திருப்பதை அறிகிறோம். புலவர் போற்றும் இப்பண்பு பெருங்குன்றூர் கிழார்பாலும் அமைந்திருந்தது; அவர், தம் காலத்தே வாழ்ந்த தம்மொத்த புலவராகிய கபிலரைப் போற்றிப் புகழ்ந்துள்ளமையினைக் காண்க.

"அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய
மறம்புரி கொள்கை வயங்கு செந்நாவின்
உவலை கூராக் கவலையில் நெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக் கபிலன்" (பதிற்: ௮௫)

பெருங்குன்றூரார், தம் மனைவிபால் பேரன்புடையவர்; "என் மனைவி, வறுமையுற்ற காலத்திலும் வாடாக் கற்புடையவள்; என்பால் பேரன்பினள்; எங்களைப் பற்றிய இவ்வறுமை, இந்நேரம் அவள் உயிரைத் தின்றிருக்கும்; அவ்வாறின்றி அவள் உயிரோடிருப்பின், அவள் என்னை நினைப்பள், 'கூற்றுவன் என் கணவன் உயிரைக்குடித்தே இருப்பன்; அவன் இறந்த பின்னர், யான் உயிர் வைத்திருப்பது ஏனோ' எனக்கூறி வருந்தி நிற்கும் அவள்பால் செல்கின்றேன்," என அவர் கூறுவதைக் காண்க

"செயிர்தீர் கொள்கை எம்வெம் காதலி
உயிர் சிறிதுடையளாயின், எம்வயின்,
உள்ளாதிருத்தலோ அரிதே, அதனால்
அறனில் கூற்றம் திறனின்று துணியப்
பிறனாயினன்கொல் இறீஇயர் என்னுயிரென
நுவலவுறு சிறுமையள் பலபுலந்துறையும்
இடுக்கண் மனையோள்' (புறம் உகO)

## ௯0. பொதும்பில் கிழான் வெண்கண்ணனார்

வெண்கண்ணனார் என்ற இயற்பெயருடைய இவர், பொதும்பில் என்ற ஊரில் வாழ்ந்து, கிழான் என்ற சிறப்புப்பெயர் பெற்று விளங்கினார்; பொதும்பில், பாண்டிநாட்டு ஊர்களுள் ஒன்று; மதுரைத் தாலுகா வில், பொதுமபு என வழங்கும் ஊரே, இவ்வூராம்.

வேங்கைமரத்தின் நிழலில், தன் கன்றோடு தங்கி யிருக்கும் ஆமான், நன்கு உறங்குவதறிந்த மந்தி, தன் பின்னே ஆரவாரம் செய்துகொண்டு தொடர்ந்து வரும் தன் இனக் குரங்குகளை ஒலிசெய்யாதிருக்குமாறு கையால் அடக்கிவிட்டு, மெல்ல மெல்ல அவ்வாமான் அருகேசென்று, அதன் மடியை ஈர்த்து, அதனினின்றும் கறந்த பாலைத் தன் குட்டியின் கையில் நிறையப் பிழியும் என்ற ஓவியம் உள்ளுதொறும் நயம் பயந்து உயர்ந்து விளங்குகின்றது.

> “தடங்கோட்டு ஆமான் மடங்கல் மாநிரைக்
> குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தென,
> துஞ்சுபதம்பெற்ற துய்த்தலை மந்தி,
> கல்லென் சுற்றம் கைகவியாக் குறுகி,
> வீங்குசுரை ஞெமுங்க வாங்கித், தீம்பால்
> கல்லா வன்பறழ்க் கைந்நிறை பிழியும்.” (நற் : ௫௭)

“யாம் காத்துவந்த தினைப்புனம், கொய்த கதிரைக் கொண்டு செல்லமாட்டாமல் கிளிகள் கீழே போட்டு விட்டுப்போம் அளவு கனங் கொள்ளுமாறு கதிர் முற்றி விட்டது; ஆதலின் யாம் இற்செறிக்கப் பெறுவோம்; இல்லில் வந்து தலைவியைக் கண்டு அன்பு பாராட்டிச் செல்ல எண்ணுவையாயின், மலை முழைஞ்சுகளில் நுழைவந்த அருவிகள் அடித்துக்கொண்டுவரும் அரவுமிழும் மாணிக்கங் கள், எம் சிறுகுடி உள்ள தெருவெலாம் தோன்றுமாறு இருள்போக்கிப் பேரொளிவிடும் ஆதலின் இரவில் வரு தலும் இயலாது; அதனால் இவளும் வருந்துவள்; ஆதலின் வரைந்துகொள்ள வேண்டுவன மேற்கொள்வா

யாக." என வரைவுகடாவும் துறை நனகு அமையப பாடியுள்ளார்.

> எனலும இறங்குபொறை உயிர்த்தன; பாணன்
> நீ வந்தளிக்குவை எனினே, மால்வரை
> மைபடு விடரகத்துழை இ ஒய்யென
> அருவிதந்த அரவுஉமிழ் திருமணி
> பெருவரைச சிறுகுடிமறுகு விளக்குறுத்தலின்
> இரவும இழந்தனள.' (அகம ககஉ)

பாண்டி நாட்டில் பிறந்த இவர், தாம் பிறந்த நாட்டுப் பற்றுடையராய், பாண்டி நாட்டுக் கொற்கைக் கடற்கரைகளில், அலைகள் அலைத்துக் கொணர்ந்து கொழிக்கும் முத்துக்கள, குதிரைகளின கால்களை வடுச்செய்து அவற்றை மேல் போக வொட்டாது தடுக்கும் என்று கூறிப் பாண்டிநாட்டு வளத்தைப் பாராட்டியுள்ளார் :

> "இவாதிரை தந்த ஈாஙகதிா முத்தம்,
> கவாநடைப் புரவிக் காலவடுத் தபுக்கும்
> நற்றோ வழுதி கொறகை முன்துறை." (அகம் : கங0)

## ௧௧. பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார்

பொதும்பில் கிழான் வெண்கண்ணனார் என்பாரின் மகன் வெண்கண்ணியார் என்ற இயற்பெயருடையார்; சில குடிகளில் தலைமகனுக்குத் தந்தை பெயரை இடுவது வழக்கம் என்ப; அவ்வாறே இவர் பெயரும் வெண்கண்ணியார் என வழங்கிற்றாப்போலும்; சில இடங்களில் இவர், இயற்பெயரோடு இணைந்து வழங்கப் பெறாமல், பொதும்பில்கிழார் மகனார் என்ற அளவிலேயே வழங்கப் பெற்றுளார்.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பாசறை வாழ்க்கையினையும், மின்னலைப்போல் ஒளிவிடும் அவன் வாட்படையின் சிறப்பினையும் போற்றிக் கூறியுள்ளார்.

> "செருவிறந்து
> ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்த
> வேல்கெழு தானை செழியன் பாசறை
> உறைகழி வாளின் மின்னி." (நற் : ௩௮௭)

முழுத்திங்கள் ஒளிவிடும் இரவில், கடல் கரைகளை அழிக்க எழுவதே போல் அலைபல எடுத்து எழும்பி ஆரவாரிக்கும் எனக்கூறிய இயற்கையின் இயல்பும்,

> "பெருங்கடல்
> இரவுத்தலை மண்டிலம் பெயர்ந்தென, உரவுத்திரை
> எறிவனபோல வரூஉம்" (நற் : ௩௭௫)

நீர்நிலைவாழ் மீன்தேடி உழலும் நாரைகள், புன்னையின் மகரந்தம் உதிருமாறு, அக்கிளைகளின்மீது அமர்ந்து அக்கிளைகளை அணிசெய்யும் எனக் கூறும் இயல்பும் அழகாக அமைந்துள்ளது.

> "நீடுசினைப் புன்னை நறுந்தாது உதிரக்
> கோடுபுனை குருகின் தோடு" (நற் : ௩௭௫)

# ௩௨. மதுரை மருதங்கிழார் மகனார் சோகுத்தனார்

குத்தனார் என்பது இவர் இயற்பெயர்; சோ என்ற எழுத்து எக்காரணம் பற்றியோ பெயர்களுக்கு அடையாக வருகிறது. மதுரையில் வாழ்ந்தவர்; மருதங்கிழாரின் மகன்; இவர், இளம் போதத்தனார், பெருங்கண்ணனார் என்ற பெயர் உடைய புலவர் பெருமக்கள் இருவரை உடன் பிறந்தாராகக் கொண்டவர்; இதனால் இவர் குடும்பமே தமிழறிந்த குடும்பம் என்பது புலப்படும்.

ஆறலை கள்வர் வாழும் கொடுமையுடைய பாலை நிலத்தில், அவர்களால் கொல்லப்பெற்ற வழிப்போவார்களின் பிணம் போற்றுவார் எவரையும் பெறாமல் அழிந்து முடை நாற்றம் நாறும்; அந்நாற்றத்தால் பிணந்தின்று பழகிய பறவைகளும் அப்பிணத்தருகே செல்ல அஞ்சும் (நற் : ௩௨௯) எனப் பாலைநிலத்தின் கொடுமையினை நன்கு எடுத்துக் காட்டியுள்ளார், பொருள் கருதி அக்கொடிய வழியில் சென்ற தலைவன் தலைமகள் உருவம் தோன்றக் கண்டு மயங்குவதும், சென்ற தலைவன் விரைவில் மீள்வன் எனத் தோழி துணிந்திருப்பதும் நன்கு விளக்கப் பட்டுள்ளது.

தலைவன், பேரன்புடையவன்; நரகம்போல் துயர் தரும் கொடுஞ்செயல் செய்ய அஞ்சுவன்.

“வரையா நயவினர் நிரையம் பேணார்” (நற் : ௩௨௯)

எனத்தோழி கூறுவது அவள் அவன்மாட்டுக் கொண்டுள்ள உறுதிப்பாட்டினை உணர்த்துகின்றது.

## ௩௩. மதுரை மருதங்கிழார் மகனார் இளம் போத்தனார்

இவர் முன்கூறிய சோகுத்தனாரின் உடன் பிறந்தவர். வரையாது வரவொழுகும் தலைமகன், தம் வீட்டினருகே வந்துளான் என்பதறிந்து, "நம் தலைவன், பெண்யானையைத் தன் கையால் இறுகத் தழுவிக்கொண்டே இறுமாந்து செல்லும் ஆண் யானை உலாவும் நாடுடையவன் என்று கூறி, அவன் நாட்டு விலங்குகள், பெண்களோடு கூடி வாழ்வதே பெருமைக்குரியது என்பதை அறிந்திருப்பவும், அவன் அவ்வறிவு பெறாதிருப்பது என்னோ என்று குறிப்பால் இடித்துக்கூறி, அத்தகைய தலைவன் தன் கடமை எது என்பதை மறந்திருக்கின்றான்; இந்நிலையில் அவன் கடமையினை அவனுக்கு அறிவுறுத்துவதேபோல், வாடையால் மிகவும் வருந்துகின்றேன், அது போக்கி அருள்புரிவாயாக என்று நீயாவது அவனுக்குக் கூறு" எனத் தோழிகூறும் திறம் அமையப் பாடிய பாட்டொன்று குறுந்தொகைக் கண் வந்துளது :

"வந்த வாடைச் சில்பெயல் கடைநாள்
நோய்நீந் தருமப டாஅர, நீ நயந்து
கூறினை வல்லனோ? தோழி! நாறு உயிர்
மடப்பிடி தழீஇத் தடக்கை யானை
குன்றச் சிறுகுடி இழிதரும்
மன்றம் நணணிய மலைகிழ வோற்கே.' (குறுந் : ௩௩௨)

## ௯௬. மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார்

பெருங்கண்ணனார் பாடிய பாக்கள் இரண்டினுள், நெய்தல்திணை தழுவி வந்த பாட்டில், கடல்வேட்டம் உடையராய பரதவர், திண்ணிய படகில் வலிய வலைகளையும், பலபுரி சேர்த்து முறுக்கிப்பெற்ற பெருங்கயிற்று நுனியில் கட்டப்பெற்ற திமிங்கிலத்தை எறியவல்ல பெரிய ஈட்டிகளையும வைததுக்கொண்டும பேரொளிதரும விளக்குகளைக் கொளுத்திக்கொண்டும் இரவின் நடுயாமத்தில் கடல் மேல் சென்று, மீன்களை நிறையக் கைக் கொண்டு, விடியற் காலையில் கரையேறி, கடற்கரைச் சோலைகளில், புன்னை மரத்தின் நிழலிலே அமர்நது தம் சுற்றத்தோடும் மது அருநதி மகிழ்நது வாழ்வர் என நெய்தலநில மக்களின் தொழிலை நன்கு எடுததுக் காட்டியுளளாா :

> “நோன்புரிக்
> கயிறு கடையாதத கடுநடை எறியுளித்
> திணதிமில் பரதவர் ஒண்சுடாக் கொளீஇ
> நடுநாள் வேட்டம போகி வைகறைக்
> கடல்மீன் தந்து கானல் குவைஇ
> ஓங்கிரும் புன்னை வரிநிழல இருந்து
> தேஙகமழ் தேறல் கிளையொடு மாந்திப்
> பெரிய மகிழும்.” (நற் : ௩௮௮)

## ௯௫. மருங்கூர்கிழார் பெருங்கண்ணனார்

மருங்கூர், மருங்கூர்ப்பட்டினம் என்ற ஊர் பாண்டி நாட்டில் உள்ளது; திருவாடானைத் தாலுக்காவில் ஒரு மருங்கூர் உளது. மருங்கூர்ப் பட்டினம் ஒரு கடற்கரை நகரம். அதற்கேற்ப, அவ்வூரினராய இவர் நெய்தல் திணை பற்றியே பாடியுள்ளார்.

சுறாவும், முதலையும் நிறைந்து கொடுமை மிகுந்த கழிகளைக் கடந்து இரவிலே வரும் தலைவனுக்கு ஏதம் உண்டாம் என அஞ்சிய தோழி, அவன் இரவில் வருதலைத் தடை செய்ய விரும்பி, "ஐய! நாங்கள், எங்கள் தந்தையர் கொணர்ந்த மீன்களை உலர்த்தி, அவற்றை உண்ணவரும் பறவைகளை ஓட்டிக்கொண்டு இருப்போம். ஆதலின், எங்களைக் காண்டல் அரிதன்று; ஆகவே, இனி இரவில் வருதலைவிட்டு, பகலிலேயே வருவாயாக." என வேண்டும் பரதவர்குல மகளிரின் மனப பண்பைப் பாட்டாக அளித்துள்ளார் பெருங்கண்ணனார்.

"கொடுந்தாள் முதலையொடு கோட்டுமீன் வழங்கும்
இருங்கழி இட்டுச் சுரமநீந்தி, இரவின்
வந்தோய் மன்ற தண்கடற் சேர்ப்ப!
நினக்கெவன் அரியமோ? யாமே, எந்தை
புணர்திரை பரப்பகம் துழைஇத் தந்த
பன்மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும்;

புன்னையங்கானல் பகல் வந்தீமே."                (அகம்: ௮௦)

# ௬௪ மாங்குடி கிழார்

மாங்குடி கிழார், மாங்குடி மருதனார், மதுரைக் காஞ்சிப்புலவர், காஞ்சிப்புலவர் என்ற பெயர்கள் எல்லாம் ஒரு புலவரையே குறிப்பனவாம். புலவனும், போர்வல்ல வனுமாய தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன், தன் நாட்டை மாங்குடி மருதனார் பாடுவதைப் பெருமைக்குரியதாக மதித்தான் எனின், மாங்குடி மருத னாரின் புகழினை என்னென்பது!

மாங்குடி மருதனார், சோழநாட்டில் பிறந்தவர் என்ப; தஞ்சை மாவட்டத்தில் திருத்தருப்பூண்டிக்கண்மையில் உள்ள மாங்குடி, மருதவனம் என்ற இரண்டு ஊர்களில் முன்னையதை மாங்குடி கிழார் பிறந்த ஊராகவும், பின்னை யதை, அவர் பெயரால் எழுந்த ஊராகவும் கருதுவர் சிலர்.

மாங்குடி மருதனார், தம் காலத்தே பேரரசு ஓச்சிய வேந்தனாக விளங்கிய தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் அவையில், புலவர் பலர்க்கும் தலைவராய் வீற்றிருந்தார். இத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வரலாறும், வெற்றியும் முன்னமே தொகுத்துரைக்கப்பட்டுளது.

பாண்டியன் நெடுஞ்செழியன், "இளையன் என்று எண்ணி என்னை எதிர்த்த பகைவர்களை அழிக்காது மீள்வேனாயின், மாங்குடி மருதன் முதலாம் புலவர்கள் என நாட்டைப் பாடாது விடுவாராக" என்று கூறிய வஞ்சினத்தால், மாங்குடி மருதனார், தம் பாண்டிப் பேரரசையும், அப்பேரரசின் தலைநகராம் மதுரைமா நகரை யும் பாடுவதைப் பெரிதும் விரும்புகின்றான் நெடுஞ் செழியன் என்பது புலனாம். ஆகவே, அவன் பாடுக என்று வேண்டிக்கொண்டதற்கேற்பவும், போர்பல கண்டு,

வெற்றிபல கொண்ட பெருவேந்தன் என்பதற்கேற்பவும், அவனைப் பற்றிய பாடலும் பெரியதோர் பாடலாதல் வேண்டும். அப்பாடற்பொருளும் பெருமையளிக்கும் பொருளாதல் வேண்டும் என்று எண்ணினார் மாங்குடி கிழார்; அவ்வாறே நெடுஞ்செழியன் புகழ் போற்றப் பாடிய மாங்குடி மருதனார் மதுரைக்காஞ்சி, எழுநூற்று எண்பத்திரண்டு அடிகளைக் கொண்ட பெரிய பாட்டாய் முடிந்தது. அப்பாடற் பொருளும், பெருந்திணைக்குப் புறனான காஞ்சித்திணையாய் அமைந்தது, காஞ்சித்திணை தழுவ வந்த பாடல்கள் எத்தனையோ இருப்பவும், அக் காஞ்சிப் பாடல்களைப் பாடியோரையெல்லாம் காஞ்சிப் புலவர் என அழைக்காது, மதுரைக்காஞ்சி பாடிய மாங்குடி மருதனாரையே 'காஞ்சிப்புலவன்' எனப் பெயரிட்டு அழைப்பாராயினர்

மதுரைக் காஞ்சியின் 'மாண்பினை மதித்துக் காணல் கண்டு இயலாது, ஆதலின் அப்பாட்டில் காணலாம் சில நயங்களை மட்டுமே கண்டு செல்வோமாக, மதுரைக்காஞ்சி, பாண்டிநாட்டையும், மதுரைத் தலைநகரையுமே பாராட்டு கிறது எனினும், அப் பாராட்டு, தமிழகத்தையும், தமிழ கத்துப் பேரூர்களையும் பொதுவாகப் பாராட்டிய பாராட்டே என்று கொள்ளுதல் குறையாகாது. தமிழ கத்தின் இயற்கை வளங்களையும், அதன் ஐந்நில அமைப் பினையும், அந்நாட்டின் பேரூர்களின் பண்புகளையும், அப் பேரூர்களின் அரண்களையும், அரசர் தெருமுதலாம் தெருக்களையும், அந்நகர்க் கோயில்களையும், அங்காடி வீதி களையும், கடற்றுறைகளையும், அங்காடியில் காணலாம். அரும்பொருள்களையும், அந்நகர் வாழ்மக்களையும், அவர்கள் மேற்கொண்டிருந்த அருந்தொழில்களையும், அத்தொழில் களின் நுட்பங்களையும், அமைச்சர், அறங்கூறவையத்தார் இயல்புகளையும், ஆடவர், பெண்டிர் பண்புகளையும், ஊரில் எழும் ஒலிகளின் வகைகளையும், ஆங்கு ஓங்கிப் பறக்கும் பல்வேறு கொடிகளையும், வேறு பிறவற்றையும் ஒருங்கே கூறும் ஒப்பற்ற நூல் மதுரைக்காஞ்சி ஒன்றே ஆகும்.

"பொய்யறியா வாய் மொழியால்
புகழ் நிறைந்த நன் மாந்தரொடு
நல்லூழி அடிப்படரப்
பல் வெள்ளம மீக் கூற
உலகம் ஆண்ட உயர்ந்தோர." (மதுரைக் : ௧௯-௨௩)

என அவன் முன்னோர்களையும்,

"அச்சமும் அவலமும ஆர்வமும நீக்கிச
செற்றமும் உவகையும செய்யாது காத்து
ஞெமன் கோலன்ன செம்மைத்தாகிச
சிறந்தகொள்கை அறங்கூறு அவை"

(மதுரைக் ௪௮௯-௯௨)

என அறங்கூறு அவையத்தார்களையும்,

"நன்றும தீதும் கண்டாயந் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காததுப்
பழியொரீஇ உயாநது பாய்புகழ் நிறைந்த
செமமை சான்ற காவிதி மாககள" (மதுரைக் ௪௯௬-௯)

எனக் காவிதி மக்களையும் அறிமுகம செய்துள்ளார்.

"உயாநிலை உலகம அமிழ்தொடு பெறினும
பொயசேண நீங்கிய வாயநட் பினையே,
முழுஙகுகடல எணி மலாதலை உலகமொடு
உயாநத தேஎதது விழுமியோா வாினும
பகைவாக கஞ்சிப் பணிக்தொழுகலையே;
தெனபுல மருங்கின் விணடு நிறைய
வாணன் வைதத விழுநிதி பெறினும்
பழி நமககெழுக வெனனுய; விழுநிதி
ஈதல் உள்ள மொடு இசை வேட்குவையே."

(மதுரைக் : ௧௯௭-௨0௩)

என அவன் பண்புகளைப பாராட்டி,

"கரைபொருது இரங்கும் கனையிரு முந்நீர்த்
திரையிடு மணலினும் பலரே, உரைசெல
மலர்தலை உலகம் ஆண்டு கழிந்தோரே."

(மதுரைக் : ௨௩௬-௭)

என்று நிலையாமையினை வற்புறுத்தியுள்ளார். மதுரைக் காஞ்சியின் மாண்புகளைக் காட்டிக்கொண்டே சென்றால் ஏடு விரியும்; அவற்றை முழுநூலுட் கண்டுகொள்க.

வாட்டாறு என்னும் ஊரில் வாழ்ந்த ஒரு தலைவனைப் பாராட்டிய மாங்குடி கிழார், "வாட்டாற்று எழினியாதன் ஊக்கமின்றி உறங்கிக் கிடப்பார்க்கு ஊக்கமூட்டும் உற்ற துணையாவன்; அறிவு வழங்கும் நண்பரைப் பெறாதார்க்கு நண்பனாகி அறிவு வழங்குவன்" என்று பாடி, சில சொற்களால் அவன் புகழ் பலவும் தோன்றச் செய்துள்ளார்:

> "உள இலோர்க்கு வலியாகுவன்;
> கேள் இலோர்க்குக் கேளாகுவன்" (புறம் · ௩௱௯௰௬)

புறநானூற்றினும், பத்துப் பாட்டினும் புறப்பாட்டுக் கலையேயன்றி, மாங்குடி கிழார் அகத்துறைப் பாடல்கள் சிலவற்றையும பாடியுள்ளார்

# ௯௭. மாடலூர் கிழார்

இப் புலவர்க்குரிய மாடலூர் யாண்டுளது என்பது அறியக் கூடவில்லை; குறிஞ்சித்திணையில், இரவுக் குறிக்கு இசைந்து வந்து நிற்கும் தோழியிடம், தன் இசைவினையும் அறிவிக்கும் தலைமகள் கூற்றமைந்த ஒருசெய்யுளைப் பாடியுள்ளார், அது குறுந்தொகைக்கண் இடம்பெற்றுளது

அதில், குறிஞ்சி நிலமக்கள், தங்கள் தினைப்புனங்களைக் காத்து நிற்போர், யானைபோன்ற கொடிய உயிர்களால் அழிவுறாதிருந்தற் பொருட்டும், தம் பெரும்புனங்களை ஆங்கிருந்தவாறே கண்டு காத்தற்பொருட்டும், பெருமலைகள்மீதும், உயரிய மரங்கள்மீதும் பரண் அமைப்பர்; இரவில் ஒளிபெறுதற்காகவும், ஒளிகண்டஞ்சும் யானைகளை எளிதில் ஓட்டுவதற்காகவும், அப்பரண்களில் பந்தங்களைக் கொளுத்திவைப்பர். பரண்கள், அக்குறிஞ்சி நிலமுழுதும் பரவியிருப்பதால், இரவில் ஆங்காங்கே தோன்றும் அப்பந்தங்களின் ஒளிகள், வானத்து மீன்களைப்போல் காட்சியளிக்கும் என்ற செய்திகளைத் தெரிவித்துள்ளார்.

"சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி
வான மீனின் வயின் வயின் இமைக்கும்
ஓங்கு மலை நாடு" (குறுந். ௧௫0)

## ௬அ. மாற்றூர்கிழார் மகனார் கொற்றங் கொற்றனார்

சோழநாட்டில், காவிரியாற்றங்கரையில் உள்ள சிறுகுடி என்ற ஊரின்கண் இருந்த பண்ணன் என்பவன், பேரரசர்க்குப் படைத்துணைபோகும் பெருவீரனாய்த், தம்மை நாடிவரும் இரவலர்க்கு வறுமைபோக வழங்கிப் "பசிப்பிணி மருத்துவன்" என்ற சிறப்பும் பெற்று விளங்கினான்; அவன் சிறுகுடி நெல்லி மரங்களால் நிறைந்தது என்றும், நெல்லிக்கனி தின்று நீர்குடித்தால் இனிக்கும் என்றும், அவன் வாழ்வது பிறர்வாழ வேண்டியே யன்றித் தான்வாழ அன்று என்றும் பாராட்டினார்:

"தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவை" (அகம். ௫௪)

நாடுகாவல் கருதிப் பிரிந்து சென்ற தலைவன், தன் வினை முடித்துநின்று, மகனை ஏந்திக்கொண்டு, 'ஒளிவிட்டு விளங்கும் மதியே! நீ, ஐம்படைத்தாலி அணிந்த என் மகன் அழைப்பதை ஏற்று வருவையாயின் நினக்குப் பால் தருகின்றேன்" என்பன போன்ற இனியசொற்களைக் கூறிக்கொண்டே, மகனுக்குத் திங்களைக் காட்டி, விரல் அசைத்து அழைக்க அவனுக்குக் கற்றுத்தந்து அவன் பாலுண்ண விரும்பும் விருப்பத்தை மாற்றமுயலும் தன் மனைவியை நினைந்து விரைந்து செல்லுமாறு பாகனை வேண்டினான் என்று பாடியதிறம் படித்து இன்புறற்குரியதாம்.

"தீவிய மிழற்றி,
'முகிழ் நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்!
பொன்னுடைத்தாலி என்மகன் ஒற்றி
வருகுவை யாயின் தருகுவன் பால்' என
விலங்கமர்க் கண்ணள் விரல்விளி பயிற்றித்
திதலை யல்குல் எம் காதலி
புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே" (அகம்: ௫௪)

## ௩௪. மிளைகிழான் நல்வேட்டனார்

நல்வேட்டனார் எனவும், மிளைகிழான் நல்வேட்டனார் எனவும் இவர் குறிப்பிடப்பட்டுள்ளார் : இவர் பாடிய பாக்கள் நற்றிணையிலும் குறுந்தொகையிலும் இடம் பெற்றுள்ளன.

நன்செய்நிலத்தில் விதைக்க, விதை கொண்டு சென்ற கூடை நிறைய, அந் நிலத்தில் பற்றிய மீன்களோடு வருவர் என்று கூறி அக்காலத் தமிழகத்தின் நிலவள, நீர்வளங்களை நன்கு விளக்கியுள்ளார் :

> "விதையொடு சென்ற வட்டி, பற்பல
> மீனொடு பெயரும் யாணர் ஊர" (நற் : ௨௧௦)

உலகில், மக்கள், உயர்த்திக் கூறும் பாராட்டுரைகளைப் பெறுவதும், விரைந்து செல்லும் குதிரை, யானை, தேர் முதலாயவற்றில் ஏறிச் செலுத்துவதுமாய வாழ்வுடைமையே செல்வமாம் என்று எண்ணுவர் ; ஆனால் உண்மையில் செல்வமென்பது இது அன்று ; அறிவுடையோர் இதைச் செல்வமாகக் கொள்ளார், இது அவர் செய்த வினைப்பயனிற்கேற்ப வந்தடையும், உண்மையில் செல்வமென்பது, தம்மை அடைந்தார் துயர் கண்டஞ்சி, அதைப் போக்கி, எவரிடத்தும் வன்சொல் வழங்காது இன்சொல் வழங்கி வாழும் வாழ்வேயாகும் ; சான்றோர் இதையே செல்வமென்பர் என்று செல்வத்தின் இயல்பினை இவர் எடுத்துக் கூறும் திறம் நினைவிலிருத்த வேண்டியதொன்றாம்.

> "நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்
> செல்வமன்று தன்செய் வினைப்பயனே ;
> சான்றோர் செல்வமென்பது, சேர்ந்தோர்
> புன்கண் அஞ்சும் பண்பின்
> மென்கட் செல்வம் செல்வமென்பதுவே." (நற் : ௨௧௦)

---

## ௪௰. வடமோதங்கிழார்

தொண்டைநாட்டில், சித்தூர மாவட்டத்தில், சோளத்தி திருத்தணிகை வட்டங்களில் மாதம என்னும் ஓர் ஊர் உளது; அது பண்டை நாளில் மோதம் என வழங்கியதாக அரசியல் ஏடுகள் அறிவிக்கின்றன; மதுரை மாவட்டத்திலும் மோதம எனப் பெயருடையதோர் ஊர் உளது ஆதலின் இது வடமோதம் என வழங்கப்பட்டது; இவ் வடமோதமே நம புலவர்க்குரிய ஊர் என்று கூறுவர்.

பகைவர் கவர்ந்து சென்ற ஆனிரைகளை மீட்டுக் கொண்டு வந்த வீரன் ஒருவன், அம்மீட்சிப்போரில் பெற்ற புண்ணால், ஊர்க்கோடியில் வருவழி, வருந்தி வீழ்ந்து இறந்தானாக, அவன் பெயரும், பீடும, பெருமை யும் பொறித்த கல்லை நாட்டி மயிலும மலரும் சூட்டி வழி படும் நிகழ்ச்சியை நெஞ்சுருகப் பாடியுள்ளார்.

> "எண்ணிய எண்ணியாங்கெய்துப எண்ணியார
> திண்ணிய ராகப் பெறின்" (திருக் : ௬௬௬)

என்ப; உள்ளத் தூய்மையும் உறுதியுமுடையோர், ஒன்றை விரும்பி நினைப்பாராயின், அவர் நினைந்தது வந்து சேரும் என்று கூறுவர்; இவவுண்மையினைப் பிரிந்து சென்ற தலைவன் விரைந்து வருக என வேண்டிய தோழி, அவன் அவ்வாறே வந்தமை அறிந்து, தலைமகள்பால் சென்று, நாம் நினைந்தவாறே தலைவர் நில்லாது வந்து சேர்ந்தார் என்று உரைபபுழி உரைத்துள்ளார்.

> "நினைந்தனம் இருந்தனமாக, நயந்தாங்கு
> உள்ளிய மருங்கின் உள்ளம் போல
> வந்து நின்றனரே காதலர்." (அகம் : ௩௧௭)

## சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை

ஆசிரியர் : திருவத்திபுரம் கா. கோவிந்தன், எம். ஏ.

**க. கபிலர்**

*பாரிவேளின் உயிர் நண்பரும், புலனழுக்கற்ற அந்தணாளருமான கபிலர் பெருமானின் வாழ்வும், பணியும் இலக்கிய மேற்கோளுடன் விளக்குகின்றது* — ரூ. 1 12

**உ. பரணர்**

*பரணர் பெருமகனார் நடுநிலை தவறா நன்னெஞ்சினர், நுண்ணிய கலைஞர், அவர்தம் வாழ்க்கை வரலாற்றை இந்நூல் பளிங்கெனத் தெளிவிக்கின்றது* — ரூ 1 12

**ங. நக்கீரர்**

*"நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே," என்று இறைவனையும் எதிர்த்துச் சொற்போராடிய நக்கீரர் பெருமகனாரின் வரலாற்றை இந்நூல் இனிது [illegible]* — ரூ 1 12

**ச. ஒளவையார்**

*தகுதியால் சிறந்து, பண்பால் உயர்ந்து தமிழர் உள்ளங்களில் என்றென்றும் நிலைத்துநிற்கும் ஒளவை நல்லாளின் அரிய வாழ்க்கை வரலாற்றை விளக்குகின்றது* — ரூ 1 12

**ரு. பெண்பாற் புலவர்கள்**

*சங்கம் சார்ந்து தமிழ்வளர்த்த பெண்புலவர்களில் ஒளவையாரன்றிப் பலருளர் அன்னார் வாழ்க்கை வரலாறுகளையும், புலமை நுணுக்கங்களையும் இந்நூல் இனிது விளக்குகின்றது* — ரூ 1 12

**சா. உவமையாற் பெயர்பெற்றோர்**

*தாம் பாடிய உவமைகளே சிறப்புப் பெயராக வழங்கப்பெற்ற பழந்தமிழ்ப் புலவர்கள் பலர். அவர்கள் வரலாறுகளை இந்நூல் இனிது விளக்குகின்றது* — ரூ 1 12

**எ. காவலர் பாவலர்கள்**

*'அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்' என்பதை உணர்ந்தோர் அக்கால அரசர்கள் அவர் காவலராயிருந்ததோடு பாவலராக அமைந்து அறிவுலகத்தையும் ஆண்டனர் அவ் அரசர்களின் வரலாற்றை உணர்த்துவது இந்நூல்* — ரூ 1 12

கழக வெளியீடு: ௯௮௮

சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை-௯

# வணிகரிற் புலவர்கள்

புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.,
எழுதியது.

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

நம் தமிழகத்தை எங்கே சென்று காணுகின்றோம்? சங்க நூல் பெருங்கடலில். அந்நூல்களை ஆக்கித் தந்த புலவர்கள் பலவகையினர் ஆவர்.

அவர்களுள், கொள்வதூஉம் மிகை கொளாது, கொடுப்பதூஉம் குறைகொடாது பலபண்டம் பகர்ந்து வீசும் வணிகர்களும் புலமைக் கிழமைகொண்டு வாழ்ந்தனர். அவர்தம் வரலாற்றை நிரல்படக் காண்பதே இந்நூலின் உட்கிடை.

சில **உறையூர் இளம்பொன் வணிகனார் முதல், கணியன் பூங்குன்றனார்** ஈறாக, இருபத்தெண்மர் வரலாறுகள், அவர்தம் பாக்களின் துணைகொண்டே வரையப் பெற்றுள்ளன. இதற்கு '**வணிகரிற் புலவர்கள்**' எனும் பெயரீந்து சங்கத்தமிழ்ப்புலவர் வரிசையில் ஒன்பதாவதாக வெளியிட்டுள்ளோம். இதனையும் புலவர் **திரு. கா. கோவிந்தன்** அவர்கள் ஆய்ந்து தெளிவுற ஆக்கி யுதவியுள்ளார்கள்.

இதற்கு வணிகரிற் புலவர்கள் என்று பெயர் அமைத்திருப்பினும் இடைப்பிற வரலாக மருத்துவன் தாமோதரனார், உறையூர் முதுசாத்தனார் என்னும் பிற தொழில் மேற்கொண்ட புலவர் பெருமக்கள் வரலாறுகளும், இடம் பெற்றுள்ளன.

இந்நூலையும் இதைத் தொடர்ந்து மேல்வரும் இவ் வரிசை நூல்களையும் தமிழகமாந்தர்கள் வாங்கிக்கற்று நலம்பல பெறுவார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# வணிகரிற் புலவர்கள்



## தோற்றுவாய்

உலகில், தலைசிறந்த நாடுகள் என இன்று போற்றப் பெறும் நாடுகள் எல்லாம், மக்களால் அறியவும்படாமல் இருளில் இருந்த மிகப் பழைய காலத்திலேயே, தமிழகம் உயரிய வாழ்வுபெற்ற நாடாய்ப் பெருமையுற்று விளங்கியிருந்தது; நாடு செல்வத்தில் சிறந்து வாழவேண்டு மாயின், அது வாணிபத்துறையில் வளம்பெற்றுத் திகழ் தல்வேண்டும். உள்நாட்டு வாணிபத்தினும், வெளிநாட்டு வாணிபத்தையே மிகுதியாக மேற்கொண்டிருத்தல்வேண் டும், விலையுயர்ந்த பொருள்களை வெளிநாட்டிலிருந்து தான் வாங்காமல், அப்பொருள்களைப் பிறநாடுகளுக்குத் தான் அனுப்பும் நாடாக இருத்தல்வேண்டும், பொருள்களைக் கொடுத்துப் பொன்னைப் பெறவேண்டும், பொன்னைக் கொடுத்துப் பொருள்களைப் பெறுதல் கூடாது; அதற்கு ஏற்றவகையில், வகைவகையான தொழில்களை வளர்த்து வளம்பெருக்கும் நாடாக ஆக்குதல் வேண்டும். பிறநாட்டு மக்களின் தேவைகளை அறிந்து, அவர்கள் விரும்பும் வகை யில் அவற்றை அமைத்து அளித்தல் வேண்டும்; இவ்வா றெல்லாம் கூறுவா பொருள்நூற் புலமை பெற்றோர். இவ்வுண்மைகளை உள்ளவாறுணர்ந்து, அதில் சிறிதும் பிறழாது பேணித் தம் நாட்டு வாணிபத்தை வளர்த்த வாகள் தமிழர்கள்.

> "மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
> சொல்வதிலோர் மகிமை யில்லை
> திறமான புலமையெனில் வெளிநாட்டார்
> அதைவணக்கம் செய்தல் வேண்டும்"

என்றார் பாரதியார். தமிழ்நாட்டு வாணிப வளத்தினைத் தமிழ்ப்பெரும் நூல்கள் போற்றுகின்றன என்பதோடு, அவ்வாணிப வளத்தைத் தமிழர்களின் வாணிபத்தால் வளம்பெற்று வாழ்ந்த பிறநாட்டுப் பெரியார்கள் பலர் போற்றியுள்ளனர் என்பதையும் உலக மக்கள் அறிந்துள்ளனர். தமிழகத்தின் வாணிபச்சிறப்புதான் என்னே!

தமிழகத்தின் வணிக வரலாறு மிகமிகப் பழமையுடையது. இந்தியப் பெருங்கடலில் கலம் செலுத்தி, எகிப்து, பாபிலோன், சாலடியா போன்ற புதிய நாகரிகம் பெற்ற மிகப்பழமையான நாடுகளோடு பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழர்கள் வாணிகம் புரிந்து வந்தனர். எகிப்து நாட்டிலும், சிரேசியாவிலும், மெசபடோமியாவிலும், மண்ணுள் புதையுண்டு கிடந்து இப்பொழுது எடுக்கப்பெற்ற பல பொருள்கள் இதற்குச் சான்றாக நின்று திகழ்கின்றன. கி. மு. முதலாம் நூற்றாண்டிலிருந்து நான்காம் நூற்றாண்டுவரை, தமிழகம், உரோமப் பேரரசோடு வாணிபத் தொடர்பு கொண்டிருந்தது. உரோமரும், கிரேக்கரும், தமிழகத்தோடு வாணிபத் தொடர்பு கொண்டிருந்ததைப் பற்றி விளக்கும் நூல்கள் பல உள்ளன. கிரேக்க வணிகர் ஒருவர் எழுதிய "செங்கடல் செலவு" (Periplus of the Erythrean Sea) என்ற நூலும், தாலமி என்பார் எழுதிய "பூகோள நூல்" என்ற நூலும், பிளினி என்பார் எழுதிய "இயற்கைநூல்" என்ற நூலும் தலைசிறந்தனவாம்.

பருவக்காற்றுகளின் இயல்பினை அறிந்து பயன் கொண்டதும், உரோமநாட்டு மக்களின் நாகரிகவாழ்க்கையின் தேவைகளும், தமிழகத்திற்கும், உரோமம் முதலாம் நாடுகளுக்கும் இடையே நடைபெற்றுவந்த வாணிபம் வளரத் துணைபுரிந்தன; இவ்வாணிபத்தின் வழியாக, உரோமப் பேரரசு, ஆண்டுதோறும் 10,87,500 பவுன்கள் மதிப்புள்ள பொன்னையும், வெள்ளியையும் கீழ்நாடுகளுக்குக் கொடுத்து வந்தது எனின், அக்கால வாணிபம் எத்துணைப்

பெரிய அளவில் நடைபெற்று வந்தது என்பதை அறியுங்கள். தமிழ்நாடு, உரோமம் முதலாம நாடுகளுக்கு அனுப்பிய பொருள்கள், மிளகு, முத்து, தந்தம், பருத்தி போன்ற விலையுயர்ந்த பொருள்களேயாம். இவற்றைப் பெரும்பாலும் பொன்னுக்கும், வெள்ளிக்கும் விற்றனர்; சிறுபான்மையாகக் கண்ணாடியாலாய பொருள்கள், மணம்நாறும் மதுப் போன்ற பொருள்களைப் பெற்றனர். இச் செய்திகளை அறிவிப்பதோடு, அம் மேனாட்டு அறிஞர்கள், தமிழர்கள் தம் கடல் வாணிபத்திற்குத் துணையாகப் பெற்றிருந்த கப்பல்களின் வகைகளையும் நன்கு அறிந்து கூறியுள்ளனர். தமிழர்களிடம், கரையோரப் போக்குவரவிற்காம் சிறிய கப்பல்களும், பெரிய கப்பல்களும் இருந்தன, கடல்கடந்து செல்லத்தக்க மிகப் பெரிய கப்பல்களும் இருந்தன என்றும், கடலில் ஓடும் செலவுத்தக்கனவும், பல மரங்களால் இணைப்புண்டனவுமாய ஆய கப்பல்களுக்குச் "சங்கார" (Sangara) என்றும், கங்கைமுதலாம் நீர்நிலைகளுக்குச் செல்லும் மிகப் பெரிய கப்பல்களுக்குச் "சோழந்தி" (Colandia) என்னும் பெயராம் என்றும் அவர்கள் தங்கள் நூல்களில் எழுதி வைத்துள்ளனர். உரோமப் பேரரசன் அகஸ்டஸ் காலத்தில் பாண்டிநாட்டரசனிடமிருந்து அரசியல் தூதுவர், அவ் அகஸ்டஸ் அவைக்கு வந்திருந்தனர் என்றும் கூறியுள்ளனர் அவர்கள், தமிழகத்தின் தலைசிறந்த கடற்கரைப் பட்டினங்களாகிய, கொண்டி, முசிறி, கொற்கை, புகார் போன்ற இடங்களையும், அவற்றின் இயல்பினையும் நன்கு அறிந்து கூறியுள்ளனர். இவ்வாறு பிறநாட்டு அறிஞர்களால் பாராட்டிக் கூறப்பெறும் தமிழர்களின் வாணிபச் சிறப்பினை வலியுறுத்தும் சான்றுகள் பல தமிழ்நூல்களிலும் உள்ளன.

பத்துப் பாட்டினுள், பட்டினப்பாலையும், மதுரைக் காஞ்சியும், ஐம்பெரும் காப்பியங்களுள், சிலப்பதிகாரமும் மணிமேகலையும், தமிழ்நாட்டின் வாணிபச் சிறப்பினையும், அதற்குத் துணையாம் தொழில் வளத்தினையும் விளங்கக் கூறியுள்ளன.

கடற்கரையில், கடலில் ஓடும் நாவாய்களுக்கு 'வந்து சேரும் துறை இது' என அறிவித்து அழைக்க இரவில் ஏற்றிவைக்கும் கலங்கரை விளக்குகள் உண்டு.

> "இரவின் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி
> உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும் துறை."
> (பெரும்பாண். ௩சகூ-ருக)

கடல் வாணிபம் கருதிப் பல்வேறு நாடுகளினின்றும் தமிழகம் புகுந்த மக்கள் அக்கடற்கரையையடுத்த இடங்களில் இருந்து வாழ்வர்.

> "கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
> கலந்திருந் துறையும் இலங்குநீர் வரைப்பு" (சிலப். ரு: கக-உ)

பிறநாடுகளுக்கு அனுப்புதல் வேண்டி வந்த உள்நாட்டுப் பொருள்களும், வெளிநாடுகளிலிருந்து வந்து இறங்கிய பொருள்களும், கடற்கரைக்கண் உள்ள பண்டசாலைகளில் மலைபோலக் குவிந்து கிடக்கும். "நீரினின்று நிலத்து ஏற்றவும் நிலத்தினின்று நீர்ப்பரப்பவும் அளந்தறியாப் பல பண்டம்" அப்பொருள்களின் அளவும் நிறையும் அளந்து கண்டு, அவற்றிற்குரிய சுங்கம் கொள்ளும் அரசியல் ஆளையாளர், அவற்றின்மீது தங்கள் அரச இலாஞ்சனை இட்டுச் காப்பர்

> "அளந்தறியாப் பலபண்டம்
> வரம்பறியாமை வந்தீண்டி
> அருங்கடிப் பெருங்காப்பின்
> வலியுடை வல்லணங்கினோன்
> புலிபொறித்துப் புறம்போக்கி" (பட்டினப். கங க-ரு)

என்பன பெருந்துறைகளின் நிலையை விளக்குவன. இவையேயன்றித் தமிழகத்தின் கடற்கரையில் உள்ள சிற்றூர்கள் தோறும், கரையோரங்களிற் சென்று, ஓரிடத்துள்ள பொருளை ஓரிடத்திற்குக் கொண்டு சேர்க்கும் சின்னஞ்சிறு படகுகள் பல வரிசையாகப் பிணிக்கப் பெற்றிருக்கும்.

"வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி
பணைநிலைப் புரவியின் அணைமுதற் பிணிக்கும்
கழிசூழ் படப்பை"

பெருந்துறைகளில் வந்து செல்லும் பிறநாட்டுக் கப்பல்களின் நிலையினை,

"யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்"

என ஒரு பாட்டு விளக்கும்.

கடல் வாணிபம் செழிக்க இருந்த காரணத்தால் தமிழகத்தின் பேரூர்களில் உள்நாட்டு வாணிபமும் நன்கு வளம்பெற்று விளங்கிற்று. பேரூர்களின் கடைவீதிகளில், "நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும், காலின் வந்த கருங்கறி மூடையும், வடமலைப் பிறந்த மணியும், பொன்னும், குடமலைப் பிறந்த ஆரமும், அகிலும்," "குடகடல் பிறந்த படர் கொடிப் பவழமும், தென்திசைப் பிறந்த வெண்சுடர் மணியும்," "இலங்கை ஈழத்துக் கலந்தரு செப்பும்," "கங்கை வாரியும், காவிரிப் பயனும்" "ஈழத்து உணவும், காழகத்து ஆக்கமும்" என்ற வெளிநாட்டுப் பொருள்கள் வேண்டுமளவு வந்து குவிந்து கிடக்கும். நூலாலும், மயிராலும், பட்டாலும் நெய்யப்பெற்ற நுண்ணிய ஆடைகளை விற்போரும், பட்டு, பவளம், சந்தனம், அகில், முத்து, மணி, பொன் ஆகியவற்றைத் தனித்தனியே குவித்து வைத்து விற்போரும், நெல், புல், வரகு முதலாம் கூலங்களைக் கூட்டி வைத்து வாணிபம் புரிவோரும்; காழியர், கூவியராய அப்பம் விற்போரும், கள் விற்போரும், மீன் விலை பகர்வோரும், வெள்ளுப்பு விற்போரும், வெற்றிலை விற்கும் பாசவரும் முதலாம் வணிகர்கள் வரிசையாக இருந்து வாணிபம் புரிவர். வாழ்க்கைக்குத் தேவையாம் இப்பொருள்களை அல்லாமல், நாகரிக வாழ்க்கையினர் வேண்டி நிற்கும், வண்ணம், சுண்ணம், தண்ணறும் சாந்தம், அகில், ஆரம், கற்பூரம் முதலாய பொருள்களும் உண்டு.

சுருங்கச் சொன்னால், இன்றைய நாகரிக நகரங்களின் கடைவீதிக் காட்சியினை அன்றைய தமிழ்நாட்டுப் பேரூர்களின் அங்காடிகள் அளித்தன என்று கூறலாம்.

வாணிபம் வளர்வதற்கு, அவ்வாணிபப் பொருள்கள் வளமுடையனவாக இருத்தலோடு, அவ்வாணிபம் மேற்கொண்டு வாழும் மக்கள் அறநெறியிற் பிறழா அன்புடையராதல் மிகவும் வேண்டப்படுவதாம். இதை உணர்ந்தவர் அக்கால வணிகர்கள். அவர்கள் தங்கள் பொருளையும், பிறர் பொருளையும் ஒன்றேபோல எண்ணி மதித்து, தக்கிசைந்து கோல் விளங்கத் தவிர்த்தே, விலையாக வாங்கிய பண்டத்திற்குத் தக்க முறையாகப் பொருளைக் கொடுப்பதே செய்துவந்தனர். வணிகர்களின் வாணிபம் இத்துணைச் சிறப்பினைப் புலவர்களும் பாராட்டியுள்ளனர்.

> "தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
> கொள்வதூஉம் மிகைகொளாது
> கொடுப்பதூஉம் குறைகொடாது
> பல்பண்டம் பகர்ந்து வீசும்
> தொல்கொண்டித் துவன்றிருக்கை" (பட்டினப். உ0க-கூ)

இவ்வாறு அறநெறி நின்று தொழில் நடத்திய வணிகர்களை, அரசர்கள் "எட்டி" என்ற சிறப்புப் பெயர் அளித்துப் பாராட்டவும் செய்தனர்.

ஒரு நாட்டு வாணிபம் வளர்வேண்டுமானால், அந்நாட்டுத் தொழில் துறையிலும் முன்னேற்றம் பெறுதல் வேண்டும். தமிழகம் இந்த உண்மையினை அறிந்த நாடாதலின், ஆங்கே, பலவேறு தொழிலாளரும் ஒன்றுகூடி வாழ்ந்திருக்கக் காண்கின்றோம். தமிழர்கள் அக்காலத்திலேயே இரும்பு முதலாம் உலோகங்களைக் கண்டு, அவற்றின் பயனையும், பயன்படுத்தும் முறையினையும் அறிந்திருந்தனர். தமிழகத்துத் தலைநகரங்களில், வணிகர்களின் வாழ்விடங்களை அடுத்துள்ள இடங்களில் பல்வேறு தொழிலாளரும், தங்கள் தங்கள் தொழில்நிலையங்களை வைத்து வாழ்ந்திருந்தனர். வெண்கலக் கன்னாரைக் "கஞ்ச

காரர்" எனவும், செம்பு கொண்டு கலன் புனைந்து தரு வோரைச் "செம்பு செய்குநர்" எனவும், சிற்பநூல் வல்லாரை "மண்ணீட்டாளர்" எனவும், தையல் தொழி லாளரை "துன்னகாரர்" எனவும் பெயரிட்டுப் போற் றினர்; இவர்களே அன்றி, மரங்கொல் தச்சர், கருங்கைக் கொல்லர், பொன்செய் கொல்லர், நன்கலம் தருநர் முதலாம் கம்மாளர்களும் இருந்தனர். தமிழர்கள், தங்கள் நாட்டுத் தொழில்வளம் பெருக இத்தகைய தொழிலாள ரைப் போற்றியதோடு அமையாது, பிறநாட்டுத் தொழில் அறிஞர்களை அழைத்துத் தங்கள் தொழில்களை வளர்த்துக் கொள்வதிலும் முன்னின்றனர், அவ்வாறு அழைக்கப் பெற்ற பிறநாட்டுத் தொழிலாளர்கள், தமிழகத்துத் தொழிலாளர்களோடு ஒற்றுமையாய் வாழ்ந்து இந்நாட்டுத் தொழிலை வளர்த்தனர்.

"மகத வினைஞரும், மராட்டக் கம்மரும்,
அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்,
தண்டமிழ் வினைஞர் தம்மொடு கூடிக்
கொண்டினிது இயற்றிய கண்கவர் செய்வினை."

எனப் புலவர்களாலும் போற்றப்பட்டுள்ளது அச்செயல்.

தமிழகத்தில் தொழில்கள் மிகப் பலவாகப் பல்கி யிருப்பினும், அவற்றுள் மிகமிகச் சிறப்புடைய தொழில் கள் ஆடை நெய்தல், இரும்புத்தொழில், பொற்றொழில் களே ஆகும். தமிழகத்தின் ஆடைகளுக்குப் பிறநாடு களில் தேவை மிகுதியாக இருந்ததால், அத்தொழிலில் அக்கால மக்கள் தங்கள் முழுக் கருத்தையும் செலுத்தி யிருந்தனர். தமிழ்ச்சங்க காலத்தே அரசர்கள் ஒருவரோ டொருவர் பகைகொண்டு போர் செய்வதே தொழிலாய் இருந்தமையால், அவ்வரசர்களுக்கு வேண்டும் வில்லும், அம்பும், வாளும், வேலும் போன்ற படைக்கலங்களைச் செய்துதர ஊர்தோறும் கொல்லர்கள் பலர் வாழலாயினர். அக்கால அரசர்களும், அவர்கள் மனைவிமார்களும், ஏனைய செல்வர்களும் வகை வகையான அணிகளை அணிவதில் ஆர்வமுடையவராய் இருந்தனராதலின், செல்வர்களும்,

அரசர்களும் வாழும் தலைநகரங்களில் பொன்செய் கொல்லர் பலர்கூடி வாழலாயினர். இவ்வாறு வாணிபத்துறையிலும், அவ்வாணிபத்திற்கு உயிர்கொடுக்கும் தொழில் துறையிலும் தமிழகம் தனிச் சிறப்புற்று திகழ்ந்தது.

அந்தக் காலத்தில், அவ்வணிகர்களுள்ளும், தொழிலறிந்தாருள்ளும் சிலர், தங்கள் தொழில்களுக்கிடையே, தமிழ்நூல் பயின்று பெரும் புலமையுற்று விளங்கினர். அவ்வாறு வாழ்ந்த புலவர்கள் சிலர் வரலாற்றினை உரைப்பதே இந்நூல். இந்நூலினுள், வணிகர்களாக வாழ்ந்த அறுவர் வரலாற்றை முதற்கண் உரைத்து, அவரைத் தொடர்ந்து, பொன்செய் கொல்லராய்ப் புலமையுற்றார் இருவர் வரலாற்றினை விரித்துரைத்து, பிறகு முறையே கொல்லர் ஒருவர், தச்சர் இருவர் வரலாற்றினை எடுத்துக் காட்டி, அவரை அடுத்து, வாணிகம் பொருந்த நகரங்களில் வழங்கிய நாணயங்களின் மதிப்பிட்டினைக் காணும் தொழில் மேற்கொண்டிருந்த வண்ணக்கர் அறுவர் வரலாற்றினைக் கூறி, அதன்பின் எடுத்துக் காட்டிய தொழில் போன்றன அல்லவாயினும், இவையும் தொழிலே, இவற்றைச் செய்வோரும் தொழிலாளரே எனக் கருதப்படும் மருத்துவர், கூத்தர், ஆசிரியர், சோதிடம் கூறுவோர் ஆகியோராய்ப் புலமையுற்றிருந்தார் சிலர் வரலாற்றினை வகுத்துக் கூறியுள்ளேன். இவர்களுள் மருத்துவர் ஒருவர், கூத்தர் ஐவர்; ஆசிரியர் இருவர், சோதிடம் கூறும் கணி ஒருவராவர். இவ்வாறு, வணிகரும், பலவேறு தொழிலாளருமாய் விளங்கும் இப்புலவர்கள் வரலாறு உரைக்கும் இந்நூலுக்கு, மா, முதலாம் பலவகை மரங்கள் உள்ள ஒரு தோப்பிற்குப், பிறமரங்கள் உளவாகவும், மாவின் சிறப்புக் கருதி மாந்தோப்பு எனப் பெயரிடுவதே போல், இப்புலவர்கள் மேற்கொண்ட தொழில்களுள், வாணிகத் தொழிலே, ஏனைய தொழில்களினும் சிறப்புடையதாகலின், **வணிகரிற் புலவர்கள்** எனப் பெயரிடப்பட்டுளது.

## க. உறையூர் இளம்பொன் வணிகனார்

சோழர் பேரரசின் பழஞ்சிறப்பு வாய்ந்த தலைநகர் உறையூர்; உறையூர் தமிழ்நூல்களில், உறந்தை என வழங்கப் பெறும்; உறையூர்க்குக் கோழி என்ற மற்றோர் பெயரும் உண்டு கோழியொன்று யானையொடு போரிட்டு வென்ற இடமாதல் சிறப்பறிந்து அதற்கு அப்பெயர் வந்தது; இவ்வரலாறு விளங்க, "முறஞ்செவி வாரணம் முன்சமம் முருக்கிய புறஞ்சிறை வாரணம்" என இந்நகரை அழைப்பர் இளங்கோவடிகள் உறையூர் காவிரியின் கரைக்கண் அமைந்து, அதனால் வளம்பெற்றுப் பயனுற்றது; "காவிரிப் படப்பை உறந்தை" உறையூர் செல்வத்தால் சிறந்தது; மாடமாளிகைகள் மலிந்தது, "உறந்தையன்ன நிதியுடை நன்னகர்", "உறந்தையன்ன பொன்னுடை நெடுநகர்", "பிறங்கு நிலைமாடத்து உறந்தை" உறந்தையில் ஓர் அறங்கூர் அவையுண்டு: அவ்வவையினர் அறம் பிறழ முறைவழங்கி அறியார்; "அறங்கெழு நல்லவை உறந்தை", "உறந்தை அவையத்து அறங்கெடல் அறியாது", "உறந்தை அவையத்து அறம் நின்று நிலையிற்று", இவ்வுறந்தை, சோழர்வழிவந்த தித்தன் என்பானுக்கு, ஒரு காலத்தில் உரிமையுடைத்தாய் இருந்தது; அப்போது, இது நொச்சி வேலிகளாலும், வெண்ணெல் வேலிகளாலும் சூழ்ந்து சிறப்புற்றிருந்தது, "நொச்சிவேலித் தித்தன் உறந்தை", "மாவண் தித்தன் வெண்ணெல்வேலி உறந்தை."

இவ்வாறு, அரசியற்றலைமையாலும், அறங்கூர் அவையுடைமையாலும், வளத்தாலும், புலவர் பாராட்டும் நலத்தாலும், பெருமையுற்ற உறையூர், புலவர் பலரின் பிறப்பிடமாம் பெருமையினையும் உடையதாம் உறையூரின் உரிமையுடையோராய புலவர்கள் பதின்மருக்கு மேலாக உள்ளனர்.

இத்தகைய சிறப்பமைந்த உறையூரில் பிறந்தவர், இளம்பொன் வணிகனார். உறையூர் ஒரு பேரரசின் தலை

நகராதலின், அது வாணிபத் துறையிலும் வளம்பெற்
றிருந்தது. அந்நகர்வாழ் பல்வேறு வணிகர் குழுவினுள்,
பொன் வணிகர் குழுவும் ஒன்றும். பொன், ஆடகம்,
சாம்பூநதம், கிளிச்சிறை, சாதரூபம் என மாற்று வகை
யால் பலவாம். இவற்றுள், ஆடகமும், சாம்பூநதமும்
மாற்றுக் குறைதல் இல்லாப் பெருமை வாய்ந்தது ஆகலின்,
அவற்றைப் பெரும்பொன் எனவும், கிளிச்சிறையும், சாத
ரூபமும் மாற்றுக் குறைந்தனவாதலின், அவற்றை இளம்
பொன் எனவும் பிரித்து வழங்கினர் நம் புலவர். பின்
னர்க் கூறப்பெற்ற இளம்பொன் வாணிகம் மேற்கொண்டு
வாழ்ந்தமையால், இளம்பொன் வணிகரோ என அழைக்கப்
பெற்றார். ஆண்டாலும், அறிவாலும் இறப்ப உயர்ந்த
பெரியார்களின் இயற்பெயர்களை வழங்க மக்கள் அஞ்சுவ
தும், அதனால் அவர் பெயரை வழங்காது, அவர் மேற்
கொண்ட தொழிலால், இன்ன தொழிலார் என வழங்
குவதும், நாட்டில் எங்கும், எக்காலத்திலும் உள்ள வழக்க
மாம். உறையூரில் வாழ்ந்த இளம்பொன் வணிகர்களுள்
இவர் மிகச் சிறந்திருந்தமையால், இவரை, அக்கால
மக்கள், இயற்பெயர் கொண்டு அழையாது, இளம்பொன்
வணிகர் என்ற தொழிற்பெயரிட்டு இளம்பொன் வணிகர்
என அழைத்தனர்.

ஓர் ஊரின் ஆனிரைகளை, அந்நாட்டுப் பகையரசன்
வீரர்களோ, அல்லது அவ்வூரை அடுத்த நிலங்களில் வாழ்
எயினர், மறவர் போன்ற கொள்ளைக்காரர்களோ, அந்
நிரைக்குக் காவலாய அமைந்தாரை அடித்து விரட்டிவிட்டு
ஓட்டிச் சென்று விடுவதும், அஃதறிந்து ஊரில்வாழ்
வீரர்கள், விரைந்து பின்சென்று, அக்கொள்ளைக்காரர்களை
வென்று, ஆனிரைகளை மீட்டுக் கொணர்தலும், அக்கால
அன்றாட நிகழ்ச்சிகளாம். இத்தகைய போராட்டங்களில்,
மீட்கச் சென்ற வீரருட் சிலர், புண்பெற்று இறந்து
போவதும், அவ்வாறு இறந்தாரின் பீடும், பெருமையும்,
பெயரும் பொறித்த கற்களை அவரைப் புதைத்த இடங்
களின்மேல் நட்டு, மாலைசூட்டி வழிபடுவதும் வழக்கமாம்.

அவ்வாறு இறந்த வீரன் ஒருவனுக்குச் செய்த சிறப்பினையும், வாழ்ந்திருந்த காலத்தில் அவனளித்த பொருள் பெற்று மகிழ்ந்த பாணர் முதலாம் இரவலர், அவன் இறந்தமை அறியாது வந்து, அவன் நடுகல் கண்டு கண்ணீர் விட்டுக் கலங்குவதையும் பொருளாகக் கொண்ட அழகிய சிறு செய்யுளைப் பாடியுள்ளார் புலவர் இளம்பொன் வணிகனார்.

"பரலுடை மருங்கிற் பதுக்கைச் சேர்த்தி,
மரல்வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு
அணிமயிற் பீலி சூட்டிப், பெயர் பொறித்து
இனிநட் டனரே கல்லும்; கன்றொடு
கறவை தந்து பகைவர் ஓட்டிய
நெடுந்தகை கழிந்தமை அறியாது
இன்றும் வருங்கொல் பாணரது கடும்பே."

(புறம் உசுச)

# உ. காவிரிப்பூம் பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார்

"பதியெழுவறியாப் பழங்குடி கெழீஇய பொதுவறு சிறப்பின் புகார்" என்று புலவர்களால் போற்றப்பெறும் பெருமைசால் நகரே காவிரிப்பூம் பட்டினமாம். காவிரி கடலோடு கலக்குமிடத்தில் அமைந்த மிகப் பழைய நகரம் இது; காவிரிப் படப்பைப் பட்டினம் எனச் சிலப்பதிகாரத்தில் அழைக்கப் பெறுகிறது. காடுகொன்று நாடாக்கிக், குளந்தொட்டு வளம்பெருக்கி நாடாண்ட சோழப் பேரரசனான, கரிகாற்பெருவளத்தான் காலத்தில், சோழ அரசின், அரசிருக்கையாம் பெருமையுற்று விளங்கிற்று; சோழநாட்டின் வளம் செழிக்க, வாணிபம் பெருகப் புகார் போன்ற கடற்கரைப் பட்டினமே பெரிதும் பயனளிக்கும் என உணர்ந்த அவனால், வளர்ந்த பெருநகரம் இது, வணிகரும், வாணிபங் கருதிவரும் பிறநாட்டு மக்களும், தொழிலறி புலவர்களும், தொழிலாளர்களும் கூடிவாழும் கடற்கரைச் சார்ந்த மருவூர்ப்பாக்கம், அரசரும், அமைச்சரும், அரசியல் துணையாளரும் வாழும் பட்டினப்பாக்கம் என்ற இருபெரும் பிரிவுகளாய் அமைந்த மாநகர், இருபாக்கத்திற்கும் இடையே அமைந்த பெரியதோர் நாளங்காடியினை உடையது, இந்நகரின் வாணிப வளமும் செல்வச் சிறப்பும், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இருபெரும் இலக்கியங்களிலும், பட்டினப் பாலையிலும், புலவர்களால் போற்றி உரைக்கப்பட்டுள்ளன; கற்புடை மகளிர் எழுவரைப் பயந்த பெருமைசால் நகர் புகார் எனக் கற்புடைத் தெய்வமாம் கண்ணகியாரால் போற்றிப் புகழப்பெறும் பண்புடையது; அறமும் அரசியலும் வாழ்வாங்கு சிறக்கத் துணைபுரியும் ஐவகை மன்றங்களையுடையது; இவ்வாறு அரசியல் நெறியாலும், வாணிப முறையாலும் வளம்பெற்று விளங்கிய காவிரிப்பூம் பட்டினம், புலவர் பலர் வாழ்ந்தமையாலும் புகழ்பெற்றுத் திகழ்ந்தது; புகார்ப் பெருநகரில் பிறந்த புலவர்களாக, காவிரிப்பூம் பட்டினத்துக்

கந்தரத்தனார், காவிரிப்பூம் பட்டினத்துச் செங்கண்ணனார், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார், காவிரிப்பூம் பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் என்ற நால்வரை, நாம் அறிகிறோம்.

இவ்வாறு புலவர்களால் போற்றப்படும் காவிரிப்பூம் பட்டினத்தில், பொன்வணிகர் குடியில் வந்தவர் நப்பூதனார். காவிரிப்பூம் பட்டினத்தில்,

> "தவம் மறைந்து ஒழுகும் தன்மையிலாளர்
> அவம் மறைந்து ஒழுகும் அலவற் பெண்டிர்
> அறைபோகு அமைச்சர், பிறர்மனை நயப்போர்
> பொய்க்கரி யாளர், புறங்கூற் றாளரென்
> கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக்
> காதம் நான்கும் கடுங்குரல் எடுப்பிப்"
>
> (சிலப். ரு : கஉஅ - கங)

புடைத்து உண்ணும் பூதம் ஒன்று உண்டு என்றும், அது நிற்கும் இடம் பூதசதுக்கம் என அழைக்கப்பெறும் என்றும், சிலப்பதிகாரம் கூறும்.

புகார் நகரத்துப் பெருமக்கள், அப் பூதத்தைத் தெய்வமெனப் போற்றி வணங்கியதோடு, அதன் பெயரைத் தங்கள் மக்கட்குப் பெயராகவும் வைத்துப் போற்றினர். நம் புலவர் பெயரும் அவ்வாறு வந்ததே என்றும், அவர் அவ்வூரில் வாழ் அப் பெயர்கொண்டார் அனைவரினும் சிறந்து விளங்கினமையின், அச் சிறப்புக் குறிக்கும் 'ந' என்ற அடையினைப்பெற்று நப்பூதனார் என வழங்கப் பெற்றார். நப்பூதனார், பத்துப் பாட்டினுள் ஒன்றாகிய முல்லைப்பாட்டு ஒன்றே பாடியுள்ளார். அவர் அரசர் எவரையும் பாராட்டியதாகச் சான்றுபகரும் செய்யுள் ஒன்றும் கிடைத்திலது.

முல்லைப்பாட்டு, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைகளுள் முதற்கண் வைத்துச் சிறப்பிக்கப்பெறும் முல்லைத் திணைப்பொருள் குறிக்கவந்த பாட்டாகும்; முல்லையாவது, " அறவோர்க்களித்தலும்,

வரும் இளையாக்கு நீரும் நிழலும் பயத்தலானும், ஆர்பதம் மிகுத்த நீரும் நிழலும் பெறுதலின் களிசிறந்து மாவும், புள்ளும் துணையோடு இன்புற்று விளையாடுவன கண்டு தலைவற்கும் தலைவிக்கும் காமக்குறிப்பு மிகுதலானும் என்பது. புலம் பெயர்ந்து, கொல்லேற்றோடே புனிற்றுக் கன்றை நினைந்து மனையிற் புகுதரவும், தீங்குழலிசை பயவும், பந்தர் முல்லை வந்து மணங்களூற்றவும் வருகின்ற தலைவற்கும், இருந்த தலைவிக்கும் காமக்குறிப்புச் சிறத்தலின், அக்காலத்து மாலைப்பொழுதாம் உரித்தாயிற்று" என விளக்கும் நச்சினார்க்கினியர் சொற்களால், அம்முல்லை நில இயல்பு ஒருவாறு விளங்குதல் காண்க.

நப்பூதனார் பாடிய முல்லைப்பாட்டு, கணவன் வினைவயிற் பிரியக் கருதியதனை, அவன் செயல்கையால் அறிந்து ஆற்றாது வருந்தும் தலைவியது நிலைமையைக் கண்டு, தலைவன், தான் போதற்கு வேண்டும் காரணங்களை நிரலே எடுத்துக் காட்டவும், போதற்கு உடன்படாது இருந்த வளைபொருந்து பெண்டிர், 'நாங்கள் கேட்ட நற்சொல்லால் தலைவன் விரைவில் வினை முடித்து வருதல் உறுதி; நீ வருந்தாது ஆற்றுவாயாக' என்று கூற, அவ்வறிவுரை கேட்டவள், தலைவன் அவ்வாறு செல்வது அறவழிப் பட்டதே என்பதை எண்ணி, ஆற்றியிருந்தாளாக, தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற காலத்தே வந்ததனைக் கண்ட வாயில்கள் வாழ்த்திக் கூறும் துறையமைந்து வந்துளது.

தலைவியோடு துயில்கொள்ளும் தலைமகன், வினைமேற் செல்லுதற்காம் செயல்களை முடித்தற் பொருட்டு, அவள் அறியாமல் எழுந்து சென்றுவிட்டான்; உறக்கம் கலைந்தெழுந்த தலைமகள், தன்னோடு துயின்றிருந்தானைக் காணாளாய், அவன்பால் சின்னாட்களாகக் காணப்படும் இது போன்ற செயல்களையும் எண்ணி, அவ்வெண்ணத்தால் உடல்மெலியக் கழலும் தன் வளைகளைக் கழலாவாறு செலுத்தியும், மயக்கம் கொண்டும், பெருமூச்சுவிட்டும், அம்பேறுண்ட மயிலேபோல் நடுங்கியும், தன் அணிகலங்

களெல்லாம் நெகிழவும், பூப்போலும் மையுண்ட அழகிய கண்கள் முத்துப்போலும் கண்ணீர்த் துளிகளைத் துளிப்பவும், வருந்தினளாக, அவள் துயர்நிலை கண்ட தலைவன், தானும் துயருற்று, "பொருள் பெற்றுப் புகழுற்று வாழ்வதே மானமுடைய வாழ்வாம்," என்றும், "மாற்றார் மாண்புடன் வாழ, மனையில் இருந்து மடங்கி வாழ்தல் மானமுடையரசர்க்கு மாண்பன்று" என்றும், தன் பிரிவிற் காம காரணங்கள் பலவற்றையும் எடுத்துக் காட்டவும், அவற்றை ஏற்காத தலைமகள், பெருமுது பெண்டிர் சிலர். "படைத்தலைவர் ஏவலால் நற்சொற் கோடற்குரியோர், கடத்தற்கரிய காவலமைந்த நம் ஊரின் புறத்தே சென்று, நெல்லும் மலரும் தூவி, வணங்கி நற்சொல் வேண்டி நின்றாராக, அப்போது, ஆயர்மகளொருத்தி, தன் கைகளைக் குளிரினால் தோள்மேலே கட்டிக்கொண்டு, சிறு கயிற்றால் கட்டப்பெற்றிருக்கும் கன்றுகள், தாய்ப்பால் குடிக்கப் பெறாமல் வருந்தும் வருத்தத்தை நோக்கி, 'கோலேந்திய நம் கோவலர் பின் நின்று செலுத்திவர உம்முடைய தாய்மார் இப்போதே வந்துவிடுவார்' என்று கூறிய அவ்வாயர் மகளின் நற்சொல்லை, அவர் கேட்ட நற்சொல்லாக அறிந்தோம். அதனால், நம் தலைவர், வஞ்சி சூடிச் சென்று, பகைவரை வென்று, அவர் அளிக்கும் திறைப்பொருள்களோடு விரைந்து வருவர்; உண்மை; அவர் அவ்வாறு சென்று வினை முடித்து வருதல் நம் இல்லறத்திற்கும் நன்றாம்; ஆகலின், நீ, நின் மனத்தடுமாற்றத்தால் உண்டாய துயர் ஒழிவாயாக" என்று கூறினர், பெருமுது பெண்டிர் கூறியன கேட்ட அவள், தலைவன் இவ்வாறு பிரிந்து சென்று வெற்றிபெற்றாலன்றி, இவ்வரசியலும், இல்லறமும் இனிது நடைபெறா என்பதை எண்ணி ஓயாது ஒலிக்கும் குளிர்ந்த கடல்நீரைக் குடித்து, வலமாக எழுந்து பெருமலைகளில் தங்கி, உலகத்தை ஒருசேர வளைப்பதே போல் விரைந்து சென்று மேகம் பெருமழை பொழிந்த மாலைக் காலத்தில், பொற்பாவை விளக்கில் ஏற்றிய பெரிய தீ நின்று எரிய, தன் எழுநிலை மாடத்தே இருந்து, ஆங்கு வீழும் அருவிகளின் ஓசையினூடே, தலைமகன் குறித்துச்

சென்ற பருவம் பொய்யாகாமல் வருவன் என்னும் கருத்தினளாய், அவன் வரவினையே எண்ணிக் கிடக்கும் அவளுடைய இரு காதுகளும் குளிருமாறு,

காட்டாறு சூழ்ந்தோடும் பெரியகாட்டின் நடுவே, ஆங்கு வளர்ந்திருக்கும் தூறுகளையெல்லாம் வெட்டி, வேட்டுவச் சாதியாரின் அரண்களையும் அழித்து, காட்டு முட்களால் மதில்போலும் வேலியமைத்துச் செய்த பாசறையின்கண், தங்கியிருக்கும் பகையரசர், நடந்த போரில், இறந்த யானைகளையும், மறைந்த மாவீரர்களையும், கொல்லுண்ட குதிரைகளையும், புண்ணுற்ற படைகளையும் எண்ணி எண்ணி வருந்தி, இவ்வாறு அழியக் குறைந்த இச்சிறு படைகொண்டு நாளை எவ்வாறு போர் ஆற்றுவோம் என ஆழ்ந்து எண்ணி, அவ்வருத்தத்துக்குக் காரணமாகிய பெரிய பாசறையில், அடுத்த கூடாரங்களில், வில்லை நெருங்க ஊன்றி, அதில் தூணிகளையும் மாட்டி, எறிகோல்களையும் ஊன்றி, கேடகங்களையும் வரிசையாகக் குத்தி, இங்ஙனம் ஆக்கிய, விறற்படையாலாகிய அரணை, தங்களுக்கு அரணாக, இத்தகு இடையே இட்ட பெரிய படைக்கு நடுவே, ஒரு தனியிடத்தை அரசனுக்குரிய இடமாகத் தேர்ந்து, அவ்விடத்தைச் சூழப் பலவண்ணத் திரையை வளைத்து, வலிய உடலும், தறுகண்மையும் உடையயவரா, புலிச்சங்கிலி விட்டுப்பட்ட நல்ல இடத்தில், மக்களின் வாழ்நாளின் வகையறிந்து கூறும் அறிவினையுடைய பெரியோர், அரசனை வணங்கி, நெடிதுநாள் வாழ வாழ்த்தி, நாழிகையினை உணர்த்தினாராக, மங்கையர், மாணிக்கவிளக்கேற்றி, திரையினை வளைத்துப் பிடிக்க, உள்ளறையில் அமைந்த பள்ளியிலே சென்றிருந்து, சிற்றுடைகள் நெய்யைக் காலும் திரிக்குழாயினைக் கையிற்கொண்டு, விளக்கேற்றிவைத்து, அவ்விளக்குகள் அவியுந்தோறும், தம கைப்பந்தம் கொண்டு கொளுத்தவும், ஒழுக்கத்திற் சிறந்த உயர்ந்த மெய்காப்பாளர் காவலாகச் சூழ்ந்து திரியவும், உணர்ந்ததனை, கையாலும், முகத்தாலும் காட்டுவதல்லது உரையால் விளங்க உரைக்கவொண்ணு மிலேச்ச ஊமைகள், பள்ளி

கொள்ளுமிடத்தைச் சூழ்ந்து திரியவும், மணியொலி அடங்கிய இரவின் நடுயாமத்திலும், போர்மேற் சென்ற வேட்கையால் உறக்கம் ஒழிந்திருந்து, மற்றை நாட்காலையில் வாள் கொண்டு போராற்றி வெற்றிபெற்று, பகைவர் நாடுகளைக் கைப்பற்றிய வெற்றிச் சிறப்பாலே, எக்காலமும் வென்று எடுக்கின்ற கொடியை எடுத்து, காடு பிற்படுக் கழிய, காயா மலரவும், கொன்றை பொன்போல் பூக்கவும், காந்தள் கைபோல் விரியவும், தோன்றி பூக்கவும், கலையொடு கூடிய மான் துள்ளவும், காடு தழைத்த பெருவழியில், வெற்றிதோன்றக் கொம்பும் சங்கும் முழங்க, பெரும்படையுடனே, விரைந்து செல்லும் தன் குதிரைகளை, அவ்விரைவால் மனம் அமையாது மேலும் விரைவாகச் செலுத்தும் எண்ணமுடையவராய் வந்த தலைமகன் தேரிற்பூண்ட குதிரைகள் ஆரவாரித்தன.

இது, நப்பூதனார் பாடிய 'முல்லைப் பாட்டின் பருப்பொருள் இம்முல்லை பாட்டினுள், கையிற் சங்கும் சக்கரமும் கொண்டு, மார்பில் திருமகள் வீற்றிருக்க விளங்கும் திருமால், மாவலி, மூன்றடி மண்ணைத் தாரைவார்த்துக் கொடுக்க, வளர்ந்து கொண்ட பேருருவம் நன்கு படமாக்கப் பட்டுளது :

> "நனந்தலை உலகம் வளைஇ, நேமியொடு
> வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
> நீர்செல நிமிர்ந்த மாஅல்.' (முல்லைப் . க-௩)

காலில் கட்டிய சிறுகயிற்றால் பிணிப்புண்டு நிற்கும் கன்றுகள், காலையில் காடுநோக்கிச்சென்ற தாய்ப்பசுக்கள், மாலையில் மீண்டு வாராமையுணர்ந்து வாடியக்கால், அக்கன்றுகளினும், மிக்க வருத்தம் கொள்ளும் ஆய்மகள், அடிக்கும் குளிர்காற்றினையும் பொருட்படுத்தாது, அக்குளிர் நீங்குமாறு இரு கைகளாலும் தோளை இறுகப் பிடித்துக்கொண்டு, அக்கன்றுகளுக்கு ஆறுதல் கூறுவாள் போல், நும் தாயர் இப்போதே வருவர் என்று கூறி, அப்பசுக்களின்பின் கோலேந்தி வரும் தன் கணவன் வருகை

யில் வேட்கைகொண்டு நிற்கும் அழகிய காட்சியினையும், அவள், தான் பேணிப் போற்றும் ஆனிரைகளிடத்தும், தன் கணவன்மாட்டும் கொண்டுள்ள பேரன்பினையும் நன்கு பாராட்டியுள்ளார்.

> "சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
> உறுதுயா அலமரல் நோக்கி, ஆய்மகள்
> நடுங்குசுவல் அசைத்த கையள; கைய
> கொடுங்கோல் கோவலா பின்னின்று உய்த்தர
> இன்னே வருகுவா தாயா என்போள்."
>
> (முல்லைப்: கஉ-கூ)

கான்யாறுகள் சூழ்ந்தோடும் காட்டின் நடுவே, மிகச் சேய இடங்களிலும் நாறும் பிடவம் முதலாம் கொடிகளாலாய புதர்களை அழித்தும, ஆங்குள்ள அக் காட்டுவாழ் வேடர்களின் அரண்களையும அழித்து, அக்காட்டில் விளைந்த முட்களைப் பெருமதில்போல் சூழ அமைத்துக் கொண்ட கடல்போல் பரந்த காட்டரணை நன்கு சுட்டிக் காட்டியுள்ளார்:

> "கான்யாறு தழீஇய அகனெடும் புறவில்
> சேணாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி,
> வேட்டுப்புழை அருப்பம் மாட்டிக், காட்ட
> இடுமுட் புரிசை ஏமுற வளைஇப்
> படுநீர்ப் புணரியிற பரந்த பாடி" (முல்லைப்: உசு-அ)

தழைவேய்ந்த கூரைவீடுகளை வரிசையாகக் கொண்ட தெருவில், நாற்சந்தியில், காவலாக யானையை நிற்கவைப் பதையும், அவ் யானைக்கு, உணவாகக் கரும்பையும், வைக் கோலையும், அதிமதுரத் தழைகளையும் இடுவதையும், அவற்றை உண்ணும் எண்ணமற்ற யானை, அதைத் தன் கையால் எடுத்து நெற்றியைத் துடைத்துப் பின்னர் கொம்புகளுக்கிடையே ஏற்றிவைத்துக் கொண்டிருப்பதையும், அதைக்கண்ட யானைப்பாகன், அவ் யானை அறியும் வடமொழியில் உண்ணுமாறு பணித்தும், பரிக்கோலால் குத்தியும் உண்பிக்கும் செயலையும் விளக்கமுற விளக்கி யுள்ளார்.

"உவலைக் கூரை ஒழுகிய தெருவில்
கவலை முற்றம் காவல் நின்ற
தேமபடு கவுள சிறுகண் யானை
ஓங்குநிலைக் கரும்பொடு, கதிர்மிடைந்து யாத்த
வயல்விளை இன்குளகு உண்ணாது, நுதல்துடைத்து
அயில்நுனை மருப்பில்தம கையிடைக் கொண்டெனக்
கவைமுட் கருவியின், வடமொழி பயிற்றிக்
கல்லா இளைஞா கவளம் கைப்ப" (முல்லைப்: ௨௯-௩௬)

போராற்றிப் பாசறைபுக்க பகையரசன், அன்று நடந்த போரில், பகைவர் ஓங்கிவெட்டிய வாளால் புண் பெற்று, தம் பிடிகளை மறந்து மாண்டுபோன யானைகளையும், பகைவர் படையினைச் சேர்ந்த யானைகளின் கைகள பெருமலைப் பாம்புகள் புரளுமாறுபோல் அறுந்து வீழ்ந்து புரளுமாறு வெட்டி வெற்றியைத் தேடிததந்து தம் செஞ்சோற்றுக் கடன்கழித்த கடமைதவறா வீரர்களையும், பகைவர்களின் அம்புகள தைக்கப் பெறறமையால் வருந்தி, நிமிர்நத தம் செவிகளைச் சாய்த்துக்கொண்டு புல்லுண்ணாது வாடும் தன் குதிரைகளையும் எண்ணி எண்ணி வருநதி, இவ்வாறு பாழபட்ட படையினைக்கொண்டு நாளை எவ்வாறு போராற்றுவேன் என்ற கவலையால், உள்ளமும், உடலும் தளர்ந்து, அத் தளர்ச்சியால், ஒருகையை அமர்நதிருக்கும் பள்ளியில் ஊன்றிக்கொண்டு, ஒருகையால், முடிவிளங்குமதன் தலையினைத் தாங்கிநிற்கும் தாழ்நிலையினை உயிரோவியமாக்கித் தந்துள்ளார் :

"எடுத்தெறி எஃகம் பாய்தலின், புண்கூர்ந்து
பிடிக்கணம் மறந்த வேழம்; வேழததுப்
பாம்பு பதைப்பன்ன பரூஉக்கை துமியத
தேம்பாய் கணணி நல்வலம திருததிச
சோறுவாய்த்த தொழிந்தோா உள்ளியும், தோல்துமிபு
வைந்நுனைப் பகழி மூழ்கலின், செவிசாய்த்து,
உணாஅது உயஙகும் மாசிந்தித்தும்,
ஒருகை பள்ளி ஒற்றி, ஒருகை
முடியொடு கடகம் சேர்த்தி நெடிது நினைந்து"
(முல்லைப்: ௬௮-௭௬)

அரசர்க்கு மெய்காப்பாளராய்த் தலைப்பாகையும், சட்டையும் கொண்டு, உயர்ந்துசெல் நடையினராய், சீரிய ஒழுககத்தினராய்ப் பெருவீரர்கள் அமர்ந்திருத்தலையும, அரசன் பள்ளியறையினுள், ஆங்கு நடைபெறும அரசியல் உண்மைகளை வெளியில் உரையாதிருத்தற் பொருட்டு, ஊமையராய வெளிநாட்டு மக்களையே குற்றேவல் புரிவோ ராகக் கொண்டிருப்பதையும கூறியுள்ளார் :

> "துகில்முடித்துப் போர்த்த, தூங்கல் ஓங்குநடைப்
> பெருமூதாளர் ஏமம் சூழ." (முல்லைப்: நிடு-ச)

> "எரறைப் பள்ளியுள்
> உடம்பின் உரைக்கும, உரையா நாவின்
> படம்புகு மிலேச்சர் உழையராக." (முல்லைப்: சுச-சு)

இவ்வாறு, அரசன்முதல், ஆயர்வரையுள்ள மக்கள், பண்டைக்காலத்தில் மேற்கொண்டிருந்த வாழ்க்கை முறை களை எல்லாம், புலவர் நப்பூதனார் நன்கு எடுத்துக்காட்டி யுள்ளார். இவ்வாறு அவர் பாடிய முல்லைப்பாட்டு, பத்துப் பாட்டினுள், உள்ள எல்லாப் பாட்டினும் அடியளவால் மிகச்சிறிது, என், அளவாற் சிறியதாயினும், பொருட்சிறப் பால், அவற்றோடு ஒப்ப விளங்கும உயர்புகழ்பெற்று விளங்குகிறது.

## ௩௨. செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றன்

இவர் பெயர் செல்லூர் இளம்பொன் சாத்தன் கொற்றன் என்றும், உறையூர் இளம்பொன் சாத்தன் கொற்றன் என்றும் எழுதப்பட்டுளது; இது, செயலூர் என்பதன் இடமறிய மாட்டாமையாலும், உறையூரில் ஓர் இளம்பொன் வணிகனார் வாழ்ந்தமையாலும், ஏடு எழுதியோர் செய்த பிழையாம் உறையூர் இளம்பொன் வணிகனாரைப் போன்றே, இவரும், மாறுக்குறைந்த பொன் வகைகளாகிய கிளிச்சிறை, சாதரூபம் இரண்டையும் விற்கும் தொழில்மேற்கொண்டு வாழ்ந்தவராவர். பழங் காலத்தில் மக்கள் பயிலவழங்கிய பெயர்கள் கண்ணன், கீரன், கொற்றன், சாத்தன், பூதன் என்பனவாம்; இவற்றுள் ஒன்றைத் தனித்துக் கொள்வதோடு, சாததன் கொற்றன் எனவும், கண்ணன் கொற்றன் எனவும இரு பெயர்களை இணைத்து ஒருபெயராகவும வழங்குவர். இவர் பாடிய பாட்டு அகநானூற்று மணிமிடை பவளத்தில் வந்துள்ள ஒருசெய்யுளே.

பொருள்தேடச் செல்லும் தலைவர்கள், தாங்கள் மொழியும் தமிழ்வழங்கும் பெருநாட்டின் எல்லையைக் கடநது சென்றும் பொருளீட்டிவருவர் என்றும், அவர்களில் பெரும்பாலோர் அவவாறு கடந்துசெல்லும் எல்லையாக விளங்கியது, தமிழ் நாட்டின் வடக்கே உள்ளதும், எருமை நாடாண்ட வடுகா பெருமகனாகிய புல்லி என்பானுக்குரியதுமாகிய அயிரியாறும என்றும் தமிழ்நூல்கள் அறிவிக்கும். செயலூர் இளம்பொன் வணிகராய இவரும், வடக்கண் உள்ள அயிரியாறறிணையும், அக்கரைக்கண் மயில்கள் கொம்பின் ஒலிபோல் ஒலிக்கும் எனவும், அத்தகைய சேய்மைக் கண்ணதாய இடத்தைத் தலைவன் கடந்து சென்றுளான் என்றும் கூறுகின்றார்.

> "கான மஞ்ஞைக் கமஞ்சூல் மாப்பெடை
> அயிரியாற் றடைகரை வயிரின் நரலும்
> காடிறந் தகன்றோர் நீடினர்."  (அகம் : ௧௭௭)

கோவூர் கிழார், மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார் என்ற புலவர்களாலும், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்ற அரசனாலும், "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் பண்ணன்" எனவும், "பசிப்பிணி மருத்துவன்" எனவும் பாராட்டப் பெற்ற சிறுகுடி கிழான் பண்ணனின், மாற்றுவேந்தர்களின் யானைப்படை அழியுமாறு வேலோச்சிப்பெறும் வெற்றிச் சிறப்பினையும் அவனுக்குரிய காவிரியின் வடபால் அமைந்த சிறுகுடியினையும், ஆங்கு வளர்ந்திருக்கும் அவன் மாவின் சிறப்பினையும் நம் புலவர் பாராட்டியுள்ளார்:

"வென்வேல்,
இலைநிறம் பெயர ஓச்சி, மாற்றோர்
மலைமருள் யானை மண்டமர் ஒழித்த
கழற்கால் பண்ணன் காவிரி வடவயின்
நிழற்கயம் தழீஇய நெடுங்கால் மா" (அகம்: கஎஎ)

## ௬௯. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்

"நுரையென விரிந்தநுணைபூங் கலிங்கம்."

"நோக்கு நுழைகல்லா நுண்மைய, பூக்கனிந்து
அரவுரி யன்ன அறுவை."

"பாம்புரி யன்ன வடிவின, காம்பின்
கழைபடு சொலியின் இழையணி வாரா
ஒண்பூங் கலிங்கம்."

"புகைமுகந் தன்ன மாசில் தூவுடை."

"புகைவிரிந் தன்ன பொங்கு துகில்."

"கொட்டைக் கரைய பட்டுடை."

"நூலினும் மயிரினும் நுழைநூற் பட்டினும்
பால்வகை தெரியாப் பன்னூ றடுக்கத்து
நறுமடி செறிந்த அறுவை வீதி."

"பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டும நுண்வினைக் காருகா இருக்கை"

"கண்ணுழை கல்லா நுண் ... ற் கைவினை
... அறுவையர் வளந்திகழ் மறுகு."

அறுவை பற்றியும், அவ் வறுவைத்தொழில் மேற்கொண்டார் வாழும இருக்கை பற்றியும் பழந் தமிழ்ப் பாடல்கள் அளிக்கும் பாராட்டுரைகள் இவை; மதுரையில், மாண்புற்ற அங்காடியில் அமர்ந்து, இத்தகைய போற்றுதற்குரிய அறுவை வாணிகம் மேற்கொண்டு வாழ்ந்து மேன்மையுற்றவர் புலவர் இளவேட்டனார். இவர் பெயர், மதுரை அறுவை வணிகனார் இளவேட்டனார் என, ஊரும், தொழிலும் உணரவும், அவை உணரலாகா நிலையில் இளவேட்டனார் எனவும் ஏடுகளில் காணப்படும.

பாண்டிய அரசர் பலர் வாழ்ந்த மதுரையில் பிறந்து வாழ்ந்து, அவ் வரசர்களோடும், அவர்களால், பிற தமிழரசர்களோடும் தொடர்புகொண்டிருக்க வேண்டிய புலவர் இளவேட்டனார், தாம் பாடிய பத்துக்கும் மேற்பட்ட பாக்களில், ஒன்றிலேனும், அவ் வரசர்களுள் ஒருவரை

யாவது, அவர்களுக்குரிய ஊர், மலை இவற்றையாவது குறித்தாரல்லர். தாம பாடிய புறத்துறை தழுவிய பாட்டிலும், "உரைசால் நெடுந்தகை" எனப் பெயர் அறிய மாட்டாச் சிற்றூர்த் தலைவன் ஒருவனையே குறிப்பிட்டுள்ளார்.

சிற்றூர் ஒன்றின் உரிமைகொண்ட பெருவீரன் ஒருவன் இருந்தான்; அச் சிற்றூரை அடுத்துள்ள பேரரசர்கள் பலரும, தம் பகையரசர்களால் உண்டாம் துயர்போக்கித் துணைபுரிதற்கு அவனையே எதிர்நோக்கி நிற்பர்; அவர்கள் அவ்வாறு எதிர்நோக்கி வந்து காத்துக் கிடப்பினும, அவர்க்குண்டாய துயரை எளிதில் போக்க வல்ல பேராற்றல் தன்பால் இருப்பதால், அவர்கள் துயரைப் பெரிதாக எண்ணாது, தன் வீடுநோக்கி வந்து இரந்து நிற்பார்க்கு, அவர் வறுமை நீங்குமவண்ணம் வாரி வழங்குவதையே கருத்தாக மேற்கொண்டொழுகுவன்; அத்தகையான் காக்கும அவ்வூரும, பாம்புகள குடிவாழும் புற்றேபோல், பகைவர்களை நிலைகலங்கச்செய்யும பெருவீரர் பலரை உள்ளடக்கியுளது என அப் பெருவீரனையும், அவ் வீரன் பிறந்த ஊரினையும பாராட்டியுள்ளார்:

"அரவுறை புற்றத் தற்றே; நாளும்.
புரவலர் புன்கண் நோக்காது, இரவலர்க்கு
அருகாது ஈயும் வண்மை
உரைசால் நெடுந்தகை ஓம்பும் ஊரே." (புறம்: ௩உ௯.)

மதுரையாம் மருதநிலத்து ஊரினராய புலவர் இளவேட்டனர், ஐந்திணை வளங்களையும் நன்கு அறிந்து பாடியுள்ளார்; அவர் பாடிய அகத்துறைப் பாடல்கள் பத்தில், ஐந்து குறிஞ்சித்திணைப் பொருளும், இரண்டு முல்லைத்திணைப் பொருளும் எஞ்சிய பாக்கள் மூன்றினுள், ஒவ்வொன்று, எஞ்சிய திணைகளுள் ஒவ்வொரு திணைப் பொருளும் உணர நிற்கின்றன.

பெருமழை பெய்யத் தளிர்த்த முல்லைக்கொடியில் மலர்ந்த மலரின் மணம் மணக்கும் பெருவழியில், அம் மலரிடைத் தங்கிய வண்டுகள் தேனுண்டு திரியும் என

முல்லைக் காட்டையும், அந்திக்காலத்தில் இடையர் ஊதும் குழலினின்றும் எழுந்த அழகிய இனிய இசை, அவ்வூரில் உள்ள வீடுகளின் நிலாமுற்றமெல்லாம் பரந்துசென்று இசைத்து இன்பமூட்டும் முல்லைநிலத்து ஊரையும் அறிந்து மகிழ்ந்துள்ளார் :

"வணர்பெயற்கு அவிழ்ந்த பைங்கொடி முல்லை
வீகமழ் நெடுவழி ஊது வண்டு"
"அந்திக் கோவலர் அம்பணை இமிழ்இசை
அரமிய வியலகத்து இயம்பும்
நிரைநிலை ஞாயில் நெடுமதில் ஊர" (அகம் : க௨௪.)

களிற்றினைப் போரிட்டுத் தொலைத்த புலி, பெரிய மலைகளின் முழைஞ்சுகள் எல்லாம் எதிரொலிக்குமாறு முழங்கிற்றாக, அவ்வொலிகேட்ட கானவர், புலர உலர்த்திய தினையினை, நனைக்க வரும் மழையோடு வரும் இடியேற்றின் ஒலி எனக்கொண்டு, அத்தினையினைக் கூட்டி எடுப்பர் எனக் குறிஞ்சிநிலத்தாரின் இயல்பினையும் குறித்து சென்றுள்ளார் :

"பெருங்கல் விடரகம் சிலம்ப, இரும்புலி
களிறு தொலைத்து உரறம் கடியிடை, மழைசெத்துச்
செந்தினை உணங்கல் தொகுக்கும்
இனகல யாணர்த்தம் உறைவின ஊர்." (நற் : ௩௪௪)

எருமை, பளிங்குபோல் தெளிந்த நீர்நிலையுட் புகுந்து, அந்நீரைக் கலக்கிச் சேறாக்கிவிட்டு, ஆங்கு வளர்ந்திருக்கும் ஆம்பல் இலைகளைக் கிழித்தும், குவளை மலர்களைத் தின்றும் கரையேறி, அக்கரைக்கண் உள்ள காஞ்சி மரத்தின் தாதுக்கள் தன் உடலில் உதிர்ந்து பரக்க, வாயசைத்துக் கொண்டே கொட்டிலில் வந்து புகும் என மருதநிலத்தின் வளமெலாம் தோன்ற வரைந்துள்ளார் :

"மணிகண் டன்ன துணிகயம் துளங்க,
இரும்பியன் றன்ன கருங்கோட்டு எருமை
ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் மாந்திக், கரைய
காஞ்சி நுண்தாது ஈர்ம்புறத்து உறைப்ப
மெல்கிடு கவுள அல்குநிலை புகுதரும்." (அகம்:௪௬.)

பரதவர் குடிவந்த ஓர் இளைய மகள், தன்னோடு ஆடி மகிழும் ஆயத்தாரோடு சென்று, கடற்கரைக்கண் உள்ள மணலில் வீடுகட்டி, அம்மணலில் உதிர்ந்து கிடக்கும் புன்னையின் பொன்னிற மகரந்தத் தூள்களைப் பொன்னே போல் போற்றிக் கொணர்ந்து அவ்வில்லுள் இருந்து இல்லறமாற்றும் இன்பவிளையாட்டினை மேற்கொள்வள் என நெய்தல்நில நீர்மையினை விளக்கினார் :

"குறுமகள்
விளையாட்டு ஆயமொடு வெண்மணல் உதிர்த்த
புன்னை நுண்தாது பொன்னின் கொண்டு
மனை புறம் தரும." (அகம் : உ௩ ௦.)

பெருமழை பெய்யக் கண்டறியாதது ; கற்கள் நிறைந்த குழிகளில் கிடைக்கும் கலங்கிய நீரையே உடையது ; நல்ல உணவும் இல்லாதது ; துவராடையும், எய் தாரைத் தப்பாது அழிக்கவல்ல வில்லையும உடைய ஆறலை கள்வா், கொள்ளையடிக்கும் குறியோடு, அவ்வழி வருவாரை எதிர்நோக்கி நிற்கும இடும்பை உடையது எனப் பாலையின் பொல்லாங்கினையும பகர்ந்துள்ளார் :

"கல்லுடைப் படுவில் கலுழி தந்து
நிறைபெய லறியாக குறைக்கூ ணல்லில்
துவர்செய் ஆடைச செந்தொடை மறவர்
அதாபார்த்து அல்கும் அஞ்சுவரு நெறி." (நற் : ௩௩)

நம் தலைவன், ஒளிவிடும் தன் கை வேல் செல்லும் வழி அறிந்துகாட்ட, தனியே, பனியின் கொடுமையினையும் அஞ் சாது, காட்டு மல்லிகையும், கூதளமும் கலந்து கட்டிய கண்ணியின் மணம் எங்கும் பரவ வந்து, மிளகுக்கொடி படர்ந்த மலைகளின் மருங்கே யுள்ள நம் சிறுகுடியுள் நுழைந்தானாக, தோற்றத்தால் முருகனேபோல் இருந் தலின், நம் அன்னை அவனை முருகனே என எண்ணிப் புகழ்ந்து, தினையும் நீரும தந்து வழிபடுவாளாயினள் எனத் தலைமகள் கூறினாள் என அவர் கூறுவதும்,

"மின்னொளிர் எஃகம் சென்னெறி விளக்கத்
தனியன் வந்து, பனியலை முனியான்,
நீரிழி மருங்கின் ஆரிடத் தமன்ற

குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி
அசையா நாற்றம் அசைவளி பகரத்
துறுகல் நண்ணிய கறியிவர் படப்பைக்
குறியிறைக் குரம்பைநம் மனைவயிற் புகுதரும்
மெய்ம்மலி உவகையன் ; அந்நிலை கண்டு
முருகென உணர்ந்து முகமன் கூறி
உருவச் செந்தினை நீரொடு தூஉய்
நெடுவேட் பரவும் அன்னை ; அன்னோ
என்னா வதுகொல் தானே.'' (அகம :உஎஉ.)

தோழி! ஒருநாள் நான் தெருவில் நின்றுகொண்டிருந்தேன்; அப்போது, நம் தலைவற்குப் புதுப்புதுப் பெண்களை உறவாக்கி வைப்பதே தொழிலாகக் கொண்ட பாணன், அவ்வழியே வந்துகொண்டிருந்தான்; திடீரென ஒரு கொல்லேறு அவனைத் தாக்கிற்று; அதுகண்டு அஞ்சிய அவன், தன் கையில் உள்ள யாழையும் ஆங்கேயே போட்டுவிட்டு விரைய வந்து நம் வீட்டினுட் புகுந்துகொண்டான்; அவனுக்கு நேர்ந்தது கண்டு மகிழ்ந்த யான், அம்மகிழ்ச்சியை மறைத்துக்கொண்டு அவன்முன்சென்று 'ஐய! உங்கள் வீடு இது அல்ல; அது' என்று கூறினேனாக, அஞ்சிய அவன், மெய்ம்மறந்து, தன்னையும் என்னையும் மாறிமாறிப் பார்த்துத் தொழுது நின்றான்; அந்தக் காட்சியை நினைந்துகொண்டால் நகையுண்டாகிறது" எனத் தலைமகள் ஒருத்தி உரைத்தாள் என அவர் கூறுவதும் நகைச்சுவை பயந்து நிற்றல் காண்க:

"நகையா கின்றே தோழி! நெருநல்......
......ஊரன் திண்டோ அகலம்
வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய
பரிவொடு வரூஉம் பாணன், தெருவில்
புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி, யாழ்இட்டு
எம்மனைப் புகுதந் தோனே ; அதுகண்டு
மெய்ம்மலி உவகை மறையினென், எதிர்சென்று
இம்மனை அன்று ; அஃது, உம்மனை, என்ற
என்னும் தன்னும் நோக்கி
மம்மர் நெஞ்சினன் தொழுதுநின் றதுவே''

(அகம்: ருசு.)

## ௫. மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார்

ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகிய நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் தோன்றத் துணைபுரிந்தவரும், மணிமேகலை துறவினைத் தோற்றுவித்தவருமாய புலவர், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனாராவர். சீத்தலைச் சாத்தனார், கடைச்சங்கப்புலவர்களுள், நக்கீரர், கபிலர், பரணர் போன்ற பெரும் புலவர்களோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்க உயர்பெரும் புலமையுடையவராவர். இவர் பெயர் சாத்தனார் எனவும், சீத்தலைச் சாத்தனார் எனவும், கூலவாணிகன் சாத்தனார் எனவும், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் எனவும் வழங்கப்பெறும்.

சீத்தலை என்பது, செந்தலை, கழாத்தலை, வடதலை, குழித்தலை என்பனபோல, ஓர் ஊர். சீத்தலை என்ற பெயருடையதோர் ஊர், மலைநாட்டில் உளது; அவ்வூரில் உள்ள ஐயனாரை, அந்நாட்டு மக்கள் சாத்தனார் என்றே இன்றும் அழைப்பர்; இவரும் அவ்வூரினராதலின், சீத்தலைச் சாத்தனார் எனப் பெயரிடப்பட்டனர் என்பர் சிலர். சிலர் இவர் பிறந்த சீத்தலை, திருச்சி மாவட்டத்தில், பெரம்பலூர் வட்டத்தில் உள்ள சீத்தலையே; பெருஞ் சாத்தனார், பேரி சாத்தனார் என்ற புலவர்களின் வேறு பிரித்து அறிதற் பொருட்டு இவர் சீத்தலைச் சாத்தனார் எனப்பட்டார் என்பர். இவர், சீத்தலையில் பிறந்து, சாத்தனார் எனப் பெயரிடப்பெற்று வாழ்ந்து, மதுரை போந்து, ஆங்கே, நெல்லரிசி, புல்லரிசி, வரகு, தினை, சாமை, சோளம், தோரை, மூங்கில் நெல் முதலாய எண்வகைக் கூலங்களை விற்கும் வாணிபத் தொழில் மேற்கொண்டு வாழ்ந்தமையால், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என அழைக்கப்பட்டார்.

இனி, புலவர் கூடியிருக்கும் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றுவித்தற் பொருட்டு வரும் நூல்களில் பிழைகள்

காணப்படுந்தோறும், சொற் பொருளாராய்ச்சியில் வல்லராய சாத்தனார், குற்றம் நிறைந்த பாக்களைப் பாடிவந்த புலவர்களைக் குறைகூறாது, இத்தகைய பிழைமலிந்த பாக்களையும் கேட்க வேண்டி வந்ததே எனவருந்தி, தமது கையில் உள்ள எழுத்தாணியால் தம தலையில் தாமே குத்திக் கொள்வர். அவ்வாறு குத்திக்கொளவதால், அவர் தலை புண்பட்டு எபபோதும் சீழ் கொண்டிருநதது அதனால் அக்காலத்தார, இவரைச் சீழ்த்தலைச் சாததனார் என்று அழைத்துப்பாராட்டி வந்தனர். பிழையிலாப் பெருநூலாம் வளளுவா முபபாலைக் கேட்ட பின்னர், அவர் தலைநோய் தீர்ந்தது. என்றாலும், அவருக்கு இட்டபெயர் அழியாது வழங்குவதாயிற்று என்று அவர் பெயர்க்காம் கதையொன்றைக் கூறுவாரும் உளர். அக்கதை கூறுவார், தமக்கு ஆதாரமாக,

> " சீந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேனளாய்
> மோந்தபின் யார்க்கும தலைக்குத்தில - காந்தி
> மலைக்குத்து மால்பானை வளளுவா முப் பாலால
> தலைக்குத்துத் தீர்வு சாத்தற்கு."
>
> (திருவள்ளுவ மாலை : கக)

எனத் திருவள்ளுவர் மாலையில், சாத்தனாரின் சமகாலப் புலவராகிய மருத்துவன் தாமோதரனார் பாடியுள்ள செய்யுளையும் காட்டுவர் "இயற்பெயர் சினைப்பெயர்" என்ற தொல்காப்பியம் பெயரியற் சூத்திரத்திற்கு உரை எழுதிய ஆசிரியர் இளம்பூரணனார், "சினைமுதற் பெயராவன : சீத்தலைச் சாத்தன், கொடும்புற மருதி எனச் சினைப்பெயரொடு தொடர்ந்துவரும் முதறபெயர்" என எழுதியிருப்பதைத் துணையாகக் கொண்டு, திருவள்ளுவமாலைச் செய்யுளைத் துணைக்கொண்டார் கூறும் கதையினை உறுதி செய்வாரும் உளர்.

குற்றம் செய்தவன் இறைவனே யாயினும், குற்றம் குற்றமே என அஞ்சாது கூறவல்ல நக்கீரர் வாழ்ந்த தமிழ்ச்சங்கத்தில் அவரோடு ஒப்ப வாழும் ஒரு புலவர்,

பிறர் பாட்டில் பிழைகண்ட வழி, இத்தகைய முறையினைக் கைக்கொண்டிருந்தார் எனல் பொருந்தாது ஆதலாலும், திருவள்ளுவ மாலையில் வந்துள்ள செய்யுட்களைச் சங்கப் புலவர்கள பாடினார்கள் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வதிலர் ஆதலாலும், சீத்தலைச் சாத்தனார், சீழ்படிந்த தலையினராவர் என்ற கதையெழுந்த பல்லாண்டு கழித்து வாழ்ந்த இளம்பூரணனார், கூறியனவற்றை, அக்கதைக்கு ஆதாரமாகக் கொள்வது நன்றன்று ஆதலாலும், அவர் பெயர் குறித்துக்கூறும் இக்கதையினை உண்மையென எவரும் ஏற்றுக் கொள்ளார்.

விருப்பு வெறுப்பற்ற சேரமுனியாகிய இளங்கோவடிகள், சீததலைச் சாததனாரைத் "தண்டமிழ்ச் சாத்தன்," "தண்டமிழாசான் சாததன்," "நன்னூற் புலவன்" என்றெல்லாம் பாராட்டிக் கூறுவர் எனின், இவரின் பெருமையினைப் பிறர் கூறக்கேட்டல் வேண்டுமோ?

மலைவளம் காணச்சென்ற செங்குட்டுவன், பேராற்றங்கரையில தங்கி யிருந்தானாக, அப்போது குறவர் சிலர் தோன்றி, கண்ணகி, கணவனோடு விண்ணுலகம் புகுந்த காட்சியைத தாம் கண்டதாககூறி வணங்கி நின்றனர். அவர் கூறியன கேட்டு வியந்து நிற்கும் செங்குட்டுவன் பால், அவனோடு மலைவளம காணச்சென்ற சாத்தனார், கண்ணகியின் வரலாறு உரைத்து, அக்கண்ணகி தேவியார்க்குக் கோயில் கட்டத் துணைபுரிந்து பெருமையுற்றார். கண்ணகி கல்லால்ஆய கோயிலுள் அமர்தலைக் காண்பதோடு உள்ளம அமைதிகொள்ளாத சாத்தனார், அவளைச் சொல்லால்ஆய கோயிலுள் வைத்து வழிபடவும் ஆசை கொண்டார்.

குறவர்களை உடனழைத்துக்கொண்டு, குணவாயிற் கோட்டத்தில் அரசு துறந்திருக்கும இளங்கோவடிகள்பால் சென்றார்; குறவர்கள் தாம கண்ட காட்சியினை அவரிடமும் கூறினர்; அவர் உரைத்தன கேட்ட அடிகளுக்குக் கோவலன் வரலாறு அனைத்தினையும் விளங்க உரைத்தார்;

கண்ணகியார்க்கு உற்ற கடுந்துயர்க்காரணம், அவள் முன்வினை விளையே என மதுரைமா தெய்வம், அக்கண்ணகியார்க்கு எடுத்துரைத்ததை, வெள்ளியம்பலத்தே இருந்து தாம் நேரிற் கேட்டதாகவும் கூறினார். அவள் வரலாறு கேட்டு வியந்த அடிகளார், அவ்வரலாற்றினை ஒரு நூலாக ஆக்கிப் பாராட்டுதல் வேண்டும் என்று விரும்பினாராக, இவ்வரலாறு, மூவேந்தர் நாட்டினும் நிகழ்ந்தது; மூவர்க்கும் உரியது; ஆதலின் அடிகள் "நீரே அத்தகையதொரு நூலை ஆக்குக" என்று வேண்டிக்கொண்டார்; அவரும் அவ்வாறே சிலப்பதிகாரம் என்னும் பெயரால், பாட்டுடைச் செய்யுளொன்றை எழுதி, அந்நூல் எழுதக் காரணமாய கூலவாணிகன் சாத்தனார் தலைமையில் அரங்கேற்றமும் செய்து முடித்தார். சாத்தனார் கண்ட கனவும் நனவாயிற்று; கண்ணகி சொல்லாலய கோயிலுள் அமர்ந்து அழியா நிலையுற்றாள்.

கண்ணகிக்குக் கோயிலும், காவியமும் தோன்றத் துணை புரிந்த சாத்தனார் செயலை இளங்கோவடிகள் தம் முடைய காவியத்தில் வைத்துப் போற்றியுள்ளார்.

> "மணகளி நெடுவேல மன்னவற் கண்டு
> கணகளி மயக்கத்துக் காதலோ டிருந்த
> தண்டமிழ் ஆசான் சாத்தன் இஃதுரைக்கும்."
>
> (சிலப். உ௫: ௬௪-௬)

> "அவனுழை இருந்த தண்டமிழ்ச் சாத்தன்
> யானறி குவன்அது பட்டதென் றுரைப்போன்
> .................... ..........மதுரை மூதூர்க்
> கொன்றையம் சடைமுடி மன்றப் பொதியிலில்
> வெள்ளியம் பலத்து நள்ளிருட் கிடந்தேன்
>
> கோட்டமில் கட்டுரை கேட்டனன் யான் என,
> ........... ........ ........................
> சிலப்பதி கார மென்னும் பெயரால
> நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள் என

முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது
அடிகள் நீரே அருளுக; என்றற்கு

உரை யிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்
உரைசால் அடிகள் அருள, மதுரைக்
கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்.'' (சிலப்: பதிகம்)

கண்ணகி வரலாற்றைச் சிலப்பதிகாரம் என்ற பெயரால் ஒரு காவியமாக்கிச் சாத்தனார் தலைமையில் அரங்கேற்றினாராக, சாத்தனார், அவ்வரலாற்றின் பிற்பகுதிகளை மணிமேகலை என்ற பெயரால் ஒரு காவியமாக்கி இளங்கோவடிகள் தலைமையில் அரங்கேற்றி முடித்தார்.

"இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப
வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்
மாவண் தமிழ்த்திற மணிமேகலை துறவு
ஆறைம் பாட்டினுள் அறியவைத் தனன்" (மணி பதிகம்)

மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன் என்ற பாண்டிய மன்னன் ஒருவனின் ஆரம் விளங்கும் அழகிய மார்பு, முழந்தாள் வரை நீண்டு தொங்கும் கைகள் ஆகிய புறஅழகுகளையும், என்றும் பொய்பேசி அறியா அவன் அகஅழகினையும், பகைவரை, இருளை அழித்து இல்லையாக்கும் ஞாயிறேபோல், பாழ்செய்யும் ஆற்றலையும், தண்ணொளி பரப்பி இன்பம் ஊட்டும் திங்களேபோல, இரவலர்க்கு இன்னருள் சுரந்து அளிக்கும் அன்பினையும் எடுத்துக் கூறிப் பாராட்டியுள்ளார்:

"ஆரம் தாழ்ந்த அணிகிளர் மார்பின்
தாள்தோய் தடக்கைத் தகைமாண் வழுதி!
வல்லை மன்ற நீ நயந்து அளித்தல்;
தேற்றாய் பெரும! பொய்யே, என்றும்
காய்சினம் தவிராது, கடல்ஊர்பு எழுதரும்
ஞாயிறு அனையை நின் பகைவர்க்கு;
திங்கள் அனையை எம்மனோர்க்கே." (புறம் ௫௯)

களவொழுக்கமே விரும்பும் தலைமகன், தன்வீட்டின் அருகில் வந்துளான் என்பதை அறிந்தாள் தோழி; அன்னைகாவல முதலியவற்றால் தலைவனைக் காணமாட்டாமையால் தலைவி நலம் சிதைந்து துன்புறுவதையும், அவள் நலங்குறைந்தது கண்டு அவ்வூர பெண்கள் அலர் கூறித் திரிவதையும், ஊராரும், உறவினரும அவ் அலர் கேட்டுத் துயிலாதிருப்பதையும், ஊர் துயிலாதிருப்பதால் இன்றும தலைமகனைக் காண இயலாமல வருந்துவதையும், இந்நிலை மேலும நீண்டால் தலைமகள் துயர்பொறாது இறத்தல் உறுதி; ஆகவே, வரைந்துகொள்வதே நலமாம் என்பதையும அவன அறியக் கூற விரும்பினாள். இவற்றை இவ்வாறே கூறுதல் பண்பன்று என உணர்ந்தாள்; உடனே, "தோழி! மலைநாட்டானாகிய தலைவனால் நாம் நலனிழந்தோம; அதனால் உண்டாய துயரால் உறங்காது விழித்திருக்கிறோம் இவ் வூராரும நம்மைபபோல் உறங்காது விழித்திருக்கின்றனரே! அவர்களுக்கு என்ன துயர் வந்துவிட்டது? அவர்கள எதை இழந்துவிட்டனர்? நலன் இழந்து, அலர்கூறல் அஞ்சி உறங்காதிருக்கும் நம்மைப்போல் ஏன் இவர்களும உறங்காதிருக்கின்றனர்?" என்று கூறித் தான கருதியன எல்லாம தோன்றச் செய்தாள். தோழியின் இடன்நோக்கிச் செயலாற்றும் இவ் அறிவு விளங்கப் பாடியுள்ளார் சாத்தனார்:

"கல்லக வெற்பன் சொல்லில் தேறி
யாம எம்நலன் இழந்தனமே; யாமத்து
அலர்வாயப் பெண்டிர் அம்பலொடு ஒன்றிப்
புரையில தீமொழி பயிற்றிய உரையெடுத்து
ஆனாக் கௌவைத் தாகத்
தான என் இழந்தது இவ்அழுங்கல் ஊரே?" (நற்: ௩௬)

பொருள் கருதிப் பிரிந்துசென்ற தலைமகன், விரைவில் மீண்டு வந்திலன்; அவன் வாராமையால் வருத்தம் மிகக் கொண்டாள் தலைவி; தலைவன் நம்மாட்டு அன்பிலன் என்றெல்லாம் கூறித் துயர்கொள்ளலாயினள்; அவள்

துயர்கண்ட அவள் தோழி, "தோழி! தலைவர் நின்மாட்டு நிறையருளுடையவர்; ஆதலின நில்லாது வருவர்; வருந்தாது வாழ்க," என்று கூறி ஆற்றுவிக்கலாயினள். அவ்வாறு கூறும தோழியைப் பார்த்து, "தோழி! இயலுவதை இயலும எனக் கூறி ஈதலும், இயலாத தொன்றை, அது இயலாது எனக் கூறி மறுத்துவிடலும் ஆண்மையும் அருளும உடையார் செயலாம்; இயலாத தொன்றை இயலும எனக் கூறி ஏமாற்றலும், இயலுவதை இயலாது எனக்கூறி மறுத்தலும் இரபபோர்க்கும் துன்பம் தரும்; அவர் புகழைபும் கெடுக்கும என்ப; இதை யறிந் தவர் நம் தலைவர்; தமபால் வந்து 'பொருள் இல்லேன்' என்று கூறி இரந்து நிற்பார்க்குத் தம்மால் இயலுவதை இயலாது எனக்கூறி மறுபபதை ஏற்காத உள்ளமுடையவர் நம தலைவர்; ஆதலின் அவர் பொருள்சேர்த்தல் கருதிப் பிரிந்து சென்றுளார்; இதனல் நம தலைவர்க்கு நம்மைக் காட்டினும் பொருளின்மீதே மிகுதியும் காதல் உண்டு; இது உண்மையாகவும், நீ, காதலர்க்கு நம்பால் அன்பு கொண்டிருப்பதிலேயே மிகுதியும் காதலாம் என்று கூறுகின்றனை" என்று, அவள் கூறுவன கேட்டும் துயர் தீராதாள்போல் கூறி, "தோழி! அவர் பிரிந்துசென்றது பொருள்கருதி; அப்பொருள் உண்டானல்தான் அவர் புகழோடு வாழுதல இயலும்; அவர அவ்வாறு புகழ் கொண்டு வாழ்வதை விரும்புவதே என்நோக்கம்; ஆதலின், அவர் பொருள்மேல் காதலராதலை யானும் விரும்பு கின்றேன்; அதனல், என்பால் காதல் குறைவதையும் யான் பொருட்படுத்தேன்; உண்மை இவ்வாறாகவும், என்னை ஆற்றுவதற்காக, 'அவர்க்கு நின்னிடத்திலேயே காதல் உண்டு' என ஏன் பொய் கூறுகின்றனை" என்று தன் உள்ளத்தின் உண்மைநிலையினை உணர்த்தினள்.

பெண்ணினம் கொள்ளவேண்டிய உள்ளமும், அவர் பெற்றிருக்க வேண்டிய அறிவும் இவையென விளக்கும் எண்ணமுடையராய் மேற்கூறிய கூற்றமைந்த செய்யுளைப் பாடியுள்ளார் சாத்தனார்:

"இல்லோர்க்கு இல்என்று இயைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப, நம்மினும்,
பொருளே காதலர் காதல்
அருளே காதலர் என்றி நீயே" (அகம: நரு.)

"கிழவி நிலையே வினையிடத்து உரையார், வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்" என்ப; வினைமுடித்து நின்ற தலைமகன், தான் குறித்துவந்த பருவம் வந்து விட்டது; தன் வருகை காணாது வருந்துவாள் தலைவி என்றெல்லாம் எண்ணி விரைந்து வீடுசெல்ல விரும்புவன்; அத்தகைய ஆர்வத்தால் துடிக்கும் தலைவன், உள்ளம் போல் உற்றுழி உதவும் குதிரைகள் உடையனாகவும், தலைவியைக் காணவேண்டும் என்ற உள்ளத்துடிப்பால், இயல்பாகவே விரைந்து செலலும் தன் குதிரையினை மேலும் விரைந்து ஓட்ட விரும்புவான்; அதனால், அவன் தீண்டா வைமுள் தீண்டவும் அஞ்சான். அத்துணை விரைவோடு வீடுசெலலும் போதும் அவன் உள்ளம் அறக்கழிவுடையன செய்யத் துணியாது; அருள் அல்லன செய்யான் அவன்; அத்தகைய பண்பட்ட பெருந்தகையாவன் தமிழ்நாட்டுத் தலைமகன்.

இத்தகைய தலைவன் ஒருவனின் உயரிய உள்ளத்தைப் புலவர் சாத்தனார் நன்கு உணர்ந்து பாராட்டியுள்ளார். ஒருதலைவன், தன்வினை முடித்துக்கொண்டு விரைந்து வீடு நோக்கி வருகின்றான்; இடைவழியில், ஆண்மான் ஒன்றும், பெண்மான் ஒன்றும் கலந்து களித்து உலாவுவதைக் கண்டான்; இத்தகைய காட்சிகள், அவன் உள்ளத்தில் காதல் நினைவினை எழுப்பி, மேலும் விரைவாகத் தூண்டும்; ஆனால், இத்தலைவன உள்ளப் பண்பட்ட உள்ளம்; ஆதலின் அவ்வுள்ளம் வேறு ஒன்றை எண்ணலாயிற்று; விரைந்துசெல்லும் தேரின் ஒலியும், அத்தேரை விரைந்து இழுத்தோடும் குதிரைகள் எழுப்பும் ஒலியும், ஒன்று கூடி வாழும் அம்மானினத்தின் காதில் விழின், அவை அஞ்சி ஓடும்; அவை அவ்வாறு ஓடிவிடின் அவற்றின் கூட்டுறவு அறும்; இந்த எண்ணம் அவன் உள்ளத்தில் எழுந்தது;

அருஞ்சுறறு அவள அருள உள்ளம; விரைந்து ஓட்டிச் செல்லும் பாகனை அழைத்தான்; "பாக! தாற்றுக்கோலைக் கீழேபோடு; தேரை மெல்ல ஓட்டு; குதிரை காற்குளம் பொலியோ, தேராழியின ஒலியோ கேட்டல் கூடாது," என்று கட்டளையிட்டான், பிறர் நலம பேணத் தன் நலம் மறந்த அத்தலைவனின் மாண்புதான் என்னே! அத்தகைய தலைவனை நம் முன் நிறுத்தி அறவழிகாட்டும சாத்தனாரின் அருள் உள்ளந்தான் என்னே!

"வாஅப் பாணி வயஙகுதொழிற கலிமாத்
தாஅத தாளிணை மெல்ல ஒதுஙக
இடிமறந்து ஏமதி வலவ! .. .... ......
..................திரிமருப்பு ஏற்றொடு
கணைககால் அமபிணைக காமா புணாநிலை
கடுமான் தேரொலி கேட்பின்,
நடுநாட் கூட்டம் ஆகலும உண்டே?" (அகம் · கநச)

சாத்தனார் இயற்றிய பாக்கள், அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகையாகிய நூல்களுள் இடம் பெற்றுள்ளன ஆயினும், அவர்க்குப் பெயரும், புகழும் பெற்றுத் தந்தது, அவர் இயற்றிய மணிமேகலை என்ற காப்பியமேயாம். மணிமேகலையின் மாண்பினை எழுதி அறிவித்தல் எவராலும் இயலாது; எவரும் அறிந்த சொற்கள்; எழுவாயும், பயனிலையும எங்கே என்று தேடிக் காணும் இடர் அளிக்காச் சின்னஞ்சிறு சொற்றொடர்; அரிய கருத்துக்களை எளிதிற்றெரிவிக்கும் இயற்கை முறை; இயற்கைக் காட்சிகளை இனபம் சொட்டச் சொட்டக் காட்டும் சொலலோவியம்; அறநெறி அறியாரையும், அந்நெறி அறி பெரியாராக்கும பெருமை சால் பெருநூல். இத்தகைய அரிய நூலினை ஆக்கித்தநத அறிஞரேறு சீத்தலைச் சாத்தனாரின் அறிவின் திறததை அறிநது மகிழ அந்நூலுள் சிற்சில பகுதிகளைக் காட்டிச் செல்கின்றேன்.

காட்சிகளைச் சாததனா நனகு உணாநது, உணர்ந்த தம் உணர்ச்சியினை அவ்வாறே உருவாக்கித் தக்

துளார். தும்பி குழல் ஊத, வண்டு யாழ் இசைக்க, மயில் ஆட, மந்திகாணும் காட்சியினைக் கண்கொளாக் காட்சியாகக் காட்டியுள்ளார்.

> "குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட,
> மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய,
> வெயில்நுழைபு அறியாக் குயில் நுழை பொதும்பர்
> மயிலாடரங்கில் மந்தி காண்பன காண." (மணி. ச. க-ச)

ஊரில் விழா நிகழ்முறை குறித்துத் தமிழர்கள் மேற்கொண்டிருந்த வழக்கம் விளங்க, விழாவறைதல்; விழா வறைதல் கேட்ட மக்கள் தங்கள் வீட்டையும், வீதியையும் அணிசெய்தல், அறிஞர்கூடி ஆராய்ச்சி மேற்கொள்ளுதல், விழா நிகழ் வீதியில் காணும் களிமகன் காட்சி, மையலுற்ற மகன் காட்சி, பேடிக் கோலத்துப் பேடிக்காட்சி ஆகியவற்றை ஆங்காங்கே எடுத்துக் காட்டும் திறம் இறும்பூதூட்டும் இயல்பிற்றாகும்.

புலவர் சாத்தனார், எந்தப் பொருளைக் கூறவிரும்பினும், அதை விளங்க உரைக்கும் இயல்பினராவர் :

> " கன்னிக் காவலும், கடியிற் காவலும்
> தன்னுறு கணவன் சாவுறிற் காவலும்
> நிறையிற் காத்துப் பிறபிறக் காணாது
> கொண்டோ னல்லது தெய்வமும் பேணாப்
> பெண்டிர் " (மணி. கஅ · கூஅ-க0உ)

எனப் பெருங்குடி வந்த மகளிர்தம் இயல்பினையும்,

> " நாடகக் காணி நல்லரங் கேறி
> ஆடலும், பாடலும், அழகும் காட்டிச்
> சுருப்புநாண், கருப்புவில், அருப்புக்கணை தூவச்
> செருக்கயல் நெடுங்கண் சுருக்குவலைப் படுத்துக்
> கண்டோர் நெஞ்சம் கொண்டு அகம்புகுப்
> பண்தேர் மொழியிற் பயன்பல வாங்கி
> வண்டிற் றுறக்கும் கொண்டி மகளிர் "
> (மணி. கஅ : க0௬-கூ)

எனப் பரத்தையரின் பழிநிறை வாழ்வினையும்,

"காதலர் இறப்பின் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர்; ஈயா ராயின்,
நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்;
நளியெரி புகாஅ ராயின், அன்பரோடு
உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்
பத்தினிப் பெண்டிர்" (மணி. ௨ : ௪௨-௮)

எனக் கைம்பெண்களின் கண்கலங்கும் காட்சியினையும் எத்துணைத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார் என்பதை உணருங்கள்.

சாத்தனார், தாம் கூற எடுத்துக்கொண்ட பொருள்களை மிகமிக எளிய முறையில், எவரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் எடுத்துரைக்கும் ஆற்றல் உடையவராவர். இறந்தார் பிறவார் என்பதை விளக்கவந்த ஆசிரியர், தன் உயிர் கொண்டு, இறந்த தன் மகன் உயிர் வேண்டும் தாய் ஒருத்தியை இடுகாட்டிற்கு அழைத்துச் சென்று, ஆங்கு இறந்தார்க்கு எழுப்பிய நடுகற்களைக் காட்டிவிட்டு, "தாயே, உலகில் மன்னவராய் வாழ்ந்து இறந்தார்க்குத் தம் உயிர் கொடுத்து அவர் உயிர்வாழ்க ஆட்கள் இல்லாமலா போவர்? அப்படியிருந்தும், இந்தச் சுடுகாட்டில் இறந்த அரசர் மட்டும் ஆயிரத்திற்கு மேலாவர்; அவர்க்கு எடுத்த நடுகற்கள் எத்தனை ஆயிரம்? என்றால், ஒருவர் உயிர் கொண்டு ஒருவர் உயிர் ஈதல் இயலாதென்றன்றோ பொருள். ஆதலின் நீ கொண்ட எண்ணத்தை விடு" என்று கூறும் பகுதியை நோக்குக:

"உலக மன்னவர்க்கு உயிர்க்கு உயிர் ஈவோர்
இலரோ? இந்த ஈமப் புறங்காட்டு
அரசர்க்கு அமைந்தன ஆயிரம் கோட்டம்"
(மணி. ௬ : ௧௬௪-௬)

ஓர் உடலைவிட்டுப் பிரிந்த உயிர் மற்றோர் உடலிற் புகும் என்பதை விளக்க விரும்பிய கூலவாணிகனார், உடலும், உயிரும் ஒன்றுகூடி வாழுங்கால், உடல், தனக்கு

உற்ற இன்பதுன்பங்களை உணரும் ஆற்றலை உடையதாக உளது; அதே உடல், உயிர் தன்னைவிட்டுப் பிரிந்தவுடனே, அவ்வாறு இன்ப, துன்பங்களை அறியும் ஆற்றலை இழந்துவிடுகிறது; அதனால், இன்ப, துன்பங்களை அறியும் ஒரு பொருள் அவ்வுடலைவிட்டு ஓடிவிட்டது என்பது உண்மையாம், ஓடினார் தமக்கு ஓர் உறைவிடம் உண்டு; ஓடிய ஒரு பொருள் ஓடிக்கொண்டேயிராது, எங்கேனும் ஓரிடத்தே நின்றே ஆதல் வேண்டும் என்பதை எவரும் மறுக்கார்; அதைப்போலவே, உடலைவிட்டுப் பிரிந்த உயிர், தான் செய்த வினைக்கேற்ற ஓர் உடலில் புகுந்து உறையும் எனக் காரண காரியங்களைக் காட்டி விளக்கும் முறை, அவர் பொருளுணர்த்து முறையினைக் காட்டி நிற்கும்:

"உற்றதை உணரும் உடல் உயிர் வாழ்வுழி
மற்றைய உடம்பே மன்னுயிர் நீங்கிடின்,
தடிந்து எரியூட்டினும் தான் உணராது; எனின்
உடம்பிடைப் போனது ஒன்று உண்டு என உணர்நீ;
போனார் தமக்கோர் புகலிடம் உண்டு என்பது
யானே அல்லேன் யாவரும் உணர்குவர்;
உடம்பு ஈண்டு ஒழிய, உயிர் பலகாவதம்
கடந்து சேட்சேறல் கனவினும் காண்குவை,
ஆங்ஙனம் போகி, அவ்வுயிர், செய்வினை
பூண்ட யாக்கையிற் புகுவது தெளிநீ" (மணி. கசு : கூசு-கபரு)

மணிமேகலை நூலை எப்பக்கம் நோக்கினும் அப்பக்கம் ஓர் அரிய அறவுரையினை உரைப்பதாகவே தோன்றும்; அரசர்க்குக் கூறும் அறவுரையும் உண்டு; ஆண்டிகட்கு உரைக்கும் அறவுரையும் உண்டு; இரப்போர்க்கு ஈந்து அறஞ்செய்வோர்க்கும் அறமுரைக்கும்; சுருங்க உரைக்கின், ஏடெடுத்தார் ஒவ்வொருவரும், தமக்கு வேண்டும் அறிவுரை ஒன்றோ பலவோ இருப்பக் கண்டு மகிழ்வர்

"கோல்நிலை திரிந்திடின், கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடின், மாரிவறங் கூரும்;
மாரி வறங் கூரின், மன்னுயி ரில்லை;
மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிர்." (மணி. எ : அ-கஉ)

இஃது அரசர்க்குணர்த்திய அறவுரை.

" தவத்துறை மாக்கள், மிகப்பெரும் செல்வர்,
ஈற்றிளம் பெண்டிர், ஆற்றாப் பாலகர்,
முதியோர் என்னுன், இளையோர் என்னுன்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப, இவ்
அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்,
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோர் உண்டோ" (மணி. சு: கஎ-கOச)

நிலையாமையினையும், அதை உணரா மக்களின் மடமையினையும் எத்துணைத் தெளிவாக எடுத்துக்காட்டி எவ்வளவு கடுமையாகக் கண்டித்துள்ளார் !

உலக அறிஞர் எவரும் கூறாத ஓர் உண்மையினைச் சாத்தனார் கூறுகின்றார் ; உலகிற்கு உயிர் அளித்து நிற்பது, இரத்தலும், ஈதலுமாகிய தொழில் நடைபெறுதலே ஆம் என்பர் ; அத்தொழில் நிகழும் உலகினைப் பாராட்டுவதும், அத்தொழில் நடைபெறா விண்ணுலகினைப் பழிப்பதும் வழக்கமாம். உலகிற்குப் பெருமைதரும், இரத்தலும் ஈதலும், உலகம் வறுமையுற்ற காலத்தில்தான் நிகழும் ; உலகமெல்லாம் வளம் நிறைந்துவிடின் அவ்விரு தொழிலும் இடம்பெறா ; அவ்விருதொழிலும் இல்லா உலகில் வாழும் மக்கள், இரக்க உள்ளம் அற்று, அரக்கராவர் இதனால் உலகம் அனைத்தும் செல்வத்தில் செழிப்பதுகாணச் சாத்தனார் அஞ்சுகின்றார் ; அதனால் உலகம், அறவுணர்வு இழந்து மறவுணர்வு பெற்று விடுமோ என்ற அச்சம் அவரைப் பிடித்து ஆட்டுகிறது. பாண்டிநாடு வளம்பெற்று வாழ்ந்த காலத்தில், அந்நாட்டில் வாழ்வோர், பசிநோய் அறியாராயினர் ; அதனால், இரப்போர் ஒலிகேட்ட ஊர் அம்பலத்தே, காமுகரும், பரத்தையர் பின்செல்வோரும், எவரையும் இகழ்ந்துரைப்போரும், கூடிஇருந்து வட்டும் சூதும் ஆடி, வீணிற் காலங்கழித்து வாழ்விழப்பர் எனக் கூறி வருந்துகின்றார். அறம் ஓங்க, ஓரளவு வறுமையும் வளரவேண்டும் என்ற சாத்தனாரின் உள்ளத்தை உணர்வோமாக !

"வசித்தொழில் உதவ, மாநிலம் கொழுப்ப,
பசிப்புஉயிர் அறியாப் பான்மைத்து ஆகலின்
ஆருயிர் ஓம்புநன் அம்பலப் பீடிகை,
ஊண்ஒலி அரவம் ஒடுங்கிய தாகி,
விடரும், தூர்த்தரும், விட்டேற் றாளரும்,
நடவை மாக்களும் நகையொடு வைகி
வட்டும், சூதும், வம்பக் கோட்டியும்
முட்டா வாழ்க்கை முறைமைய தாக."

(மணி கச : ருஎ-சுச)

சாத்தனார்பால் புலமையோடு, பல அருங்குணங்களும் அமைந்திருக்கக் காண்கிறோம்; சாத்தனார் தம்மையொத்த புலவர்களைப் போற்றுவதில் பெருமையுடையவராவர்; சிலப்பதிகாரம் என்ற பெயரால் நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள் என்ற இளங்கோவடிகளிடம், "அடிகள் நீரே அருளுக" என்று கூறிய செயல், அவர் பிறபுலவர்களைத் தம்மினும் உயர்ந்தோராகக் கொண்டு போற்றுவதை விளக்கி நிற்றல் காண்க. ஏறக்குறையத் தம் காலத்தே வாழ்ந்தவராய திருவள்ளுவரின் பெருமையினையும், அவர் குறளின் அருமையினையும், தாம் பாடிய மணிமேகலையினிடையே வைத்துப் பாராட்டியுள்ளார்:

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றஅப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்"

(மணி. உஉ : ருகூ—சுக)

இந்த அடிகளில் வள்ளுவர் இயற்றிய குறளை எடுத்தாண்டதோடு அவரைப் "பொய்யில் புலவன்" என்றும், அவர் கூறிய குறட்கருத்தினைப் "பொருளுரை" என்றும் போற்றியுள்ளமை உணர்க.

உலகில் பல்வேறு கடவுட் கொள்கையினர் வாழினும், அவர்கள் ஒருவருக்கொருவர் பகைத்துக் கொள்ளாமல், தங்கள், தங்கள் கொள்கைகளை வளர்த்துக் கொள்ளுதல் வேண்டும். சமய உணர்வால் பௌத்தராய சாத்தனார்,

தம்முடைய மணிமேகலையில், நுதல்விழி நாட்டத்து இறைவன் முதலாம் பிறசமயக் கடவுளர்களையும் எடுத்துக் கூறிப் பாராட்டியதோடு, மக்கள் தம் பகைவரோடும் பகை கொள்ளுதல் கூடாது. "பற்று மாக்கள் தம்முடனாயினும், செற்றமும் கலாமும் செய்யா தகலுமின்" என்றும் கூறிய அவர் அறிவுரையினைக் காணுங்கள்

ஒழுக்கம் விழுப்பம் தரும்; ஆகவே, அதை உயிரினும் ஓம்புதல்வேண்டும்; அவ்வொழுக்கத்தில் தவறிய மக்கள், தலையின் இழிந்த மயிரே போல மதிக்கப்படார். வழுக்கிய ஒழுக்கத்தினர், தம் மக்களே யாயினும், ஒதுக்கித் தள்ளுதல் வேண்டும். இந்த அரிய கொள்கையினை ஆசிரியர் சாத்தனார் மேற்கொண்டிருந்தார் என்பதை அவர் நூல் வழி அறிகின்றோம்.

உதயகுமரன், மணிமேகலைபால் சென்ற உள்ளமுடையனாய், அம்பலம் புகுந்து, ஆங்கே காஞ்சனனால் வெட்டுண்டு இறந்தான்; அரசிளங் குமரன் கொல்லப்பட்டான் என்ற செய்தியை அரசன்பால் சென்றுரைத்தனர்; அரசன், தன் மகன் இறந்த செய்திகேட்டு அழுதான்; அரற்றினான்; அவன் கொலைக்குக் காரணமாயிருந்தாரைக் கொணர்ந்து கொல்க என்று கூறினான் எனப் பாடினாரல்லர் சாத்தனார்; கன்றின் மீது தேர் ஓட்டினான் என்று தன் மகனையே கொன்று அறம் நிற்க வாழ்ந்த அரசன் வழியில், தன்பால் அன்பு செலுத்தா ஒருத்தியின் பின்சென்று கொலையுண்ட கொடியவன் ஒருவனும் இருந்தான் என்றசெய்தி, என்னையொத்த பேரரசர்கட்குத் தெரியு முன்னரே, இவனைக் கொளுத்திச் சாம்பலாக்குக என்று கூறினான் என்று பாடிய சாத்தனார் உள்ளத்தை என்னென்பது!

"மகனை முறைசெய்த மன்னவன் வழி, ஓர்
துயர்வினை யாளன் தோன்றினன் என்பது
வேந்தர் தம் செவி உறுவதன் முன்னம்
ஈங்கிவன் தன்னையும் ஈமத்து ஏற்றுக"

(மணி. உஉ : உ௧0-௩)

இந்த அளவோடு நின்றாரல்லர் சாத்தனார்; அரசமா தேவியார்பால் சென்றார்; அரசமா தேவியார், மகனைப் பெற்றெடுத்த அன்பால், சிறிதே அறநெறியினை மறந்திருந்தார். அஃதறிந்த சாத்தனார், அவர்க்கு உற்றதுணையாய் நிற்கும் மகளிர் வாயிலாக அரசமா தேவியாருக்கு அறமுரைக்கின்றார்; "அரசகுமரர்கள், ஒன்று தம நாட்டின்மீது போர் தொடுத்து வரும் பகையரசர்களை அழிக்கும் போரில் இறத்தல்வேண்டும், இன்றேல், பிறநாட்டின்மீது படைகொண்டு சென்று போரிட்டு, அப்பகைவர் நாடுகளைக் கைப்பற்றிய போரிலாவது இறத்தல் வேண்டும்; அதுவே அரசர் மகனுக்கும் அறமாம்; அத்தகைய சாவினைப் பெற்றவரையே உலகம் போற்றும் ; இப்போது இறந்துபோன தங்கள் மகன் அத்தகைய போர் எதிலும் இறந்தானல்லன் ; ஆதலின் இவனை எண்ணி அழுதல் தங்கட்கு அழகும் அறமும் ஆகாது," அரசியார்க்கு உரைத்த அறம் இது. சாத்தனாரின் மறணி மூக்கா மான முடைமையினைப் போற்றுவோமாக!

> " தன் மண் காத்தன்று ; பிறர் மண் கொண்டன்று ;
> என்னெனப் படுமோ, நின்மகன் மடிந்தது ?
> மன்பதை காக்கும் மன்னவன் தன்முன்
> துன்பம் கொள்ளேல்." (மணி. உக: கஎ-உ0)

சாத்தனார், தாம் பிறந்த தமிழ்நாட்டின் பெருமையினைப் பாராட்டவும் மறந்தாரல்லர். வருவாரை வரவேற்று வாழவைக்கும் நம் நாட்டின் சிறப்பினை நாவார வாழ்த்துகின்றார் சாத்தனார் : வாழ்க அவர் தமிழ்ப்பற்று ; வளர்க அவர் அறநெறி !

> "சம்புத் தீவினுள் தமிழக மருங்கில்
> கமப மில்லாக் கழிபெரும் செல்வர்
> ஆற்றா மாக்கட்கு ஆற்றும் துணையாகி
> நோற்றோர் உறைவதோர் நோனகர் உண்டு."
> (மணி. கஎ: கூஉ-ரு)

## ௬௯. மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார்

"பால்வகை தெரிந்த பகுதிப் பண்டம்" என்றும், "பல்பண்டம் பகர்ந்து வீசி" என்ற தொடர்களால், எண் வகைக் கூலத்தோடு, உணவாகிப் பயன்படும் பிறபொருள் களையும் கூட்டி, அவ்வாறு உண்டாய அத்தொகுதிக்குப் பண்டம் என்ற பெயரிட்டனர் பழந்தமிழர் என்று அறிதல்வேண்டும் பண்டவாணிபம் என்பது, இக்காலத்திய பலசரக்குக் கடைபோன்றதாம் மதுரைப் பெருநகடைத் தெருவில பலசரக்குக் கடைவைதது வாணிபத தொழில் மேற்கொண்டவர் புலவா இளநதேவனார்.

உள்ளங் கலநது ஒன்றிய அன்புடைய காதலர் நிறை வாழ்வு உடையவர்; "இருநதோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்து ஓமபி வேளாணமை செய்தற்பொருட்டு" என்ற குறள் நெறியுணாந்தவாகள அவர்கள் அவாகள வீட்டிற்கு ஒருநாள் இரவு விருநதினர் ஒருவர் வநதாா, வநத விருந் தினரோ, புகழ் நிறைநத பெரியவர்; அவரை நன்முறையில் வரவேற்று வழிபடுதல் வேண்டும், அவர் வநதகாலமோ இருட்காலம். மனைவி, அது இருட்காலம என்று அஞ்சினள் அலலள்; அடுப்பைப் பற்றவைத்தாள; நன்கு கொழுத்த தசையினை நிறைய நெய்வார்ததுச் சமைக்கத தொடங்கி விட்டாள், அவ்வாறு சமைக்குஙகால். அவ்வுணவினின் றும, அடுப்பினினறும் எழுநத புகை அவள முகததில் படிகிறது; எபபடியோ சமையல் தொழிலை முடிதது விட் டாள்; அதற்குள அவள் உடலெல்லாம வியர்ததுவிட்டது; அவள் நெற்றியில், வியர்வைநீா முத்துமுததாகக் காட்சி அளிக்கிறது; அதைத் துடைக்கவும் அவளுக்கு எண்ணம் ஓடவில்லை; விருநதினரை உண்பிப்பதில அவளுக்கு அத் துணை விரைவு; முனபகததில், விருந்தினரோடு பேசிக் கொண்டிருக்கும் தன் கணவனிடம சென்றாள்; அவன், அவள் முகத்தில் படிந்துளள புகையினையும், விட்டிருக்கும் வியர்வையினையும், அவளின் விரைந்த நடையினையும் கண்டு மகிழ்ந்து பாராட்டத் தொடங்கினான்; ஆனால், அவன்

பாராட்ட அவள் ஆங்கு நிற்காது, விருந்தினரை அழைத்து வருமாறு கூறிவிட்டு உள்ளே சென்றாள். தமிழகத்தில், பண்டைக் காலத்தில், ஒவ்வொரு வீட்டிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் புலவர் இளந்தேவனார் படமாக்கித் தந்து பாராட்டுகின்றார்.

> "எல்லி வந்த நல்லிசை விருந்திற்குக்
> கிளரிழை அரிவை நெய்துழந்து அட்ட
> விளரூன் அம்புகை எறிந்த நெற்றிச்
> சிறுநுண் பல்வியர் பொறித்த
> குறுநடைக் கூட்டம் வேண்டுவோரே." (நற்: ௪௧)

வாடை வருந்தக் காத்திருந்தாள் ஒருபெண்; கடைசியில் அவள் காதலன் வந்துசேர்ந்தான்; அவனைக் கண்டவுடனே, வாடையால் வருந்துவதை மறந்தாள்; இருவரும் ஒன்றுகலந்திருக்கும் அந்நிலையில், வாடை, அவளைத் துன்புறுத்துவது இயலாது என அறிந்து அடங்கிவிட்டது; அவ் விருவரும் பேசிக்கொண்டேயிருக்கின்றனர்; இடையில் அவன் பிரிந்துவிடுவான் என்ற எண்ணம் அவளுக்கு உண்டாயிற்று; அவ்வெண்ணம் வந்த உடனே, ஓடிய வாடை, அவன் சென்றதும், அவளைப் பற்றிவருத்த அவள் வாயிற்படி அருகிலேயே காத்திருப்பதுபோல தோன்றிற்று; அதனால் அஞ்சினாள்; கணவன் என்றும் அகலாது இருக்க வேண்டும் என்பதை விரும்பினாள் அதை வெளிப்படையாகக் கூறத் தயங்கிய அவள், தலைவனை நோக்கி, "ஐய! மகிழ்ச்சிக்குரிய செய்தியொன்றைக் கூறுகிறேன் கேள்; தாங்கள் பிரிந்திருந்தபோது, தங்களை நினைக்கும்போதெல்லாம் என்னைப் பற்றி வருத்திவந்த வாடைக்காற்று, இப்போது தாங்கள் என்னருகில் இருப்பதால், என்னிடம் வர அஞ்சி ஓடி, மறுபடியும், தாங்கள் எப்போது பிரிவீர்கள், என்னைப் பற்றி வருத்தலாம் என்ற எண்ணத்தோடு, எல்லோரும் உறங்கும் நடுயாமத்திலும், நம்வீட்டு முன்புறத்தில் உள்ள மரத்தடியிலேயே காத்திருக்கும் இக் காட்சியினைக் காண்பீராக! இக் காட்சி நின்னைப்பெற்று மகிழ்வதினும் மகிழ்ச்சியாய் உளது," என்று கூறி,

"தாங்கள் பிரிந்தால்; இவ்வாடை வருத்தும்; ஆதலின் பிரியாது உறைதலை வேண்டுகின்றேன," என்று கூறினாளாகப் பாடிய புலவன் புலமையினை என்னென்பது!

நின்மார்பு அடைதலின் இனிதா கின்றே,
நுமஇல் புலம்பின் நும் உள்ளுதொறும நலியும்
தணவரல் அசைஇய பண்பில வாடை
பதம்பெறு கல்லாது இடம்பார்த்து நீடி
மனைமரம ஒசிய ஒற்றிப்
பலாமடி கங்குல் நெடுமபுற நிலையே." (அகம் : ௫௮.)

## எ. தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார்

ஊரும், தொழிலும், இயற்பெயரும உணர நின்ற புலவர்களுள் இவரும ஒருவராவா; பாண்டிநாட்டில் ஸ்ரீ வில்லிபுததூருக்கு அருகில உள்ள திருத்தண்கால் என வழங்கபபெறும வைணவத் தலமே, பொற்கொல்லன் வெண்ணாகனார் பிறந்த தஙகால ஆகும. இதனையே, "தடமபுனற் கழனிததஙகால்" என இளங்கோவடிகள் பாராட்டினா என்று கூறுவா இவ்வூரைக் கல்வெட்டுக் கள, "இராச இராச பாண்டிநாட்டு மதுராநதக வளநாட்டுக் கருநீலககுடி நாட்டுத திருததங்கால்" என அழைப்பதோடு, இவ்வூா மடமொனறில, மாறவாமன் சுநதரபாண்டியன் I காலததில், பாரதமும, இராமாயணமும படிகக ஏற்பாடு செய்யபபட்டிருநதது என்றும் கூறுகின்றன. (A R No. 564, 545 of 1922) இவர் பொன்வணிகர் அலலர்; பொன்னால் தொழிலசெய்து பிழைப்பவராதலின் இவர் பொற்கொல்லர் என அழைக்கபபெற்றார் இவர் பெயர் தங்கால்பூட் கொலலனா எனச் சில ஏடுகளில் காணப படுகிறது, பூட்கொலலன் என்பது பொருள் சிறவாமை யுணர்நது அதைப பூட்கொற்றன் என்றும், முடக்கொற்றன் எனத திருததிய ஏடுகளும் உள. அதைப் பூண்கொல்லன் என்று ஆக்கி, அணிகலன் செய்யும் கொல்லன் என்பாரும் உளா. தஙகால், புலவர் பலரைக்கொண்ட பெருமை யுடையது; ஆத்திரேயன் செங்கண்ணனார் என்ற புலவரும இவ் வூரினராவர் இவர் பாடிய பாக்கள், அகம், புறம், நற்றிணை, குறுநதொகை ஆகிய நான்கு நூலிலும் இடம் பெற்றுள்ளன

மறக்குடி வந்த ஆடவர்க்கே யன்றி, அக் குடியில் வநத பெண்டிர்க்கும் மறம் உண்டு என்பதை உணர்த்தப் பாடிய பாட்டில், மறக்குடி மனைக்கிழத்தி யொருத்தி, வேட்டுவச் சிறுவர்கள நெடுந்தொலைவுசெல்லாமல், ஊர் அருகேயுள்ள மடுக்கரையில் பிடித்துக்கொணர்ந்த உடும் பின் தசையினைத் தயிரோடு சேர்த்துச் சமைதத உணவை,

வேறு நல்ல புதிய உணவுகளோடும் சேர்த்து, பாணர்க்கும், அப் பாணரோடு வந்த பிறர்க்கும் அளித்து மகிழும் மாண்புடையள்; அவள் கணவனும், போர்க்களம் புகுந்து, கடும் போரிட்டு, அப் போரில் எதிர்நின்று பொரும் ஆற்றல்நிறை யானைகளை அடித்துக் கொன்று, அவற்றின் தலையில் அணிசெய்து விளங்கும் பொன்னாலாய பட்டம் முதலாம் அணிகளைக் கொணர்ந்து பாணர்க்குரிய பரிசில் அளித்து வாழ்வன் எனப் போற்றிக் கூறியுள்ளார் :

"மனைவியும்,
வேட்டச் சிறுஅர் சேட்புலம் படராது
படுமடைக் கொண்ட குறுந்தாள் உடும்பின
விழுக்கு நிணம்பெய்த தயிர்க்கண் மிதவை
யாணர் நல்லவை பாணரொடு ஒராங்கு
வருவிருந்து அயரும் விருப்பினள்; கிழவனும்
அருஞ்சமம் ததையத் தாக்கிப் பெருஞ்சமத்து
அண்ணல் யானை அணிந்த
பொன்செய் ஓடைப் பெரும் பரிசிலனே." (புறம்: ௩௨௬)

இவ்வாறு மறக்குடியினரின் மாண்புரைக்கும் அச் செய்யுளிலேயே, இராக்காலத்தே, ஊரைச் சூழவுள்ள வேலியடியில் பதுங்கியிருந்து தாக்கும் காட்டுப் பூனையை அஞ்சிய பெட்டைக்கோழி, நடுக்கம் கொண்டும், பெரு மூச்சு விட்டும், தொண்டையைத் திறந்து கூவியும் அலறி நின்று, தாம் தொழிலாற்றுங்கால் தம்மீது படிந்த பஞ்சின் தூசுகளை உதறிப் போக்கிவிட்டு எழுந்துவரும் பருத்திப் பெண்டிரின் கையில் உள்ள விளக்கொளியால், தன் சேவற் கோழி தன் அருகிலேயே இருப்பது கண்டு அச்சம் ஒழிந்து வாழும் எனக் கூறிய அச் சிற்றூர் இயல்பு இன்பம் பயந்து நிற்கிறது :

"ஊர்முது வேலிப் பார்நடை வெருகின்
இருட்பகை வெரீஇய நாகிளம் பேடை,
உயிர் நடுக்குற்றுப் புலாவிட் டரற்றச்
சிறையும், செற்றையும் புடையுநள் எழுந்த
பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்துக்
கவிர்ப்பூ நெற்றிச் சேவலின் தணியும்." (புறம்: ௩௨௬)

தன் மகள், காதல்நோய் கொண்டு, வருந்திப் பாலுணவும் வெறுத்து உடல் தளர்ந்து மெலிவதைக்கண்ட தாய், அதற்குக் காரணம் காமம் என அறியாளாய், அது எதனால் வந்தது என்பதை அறிவான் வேண்டிப் பலரிடமும் கேட்டு நின்றாளாக, தாயின் இத்துயர்நிலை கண்ட தலைவியின் தோழி, தாய் தன்னை வினவியபோது "அன்னை! அவள் நோய்க்காம் காரணம் யாது என்பதை யானும் தெளிவாக உணரேன்; ஆனால், யாங்கள் ஒருநாள் வேங்கைப் பூவினைக் கொய்யவேண்டிப் 'புலி புலி' என்று கூவினேமாக, அவ்வொலியினை உண்மையில் புலிகண்டார் அஞ்சிக் கூவிய ஒலியென உட்கொண்ட ஓர் ஆண்மகன், வில்லும் அம்பும் உடையனாய் எங்கள்முன் விரைந்து வந்து நின்று, 'எங்கே அப்புலி?' என்றுகேட்டு நின்றான்; அவன் அறியாமை கண்டு வியந்த நாங்கள், புதியனாய அவன் முன்நிற்றலை நாணி, ஒருவர் முதுகில் ஒருவர் உடல் மறையுமாறு ஒடுங்கி நின்றோம்; எங்கள் செயல் கண்ட அவ்வாண்தகை, 'பெண்காள் நீங்கள் பொய் கூறவும் வல்லிர் போலும்' என்று கூறிக்கொண்டே மெல்லச் செல்லும் தன் தேரினின்றே நின்மகளின் கண்களைப் பலகாலும் நோக்கிக் கொண்டே சென்று மறைந்தான்; அவன் சென்ற பின்னரும் அவன்சென்ற திசையையே நோக்கி நின்று, "தோழி! இவன் உண்மையில்ஓர் ஆண்டகையே' என்று கூறினாள்; ஆராய்ந்து நோக்கினால், இவள் நோய்க்கு, அன்றைய நிகழ்ச்சி காரணமாயிருக்குமோ என எண்ணுகின்றேன்," என்று கூறிப் பெண்ணினத்திற்கே உரிய பெருமிதச் சொற்களால் தலைவியின் துயர்க்காம் காரணம் இது, அது போக்க நீ செய்ய வேண்டுவது, இவளை அவனுக்கு மணம் செய்துகொடுத்தல்; இதை விடுத்துப் பலரோடும் வினவி நிற்றல் வீண். எனக்கூறிய தோழியின் சொற்கள் நிறைந்த சொல்லால் அழகு கொண்ட அரிய ஓர் செய்யுளை யாத்துள்ளார் நம் புலவர்.

"அன்னாய்! வாழி! வேண்டு; அன்னை! நின்மகள்
பாலும உண்ணாள் பழங்கண் கொண்டு
கனிபசந்தனள் எனவினவுதி; அதன் திறம்

யானும் தெற்றென உணரேன்; மேனாள்
மலிபூஞ்சாரல் என் தோழி மாரோடு
ஒலிசினை வேங்கை கொய்குவம் சென்றுழிப்
"புலி! புலி!" என்னும் பூசல் தோன்ற

வரிபுனை வில்லன் ஒருகணை தெரிந்துகொண்டு
யாதோ மற்று அம் மாதிறம் படர்? என
வினவி நிற்றந் தோனே; அவற்கண்டு
எம்முள் எம்முள் மெய்ம்மறைபு ஒடுங்கி
நாணி நின்றனெமாகப், பேணி
ஐவகை வகுத்த கூந்தல், ஆய்நுதல்,
மையீர் ஓதி, மடவீர்! நும்வாய்ப்
பொய்யும் உளவோ என்றனன்; பையெனப்
பரிமுடுகு தவிர்த்த தேரன், எதிர்மறுத்து
நின்மகள் உண்கண் பன்மாண் நோக்கிச்
சென்றோன் மன்ற அக்குன்று கிழவோனே;
பகல்மாய் அந்திப் படுசுடர் அமையத்து
அவன்மறை தேஎம் நோக்கி, மற்றிவன்
மகனே! தோழி! என்றனள்;
அதனளவு உண்டுகோள்! மதிவல் லோர்க்கே."

(அகம்: ௪௮.)

"தினையைக் காத்து வருவீராக என்று அனுப்பின் நன்று; ஆனால், தினைகொய்துவிட்டமையால் அது இயலாது; இரவில் வருவது எனிலோ, நீ வரும்வழி ஏதம் கண்டு அஞ்சுகின்றேன்; ஆதலின் என்செய்ய என்று கூறி நின்றேனாக, என்சொல் கேட்டு செய்வதறியாது நெடிது நின்ற தலைமகன், பின்னர் ஒரு முடிவிற்கு வந்து, அதை எவ்வாறு உரைப்பது எனத் தயங்கி இருந்தானாக, அவன் கொண்ட முடிவு, நின்னைத் தன்னூர்கொண்டு மணப்பதே என்பதை உணர்ந்த நான், ஐய! நீ கொண்டமுடிபே அறிவுடைமையானது; ஆனால், அதனால் சிறிது பழியுமுண்டாம் என்று கூறி வந்தேன்; என்னே இக்காதலின் தன்மை; எத்துணை நுட்பமாயது அது," என்று, தலைவன் கொண்டுதலைக் கழிதற்கு இசைந்து வந்ததனைத் தலைவிபால் கூறி, அவளை

யும் உடன்படுத்தும் தோழியின் மற்றோர் அறிவுடைமை தோன்றப் பாடிய பாட்டில் காமத்தின் இயல்பை நன்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

> "தினைகிளி கடிதலின் பகலும் ஒல்லும் ;
> இரவுநீ வருதலின் ஊறும் அஞ்சுவல் ;
> யாங்குச செய்வாம் எம்இடும்பை நோய்க்கென
> ஆங்குயான் கூறிய அனைத்திற்குப் பிறிதுசெத்து
> ஓங்குமலை நாடன் உயிர்த்தோன் மன்ற ;
> ஐதேய் கம்ம ! யானே
> கழிமுதுக் குறைமையும், பழியும் என்றிசினே."
>
> (குறுந் : உகஎ)

தாம் பாடிய மற்றோர் செய்யுளில், வேங்கைமலர் அணிந்த கூந்தல் "பொன்செய் கம்மியன் கைவினை கடுப்பத் தகைவனப் புற்ற"து எனத் தானறிந்த உவமை கூறியுள்ளார்.

## அ. மதுரைப் பொன்செய் கொல்லன்

மதுரை, பொன்செய்கொல்லர் பலரைப் பெற்றிருந்தது; மதுரை ஒரு பேரரசின் தலைநகர்; பலநாட்டு மக்கள் கூடிவாழும் இடம். ஆதலின், அது நாகரிகத்தில் சிறந்து விளங்கியிருந்தது; நாகரிகம் பெற்ற நாட்டில், மகளிரும் பிறரும், புதிது புதிதான அணிகளைச் செய்து அணிய விரும்புவர்; தமிழர்கள், பொன், ஆடகம் முதலாகப் பலவகைப்படும் என்பதை அக்காலத்திலேயே அறிந்திருந்தனர்; ஒன்பது வகைக் கற்களும் அவர்களுக்குத் தெரியும்; முத்தையும் அவர்கள் அறிந்திருந்தார்கள்: பொன்னும், பவளமும், முத்தும், மணியும் கொண்டு அணிகலன்களைச் செய்ய அறிந்திருந்தனர் தமிழர் என்பதை,

> "பொன்னும், துகிரும், முத்தும், மன்னிய
> மாமலை பயந்த காமரு மணியும்
> இடைபடச் சேய ஆயினும், தொடைபுணர்ந்து
> அருவிலை நன்கலம் அமைக்கும்."

எனப் புலவர் கூறுவதால் அறிக. இதனால், மதுரைமா நகரில் பொன்செய் கொல்லர் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்களுள், இவர் சிறந்தவராவர். இவர் தான் பாடிய பாட்டில், காற்று அடிக்க உதிர்ந்த நெல்லிக்கனிகள், பொன்னாற் செய்த காசுகள்போல் காட்சிதரும் எனத் தாம் அறிந்த, தம் தொழிலால் தோன்றும் ஒரு பொருளை உவமை கூறியுள்ளார்:

> "புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்,
> கல்லதா மருங்கில் கடுவளி உதிர்ப்பப்
> பொலஞ்செய்காசில் பொற்பத் தாஅம்." (அகம் ௩௬௩)

ஞாயிறு, ஏழ்பரித்தேர் ஊர்ந்து வருவன் என்ற கொள்கையினராவர்.

> "திரைசெலல் இவுளிவிரைவுடன் கடைஇ,
> அகலிரு விசும்பிற் பகல்செலச் சென்று,
> மழுகுசுடர் மண்டிலம் மாமலை மறைய" (அகம்: ௩௬௩)

## ௯௰. மதுரைக் கொல்லன் வெண்ணாகனார்

தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனாரே, மதுரையில் வந்து வாழ்ந்திருந்தமையால், மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் என அழைக்கப் பெற்றார் ஆதலின், இவ்விரு பெயர்களாலும் குறிக்கப் பெறுபவர் இருவரல்லர்; ஒருவரே என்பர் சிலர்; தங்கால் வெண்ணாகனார் பொற்கொல்லர் ஆவர்; மதுரை வெண்ணாகனார் கொல்லர் ஆவர்; இரும்புத் தொழில் செய்வாரைக் கொல்லர் என்றே அழைப்பதும், பொன்தொழில் செய்வாரைப் பொற்கொல்லர் என விதந்துகூறி அழைப்பதும் அக்கால வழக்கமாம்; ஆதலின், இப்பெயர்களால் குறிக்கப் பெறுவோர் ஒருவரல்லர்; இருவரே எனக்கொள்க. மேலும், இருவரும் வேறு வேறு என்பதை அறிவிப்பதற்கென்றே, மதுரை வெண்ணாகனார் என்றும், தங்கால் வெண்ணாகனார் என்றும் வேறு பிரித்துக் கூறப்பட்டுளது.

இவருடைய பாட்டில், கானவன், தன் கொடிய வளைத்து, வலிய அம்பை முட்பன்றியின் நெஞ்சிலே பாயுமாறு ஏவிக்கொன்று, கொண்டுவந்த மகிழ்ச்சியோடு, தன் வீட்டில் வாழும் தன் நாய் தன் பக்கத்தே நின்று வால் குழைத்து ஆடக் காட்டின் நடுவே, கால்நட்டுக் கட்டிய குடிசைக்குச் செல்வன் என்று காட்டிய காட்டுவாழ்க்கை நன்கு சித்திரிக்கப்பட்டுளது:

> "உரவுக்கணை, வன்கைக் கானவன், வெஞ்சிலை வணக்கி,
> உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு
> மனைவாய் ஞமலி ஒருங்குபுடை ஆட
> வேட்டுவலம் படுத்த உவகையன்; காட்ட
> நடுகாற் குரம்பைத் தன்குடிவயிற் பெயரும்"
>
> (நற் : ௨௮௫)

## ௯0. மதுரைக் கொல்லன் புல்லன்

புல்லன் என்ற பெயருடைய புலவர் சிலர் வாழ்ந்திருக்கக் காண்கிறோம்; கருவூர்க் கண்ணன் புல்லன்; கள்ளிக்குடி பூதம்புல்லன். புல்லன் என்ற பெயர்க் காரணம் யாது என்பது புலனாகவில்லை. புலவன் என்ற பெயருடையார் சிலரும் உள்ளனர்: உழுந்தினைப் புலவன்! கொற்றன் புலவன்! காஞ்சிப் புலவன். புலவன் என்ற பெயரே புல்லன் எனத்திரிந்து வழங்குகிறது போலும் என்றும் சிலர் எண்ணுகின்றனர். மதுரையில் வாழ்ந்த கொல்லர்களுள் பெரும்பாலோர், புலமையுற்று வாழ்ந்தனர் என்பது, மதுரைக் கொல்லன் வெண்ணாகனார், மதுரைப் பெருங்கொல்லன் என்ற புலவர்கள் வாழ்வதால் அறியலாம்.

இவர், குறிஞ்சி நிலத்தின் இயல்பினையும், அந்நிலத்து வாழ் மகளிரின் மாறாத அன்புடைமையினையும் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார். பலாமரம் ஒன்று நிறையப் பழுத்து நிற்கிறது; அப்பழத்தின் மணமும், அதன் மலரின் மணமும், ஆங்கே கூடி வாழும், கருங்குரங்குகளுக்கு விருந்திட்டு அழைப்பதுபோல் தோன்றின; அக்குரங்குகளில், நீண்ட மயிரையும் கூரிய பற்களையுமுடைய ஓர் ஆண் குரங்கு, அப்பலாமீது ஏறி, பழங்களை அறுத்து உடைக்கத் தொடங்கிற்று; உடைந்த பழத்தின் மணம், காந்தட் பூவின் மணத்தால் கவினுற்ற, குறவர் சிறுகுடியில் சென்று மணக்கும் என்று அந்நிலத்தின் வளத்தினை வரைந்து காட்டிய புலவர், அச்சிறுகுடியில் வந்தபெண் ஒருத்தி, தான், ஒரு ஆண்மகனோடு அன்புகொண்டிருப்பதைப் பொறாத அவ்வூரில் வாழும் சிலர், பழிச்சொல் கூறுவதை அறிந்து, அவ்வாறு அலர் கூறுவதே தொழிலாகக் கொண்ட அவர்களின் பழிச்சொல் கேட்டு யான் அஞ்சேன்; அவர்கள் கூறும் பழியுரைகளால், யான் அவன் மாட்டுக் கொண்டிருக்கும் அன்பு குறைந்து விடாது; உலகமே தலைகீழாக மாறினும், நீர், தன்னுடைய குளிர்

மாறி, வெம்மைக் குணம் பெறினும், தீ. வெப்பம் ஒழிந்து குளிரத் தொடங்கினும், அடியும் எல்லையும் காணுதற்கில் லாக் கடல்நீரெல்லாம் வற்றி நிலம்தோன்றித் தெரியினும், நான் அவனிடத்தில் கொண்டுள்ள அன்புறவு கெடாது என்றால், இப்பெண்கள், அலர் கூறுவதே தொழிலாகக் கொண்ட பழிநிறைந்த இப் பெண்கள் கூறும் சொற்களால் அழிந்துவிடாது; அவர்கள் பழிகூறுவது கண்டு அஞ் சேன்" என்று கூறினாள் என அந்நாட்டு மகளிரின் மாண் பினையும் உணர்த்தியுள்ளார்.

"நிலம்புடை பெயரினும், நீர், தீ பிறழினும்,
இலங்குதிரைப் பெருங்கடற்கு எல்லை தோன்றினும்,
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை அஞ்சிக்
கேடுஎவன் உடைத்தோ? தோழி! நீடுமயிர்க்
கடும்பல் ஊகக் கறைவிரல் ஏற்றை
புடைத் தொடுபு டைய பூநாறு பலவுக்கனி
காந்தளம் சிறுகுடிக் கமழும்
ஓங்குமலை நாடனொடு அமைந்தநம் தொடர்பே"

(குறுந் ௩௭௩)

## ௧௧. மதுரைப் பெருங்கொல்லன்

மதுரையில் இரும்புத்தொழில் மேற்கொண்டு வாழ்ந்தவர்களுள், இவர் மிகப்பெரிய தொழிற்சாலையினை வைத்திருந்தவராதலின், மதுரைப் பெருங்கொல்லன் என்று அழைக்கப் பெற்றார். மதுரையில் வாழ்ந்த பிறகொல்லர், மதுரைக் கொல்லன் வெண்ணாகனார் எனவும், மதுரைக் கொல்லன் புல்லன் எனவும பெயரிட்டு அழைக்கப் பெறவும், இவர், பெயரிடப பெறுமையோடு, பெருமைக்குரிய அடைகொடுக்கப் பெற்றும் அழைக்கப் பெறுவது, இவர் பெருமையினைக் குறிக்கும்.

யானையால் தாக்குண்டு வருந்திய புலி, செந்நாயின் வருகையினை எதிர்பாாதது நிற்கும் கொடிய காட்டு வழியில் வரும் தலைமகனை, இனி அவ்வாறு வாரற்க எனவும், விளைந்து முற்றிய தினைக்கதிரை உண்ணும் கதிர்களை ஓட்டிக் காப்பீராக என்று தாய் கூறியுள்ளாள் எனவும் தலைமகனிடத்தில் கூறினல், நினக்கு வரும் குறை யாதோ? என்று தோழியிடம கூறுவாளபோல், தலைமகன் கேட்கக்கூறி, இனி இரவில் வாரற்க; பகலில் நாங்கள் காக்கும் தினைபபுனத்திற்கு வருக என்று கூறிய தலைமகள் கூற்று அடங்கிய, குறிஞ்சித்திணை தழுவிய ஒருபாட்டே, இவர் பாடிய பாட்டாக நமக்குக் கிடைத்துளது.

"வளைவாய்ச சிறுகிளி விளைதினை கடீஇயர்
செல்கென் றோளே அன்னை எனநீ

குறுங்கை இரும்புலிக் கொலைவல் ஏற்றை
பைங்கண செந்நாய் படுபதம் பாாக்கும்
ஆரிருள் நடுநாள் வருதி
சாரல் நாட வாரலோ எனவே." (குறுந். ௧௪௧)

## ௧௨. கச்சிப்பேட்டு இளந்தச்சனார்

தொண்டை நாட்டில், சிறப்புற்றோங்கிய காஞ்சிமா நகரை அடுத்துக் கச்சிபபேடு என்றோர் ஊர் உண்டு; ஆங்குத் தச்சுத் தொழில் மேற்கொண்டோர் பலர் வாழ்ந்திருந்தனர்; அவர்களுள் ஆண்டால் இளையராய இவர், அறிவான் பெரியராய்ப் புலமையுற்று விளங்கினாராதலின் கச்சிப்பேட்டு இளந்தச்சனார் என்று அழைக்கப் பெற்றார்; இனி, இளம் பொன் வணிகனார் என்புழி, இளமை, அவர் ஆண்டின் இளமையைக் குறிக்க வாராது, அவர் தொழிலின் இயல்பு குறிக்க வந்ததே போல், ஈண்டும், தச்சுத் தொழில் இளந்தச்சு, பெருந்தச்சு என இரண்டாக, அவற்றுள் இவர், இளந்தச்சு மேற்கொண்டிருந்தமையால், இளந்தச்சனார் எனப்பட்டார் என, இளமை, அவர் தொழிலின் இயல்புணர வந்ததே எனக் கூறுவாருமுளர்.

தொண்டைநாடு சான்றோருடைத்து என்ப; தொண்டை நாட்டினராய இவர் பாட்டில அச்சான்றாண்மைக்குணம் பொருநத வநதுளது. பொருள் கருதிப் பிரிந்து செல்லும் தலைவன், பிரியுங்கால், தன் மனைவிபால் தன் பிரிவாலாய துயர் சிறிது காணினும், அவன் சென்ற வினையை இனிது முடிததலாகா மனக்கலக்கமுறுவன்; அதனால், அவன் வினையேயன்றி அவன் இற்பெருங்கிழததியின் இல்லறவாழ்வும் இனிது நடைபெறாது; ஆதலின், அவன் பிரிந்து செல்லுங்கால், ஒரு சிறிதும் வருத்தம் இல்லாள் போலவும், மாறாக அவன் பிரிதலைத் தானும் வரவேற்பாள் போலவும், அவள் அவனறியக் காட்டின், அவன், அவள் துயர்கண்டு கலங்கும் மனக்கலக்கமின்றித் தெளிந்த அறிவினனாய்ச் சென்ற வினையைச் செவ்விதின் முடித்து மீள்வன்; ஆதலின், இல்லிருந்து நல்லறமாற்றும் நற்குடி மகளிரின், அவ்வில்லறத்திற்குப் பொருள் இன்றியமையாதது என்று உணர்ந்து, அப் பொருள் கருதிப் பிரியும் தலைவனுக்குப் போக விடை தந்து, அவனைப் பிரிந்து வாழ்வதால் உண்டாம் துயர்

பொறுத்து வாழ்வதே தங்கள் கடமையாம் என்று கொள்வர்.

இவ்வுயரிய இல்லறப் பண்புணர்ந்தாளாய ஒரு பெண், பொருள் கருதிப் பிரிந்து செல்லும் தலைமகன் முன்நின்று, இவ்வகன்ற பெரிய ஊர்நடுவே அமைந்துள்ள நம் வீட்டிலேயே இருக்கின்றேம; அதுவே எங்கள் விருப்பத்திற்கு ஏற்றதாகவுளது என்று கூறியதோடு அமையாளாய்த்தலைவர் பிரிநதாராயின், அவர் பிரிவு இல்லறததிற்குத் துணைபுரியும என்ற எண்ணமுடையராய் ஆற்றியிருப்பதற்கு மாறாக, அழுது வாடுவது பெருங்குடி மகளிர்க்குப் பெருமைதரும செயலாகாது என்றும் எடுத்துக்கூறி, அறனறிந்து மூத்த அறிவுடைமை தோன்ற நின்றாள்.

பண்பட்ட பெருங்குணமுடையளாய இப்பெண்ணின் வரலாற்றினைப் பாடி, பழந்தமிழ் மகளிரின் ஒழுக்கத்தை உணர்த்திய புலவர் கச்சிப்பேட்டு இளந்தச்சனர், இக்கால மகளிர்க்கும் வழி காட்டியுள்ளார் :

"கொல்லைக் கோவலர் குறும்புனம் சேர்ந்த
குறுங்கால் குரவின் குவியிணர் வான்பூ
ஆடுடை இடைமகன் சூடப் பூக்கும்
அகலுள் ஆங்கண சீறூரேமே;
அதுவே சாலுவ காமம். அன்றியும்,
எம்விட்டு அகறிர் ஆயின், கொன்னொன்று
கூறுவல்; வாழியா; ஐய! வேறுபட்டு
இரீஇய காலை இரியின்,
பெரிய அல்லவோ பெரியவர் நிலையே.' (நற்: உசுக.)

## கஉ. கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார்

கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார், தொண்டை நாட்டுத் தலைநகராம் காஞ்சியை அடுத்துள்ள கச்சிப்பேடு என்ற ஊரினர்; தச்சுத் தொழிலைத் தம பிழைப்பிற்குரிய தொழிலாக மேற்கொண்டு வாழ்ந்தவர்; முற்கூறிய இளந்தச்சனாரின் முன் பிறந்தவர்; வழிவழித் தமிழ் வளர்த்த குடியில் வந்தவர்; இவ்வளவே இவர் வரலாறாக நாம அறியத்தக்கது. இவர் உணர்த்தும் குறிஞ்சிநில ஒழுக்கம் சுவைபயந்து நிற்கிறது

தலைவியை, அவள் தோழியும் அறியா நிலையில், இயற்கை வயத்தால் எதிர்ப்பட்டு, அவள உறவு பெற்று மகிழ்ந்த தலைமகன், மறுநாளும் அவளைக் காணவந்து, அன்று அவள் தன் உயிர்த்தோழியோடு உடனிருப்பது கண்டு, இனி, இத்தோழியின் துணைபெற்றாலன்றி இவளைப் பெறுதல் இயலாதென உணர்ந்து, தலைவியைப் பண்டே பார்த்துப் பழகியவன் தான் என்பதை, அத்தோழிக்குக் குறிப்பால் உணர்த்தி, அவள் எண்ணமும, அத்தலைவியின் எண்ணமும், தன் எண்ணமும் ஒன்று படுதலை விரும்பும் செயலைச் செய்யுளாகப் பாடிக் காட்டியுள்ளார்.

தலைவியும், தோழியும் தங்கள் தினைப்புனத்துப் பரண் மேல் நின்றிருந்தாராக, அவர் அணித்தே வந்து நின்ற தலைமகன், அவர்களை நோக்கி, "அதோ, அருவிகள் ஒலிக்கின்ற பெரிய மலைஅடிவாரத்தே, அமைந்து, அப் பெருமலைகளையே அரணாகக்கொண்டு, இளங்கன்றுகள் காட்டினுள் ஓடிவிடாவண்ணம், அவற்றின் கால்களில் பூட்டப்பெற்ற கயிறுகள் கட்டப் பெற்றனவும், தம் வேரில் பழுத்த பழங்களைத்தின்று, அருகே மூங்கில் வளர்ந்து செழித்திருக்கும் மலையில் உள்ள சுனையின் தெளிந்த நீர் குடித்த, அக்கன்றுகளின் தாய்ப்பசுக்கள், இனிது தங்கித் துயில் கொள்ளுமாறு தழைத்து நிற்பனவுமாய பலாமரங் களைத் தம் வீடுகளின் முன்னே வளர்த்திருக்கும் அச்சிறு

குடிதான் உங்கள் ஊரோ? என்ற என கேள்விக்கு விடை யளியாது போயினும், பெருமழை பெய்ததனால் நன்கு வளர்ந்து, சிவந்த நிறம் பொருந்த முற்றிய கதிர்களை யுடைய இத்தினைப்புனம உங்களுடையது தானே? இதற் குக் காவலாய் அமைந்ததும் நீங்கள் தானே? என்பதற்கா வது விடையளியுங்கள்'' என்று கூறி நின்றான்.

இவ்வாறு கூறுவதால், இவன் நம் ஊரையும், நம் புனத்தையும், காவலாய் அமைந்த நம்மையும் உணர்ந்து ளான் ஆதலின் இவன் தலைவியைத் தெரிந்து பழகியுள் ளான் என்பதையும், தினைவளர்ந்து விட்டது; ஆதலின் இற்செறிக்கப்படுவீர்; அவ்வாறு இற்செறிக்கப்பெற்றால், ஆண்டுவந்து இரவுக்குறிவேண்டி அவ்விடத்தின் இயல் பெல்லாம் உணர்ந்துளேன் என்ற கருத்துடையனாய் நிற் கின்றான் என்பதையும் உணர்ந்த தோழி, இவனுக்கு நம்மாலாம் துணைபுரிதல் வேண்டும் என்ற கொள்கையின ளாவள்.

இக்கருத்தமையவந்த இப்பாட்டில், குறிஞ்சிநில வளந் தோன்றப் பாடியுள்ள பெருமையினையும் நோக்குதல் நன்றாம்.

> "அருவி ஆர்க்கும் பெருவரை நண்ணிக்
> கன்றுகால் யாத்த மன்றப் பலவின்
> வேர்க்கொண்டு தூங்கும் கொழுஞ்சுளைப் பெரும்பழம
> குழவிச் சேதா மாந்தி, அயலது
> வேய்பயில் இறும்பின் ஆம்அறல் பருகும
> பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச
> சொல்லவும சொல்லீ ராயின, கலலெனக்
> கருவி மாமழை வீழ்ந்தென எழுந்த
> செங்கேழ் ஆடிய செழுங்குரல் சிறுதினைக்
> கொய்புனம் காவலும் நுமதோ?" (நற்: உகூ)

## கச. வடம வண்ணக்கன்

தமிழ்நாட்டில், மிகப் பழையகாலத்திலேயே, பண்ட மாற்றுமுறை மாறிப் பொன்னிற்கும் வெள்ளிக்கும் பொருள்களை விற்பதும் வாங்குவதுமாய முறை இடம் பெற்றுவிட்டது; தமிழர்கள், பிறநாடுகளோடு வாணிபம் மேற்கொண்டதால், இம்முறையினை மேற்கொள்ளவேண் டியவராயினர் வெளிநாட்டுக் கப்பல்கள், தமிழ்நாட்டிற்குப் பொன்னொடுவந்து கறியொடு பெயரும் என்று நூல்கள் கூறுகின்றன பொருள்களைப் பொனனுக்கு மாற்றும் முறை இடம்பெற்று விட்டமையால், சிறிதும், பெரிதுமாய நாணயங்களை அன்றைய ஆட்சியாளர் நாட்டில் நடமாட விட்டிருந்தனர். பொன், மாற்றுமிகுதி, குறைவிற்கேற்ப, ஆடகம், கிளிச்சிறை, சாமபூநதம, சாதரூபம எனப் பல் வேறு வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அதனால், நாணயங்கள் எநதப் பொனனால் ஆக்கப்பட்டுள்ளன என் பதை ஆராய்ந்து பார்க்கவேண்டியது இன்றியமையாததாகி விட்டது; அதனால், அத்தகைய நாணய ஆய்வாளர்கள் நாட்டில் ஊர்தோறும் ஒருவரோ, பலரோ வாழலாயினர்; அத்தகைய நாணய ஆய்வாளர்கள், வண்ணக்கர் என அழைக்கப்படலாயினர். அவ் வண்ணக்கரில் பெரும்பா லோர், வடநாட்டினின்றும் போந்த வடம வகுப்பினராவர். ஆதலின், அதைக்குறிப்பிடும் வடம என்ற சொல்லையும் அவர் பெயர்முன் இணைத்து வழங்கலாயினர். வடநாட்டி லிருந்து வநது நாணய ஆய்வுத்தொழில் மேற்கொண்டு வாழ்நத அவர்கள், வந்துவாழும் நாட்டின் மொழியாகிய தமிழ்மொழியினைக் கற்றுக் கவிபாடும் ஆற்றலுடையராயி னர். எட்டுத்தொகை நூல்களைப் பாடிய புலவர்களுள் எழுவர், இவ் வண்ணக்கர் மரபினராவர். அவ் வண்ணக்கர் எழுவருள், நால்வர் வடநாட்டினின்றும் வந்தவராகவும், ஏனைய மூவர் தமிழ்நாட்டில் பிறந்து, அவ் வடமர் வழியாக அத்தொழில் அறிந்தவராகவும் காணப்படுகின்றனர். அவ் வாறு வந்த வடம வண்ணக்கர்களுள், இயற்பெயர் குறிக்கப்

பெறுமல், வடம வண்ணக்கன் எனச் சிறப்புவகையால் அழைக்கப் பெறுபவர் நம் புலவராவர். இவர் பாடிய, குறிஞ்சித்திணைப் பொருள்கொண்ட செய்யுளொன்று குறுந்தொகைக்கண் இடம் பெற்றுளது.

நெய்தல் நிலத்துக் கடலையும், அக் கடலின் கரைக்கண் விளங்கும் கானலையும ஒருசேரச் சிறப்பித்துக்கூற வந்த புலவர், அக் கடலும, கானலும், நிலவும், இருளும்போல் தோன்றும் என்று கூறிய உவமை மிகவும் சிறந்து விளங்கு கின்றது. ஆழம் மிகுதியால் கருமைநிறம் பெற்ற கடல் இருள்போலவும், கடலைச் சார்ந்த கானலில் பரந்துகிடக்கும் மணல் தூய்மையால் வெண்ணிறம்பெற்று நிலவு போலவும் தோன்றும் என்றுவது, அலைமடங்கி வெண்ணிறம் பெறும் கடல் நிலவுபோலவும, மரம் செறிந்து விளங்கும் கானற் சோலைகள் கருநிறம் பெறுவதால் அது இருள் போலவும் தோன்றும் என்றுவது பொருள்தரும் நிலையில் பாடிய அவர் புலமையினைக் காணுங்கள் :

"நிலவும், இருளும் போலப் புலவுத்திரைக்
கடலும், கானலும் தோன்றும்." (குறுந : அக)

## ௩௫. வடம வண்ணக்கன் தாமோதரனார்

தாமோதரனார் என்ற இயற்பெயரினராய இவர், வட நாட்டினராய வடமர் வகுப்பில் பிறந்து நாணய ஆய்வாள ராகப் பணிபுரிந்து பெருமையுற்றவராவர். "திருவாசகத் திற் குருகாதார் ஒருவாசகத்திற்கு முருகார்" என்ற சிறப்பமைந்த மணிவாசகப் பெருநதகையாராலும், சுந்தரர் போற்றும் புலவராகிய சேரமான் பெருமாள் நாயனாராலும் போற்றப்பெறும் பெரும் புலமைவாய்ந்தவ ராவர் இவர், குதிரைமலைக் குரியவனும், சேரர் படைத்தலைவனும், சிறந்த கொடையாளனுமாய பிட்டங்கொற்றனைப் பாடிப் பாராட்டியுள்ளார்.

பிட்டங்கொற்றன், பாணரும், பொருநருமாய இரவலர் களைப் புரப்பதற்காகவே பிறந்தவன் ; அவன தன் கடமை யில் என்றும் தவறான் ; அவன் ஒருவேளை தவறுவனாயின், தனக்குப் படைத் துணைவரும் பிட்டங்கொற்றன் தளர்ச்சி யினைப் போக்குவது தன் கடனாகும் என்று எண்ணும் பண்பினனாகிய அவன் அரசனாகிய சேரன், தான் முன் வந்து, பிட்டங்கொற்றனால் புரககப்பட வேண்டியவர்களைப் புரப்பன். ஆதலின் இரவலர்கள் தங்கள் வாழ்க்கையினை நன்கு நடத்துவது எவ்வாறு எனறு எண்ணி ஏங்குதல் வேண்டாமஎன்று கூற வந்த புலவர் தாமோதரனார், இக் கருத்தை வெளிப்படையாகக் கூறாமல், பிட்டங் கொற்ற னுடைய நாட்டில், தினை காப்போர், காவலுக்குத் துணை யாக ஏற்றிய தீ அவிநது கெட்டுவிடுமானால், ஆங்கு மலிந்துகிடக்கும் மாணிக்கக் கற்கள, தாம்விடும் ஒளியால் துணைசெய்யும் என்று கூறிக் குறிப்பால் விளங்கவைத்த புலமைநலம போற்றத் தக்கதாம்.

இரவலர்கள், வள்ளல் தன்மையில் வாட்டம் காட்டாப் பிட்டங்கொற்றனையும், அவன் தளர்ந்தவழி முன்னின்று துணைபுரியும் சேரனையும் பெற்றுள்ளமையால், அவர்கள் கவலை சிறிதும் கொள்ளாது, உலையேற்றிச் சோறாக்கி

உண்டும், கள்ளைக் குடித்தும், மலரும், மாலையும் சூடி மகிழ்ந்தும் வாழ்வாராக; அவர்கள் செய்ய வேண்டுவ தெல்லாம், பிட்டங்கொற்றன் வாழ்க! அவன் தலைவன் மாக்கோதை வாழ்க! அவர்கள் கொற்றம் வாழ்க! அவர்கள் இரவலர்க்குக் குறையாமல் வழங்குதற்காம் பெரும்பொருளை இறையாகத் தரும், அவர்கள் பகை மன்னர் பெருவளம் பெற்று வாழ்வாராக! என்று வாழ்த்துவது ஒன்றே, என்று பாடிய புலவர் பெருமையினைப் பாராட்டுவோமாக.

"ஏற்றுக உலையே! ஆக்குக சோறே!
கள்ளும் குறைபடல் ஓம்புக! ஒள்ளிழைப்
பாடுவல் விறலியர், கோதையும் புனைக!
அன்னவை பிறவும் செய்க! என்னதூஉம்
பரியல் வேண்டா, வருபதம் நாடி;
ஐவனம் காவலர் பெய்தீ நந்தின்,
ஒளிதிகழ் திருந்துமணி, நளியிருள் அகற்றும்
வன்புல நாடன், வயமான் பிட்டன்,
ஆரமர் கடக்கும் வேலும், அவன் இறை
மாவள் ஈகைக் கோதையும்,
மாறுகொள் மன்னரும் வாழியர் நெடிதே!"

(புறம் : ) 

ஒரு தலைவன் பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டு தவறினன். தன் தவற்றினைப் போக்கித் தன்னை வர வேற்றுக்கொள்ளுமாறு தன் மனைவியிடம் கூறி வருமாறு பாணன் ஒருவனைத் தூது அனுப்பினன். பாணன் தலைமக ளின் தோழிபால் சென்று, "தலைவன் தவறிலன், அவன் தலைவிபால் இன்றும் பேரன்பே கொண்டுள்ளான்; எவர்க்கும் இனியனும் பண்பினும் குறைந்திலன்" என்று கூறினன். அது கேட்ட தோழி, "பாண! தலைவன், யாரினும் இனியன், பேரன்பினன் என்று நீ கூறுகின்றனை; ஆனல் அவன்பால் அதனைப் பெருங்குணம் சிறிதும் இல்லை; குணம் இல்லை என்பது மட்டுமன்று; தீயொழுக்கம் உடையனுமாவன்; அவன், இல்லிருந்து நல்லறமாற்றுதற்கு

உரிமை உடையளாய தலைவி இருப்பவும் அவளை மறந்து அன்பும், கற்பும் அறியாப் பரத்தையரைக் காதலித்து வாழும் வழுக்கிய வாழ்க்கையினன்" என்று தலைவனின் தவறிய ஒழுக்கத்தினை எடுத்துக்காட்டி இடித்துரைத்தாள்.

தோழி, தலைவனை, அவன் பாணன் முன் இத்துணை வெளிப்படையாகப் பழிகூறுதல், பழங்கால மகளிர் பண்பன்று. ஆதலின், தோழி தலைவனைப் பழித்துக் கூறுங்கால், தலைவன், ஊருள் வாழும் ஆண் குருவியொன்று, கருவுற்றிருக்கும் தன் பெண்குருவி, முட்டை யிடுதற்கு ஏற்ற இடத்தைத் தேடிச் சென்று, தேனடை கட்டித் தொங்கும் இனிய கரும்பு விளைந்திருக்கும் கழனிக்குச் சென்று, அத் தேனடையினைக் காணாது, மணம் நாறுதல் இல்லா அக் கரும்பின் வெண்ணிறப் பூவைக் கோதிக்கொண்டுவரும் வளம்மிக்க ஊரினன் அவன் என்று வெளிப்படக் கூறி, அவன் நாட்டுவளத்தைப் புகழ்வாள்போல், ஆண் குருவி, கழனியில் தேனடையும் தீங்கரும்பும் உளவாகவும், மணமோ, கண்கவர்நிறமோ இல்லாத கரும்பின் பூவினைக் கொழுதுவதேபோல், உங்கள் தலைவனும் அன்பும், கற்பும் நிறைந்த தலைமகள் ஈண்டிருப்பவும், அப் பண்பு இல்லாப் பரத்தையரை நாடிச் செல்வன் எனப் பழிகூறினாள் எனப் பாடிய புலவன் புலமையினை மகிழ்ந்து பாராட்டாதார் யார்?

> "பாரினும் இனியன்; பேரன் பினனே;
> உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்
> சூல்முதிர் பேடைக்கு ஈன்இல் இழைஇயர்,
> தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்,
> நாறா வெண்பூக் கொழுதும்
> யாணர் ஊரன் பாணன் வாயே." (குறுந் : அ௫)

இச் செய்யுளில், வரும், "உள்ளூர்க் குரீஇ...யாணர் ஊரன்" என்ற தொடரில் அமைந்திருக்கும், சொல்லழகும் பொருளழகும், உள்ளுறைச் சிறப்பும் கண்டு வியந்த மணிவாசகப் பெருந்தகையாரும், சேரமான் பெருமாளும்,

தாம் பாடிய திருக்கோவையாரினும், திருவாரூர் மும் மணிக்கோவையினும், இத்தொடரின் சொல்லும், பொரு ளும் தோன்ற மேற்கொண்டுள்ளனர்.

"சூல்முதிர் துள்ளு நடைபெடைக் கிற்றுணைச சேவல் செய்வான்
தேன்முதிர் வேழத்தின் வெண்பூக்குதர் செம்மலூரன்"
(திருக்கோவையார்: ௩௨௧)

"மனையுறை குருவி வளைவாய்ச சேவல்
சினைமுதிர் பேடைச செவ்வி நோக்கி
ஈனில இழைக்க வேண்டி யாணு
அன்புபொறை கூர மென்மென முயங்கிக்
கண்ணுடைக் கரும்பின் நுண் தோடு கவரும்
பெருவளம் தழீஇய பீடுசால் கிடக்கை
வருபுனல் ஊரன்."
(திருவாரூர் மும்மணிக்கோவை · ௧௧)

## ககூ. வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தன்

பிட்டங் கொற்றனைப் பாடிய தாமோதரனைப் போன்றே இவரும், வடநாட்டினின்றும், தமிழகத்தில் வந்து வாழ்ந்து, நாணய ஆய்வாளர் தொழில் மேற்கொண்டிருந்த புலவராவர் இவர் மலையமான் திருமுடிக்காரியின் கொற்றமும் கொடையும் ஒருங்கே தோன்ற ஒரு செய்யுள் பாடியுள்ளார்.

தமிழகத்தைச் சேர சோழ பாண்டியர்களாகிய மூவேந்தர் வழிவந்தோர் ஆண்டிருந்த அக்காலத்திலேயே, அவர்களுக்கு அடங்கியும் அடங்காமலும், அதியர், ஆவியர், மலையர், வேளிர் போன்ற வேறு இன அரசர்களும் ஆண்டு வந்துள்ளனர். மூவேந்தர்கள், குறிப்பிட்ட எல்லைக்குட்பட்ட நாட்டை ஆண்டு வந்தது போன்றே, இக்குறுநில மன்னர்களும், தங்கள் ஆட்சிக்குரிய நிலமாக, ஒரு எல்லைக்குட்பட்ட நாட்டினைப் பெற்று ஆண்டிருந்தனர். அத்தகைய அரச இனங்களுள் ஒருவராகிய மலையர் அல்லது மலையமான்கள் என்பவர், தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ளதும், திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டதுமான நாட்டை ஆண்டு வந்தனர் மலாடு, மலையமானாடு என்ற பெயர் பெற்றிருந்த அந்நாடு, காடும் மலைகளும் சூழ நடு நாட்டில் இருப்பதால், கடலாலோ, பகைவர்களாலோ அழிவுறும் என்ற அச்சம் அற்றிருந்தது; அந்நாட்டிடையே, முள்ளூர் என்ற அழகிய பயன் மிக்க மலையொன்றும் இருந்தது. அந்நாடாண்ட மலைய மன்னர்களுள், திருமுடிக்காரி சிறந்தவனவன்; வள்ளல் எழுவருள் ஒருவன் என்ற புகழிற்குரியவன்; தன்னைப் பாடிவரும் பாணர், கூத்தர், புலவர் முதலிய இரவலர்க்குக் களிறும், தேரும் கொடுத்துச் சிறப்புச் செய்தவன்; பேராற்றல் மிக்கவன்; தன் முள்ளூர் மலையினைக் கைப்பற்றப் பெரும் படையுடன் வந்த ஆரிய அரசர்களை அறைத் தாக்கித் துரத்தினவன்; கொல்லி மலையாண்ட, வில்லாண்மை மிக்க வல்வில் ஓரியைக் கொன்று, அக்கொல்லி

யைத் தன் நண்பன் பெருஞ்சேரல் இரும்பொறைக்கு அன்பளிப்பாக அளித்தவன்; பகைவர் நாட்டுப் பசுநிரைகளைக் கவர்ந்து வருவதில், தன்னை ஒப்பாரும், மிக்காரும் இல்லாதவன்; பேரரசர் மூவர்க்கும் படைத்துணை போகும் பெரும்படை வலியுடையவன். சேரமான் மாந்தரஞ் சேரல் இரும்பொறையும், சோழன் இராசசூயம வேட்டபெருநற்கிள்ளியும பொருதவழிச் சோழர் படைக்குத் துணைபோய் வெற்றிபெறச் செய்தவன்.

தேர்வண் மலையன் என அழைக்கப்பெறும், மலையமான் திருமுடிக்காரியின் வெற்றிச் செயல்களுள், சிறந்ததாகிய சோழற்குத் துணைபோய் வென்ற நிகழ்ச்சியினைப் புலவர், பெருஞசாத்தனா பாராட்டியுள்ளார் போர்க்களத்தில் களிறு பல கொன்று வெற்றிபெற்றோனாகிய சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, "வென்றோன் யான் அன்று; தேர்வண் மலையன்" என்று இவனையே வெற்றிக்குரியோன் எனக் கூறிப் பாராட்டுகின்றான்; தோற்ற சேரமான் மாந்தரஞ் சேரல் இரும்பொறை, "வீரக்கழல் ஒலிக்கக் களம புகுந்து, விரைந்து வந்து, எதிர்த்தாரைத் தடுதது நிறுததி வெற்றி கொண்ட, தேர்வண் மலையன், சோழனுக்குத் துணை வாராதிருந்தால், அச் சோழனை எளிதில் வெற்றிபெற்றிருத்தல் கூடும்; நம்மைத் தொலைத்தோன் சோழன் அல்லன்; தேர்வண் மலையனே;" என்று வெற்றிக்குரியன் இவனே என, மலையனைப் பாராட்டுகின்றான். இவ்வாறு இருவரும் பாராட்டப் புகழ்பெற்ற நிகழ்ச்சியினைப் புலவர் வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தனா, அவ்விருவரும் கூறுவனவற்றையே கூறிப் பாராட்டியுள்ளார்.

"குன்றத்தன்ன களிறு பெயரக்
கடந்து அட்டு வென்றோனும, நிற்கூறும்மே
'வெலீ இயோன்' இவன் எனக்,
'கழலணிப் பொலிந்த சேவடி நிலங்கவர்பு
விரைந்து வந்து சமந்தாங்கிய
வல்வேல் மலையன் அல்லனாயின்,

நல்லமர் கடத்தல் எளிதுமன் நமக்கு' எனத்
தோற்றோன் தானும் நிற்கூ றுமமே,

ஒருநீ ஆயினை பெரும." (புறம்: கூரு)

"தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது உண்ணலின் ஊங்கினியதில்" என்ப; பிறர் உழைக்கப் பெற்ற செல்வத்தினும், தன் உழைப்பால் வந்த செல்வமே சிறந்த செல்வமாம்; என்ற எண்ணம் உடையவன் மலையன் என்பதையும், தன்பால் உள்ள பொருள் முழுவதையும் இரவலர்க்கு ஈந்துவிட்டு எஞ்சியவற்றையே தான் உண்ணும் கொடைக்குணம் உடையவன் மலையன் என்பதையும், உழுது பயன் விளைத்து. நெல் முதலாம் சிறந்த பகுதிகளை மக்களுக்கு அளித்துவிட்டு வைக்கோலை மட்டும் உண்ணுவதும், அதை உண்ணுங்கால், இது என் உழைப்பால் வந்தது என்ற செருக்கோடு உண்ணுவதும் ஆய எருது கள் வைக்கோல் உண்பதை இவனுக்கு உவமை கூறிப் பாராட்டிய பெரும்புலவர் நம் பெருஞ்சாத்தனார் "உழுத நோன் பகடழிதின்றாங்கு நல்லமிழ்தாக நீ நயந்துண் ணும் நறவே."—புறம்: கூரு.

## கள. வடம வண்ணக்கன் பேரி சாத்தன்

வடம வண்ணக்கன் பேரி சாத்தனார் பாடிய பாக்கள், அகநானூறு, புறநானூறு ஆகிய இரு நூல்களிலும் இடம் பெற்றுள்ளன; புறத்தில் அவர் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனைப் பாடியுள்ளார். இலவந்திகையாவது, வேண்டுமளவு நீரை நிறைக்கவும், போக்கவும் வல்ல பொறிகள் அமைந்த வாவியைச்சூழ உள்ள வயந்தச்சோலை, அரசனும், அவன் மனைவியும் இருந்து மகிழ்தற்காம் காவல் நிறைந்தது "பன்மலர் அடுக்கிய நன் மரப்பந்தர் இலவந்திகை" என்றும், "நிறைக்குறின் நிறைத்துப் போக்குறின் போக்கும், பொறிப்படையமைந்த பொங்கில வந்திகை" என்றும் புலவர்களால் புகழப்பெறுவது. இத்தகைய சோலையில் உயிர்விட்டமையால் நன்மாறன், இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் எனப் பெற்றான்.

இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், மக்கள் பலரும் மனைவியும் உடன்வாழ வாழ்ந்தோனவன்; நிறைந்த செல்வமும் நீடிய வாழ்நாளும பெற்றவன்; ஆயினும், தன் பால வந்து பாராட்டிய புலவர்க்கு, அவர்கள் வேண்டும் போதே அளிக்கும் அருட்குணம் அமையப் பெறாதவனவன்; அவன்பால் காணபபெறும் இக்குறை கண்டு இடித்துரைத்த புலவர் பலருள, வடம வண்ணக்கண் பேரி சாத்தனாரும ஒருவராவா. நன்மாறன் மனைவியார், தெய்வக் கற்புடையார் என அவன் மனைவியையும், அவன் மக்கள், பவழம் போன்று சிவந்த வாயினையும், கிண்கிணி அணிந்த காலினையும் உடைய அழகர்; தமிழ்நாட்டில் வாழ்ந்த பேரரசர், குறுநில மன்னர் அனைவரையும் வென்று அவர்பால் கைக்கொண்ட பெரும்பொருள் கொண்டு வந்து சேர்க்கும் கொற்றம் உடையவர் என அவன் மக்களையும் பாராட்டிய புலவர். அவன், தன்னைப் பாடிவரும் புலவர்க்குப் பரிசில் அளிக்காது வாழ்வதை வெறுத்து வெகுண்டு, அவன் மக்களும் அவனைப்போல் பரிசில்

கொடாப் பழியினராதல் கூடாது என்ற விருப்பினராய், "அரசே! ஆற்றலில் நின்னையொத்த நின்மக்கள், அருளுடைமையில், பெரும் பொருள் சேர்த்து, வருவார்க்கு வழங்கும் இயல்பினராய நின் முன்னோரை ஒப்பாராக!" என்று வாழ்த்தினர்; பாடியோர்க்குப் பரிசில் அளியாப் பெருங்குற்றத்தால் அவன் கேடுறாது வாழ்தல் வேண்டும் என்ற நல எண்ணமுடையவராய், நின் நாளும், ஆண்டும், கடல் நீரினும், அக்கடல்கொழிக்கும் மணலினும், அக்கடல் நீர்குடித்த மேகம் பெய்யும் மழைத்துளியினும் மிகுதியாகப் பல்க, நெடிது வாழ்வாயாக! என்றும் இம்மக்களே அன்றி, இம்மக்கள் பெறும் மக்களும் மாவீரராய் மாண்புற்று வாழ்வதைக் கண்டு வாழ்வாயாக! என்றும் வாழ்த்தினர். நன்மாறன் அருள் பெறாது வறிதே மீளும் தனக்கு, அவன் பால் எத்துணைப் பேரன்பு உண்டு என்பதை, "நன்மாற! நின்பால் கொண்டிருந்த அன்பின் மிகுதியால், நின்னை நனவிலேயே யன்றிக் கனவிலும் பாராட்டினேன்," என்றும், "நின்பால் அளிபெறாது மீண்டு, மிகச்சேய நாட்டிற்குச் சென்று, வாழ்வேனாயினும், மழைநீர் பெற வேண்டி, அம்மழையைப் பாடிக்கொண்டே பறக்கும் வானம்பாடியே போல், நின்பால் பெறும் அருளை விரும்பி, நின்னையே பாடி வாழ்வேன்," என்றும் பாடிக் காட்டினர். இறுதியாக, "இத்துணைக் கொடியனாதல் அறிந்தும், நின்னை விட்டுப் பிரியாது நின் நிழலேபோல் நின் அடி நிழற்கண் இருந்து வாழ விரும்பும் எனக்குப் பொருள் அளித்துப் போற்றாது போயினும், என்னை மறவாதிருக்க வாவது வேண்டுகின்றேன்' என்றும் கூறி, தன் அன்புடைமையினையும், அவன் அருளின்மையினையும் ஒருங்கே வெளிப்படுத்திச் சென்றார்.

> "கடவுள் சான்ற கற்பின் சேயிழை
> மடவோள் பயந்த மணிமருள் அவ்வாயக
> கிண்கிணிப் புதல்வர்.' (புறம் : ௧௯௮)

> "காதல்பெருமையின் கனவினும் அரற்றும்என்
> காமர் நெஞ்சம்." (புறம் : ,, )

"தண்டமிழ் வரைப்பகம் கொண்டியாகப்
பணிந்துக் கூட்டுணூஉம் தணிப்பருங் கடுந்திறல்
நின்னோ ரன்ன நின்புதல்வர், என்றும்
ஒன்னார் வாட அருங்கலம் தந்து நும்
பொன்னுடை நெடுநகர் நிறைய வைத்தநின்
முன்னோர் போல்க்இவர் பெருங்கண் ணோட்டம்!
யாண்டும, நாளும் பெருகி, ஈண்டுதிரைப்
பெருங்கடல் நீரினும், அக்கடல் மணலினும்
நீண்டுயர் வானத்து உறையினும் நன்றும
இவர்பெறும புதல்வர்க் காண்டொறு, நீயும்
புகன்ற செல்வமொடு புகழ் இனிது விளங்கி,
நீடு வாழிய நெடுந்தகை! யானும்
கேளில் சேஎய நாட்டின் எந்நாளும்
துளிநசைப் புள்ளின நின்அளி நசைக்கு இரங்கின
அடிநிழற் பழகிய அடியுறை
கடுமான் மாற! மறவா தீமே." (புறம் · கசஅ.)

அகநானூற்றுப் பாட்டொன்றில், தலைமகன் உறவினைப் பெறுதற்கு நின் உறுதுணை வேண்டும் என்று வேண்டிக் கொண்ட தலைமகள் வேண்டுகோட்கு உடன்பட்ட தோழி, தலைமகளிடம் அவள் குறையினை எடுத்துக் கூறியக்கால், அதை ஏற்றுக் கொள்ளாதாள் போலவும், அவ்வாறு கூறும் தன்னைச் சினந்து கொள்வாள் போலவும் நடந்துகொண்ட தலைவியிடம் உளம் நொந்து கூறிய துறை விளங்கப் பாடியுள்ளார்.

"நம் தலைவனுடைய அன்பு குறைவற்றது; அத்தகைய அன்புடையானோடு கொள்ளும் காதல நமக்குண்டாதல் நன்று என்று நான் கூறினால், அதை நீ ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனை; நீயும் யானும உயிரொத்தவராதலின், நான் செய்யும முடிவினை நீ மறுக்கமாட்டாய் என்ற துணிவினால், நான தலைவனுக்கு இசைவினைத் தந்து வந்தேன்; ஆனால் நீயோ, அதை ஏற்றுக்கொள்ளாது, அவனோடு உறவுகொள்ள நாணுவாளபோல் தோன்றுகின்றனை; "யான் செய்த செயல் எத்தகைத்து? என்ன செயல்

செய்துவிட்டேன் நான்?" என்று செய்துவிட்டு வருந்தும் அறிவிலாதவள் அல்லள் நான்; எற்றென்று இரங்குவ செய்யேன் என்றும், அவ்வாறாகவும், இன்று உயிரிற் சிறந்த நாணையும், உயிர் ஒத்த நட்பையும் இழந்தவர் உலகத்தில் என்னலது இலர்." என்று தோழி கூறினாள் எனப் பாடியுள்ளார் :

"அறியாய்; வாழி! தோழி...........
...
மாமலை நாடனொடு மறுவின்றாகிய
காமம் கலந்த காதல் உண்டெனின்
நன்றுமன்; அது நீ நாடாய கூறுதி;
நாணும நட்பும இல்லோரத் தேரின்
யானலது இல்லை இவ்வுலகத் தானே;
இன்னுயிர அன்ன நின்னொடும சூழாது
... ........ . ........................
செய்துபின் இரஙகா வினையொடு
மெய்யல பெரும்பழி எய்தினேனே." (அகம் : 268)

தலைவன் உறவு நன்று என்று கூறுவதை ஏலாது தலைமகள் நாணியதனால், தோழி, "இவ்வுலகில் யானே நாணில்லாதவள் என்றும், கெழுதகைமையால் கேளாது செய்ததற்கு இசைந்து மகிழாது, மறுத்துரைத்தமையின், யானே நட்பில்லாதவள்," என்றும் கூறினாள்; தான் செய்வன எதையும் பலகாலும் எண்ணியே செய்வதால், தன் செயல் பழியுடையதாகாது என்ற உறுதியுடைமையால், தன்னைப்பற்றிக் கூறும் பழிச்சொல், பெரிதேயாயினும் அது உண்மையல்லாப் பொய்ப்பழியாம் என்றும் கூறினாள். இத்துணை அறிவுடையளாய ஒருபெண்ணைப் படைத்தளித்த பெருமை புலவர் பேரி சாத்தனார்க்கே உரித்து.

## கஅ. வண்ணக்கன் சொரு மருங்குமரனார்

நாணய ஆய்வாளராக இருந்துகொண்டே தமிழறிவு பெற்றிருந்த புலவர் நால்வரைக் குறிப்பிடுங்கால், அவர்கள் வடநாட்டினின்றும் வந்து குடியேறிய வடமவகுப்பினர் என்பதை அறிவிக்கும் வடம என்ற சொல்லை, அவர்கள் பெயரோடு இணைத்து வழங்கியதைப்போல், இவர் பெயரோடு இணைத்து வழங்காமையால், இவர், அவ்வாய்வாளர் தொழில் மேற்கொண்டவரேயாயினும், அவர்களைப்போல் வடநாட்டினின்றும் வந்தவரல்லர்; தமிழகத்தவரே என்பது உறுதியாம். தமிழ்நாட்டில் பிறந்தார் சிலரும், அந்நாணய ஆய்வாளர் தொழில் மேற்கொண்டிருந்தனர் என்பதற்கு, கம்பூரில் பிறந்து, கிழார் எனும் பட்டம்பெற்று, புதுக்கயம் என்ற ஊரிலே இருந்து அத்தொழில் மேற்கொண்டிருந்த, புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர் கிழானும், விற்றூற்றில் வாழ்ந்து அத்தொழில் மேற்கொண்டிருந்த, தத்தனாரும் சான்று பகர்ந்து நிற்றல் காண்க.

இவ்வண்ணக்கர் பெயராக வழங்கும் சொருமருங்கனார் என்பது எக்காரணம் பற்றி வந்தது என்பது புலனாகவில்லை. களவொழுக்கம் மேற்கொண்ட தலைமகன், கடுமா வழங்கும் காட்டுவழியில் வருவதற்கு அஞ்சி, அவ்வாறு வருதல் நன்றன்று, வரைந்துகொண்டு உடனிருந்து வாழ்க என வரைவு கடாவும் துறையமைந்த ஒரு செய்யுள் நற்றிணையில் வந்துளது. இவர் வரலாறாக நாம் அறியத் தக்கன இவ்வளவே. (நற் : உஎரு.)

## ௧௬௮. விற்றூற்று வண்ணக்கன் தத்தனார்

தத்தனார் என்ற இயற்பெயர் கொண்ட இப் புலவர் பிறந்த ஊர் எங்குளது என்பதை அறிந்துகொள்வதற் கில்லை; இவர் வடநாட்டினரல்லர்; தமிழ் நாட்டவரே என்பது உறுதி இவர் தன்னுடைய பாட்டில், பாண்டியர் தலைநகர் மதுரையைக் குறித்துள்ளாராதலின், மதுரையைக் கண்டு அறிந்தவர் என்பது புலனும்.

தலைவன் ஒருவன், இல்லறம் இனிது இயங்குதற்கு இன்றியமையாப் பெருமையுடையது பொருள் எனத் தெரிந்து, அப்பொருள் தேடவேண்டி, கடத்தற்கரிய வழி பல கடந்து சென்றுகொண்டிருக்கிறான்; இடைவழியில், தலைவியைப் பற்றிய எண்ணம் அவன் உள்ளத்தே எழுந்து மேற்செல்லவொட்டாமல் தடைசெய்து விட்டது; அவனோ, தொடங்கிய எவ்வினையையும் இடையே தளர்ந்து கைவிடும் இயல்புடையவனல்லன்; ஆதலின், தன் தலைவியை நினைந் துருகும் தன் நெஞ்சை நோக்கி, "நெஞ்சே! அரிய சுரம் கடந்து சென்று ஈட்டும் பொருளின் சிறப்பை ஒருபால் நினைந்தும், கரும்பு எழுதப்பெற்றுக் கவினுறவிளங்கும் தலைவியைப் பிரிந்து செல்லும் வருத்தத்தை ஒருபால் நினைந்தும் போவதா? அல்லது மீள்வதா? என்பதறியாது தயங்குகின்றனை; ஆனல் ஒன்று கூறுகின்றேன், பிரியுங் கால், நின் தலைமகள் தோழி, பொருளின் சிறப்பையும், செல்லும் வழியின் அருமையினையும், பிரிந்தால் தலைவிக் குண்டாம் துயரினையும் எடுத்துக்காட்டி, இறுதியில் சென்று பொருள்பெற்று வருவதே ஆடவர்க்கு அழகு எனக் காரணம் பல காட்டிக் கூறிய அரிய உண்மையினைக் கேட்டுப் பிரிந்து வந்த நீ, இத்துணைத் தொலைவு வந்த பின்னர்த் தலைவியை நினைந்து வருந்துவது தகுமோ?" என்று கூறியதாகப் பாடி, அக்காலத் தமிழ்க்குடி வந்த ஓர் ஆண்மகன், காதல், கடமை இவற்றுள் எது உயர்ந்தது என்பதை அறியமாட்டாமல் இரண்டையும் ஒன்றாகவே எண்ணி மதித்து, இரண்டிலும் பிறழாப் பெருவாழ்வு

மேற்கொள்ளத் துடிக்கின்றான் என்பதை உலகறியக் காட்டிய புலவர் தத்தனார்க்கு நம் போற்றுதல்! மேலும், பொருள்தேடச் செல்லும் தமிழன், வழியிலவரும் புதியவர்களை அடித்து அவா பொருள் கவரும வாழ்வினராய ஆறலைகள்வரின், பறையொலிகேட்டு, அவர் அடிததுப் போடும் பிணந்தின்று பிழைக்கும் ஆண்பருந்துகளும் அஞ்சும் கொடிய வழியில் சென்று பொருள ஈட்டி வருகின்றான் என்று கூறி, தமிழர் பொருளின் சிறப்பினை எத்துணை மிகுதியாக அறிந்திருந்தனர் என்பதையும் அறிவித்துள்ளார்.

"வம்ப மாக்கள் வருதிறம நோக்கிச
செங்கணை தொடுதத செயிரநோக்கு ஆடவர்
மடிவாய்த தண்ணுமைத தழங்குகுரல் கேட்ட
எருவைச சேவல் கிளைவயிற் பெயரும்
அருஞ்சுரக் கவலை அஞ்சுவரு நனந்தலைப்
பெரும்பல் குன்றம் உள்ளியும், மற்றிவள்
கரும்புடைப் பணைத்தோள் நோக்கியும், ஒருதிறம
பற்றாய் வாழிஎம நெஞ்சே! நற்றாப்
பொற்றோச செழியன் கூடல் ஆங்கண்
ஒருமை செப்பிய அருமை வான்முகை
இரும்போது கமழும கூந்தல்
பெருமலை தழீஇயநோக் கியையுமோ மற்றே."

உகஅ)

## ௨0. உறையூர் மருத்துவன் தாமோதரனார்

நோய் யாது என ஆராய்ந்தறிந்து, அந்நோய்க் காரணமும் கண்டு, அந்நோய் போக்கும் வழிவகைகளையும் அறிந்து, நோயுற்றான் உடல்நிலை, அந்நோயளவு, அக்காலத்தின் தட்பவெப்பநிலை ஆகிய இவற்றையும் மனதில் இருத்தி, மருந்தளித்து நோய்தீர்க்கும் மருத்துவ முறையினைத் தமிழ்மக்கள் பண்டே அறிந்திருந்தனர்; அத்தகைய மருத்துவர்கள், தமிழ்நாட்டுச் சிற்றூர்தோறும் இருந்து மக்கள் பிணிபோக்கிப் பணிபுரிந்திருந்தனர், அத்தகைய மருத்துவர்களுள், உறையூரில் வாழ்ந்த தாமோதரனார் என்ற மருத்துவர், பிழைப்பிற்காகத் தாம் மேற்கொண்டிருந்த மருத்துவத் தொழிலோடு, அறிவு வளர்ச்சியிலும் ஆழ்ந்த கருத்துடையவராய்த் தமிழ்அறிவு நன்கு வாய்க்கப்பெற்று, பெரும்புலவராய்ப் புலவரும், புரவலரும் போற்ற வாழ்ந்திருந்தார்.

மருத்துவன் தாமோதரனார் பாடிய பைந்தமிழ்ப் பாடல்கள் ஐந்து; அவர், குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவனையும், பிட்டங் கொற்றனையும் பாராட்டியுள்ளார்.

குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், உறையூரிலமர்ந்து ஊராண்டவன்; குராப்பள்ளி என்னும் இடத்தே இருந்து உயிர் துறந்தவன்; தமிழரசர்கள் செய்யும் தலையாய தவறாகிய, தம்முள் ஒருவரோடொருவர் பகைத்துவாழ்தலை மறந்து, அவர்க்கு மாறாக, ஏனைய தமிழரசர்களோடு நட்புப்பூண்டு நல்லோர் போற்ற வாழ்ந்த பெருமைசால் பண்புடையவன்; இவன், தன் காலத்தே, பாண்டிப் பெருவேந்தனாய் விளங்கிய வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியைப் பிரிவறியாப் பெருநண்பனாய்ப் பெற்றிருந்தான். இவன்மாட்டுக் காணலாம் இம் மாண்பினைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் கண்டு களித்து, அவ்வொற்றுமை நின்று நிலவ வாழ்த்தியுள்ளார்.

பெருந் திருமாவளவன், புலவர் போற்ற வாழும் பெருமையுடையான் என்பதறிந்த, அவன் அரசில் தலைமை யூராம் உறையூர்வாழ் மருத்துவப் புலவர், அவன் நீடுவாழ விரும்பி வாழ்த்தியுள்ளார். நாட்டுமக்கள், பகைவராலும், பிறராலும் துன்புறுமல் வாழ நாடாள்வதே நல்லரசின் இயல்பாகும்; அம் மக்களுக்குப் போர் முதலாம் செயற்கை நிகழ்ச்சிகளாலோ, மழையின்மை முதலாம் இயற்கையின் விளைவுகளாலோ கேடு வந்துற்றவிடத்தும்; 'இக் கேடுகளை எவ்வாறு போக்கிக் காப்பேன்?' எனக் கலங்காது நின்று போக்கி ஆளுதல் வேண்டும்; இத்தகு பண்பு, தம் அரசன்பால் உண்டு என்பதை அழகிய ஓர் உவமையால் விளக்கிப் பாராட்டினர்.

கடலைச் சார்ந்த கழிநீர் கொண்டு உப்பை விளைவித்து, அவ் வுப்பைக் கல்நிறை நிலமாம் குறிஞ்சி முதலாம் உள் நாடுகளுக்குக் கொண்டுசென்று விற்கும் உமணர் என்ற உப்பு வணிகர், அவ் வுப்பினை நிறைய ஏற்றிய வண்டி, இடையில் பெருமணல் வெளியிலும், நிறைசேற்று நிலத்திலும் சிக்கியவிடத்து, அதைப் பொருட்படுத்தாது, மண்டியிட்டு இழுத்து, அவ் வண்டியை உரிய இடத்திற்குக் கொண்டு சேர்க்கும் வலிய எருதுகளை அறிந்த அவர் தன் நாட்டு மக்கள் துயர்துடைத்து ஆள்வதில், அவ் வெருதுகளை ஒத்தவன் எம் அரசன் என்று உவமை கூறி, அவனையும் பாராட்டி, அரசன் கடமையினையும் காட்டினர்.

தங்கள் அரசன் இவ்வாறு நல்லனுதல் அறிந்த இவர், அவன் நெடிது வாழ விரும்பினர். வேந்தர்கள் வெண் கொற்றக் குடை பிடித்தல், தமமீது விழும் ஞாயிற்று வெயிலை மறைத்தற்காக அன்று; தம் நாட்டுக் குடிகளுக்கு வரும் கொடுமையாம் வெப்பத்தைப் போக்கி வாழ வைப்பேன் என்ற கருத்தோடே யாகும்; ஆதலின், அரசன் குடிகள், அவன் குடையினை வாழ்த்துதல் வழக்கம். பெருந்திருமாவளவனை வாழ்த்த விரும்பிய இவர் அவன் குடையினைக் கண்டவழியே யல்லாமல், அவன் குடை

போல் தோன்றும் பொருள்களைக் கண்டவழியும், அவன் குடையினைக் கண்டதேபோல் வாழ்த்துகின்றார்.

ஒருநாள் முழுநிலா ஒளிவிடும் இரவில் வான வெளியினைப் பார்த்தார் புலவர். ஆங்குத் திங்கள் வெண்ணொளி பரப்பி வழங்குவதைக் கண்டார்; அக் காட்சி அவருக்குப் பெருந்திருமாவளவன் வெண்கொற்றக் குடையினை நினைப்பூட்டிற்று. வெண்திங்களை, அவன் வெண்கொற்றக் குடையென்றே கொண்டார்; உடனே, "வாழ்க வளவன்; வாழ்க அவன் குடை!" என்று வாழ்த்தினார்.

வாழ்த்திநிற்கும் அவர் கண்முன், வெண்திங்களோடு, பேரொளிவிட்டு விளங்கும் செவ்வாய்மீனும் நின்று காட்சி அளித்தது; இருண்ட நீலவானில் செவ்வொளி பரக்க விளங்கும் அச் செவ்வாய்மீன், நீலக்கடலிடையே மீன் பிடிக்க இரவிற் செல்வோர் தாம் ஏறிச்செலும் படகுகளில் ஏற்றிச்செல்லும் விளக்கின் காட்சியைக் கண்முன் நிறுத்தி அவர்க்குக் களிப்பூட்டிற்று.

இத்தகைய காட்சிகளும், கருத்துக்களும் ஒருங்கே விளங்கும் ஓர் அழகிய பாட்டால் பெருந்திருமாவளவனைப் போற்றி வாழ்த்தினார்

"முந்நீர் நாப்பண் திமில்சுடர் போலச்
செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்
உச்சி நின்ற உவவுமதி கண்டு,
கட்சி மஞ்ஞையின், சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலியும், யானும் வல்விரைந்து
தொழுதன மல்லமோ! பலவே? கானல்
கழியுப்பு முகந்து கல்நாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன் பகட்டன்ன, எங்கோன்
வலனிரங்கு முரசின் வாய்வாள் வளவன்
வெயில்மறைக் கொண்ட உருகெழு சிறப்பின்
மாலை வெண்குடை யொக்குமால் எனவே." (புறம்: ௬0)

குதிரை மலைக்குரியவனும், சேரர் படைத் தலைவனு
மாய பிட்டங்கொற்றன், அருந் திறலும், பெருங் கொடையு
முடையனாய் விளங்கினான் அவன் பெருமையறிந்து
பாராட்ட எண்ணிய புலவர் தாமோதரனார்க்கு ஓர் அரிய
நல்வாய்ப்புக் கிடைத்தது : பிட்டங்கொற்றன் ஆண்மை
அறியாச் சிலர், அவன்மீது பகைகொண்டு போர்தொடுக்க
எண்ணினார் ; அஃதறிந்த புலவர், அவர்முன் சென்று,
அவன்மீது போர் தொடுக்கா வண்ணம் வேண்ட
விரும்பினார் ; அவர்கள் முன் சென்றார் ; “ பகையரசர்
களே ! பிட்டங்கொற்றனைப் பகைத்துள்ள நீங்கள் அவன்
பால் கண்ட தவறு என்னையோ ? அவனால் பிழைக்கும்
பாணர் குடும்பம் எத்தனை என்பதை அறிவீர்களா ?
அவனை அழித்தால், அவனைச் சுற்றி வாழும் அப்
பாணர் என்னாவர் என்பதை எண்ணிப் பார்த்ததுண்டா?
போரெழுந்து புறப்படுவதற்கு முன் அவன், முதிர்ந்த
ஆண் யானைகளை அடித்துக் கொன்று, அவற்றின் கொம்பு
களிலே விளைந்திரும் முத்துக்களை மாலையாக்கி விறலியர்
கழுத்திலிட்டு மகிழ்வன் ; எவரும் விரும்பி யுண்ணும்
தேனை, நாரால் நன்கு வடித்தெடுத்து வழங்கிப் பாணர்
களைப் புரப்பன் ; இத்தகையானோடு போர் செய்ய முன்
வந்த உங்கள் நெஞ்சென்ன கல்லா ? போர் விட்டு ஒழியுங்
கள் ; ஒழியீராயின், நீங்கள் ஒழிவது திண்ணம். பிட்டங்
கொற்றன், பாணரொடு பழகும் காலத்தில்தான் இவ்வளவு
அன்பும், இரக்கமும் உடையனே யன்றி, போர்க்களம்
புகுந்துவிட்டால், அவன்போல் கொடியனைக் காணவும்
இயலாது ; கொல்லன் உலைக்களத்தில், காய்ச்சிய இரும்
பினைக் கூடம் கொண்டு அடிக்கும் அடிகளை யெல்லாம்
தாங்கிக் கொண்டு சிறிதும் நிலைகலங்காது நிற்கும் பட்
டடைக்கல்போல், நீங்கள் எவ்வளவு பெரும்படை கொண்டு
தாக்கினும், அப் படைகள் எல்லாம் அவனைத் தாக்கித்
தாமே யழியுமே யன்றி, அவற்றால் அவன் சிறிதும் அழி
வுறான் இவனோடு போர்தொடுத்தல் பேதைமையினும்
பேதைமையாமன்றோ ? எவ்வழி நோக்கினும் இவனோடு
போரிடல் பண்பன்று; ஆதலின், வீரர்காள்! இவனை நெருங்

காது அகல்வீராக!" என்று அவர்க்கு அறிவுரை கூறுவார் போல், அவன் அன்பும் ஆற்றலும் அறியப் பாராட்டினார்.

"மலைகெழு நாடன் கூர்வேற் பிட்டன்
குறுகல் ஓம்புமின் தெவ்விர்! அவனே,
சிறுகண் யானை வெண்கோடு பயந்த
ஒளிதிகழ் முத்தம் விறலியர்க்கு ஈத்து,
நாரபிழிக் கொண்ட வெங்கள் தேறல்
பண்ணமை நல்யாழ்ப் பாண்கடும்பு அருத்தி,
நசைவர்க்கு மென்மை யல்லது, பகைவர்க்கு
இரும்பு பயன்படுக்கும் கருங்கைக் கொல்லன்
விசைத்தெறி கூடமொடு பொரூஉம்
உலைக்கல் லன்ன வல்லா ளன்னே." (புறம் · ௧௭௦)

தாம் பாடிய அகநானூறுச் செய்யுள் ஒன்றில், தன்னூரில் மணம் முடித்துக்கொள்ளவான் வேண்டி, தலைவியை உடன் கொண்டு செல்லும் தலைமகன், இடைவழியில் செல்லும் பாலை நிலத்தின் கொடுமை அவளுக்குத் தோன்றாதிருத்தற் பொருட்டு, "அடர்ந்து வளர்ந்த நின் தலைமயிரை அழகாக வாரி முடித்து, அதில், மணம் நாறும் வெண் கடம்பு மலர்களைச் சூடிக் கொண்டு, அம் மலர்களில் உள்ள தேனை உண்ண வேண்டி வரும் வண்டுகளை ஓட்டாமல், வளை ஒலிக்கும் நின் முன்கைகளைப் பருத்த தோளசையுமாறு வீசி நடந்து எனபின் வரும் நின் அழகே அழகு!" என்று பாராட்டி அழைத்துச் செல்லுகின்றான் என்று பாடினார்; அதில், தன் கூந்தலில் உள்ள மலர்த் தேனை உண்ண வேண்டி வரும் வண்டுகளால் தனக்குத் துயர் நேரும்; ஆகையால் அவற்றை ஓட்டவேண்டும் என்ற அறிவு தானும் இல்லாதவள் என அவள் இளமையினையும், வண்டுகள் தேன் உண்ண வருகின்றன; அவற்றை நமக்குண்டாம் துயர் போக்குவான் வேண்டி விரட்டினால், அவற்றின் வேட்கை கெடுமே என்ற எண்ணத்தால் அவற்றை ஓட்டாது செல்கிறாள் என, அவள் அருட்குணத்தையும் பாராட்டினான்; ஆனால், அவளோ, தன்னைத் தன் முன் பிறர் பாராட்டுவதை விரும்பாளாதல் அறிந்தவனா

தலின், இவ்வாறு மறைத்து மொழி கிளவியால் இகழ்வான் போல் புகழ்ந்தான் என்னும் பொருள் தோன்றப் பாடிய புலவரின் புலமையினைப் போற்றிப் புகழ்வோமாக!

*" அரியார் சிலம்பின் சீறடி சிவப்ப*
*எமமொடு ஆறுபடஇயா, யாழநின்*
*பொம்மல் ஓதி பொதுள வாரி*
*அரும்பற மலர்ந்த வாய்பூ மராஅத்துச*
*சுருமபுசூழ் அலரி தைஇ, வேய்ந்தநின்*
*தேம்பாய் கூந்தல் குறும்பல மொசிக்கும்*
*வண்டுகடிந்து ஓம்பல் தேற்றாய், அணிகொள*
*நுணகோல் எல்வளை தெளிர்க்கும் முன்கை*
*மெல்லிறைப் பணைத்தோள் விளங்க வீசி*
*வல்லுவை மன்னால நடையே."* (அகம் : உ௬௧.)

## உக உறையூர் முதுகூத்தனர்

உறையூர் முது கூத்தனர் எனவும், உறையூர் முது கூற்றனர் எனவும், உறையூா முது கொற்றனர் எனவும் வழஙகப் பெறும் பெயர்கள் மூன்றும் ஒருவரையே குறிக்கும எனவும், உறையூர் வாழ்வினராய இவர், ஆரியக் கூத்து, தமிழ்க்கூத்து என்ற கூத்துவகைகள் அனைத்திலும் சிறந்த பெரியாராக விளங்கினமையால், இவரை அவர்கால மக்கள், உறையூர் முது கூத்தனர் எனச் சிறப்புப் பெய ரிட்டு அழைததனர் எனவும், கூத்தனர் என்ற அப்பெயர், பின்னர்க் கூற்றனர் எனவும், கொற்றனர் எனவும் மருவி வந்துற்றது எனவும் ஆராய்ச்சியாளர் கூறுவர்.

இவர், தம் பாக்களில், வீரைவேள்மான் வெளியன் தித்தன் என்பானையும், அவன் முரசினையும், பாண்டிய அரசன் ஒருவனையும், அப் பாண்டியர்க்குப் பெருமை தரும் முத்துக்கள் விளையும் கடற்செல்வததையும் எடுத் தோதியதல்லது வேறு வரலாற்றுக் குறிப்புக்கள் எதையும் அறிவித்திலர்:

"வீரை வேள்மான் வெளியன் தித்தன்." (நற். ருஅ)

"சோளா முததின தெணகடல் பொருநன்,
திணதோச செழியன." (அகம்: கஙஎ)

சிறு செல்வம் படைத்த பெருவள்ளல் ஒருவனைப் பாராட்ட முன்வந்த புலவர், மக்கள் செல்வம உற்ற காலததிலும, அஃது அற்ற காலத்திலும் எவ்வாறு வாழ்தல் வேண்டும் என்பதை அரிய நயம் தோன்ற எடுத் துக் காட்டியுள்ளார்: "ஒரு தலைவன்; அவன் வாழும் ஊர் அத்துணை வளம் நிறைநததன்று; ஆங்குத் தோண்டப் பெறும் கிணறுகள், கற்பாறைகளே நிறைந்து நீர்தருவ தில்லை; தரும் சிறிது நீரும உப்பாய்ப் பயன்படாது போம; இதனல் நிலம் உழுது வாழ வழிகாணு அவனூர் மக்கள் வேட்டையாடி வாழ்க்கை நடததுவர்; அத்தகைய ஊரில்

வாழ்ந்த அவன், வறுமைவந்துற்றவிடத்து, அவ்வறுமை கண்டு உளம்குன்றி அடங்கி விடாது, விரைந்து பணியாற்றி வேண்டுவனவற்றைத் தேடிச் சேர்க்கும் ஊக்கமுடையவன்; அவ்வாறு சேர்த்த பொருள் சிறிதே இருப்பினும், தன்பால் உள்ளது சிறிது; ஆதலின், அதை எவர்க்கும் அளிக்காது யானே உண்பேன் என எண்ணான்; அதைத தன்பால்வந்து நிற்போர் பலராதலின், இவர் அனைவர்க்கும் கொடுக்க இயலாது ஆகலின், சிலர்க்கு அளித்து, சிலர்க்கு மறுத்தலும் செய்யான்; உள்ளதை உள்ள அனைவர்க்கும் ஏற்றவகை பகிர்ந்தளித்து மகிழ்வித்து மகிழ்வன்; பெருஞ்செல்வம் வந்துற்றதாயின், அக்காலை அவன் வள்ளன்மையினை வாயால் உரைத்தலும் இயலாதாம்; நாடாளும் வேந்தர்கள் தங்கள் அரசவை நோக்கி வருவார்க்கு வாரிவாரி வழங்குவதேபோல், வாரிவாரி வழங்குவன்" என்று அவன் இயல்பு கூறுவார்போல் வாழ்வார்க்கு வழிகாட்டியுள்ளார்.

இவ்வாறு, அவ்வீரன் இயல்புரைக்க வந்த ஆசிரியர், அவன், இன்மைகண்டு வாடிவிடாது விரைந்து பணியாற்றிப் பயன் பெறுவதற்கு, மழைபெய்து பெருங்குளிர் எடுக்கத் தொடங்கியவுடனே, வெளியிடங்களில் வாழ் இடையனொருவன், அக்குளிர் கண்டு அஞ்சி அடங்கி விடாது, உடனே ஒடித் தீக்கடை கோலால் தீ மூட்டிக் குளிர் போக்கி வாழ்வதையும், அவ்வீரன் தன்பால் உள்ள சிறுபொருளைப் பெரும் விருந்தினர்க்கு வழங்குவதற்குக், கொண்டான் வளமறிந்து வாழும் வகையறிந்த நற்குடி மகளிர், விருந்தினர் பலர் வந்துற்ற வழி, அவ்விருந்து கண்டு, தன்பால் உளது மிகக்குறைவு; வந்தவரோ மிகப் பலர் என்று மனம் கலங்காது, அவர் அனைவரையும் அமர்த்தி, அவர் உளம் கோணுவாறு உள்ளவற்றைப் பகிர்ந்தளிக்கும் செயலையும் உவமை கூறியுள்ளார். ஒரு சிறு செய்யுளில் இத்துணைப் பெரும் பொருளெலாம் பொருந்தப் பாடிய புலவர் புலமையைப் போற்றுவோமாக :

"கல்லறுத்து இயற்றிய வல்உவர்க் கூவல்,
வில்லோர் வாழ்க்கைச் சீறூர் மதவலி,
நனிநல் கூர்ந்தனன் ஆயினும், பனிமிகப்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியும்
கல்லா இடையன் போலக் குறிப்பின்
இல்லது படைக்கவும் வல்லன்; உள்ளது
தவச்சிறி தாயினும் மிகப்பலர் என்னாள்
நீள்நெடும் பந்தர் ஊண்முறை யூட்டும்
இல்பொலி மகடூஉப் போலச், சிறுசில
வரிசையின் அளிக்கவும் வல்லன்; உரிதினிற்
காவல் மன்னர் கடைமுகத்து உகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
தூவவும் வல்லன் தூவுங் காலே." (புறம் : ௩௩௧)

உறையூர் முதுகூத்தனார், ஊர்ப்பற்று மிக்க உயர்ந்தோராவர், அவர், தாம் பாடிய பாட்டொன்றில், "எங்கள் சோழ அரசர், பகைவர்களை வென்று, அவ்வெற்றி குறித்து முழக்கும் முரசினையும், அவ்வெற்றியாலாம் சிறப்பினையும் உடையராவர்; எங்கள் உறையூர், எங்கள் அரசர்களின் அரசிருக்கையாம் உரிமை உடையது; சுவைக்கினிய கள் நிறைந்தது, எங்கள் கன்னிக் காவிரி, தன் கரைகளை அரித்தோடும் வெள்ளத்தால் வீறெய்தியவள்; எங்கள் நாட்டு மக்கள், அவ்வாற்றுவளத்தால் செல்வம் செழிக்கப்பெற்று, தங்கள் உழவாம் பெருந்தொழில் கழிந்த பங்குனித் திங்களில், காவிரியாற்றில், அவ்யாறு கொண்டு கொழித்த தூய மணலாலும், மணம் நாறும் பல்வேறு மலர்களாலும் சிறப்புற்ற சோலைகளில், ஒன்று கூடிச் சோறாக்கி உண்டும், தின்றும், ஆடியும், பாடியும் வேனில் விழாக் கொண்டாடி மகிழ்வர்" என்று தங்கள் அரசனையும், தங்கள் நாட்டில் ஓடும் ஆற்றினையும், தாங்கள் உறையும் தங்கள் ஊர்ப் பெருவிழாவினையும் பாராட்டியுள்ளார் :

"வென்றெறி முரசின் விறற் போர்ச் சோழர்,
இன்கடுங் கள்ளின் உறந்தை யாங்கண்,

வருபுனல் நெரிதரும் இகுகரைப் பேரியாற்று
உருவ வெண்மணல், முருகுநாறு தண்பொழில்
பங்குனி முயக்கம்." (அகம் : 137)

உறையூர்ப் பங்குனி விழா, அக்கால மக்களிடையே பெரிதும் போற்றப்பட்டு வந்துளது என்பதையும், அப் பங்குனி விழாவின்போது, திருவரங்கத்துப் பெருமானை உறையூர்க்கு எழுந்தருளச் செய்து சிறப்புச் செய்வர் என்பதையும, "களவினுட்டவிர்ச்சி" என்னும் இறைய னார் அகப்பொருட் சூத்திரவுரையில், "இனி, ஊர் துஞ் சாமை என்பது, ஊர்கொண்ட பெருவிழா நாளாய்க் கண் பாடில்லையாமாகவும் இடையீடாம் என்பது ; அவை, மதுரை ஆவணியவிட்டமே, உறையூர்ப்பங்குனி யுத்தரமே, கருவூர் உள்ளி விழாவே என இவையும் இவைபோல்வன பிறவும் எல்லாம் அபபெற்றியானபொழுது இடையீடாம் என்பது" எனவரும உரையும, ஸ்ரீரங்கத்துக் கோயில் கல் வெட்டுக்களும் (A. R No. 16 of 1936-37) அறிவித்தலை உணர்க.

உறையூர் முதுகூத்தனார், செல்வர்கள், தங்கள் சிறு வர் மகிழும் விளையாட்டுப் பொருளாகச் சிறு பறையினை வாங்கித்தருவர் எனவும, அப்பறைமீது அழகிய குருவி யின் ஓவியம் வரையப்பட்டிருக்கும எனவும், சிறுவர்கள், அப்பறையினைத தங்கள் தோளகளில் மாட்டிக்கொண்டு கையிற் கொண்ட சிறுகோலால் அடித்து முழக்கி, ஒலி எழல் கண்டும, தம் கைச் சிறுகோல்களால், பறைக்கண் எழுதிய சிறு பறவை அடியுறுவதை, உயிர்ப் பறவைகள் அடிபடுவதே போல் கருதியும் மகிழ்வர் எனவும், தம் காலச் செல்வச் சிறார்களின் சிறுவிளையாடல் ஒன்றையும் குறித்துள்ளார் :

" பெறுமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறுதோள் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத் தெழுதிய குரீஇப் போலக்
கோல்கொண் டலைப்பப் படீஇயர்." (நற் : 58)

தலைமகளைப் பாலைப் பெருநிலத்தின் வழியே அழைத்துக்கொண்டு தன்னூர் செல்லும் தலைமகனை, இடைவழியில் உள்ள சிற்றூர் வாழ்மக்கள் சிலர் கண்டனர்; அவ்விருவரும செல்லும் செலவினைக் கண்ட அவர்க்கு, அவ்விருவருள், அவள் அவ்வழியில் அதற்கு முன் வந்தறியாப் புதியவள். அவன், அவளுக்குத் துணையாகச் செல்லும் ஆண்டகை; இருவரும் நிறையன்பினர்; தன் ஊர் அடைதல் வேண்டும் என்ற வேட்கை மிகுதியால், வழியருமை மறந்து செல்கின்றனர் என்பன புலனாயின; இவர்க்கு இடைவழியில் ஏதம ஏதும் உண்டாகாமல் காப்பது நமது கடன் என்று எண்ணினர்; பொழுதோ போய்விட்டது; இவ்வழி வநத வணிகா கூட்டத்தை வழிப்பறி செய்ய எண்ணிய கொள்ளைக்காரர்கள், அவ்வணிகர் குழுவினைத் தாக்குதற்காம் வாய்ப்புடையதோர் நல்லிடம் தேடிப் பின் தொடர்ந்து வநது, அவ்வணிகர் இச்சிற்றூரில் தங்கிவிட்ட தறிந்து, அவர்களை மேலும் தொடர்தல் இயலாது என்று எண்ணித் தம்பறையினை முழக்கிக் கொண்டே மீண்டு செல்வாராயினர்; அவர்கள் செல்லுங்கால் எழுப்பும் பறையொலி, அவர்கள் அண்மையிலேயே இருக்கின்றனர் என்பதை அறிவிக்கிறது; இந்நிலையில், இவவிருவரும் செல்லுதல் நன்றன்று எனத் துணிந்து, ஊரருள் முதியராய சிலர், அவ்விளைஞனை அடுத்து, இவையெலாம எடுத்துக் கூறி, தம் ஊரில் தங்கச் செய்தனர். இந்த நிகழ்ச்சிகளைச சிறு செய்யுளொன்றால் விளங்கக் கூறி, அக்காலத்திய இளைஞர்களின் அச்சம் அறியா அன்பு வாழ்க்கையினையும், அவர் துயர் போக்கித் துணை புரியும் மக்களின் அருள் நிரம்பிய உள்ளத்தினையும், இததகைய நல்லோர்களுக்கிடையே, வழிப்பறி செய்து வாழும் பொல்லாங்கு மேற்கொண்டார் வாழ்வதையும் வரைந்து காட்டியுள்ளார்.

“ எல்லும் எல்லின்று ; பாடுங் கேளாய்!
செல்லா நீமோ சிறுபிடி துணையே!
வேற்றுமுனை வெம்மையிற் சாத்து வந்திறுத்தென

வளையணி நெடுவேல் ஏந்தி
மிளைவந்து பெயரும் தண்ணுமைக் குரலே.''

(குறுந் : ருகoo)

முல்லை நிலத்து இடையர், தம் ஆனிரையிடத்துக் கொண்ட பாலை, மருதநிலத்து ஊர்களிடையே கொண்டு சென்று விற்று, அப்பாலின் விலையாகத் தமக்கு வேண்டும் உணவுப் பொருள்களைப் பெற்று மீள்வர் என ஆயர் வாழ்வியலை நன்கு விளக்கியுள்ளார் :

'' பாலொடுவந்து கூழொடு பெயரும்
ஆடுடை இடைமகன்.''

(குறுந் : உஉக)

## உஉ. மதுரைக் காருலவியங் கூத்தனர்

தமிழர்கள், தம்மொழியினை இயல், இசை, நாடகம் எனப் பிரித்துப் போற்றி வளர்த்தனர்; இவ்வாறு மூன்று வகையாகப் பிரிந்து நின்ற தமிழின், இறுதிக்கண் உள்ள நாடகத் தமிழை அவர்கள் எவ்வாறு வளர்த்தனர் என்பதை அறிவிக்கும் சான்றுகள் இப்போது கிடைத்தில வாயினும், சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார், மதிவாணனர் என்ற பெயர் தாங்கிய பாண்டியர் ஒருவர் இயற்றிய கூத்தநூல் என்ற நாடகத் தமிழ் நூலி லிருந்து சில செய்யுட்களை மேற்கோளாக எடுத்துக்காட்டியுள்ளாராதலின், தமிழர்கள், இயற்றமிழையும், இசைத் தமிழையும் வளர்ப்பதில் எத்துணை ஆர்வம் காட்டியுள்ளன ரோ, அதில் ஒரு சிறிதும் குறையாத ஆர்வத்தை, நாடகத் தமிழ் வளர்ச்சியிலும் காட்டியுள்ளனர் என்பது நன்கு புலனாகின்றது; அதுவேயுமல்லாமல், கடைச்சங்க காலத்தி லேயே, நாடகத் தமிழில வல்லுநராய்க் கூத்தர் என அழைக்கப் பெறுவோர், அந்நாடகத் தமிழை வளர்த்து வந்தனர் என்பதை அக்காலப் பைந்தமிழ் நூல்கள் அறி விக்கின்றன. அவ்வாறு, தமிழின் ஒருகூறும் நாடகத் தமிழ் வளர்த்து, மொழிவளரத் துணைபுரிந்தாருள், மதுரைக் காருலவியங கூததனுரும ஒருவராவர்.

இவர் இயற்பெயரையோ, இவர் பெயரோடு இணைத்து வழங்கப்பெறும் "காருலவியம்" என்ற சிறப்புச் சொல் லின் பொருளையோ, அதை மேற்கொண்டதற்காம் கார ணத்தையோ அறிந்துகொள்ளும் வாய்ப்பு நமக்குக் கிடைத் திலது. இவர், பாலைத்திணைப் பொருள் குறித்துப் பாடிய பாட்டொன்று நற்றிணையில் இடம் பெற்றுளது.

தொங்கிய தலையினையும், அடர்ந்து நீண்ட மயிரினையு முடைய ஆண்கரடி, தனக்கு வேண்டிய இரையினைத் தேடி உண்ணும் விருப்பம் உடையதாய் இரவிலே சென்று,

நீண்டு வரிசையாகச் செல்லும் கறையான்கள் ஒன்றுகூடிக் கட்டிய பாம்புகள் வாழ்தற்கேற்றதாய புற்றில் உள்ள, அக்கறையான்கள் முழுதும் ஒருசேர ஒழிந்துபோகுமாறு, கூரிய பெரிய நகங்களினால் விரைந்து பறித்து, உள்ளிருப் பன அனைத்தினையும் உறிஞ்சி இழுக்கும்" என அந் நிலத்தின் பண்பினை விளங்கப் பாடியுள்ளார் :

கவிதலை எண்கின் பரூஉமயிர் ஏற்றை
இரைதேர் வேட்கையின் இரவிற் போகி
நீடுசெயல் சிதலைத் தோடு புனைந்து எடுத்த
அரவாழ் புற்றம் ஒழிய, ஒய்யென
முரவாய் வள்ளுகிர் இடப்ப வாங்கும்."

(நற் : ௩௨௫)

## உரு. மதுரைக் கூத்தனார்

மதுரைக் காருலவியங் கூத்தன் என்றும், மதுரைத் தமிழக் கூத்தன் கடுவன் மள்ளனார் என்றும் சிறிது வரலாறு உணர உணர்த்தப்பட்டாரைப் போலன்றி, இவர் மதுரைக் கூத்தனார் என எத்தகைய வரலாற்றுக் குறிப்புக்களும் இன்றி உணர்த்தப்பட்டமையால், மதுரையில் வாழ்ந்த அம் மூன்று கூத்தர்களுள், இவர் சிறிது மிக்க சிறப்புடையராவர் என்பது புலப்படும். மதுரைக் கூத்தனார் என்று கூறிய அளவிலேயே உணரக் கூடிய அளவு, இவர் மக்களால் அறியப்பட்டிருந்தவராவர்.

இவர், கால் இறங்கிப் பெய்யும் மழை, யானையின் துதிக்கைபோல் தோன்றும் என்றும், "பெருங்களிற்றுத் தடக்கை புரையக் கால்வீழ்த்து"; மேகங்கள் ஒன்றுகூடி நிற்கும் காட்சி, பெண் யானைகள் பல கூடிக் கலந்திருக்கும் காட்சி போலும் என்றும், "இரும்பிடித் தொழுதியின் ஈண்டுவன குழீஇ"; மேகம் பெய்யும் பெரு மழைத்துளியோடு கலந்து விழும் ஆலங்கட்டிகள், மகளிர்கள் மகிழ்ந்து ஆடும் கழங்காட்டத்தில் மேற்கொள்ளும் கழற்சிக் காய்களைப்போல் உள்ளன என்றும், "வணங்கிறை மகளிர், அயர்ந்தனர் ஆடும் கழங்குறழ் ஆலி"; தலைவன் தேரிற் பூட்டிய விரைந்து செல்லும் வெண் குதிரைகள், வானில் பறந்து செல்லும் வெள்ளை அன்னப் பறவைகளைப்போலும் என்றும், "வானின் வயங்குசிறை அன்னத்து நிரை பறை கடுப்ப, நால்குடன் பூண்ட கால் நவில் புரவி" (அகம் : ௩௩௪.) கூறிய உவமைகள் நயம் சிறந்து விளங்கி, அவர் புலமைக்குப் பாராட்டளிக்கின்றன.

# உச. மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனார்

அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில், கூத்துக்களின் வகைகளை விரித்து உரைக்குங்கால், ஆரியக் கூத்து, தமிழ்க் கூத்து என்ற வகைகளையும குறித்துச் சென்றுளார் "ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தில் கண்ணாயிருக்க வேண்டும்" என்றொரு பழமொழியும் நிலவுகிறது. கோயில்களில் நடைபெறும் திருவிழாக் காலங்களில் தமிழ்க் கூத்து ஆடுவார்க்கு என நிலங்களைக் காணியாகக் கொடுக்கும் வழக்கம், சோழர் பேரரசின் காலத்தில் நிலவியிருந்தது எனக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இதனால், தமிழ்நாட்டில், ஆரியக் கூத்தும், தமிழ்க் கூத்தும் நீண்ட நாட்களாகவே நடைபெற்று வந்தன என்று அறிகிறோம் அக் கூதது வகைகளுள், மதுரைக் கடுவன் மள்ளனார் தமிழ்க் கூத்து வல்லராய் விளங்கினமையான், இவர் மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனார் என அழைக்கப் பெற்றுளார்.

மதுரைத் தமிழ்க் கூத்தன் கடுவன் மள்ளனார், தம் கூத்தாடும் தொழிலால், நாடு முற்றும் சுற்றிவந்தவராதலின், அவர் நாட்டில் ஆங்காங்கே நடைபெற்ற நிகழ்ச்சிகளை நேரிற் கண்டும், அறிந்தார் கூறக்கேட்டும் அறிந்து, தாமறிந்த அவற்றைத் தாம் பாடிய பாக்களில் வைத்து உலகத்தார் உணர வைக்கும் இயல்பினராவர் :

அரக்கர் கோமானாய இராவணனை அழித்தற் பொருட்டு, அவன் வாழிடமாம் இலங்கை செல்ல விரும்பிய இராமன், ஆங்குச் செல்வதாயின் இடையில் உள்ள கடலைக் கடத்தல் வேண்டுமே, இதை எவ்வாறு கடப்பது என்ற எண்ணமுடையனாய், தனக்குத் துணையாய் வந்து நிற்பாரையும் ஒருங்கு கூட்டி, கோடிக்கரைக்கண் இருந்த ஓர் ஆலமரத்தின் கீழ் இருந்து ஆலோசனை மேற்கொண்டிருந்த போது, அவ்வாலமரத்தில் வாழும் பறவைகள் செய்யும் பேரொலி, தங்கட்கு இடையூறாக இருத்தலறிந்து, அப்

பறவைகள் ஒலி அடங்கியிருக்குமாறு ஆணையிட்டான்; அவையும் அவ்வாறே அடங்கி ஒய்ந்தன என்ற இச் செய்தியைத் தலைமகள், தலைவனோடு கொண்டிருந்த உறவினைக் களவுக் காலத்தே அலர்கூறித் தூற்றிய அவ்வூர்ப் பெண்கள், தலைவனும, தலைவியும் செய்துகொண்ட திருமணத்தால் வாயடங்கப் பெற்றனர் என்பதை அறிவிக்குங்கால் உணர்த்தியுள்ளார்.

"வெல்வேல் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்துறை
வெல்போா இராமன் அருமறைககு அவிதத
பல்வீழ் ஆலம போல
ஒலி அவிந்தன்று இவ்அழுஙகல் ஊரே." (அகம்: எ0)

ரயாளன் ஒருவன், ஓர் இளம் பெண்ணின் நலத்தை நுகர்ந்து, பின் அவளைக் கைவிட்டு விட்டான்; அப் பெண், அவ் வூரில் உள்ள ஆன்றோர் அவைமுன் சென்று முறையிட்டாள்; அவையினர், அவனை அழைத்துக் கேட்டபோது, "நான் இவளை அறியேன்" என்று சூளுரைத்துக் கூறினான், அவன் சூளுரையினையும் ஏற்றுக் கொள்ளாமல், அவ் விருவருக்கும் உண்டாம் உறவினை அறிவாரைத் தேடி, அவர்கள், உறவு உண்டு என உரைப்பக் கேட்டு, அவர்கள் கூறுவதை ஏற்றுக்கொண்டனர்; பெண்ணின் நலத்தை நுகர்ந்து கைவிட்டதோடு, பொய்ச் சூளும் செய்த அத் தீவினையாளனை மரம் ஒன்றில் இறுகப் பிணித்து, அவன் தலையில் நீற்றினைக் கொட்டித் தண்டித்தனர். இந் நிகழ்ச்சியினையும் ஒரு பாட்டில் குறித்துள்ளார்.

"திருநுதல் குறுமகள் அணிநலம் வவ்விய
அறனி லாளன் அறியேன் என்ற
திறன் இல் வெஞ்சூள், அறிகரி கடாஅய்
முறியார் பெருங்கிளை செறியப் பற்றி
நீறுதலைப் பெய்த ஞான்றை
வீறுசால் அவையதது ஆர்ப்பினும் பெரிதே."

(அகம்: உருசு)

"விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள் வைக்கும் தன்நாளை எடுத்து" என்பர் வள்ளுவர்; பழந் தமிழ் மக்கள், புலவர் பாராட்டைப் பெறுவதில் பெரு விருப்புடையராவர்; அவர்கள் புகழவேண்டும் என்பதற் காகவே அருஞ்செயல் பல ஆற்றுவர்; அவற்றுள் அவர்கள் புகழுமாறு, போர்க்களத்தே புண்பெறுவதைப் பெரிதும் விரும்பிச் செய்வர்; புலவர்களும், வீரனின் எந்தச் செய லினும், அவன் வீரப்புண் பெற்ற செய்கையினையே சிறக்கப் புகழ்வர். அதனால் அந்தப் புண்ணும், அந்தப் புண்பெற்ற வீரனும் சிறந்து பாராட்டப்பெறுவர். புலவர் கடுவன் மள்ளனார், வீரன் ஒருவன் பெற்ற புண்ணிற்கு வீரப்புண் என்று பெயர் தராது "புலவர் புகழ்தற்காம் புகழ்நிறைந்த ஒருவடு" என்று பெயரிட்டு, அக் குறி பெற்றானையும், அக் குறியினைப் புகழும் புலவர்களையும் ஒருங்கே பாராட்டி யுள்ளார்.

"புலவர்
புகழ்குறி கொண்ட பொலந்தார் அகலம்."
(அகம்· ௩௫௪)

புறப்பொருள் தழுவ இவர் பாடிய பாட்டு ஒன்( கிடைத்துளது; அவ்வொரு பாட்டும் ஒழுங்காக இல்லாமல், இடையிடையே சிதைந்து கிடக்கிறது; தமிழன், தன் மொழி வளர்க்கும் தகுதிப் பாட்டிற்கு அளிக்கும் பாராட்டு! உடைந்து உருக்குலைந்து போன அச் சின்னஞ் சிறு பாட்டும், குறுமுயல் ஒன்றைக் கூறுங்கால், அது தூய மயிருடையது; குறுகிய கால்களை உடையது; நீண்ட காதுகளை உடையது; "தூமயிர்க், குறுந்தாள், நெடுஞ் செவிக் குறுமுயல்" எனக் கூறும் அவர் புலமையினையும், குறுமுயல், மன்றத்தில் ஆடிமகிழும் இளஞ் சிறுவர்களின் ஆரவாரத்தைக் கேட்பினும் அஞ்சி ஓடி ஒளிந்துகொள்ளும் மென்மையுமுடையது. "குறுமுயல, புன்தலைச் சிறாஅர் மன்றத்து ஆர்ப்பின் படப்பு ஒடுங்கும்" என்ற குறு முயலின் இயல்பினையும், வீரன், மனைவி, தன் வீடுநோக்கி

வரும் விருந்தினர் ஆரவாரம் செய்து உண்ணுமாறு மகிழ்ந்து அளிக்கும் செயல் ஓயாள்; வீரன், பகைவர் யானையின் ஓடைப்பொன் கொணர்ந்து அப் பரிசிலர்க்கு அளிக்கத் தவறான்," மனையோள், பாணர் ஆர்த்தவும், பரிசிலர் ஓம்பவும் ஊணொலி அரவமொடு கைதூவாள்; "உயர்மருப்பு யானைப்புகர் முகத்தணிந்த பொலம்புனை ஓடை....பரிசில் பரிசிலர்க்கு ஈய உரவுவேற்காளையும் கைதூவான்" என்ற வீரக்குடியின் வாழ்க்கையின் பண்பாட்டினையும் உணரத் துணைபுரிந்து நிற்கிறது. (புறம்: ௩௩௪.)

## ௨௫ மதுரைத் தமிழ்க் கூத்தன் நாகன் தேவன்

நாகன்தேவன், கடுவன் மள்ளன் என்பன நாகன் மகன் தேவன், கடுவன் மகன் மள்ளன் என்றே பொருள் படும் என்று சிலர் கூறுவர். அவ்வாறு கொண்டால், இவர் மதுரையில் தமிழ்க் கூத்துவல்ல நாகனாரின் மகனாராவர். இவர், மதுரையில் வாழ்ந்த மற்றோர் தமிழ்க் கூத்தராகிய கடுவன் மள்ளன் என்பார்க்கு என்ன உறவினரோ அறியோம்; கடுவன் மள்ளன், நாகன்தேவன் இருவரும், மதுரைத் தமிழ்க் கூத்தனாரின் மக்களாவர் என்று கூறுகின்றார் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள்; ஆனால், அவ்வாறு கொள்வதற்கு எத்தகைய சான்றினையும் அவர் காட்டவில்லை.

நிலத்து ஈரம் இல்லையாம்படி ஞாயிறு காய்கிறது என்பதற்கு, ஞாயிறு, தன் கதிர்களாகிய கைகளினால், நிலத்து ஈரத்தைக் கவர்ந்துகொண்டது என்று கூறும் பொருள் நன்றாக அமைந்துளது :

"கதிர கையாக வாங்கி, ஞாயிறு
பைதறத் தெறுதலின் பயங்கரந்து மாறி
விடுவாய்ப் பட்ட வியன்கண் மாநிலம்." (அகம் : ௧௬௪)

காட்டில் பெருமழை பெய்ததனால், அக்காடு வெண் முல்லையும், செங்காந்தளும் மலர்ந்து மணம் வீசுவதைக் கண்டு, அம்மலர்களின் மணம அளவிற்குமீறி வீசுகிறது என்பதை அறிவிக்க, காடு மணவெறிகொண்டு மணக்கிறது என்று கூறுவது மகிழ்ச்சியூட்டுவதாக உளது :

"நறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற
வெறி என்றன்றே வீகமழ் கானம்." (அகம் : ௧௬௪)

## உ௬௯. கணக்காயன் தத்தன்

தமிழ் எழுத்துக்களைக்கொண்ட தமிழரிச்சுவடிக்குத் தமிழ்க் கணக்கென்றும், தமிழ் நெடுங்கணக் கென்றும் பெயர். ஆயம் என்றசொல் கூட்டம் எனப் பொருள்படும்; இளஞ்சிறார் பலரை ஒன்றுகூட்டி வைத்துக்கொண்டு, தமிழ் எழுத்துக்களைக் கற்றுத்தரும் ஆசிரியரைக் கணக்காயர் என அழைப்பது வழக்கம. கணக்காயன் எனவும், கணக் காயன் தத்தன் எனவும் அழைக்கப்பெறும் இவர், தமிழ் எழுத்துக்களைக் கற்பிக்கும் ஆசிரியத்தொழில் மேற் கொண்டு வாழ்ந்தமையால் இப்பெயர் பெற்றார் என்ப. ஆனல், கணக்கு என்பதற்குத் தமிழ் எழுத்துக்கள் என்ற பொருளும் உண்டு எனினும், அச்சொற்கு, அஃதொன்று மட்டுமே பொருளாகாது; வேறு பொருளும் உண்டு. தமிழ்நூல்களுள், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய நூல்களைப் பதினெண் மேற்கணக்கு நூல்கள என்றும், நாலடி, நான்மணி, நாற்பது, நாலைந்திணை, முப்பால், கடுகம், கோவை, பழமொழி, மாமூலம், கைந்நிலை, காஞ்சி, ஏலாதி என்ற பதினெட்டு நூல்களையும் பதினெண்கீழ்க் கணக்கு என்றும் வழங்குவர் ஆதலின், கணக்கு என்பது நூல் எனப் பொருளபட்டு, கணக்காயர் என்ற சொல், நூல் உணர்த்தும் ஆசிரியர் எனப் பொருள்படும் ஆதலா லும், மணிமேகலையில் வரும் சமயக் கணக்கர் என்றசொல், சமயநூல்வல்ல ஆசிரியர் எனப் பொருள்படும் ஆதலாலும், நிகண்டுகள், கணக்காயர் என்றசொற்கு, ஒத்துரைப்போர், நூலுரைப்போர் எனப் பொருள் தருகின்றன ஆதலாலும், பிங்கலத்தில், "எழுத்தும் எண்ணும கணக்கென்றாகும்" என வருதலின், இலக்கியமேயன்றி, இலககணமும் கணக் கெனப்படும் ஆதலாலும, கணக்காயர், எழுத்தோதக் கற்பிக்கும் ஆசிரியர் அன்று; தொல் கேள்வித்துறை போகிய நல்லாசிரியர் ஆவர் என்று கொள்க.

கணக்காயன் தத்தனார், "முத்துப்படு பரப்பின் கொற்கை முன்துறை" எனக் கொற்கைத் துறையின்

சிறப்பினையும், கடல் உழந்துவாழும் பரதவர், விரைந்து செல்லும மீன்படகில் சென்று, எறிந்த உயிர்களைத் தப்பாது கொல்லும் ஆற்றல்வாய்ந்த கூர்மை பொருந்திய எறியுளி பொருத்தப்பெற்ற உலர்ந்த பெரிய மூங்கிற் கழியை, செல்லும் வழியில எதிர்ப்பட்ட சுறா மீன்மீது எறியக்கண்ட, கரையில் தங்கியிருந்த அன்னப்பறவை களின் கூட்டம் அஞ்சி எழுநது பறந்து செல்லும் என நெய்தல் நிலத்தா வாழ்க்கையினையும வகுத்துக் காட்டியுள்ளார் :

"கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறியுளி
முகம்பட மடுதத முளிவெதிா நோன்காழ்
தாஙகரும நீசசுரதது எறிந்து வாஙகுவிசைக்
கொடுந்திமில் பரதவா கோட்டுமீன் எறிய
நெடுஙகரை யிருந்த குறுஙகால் அன்னத்து
வெண்டோடு இரியும வீததை கானல்." (குறுந் : ௩௦௪)

## உஎ. மதுரைக் கணக்காயனார்

சங்கம் வைத்து மொழி வளர்த்த புலவர் பெருமக்களுள், அத தமிழ்ச்சங்கததின் தலைவராம் பெருமை கொண்ட நக்கீரனார்க்கு நல்லறிவு கொளுததிய நல்லாசிரியரும், அவரைப் பெற்றெடுதத பெருமையுடையாரும் நம் மதுரைக் கணக்காயனாரேயாவர்; "கணக்காயன் இல்லாத ஊர்" என்ற கழிபெரும குறைபாட்டினைப் போக்கி மதுரைக்கு மாண்பு தநதவர் நம் கணக்காயனார்; மதுரைக் கணக்காயனார்; தம்பால் கல்விகற்க விடப்பட்ட இளஞ்சிறார்க்குத் தமிழ் நெடுங்கணக்காம் எழுததினை அறிவித்தல் முதல், பதினெண் மேற்கணக்கு, பதினெண் கீழ்க் கணக்கு என வரிசை செய்யப்பெற்ற பெரு நூல்களை ஓதி அவரைப் பெரும் புலவராக்கும் வரை, ஆசிரியராம் தகுதிப் பாட்டினை நீங்காது கொண்ட நிறைந்த புகழுடையராவர்.

பாண்டியர் தலைநகரில் வாழ்நது, அவ்வரசர்களின் பண்புணர்ந்த கணக்காயனார், "பாண்டியர், காட்டரணை அழிதது, ஆங்குள்ள ஆநிரைகளைக் கவர்நதுவரும் கள்வர்களாகிய வீரர்கட்குத் தலைவா, ஏவிய வினையினை இமைப்பினில் முடித்து நிற்கும் இளைய வீரர்களுக்குத் தலைவர்; வேளிருமு, வேந்தருமாய்த் தம்மோடு பகைத்து நிற்பாரின் அரிய அரண்களை அழிதது, அவர்களைப் பலகாலுமு வெற்றி கொள்ளும் ஆற்றலுடையவர்; என்றும் குன்றுதல் இல்லாப பெருமு புகழ் உடையவர்" என்றும்,

> "அருப்புழை திறப்பின்
> ஆகொள் மூதூர்க் கள்வர் பெருமகன்,
> ஏவல் இளையா தலைவன்; மேவார்
> அருஙகுறும்பு எறிந்த ஆற்றலொடு, பருந்துபடப்
> பல்செருக கடந்த செல்லுறழ் தடக்கைக்
> கெடாஅ நல்லிசைத் தென்னன்.'
>
> (அகம்: ௩௪௨)

"வேங்கட மலையில் பிறந்து வளர்ந்த, யானைகளைக்கொண்ட பெரும் படையினையும், அப்படைத் துணைகொண்டு

போராற்றிப் பெற்ற வெற்றியினையும் உடையவர்; அறவழி நின்று ஆளும் அரசு உடையவர்; அவர் கொற்கைத் துறை முத்து, பேரொளி வீசும் பெருமையுடையது" என்றும் பாண்டியர் பெருமையினைப் பாராட்டியுள்ளார்.

> "வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை
> மறப்போர்ப் பாண்டியர் அறத்திற் காக்கும
> கொற்கையம பெருந்துறை முத்து"
>
> (அகம்: உஎ)

தாம் வாழும நாட்டின் வேந்தராம் பாண்டியரைப் பாராட்டும் இவர், தமிழ்நாட்டின் ஏனைய இரு பேரரசர்களாம் சேர, சோழர்பால் வெறுப்புடையவரல்லர்; தமிழகத்து மூவேந்தர்களையும, அவர் ஒரு நிலையிலேயே வைத்துப் போற்றியுள்ளார். இவர் மகனாராய நக்கீரனார், ஆரங்கண்ணி அடுபோர்ச் சோழர' எனச் சோழரையும், 'அரண்பல கடந்த முரண் கொள் தானை, வாடாவேம்பின் வழுதி' எனப் பாண்டியரையும், 'ஆள்கோட் பிழையா அஞ்சுவரு தடக்கைக் கடும பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை' எனச் சேரரையும் ஒரு பாட்டில் வைத்துப் பாராட்டியதைப் போன்றே கணக்காயனாரும், "பாண்டியர், மலைகள் நிறைந்து உயர்ந்த இவ்வுலகில் நாடு என்று சிறப்பித்துக் கூறப்பெறும் நாட்டினை உடையவர்; நாட்டில் வாழும் அரசர்களுள், அறவழியே ஆட்சி மேற்கொண்ட நல்லாட்சி யுடையவர்; பகைவரது தறுகண்மையினை அழித்த வெற்றி நிறைந்த தோளால் புகழ்பெற்றவர்; பலரும் போற்றிப் புகழ்தற்கான பெருஞ்செல்வம் படைத்தவர்," எனப் பாண்டியரையும்,

> "குன்றுயர்கு வைப்பின் நாடுமீக்கூறும்
> மறங்கெழு தானை அரசருள்ளும
> அறங்கடைப் பிடித்த செங்கோலுடன், அமர்
> மறம்சாய்த் தெழுந்த வலனுயர் திணிதோள்
> பலர்புகழ் திருவின் பசும்பூட் பாண்டியன்"
>
> (அகம்: ௩௩அ)

"பகைவர் தேயம் பாழாகுமாறு அழிக்கும், பகைவர் அணுகற்கு அஞ்சும் ஆற்றலையும், வெற்றி தரும் வேலினையும் உடைய சேரன்" எனச் சேரரையும்,

"ஒன்னா தேஎம் பாழ்பட நூறும்
துன்னரு மரபின் வென்வேல் பொறையன்"
(அகம்: ௩௩௮)

"பகைவர் இறந்து விண்ணுலகடையுமாறு உருவிப்பிடித்த வாளினையும், பகைவர் நாட்டினுட் புகுந்து, கன்று ஈன்ற பசுக்களைக் கவர்ந்து கொணரும் வெட்சி வீரர்களையும் உடைய, போர் பல வெல்லும் சோழன்" எனச் சோழரையும் ஒரு பாட்டில் வைத்துப் பாராட்டியுள்ளார்.

"பொருஅர,
விணைபொரக் கழித்த திண்பிடி ஒள்வாள்
புனிற்று ஆன் தரவின் இளையர் பெருமகன்,
தொகு போர்ச் சோழன்." (அகம்: ௩௩௮)

மூவேந்தர் பெருமையினை முறையே பாராட்டிய கணக்காயனார், அவ்வேந்தர் படைக்குத் தலைமை தாங்கிச் செல்லும் வீரன் ஒருவனின் கொற்றமும், கொடையும் தோன்றப் பாராட்டியுள்ளார்;

படைத்தலைவன் ஒருவன் சிற்றூர் ஒன்றில் வாழ்கின்றான், அவன் வாழும் ஊர் வளத்தால் குறைவுற்றது; அவ்வூர் அரசனுக்கு முறையாகத் தரவேண்டிய வரியினைக் கொடுக்கும் வன்மையும் இல்லாதது; ஆனால் அவனோ, வழிவழியாக வந்த வள்ளன்மைக் குணம் உடையவன்; ஆதலின் அவன் தன்பால் வருவார்க்கு வாரி வாரி வழங்கும் இயல்பினனாயினன்; அவன் அவ்வாறு வழங்கிய காலத்தும், அவன் செல்வம், கொளக்கொளக் குறையாக் கடலேபோல் குறையாது விளங்குவதாயிற்று; இதனால் அவன், கொடுப்பார்க்குக் கடலைப் போன்றவனாயினன். கொடைத் தொழிலில்தான் அவன் கடலையொத்துளான் என்பது அல்ல; போர்க்களத்திலும் கடலுக்கு ஆழி போன்றவனாக விளங்குவன்; களத்தில் முன்னின்ற படை

தோற்றுப் பின்னிடுமாயின், இவன், வேறு ஒரு படையினையோ, அல்லது தன்னையொத்த வேறு ஒரு படைத் தலைவனையோ துணையாக உடன்கொண்டு செல்லாது, தன் வாள் ஒன்றையே துணையாகக் கொண்டு சென்று, கடல் நீர், நாட்டுள் புகாவண்ணம் நின்று காக்கும் கரையே போல், பகைவர் படை தன்னைத் தாண்டித் தன் வேந்தன் படையுட் புகுந்து அழிக்கா வண்ணம் தடுத்து நிறுத்திப் போர் புரிந்து வெற்றி பெறுவன் என்று அப்படைத் தலைவனின் ஆண்மையினையும், அருளையும் ஒருங்கே புகழ்ந்துள்ளமை அறிக:

"வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
ஏந்துவாள் வலத்தன் ஒருவனாகித்
தன்இறந்து வாராமை விலக்கலின், பெருங்கடற்கு
ஆழி அனையன் மாதோ! என்றும்
பாடிச் சென்றோர்க்கு அன்றியும், வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை சுட்டிய வண்மை யோனே." (புறம்: ௩௩0)

## உ அ. கணியன் பூங்குன்றன்

கணியன் பூங்குன்றன் என்ற இப்பெயர் இவர்க்குத் தொழிலாலும், ஊராலும் வந்ததாம்; கணியன் என்பான், சோதிடம் சொல்வோனுவன்; இவர் அத்தொழில் மேற்கொண்டிருந்தமையால் இப்பெயர் பெற்றார்; இவர், இராமநாதபுர மாவட்டத்திலுள்ள மகிபாலன் பட்டியென இப்போது வழங்கும் ஊரினராவர்; மகிபாலன் பட்டிக்கு அருகிலுள்ள கோயிற் கல்வெட்டுக்கள், அவ்வூரைப் பூங்குன்ற நாட்டுப் பூங்குன்றம் எனக்குறிக்கின்றன "புனல் செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாடு" எனவும் "புனல் ஒழுகப் புள்ளிரியும் பூங்குன்றநாடு" எனவும், இந்நாடு புலவர்களால் போற்றப்பட்டுளது; சில ஏடுகளில் இவர் பெயர், கணிபுன் குன்றன் எனப் பிழைப்பட்டு வந்துளது. இவர் பாட்டாக நமக்குக் கிடைத்தன இரண்டே எனினும், அவ்விரண்டும், மக்கள வாழ்க்கையை மாண்புடையதாக்குதற்காம் உயரிய கருத்துக்கள் பலவற்றை உட்கொண்டு விளங்குகின்றன

மலைகளையும், மரங்களையும் அடித்து உருட்டிக்கொண்டோடிவரும் காட்டாற்று வெள்ளத்தில் மிதந்து செல்லும் ஒருபொருள், அவ்யாற்று நீர் ஓடிய வழியெல்லாம் ஓடுவதல்லது, தனக்கென ஒரு வழியினை மேற்கொள்ளமாட்டாமையே போல், "ஊழிற்பெருவலியாவுள? மற்றொன்று சூழினும் தான் முந்துறும்" என்பவாகலின், உயிருமம, ஊழின் வழியே சென்று ஆகூழ் உற்றவழி வாழ்வுற்றும், போகூழ் உற்றவழித் தாழ்வுற்றும் வாழ்தலல்லது, தானே முயன்று பெறும் வாழ்விலதாம்; இவ்வுண்மையினை, ஆன்றோர் உரைத்துச் சென்ற அறநூல்களாலும், உலகின் அன்றாட நிகழ்ச்சிகளாலும் அறிந்த பெரியோரே, "செல்வம் என்பது சிந்தையின் நிறைவே; அல்கா நல்குரவு அவாவெனப்படுமே" என்பவாதலின், மக்களின் எந்நிலைக்கும், அவர் மனமே காரணமாம் எனவுணர்ந்து மனதை அடக்கியாளும் மாண்புடையராவர். அத்தகையார்,

எத்தகைய இடருற்ற காலத்திலும் தம் நிலைகலங்கித் தளராது வாழ்வர்; அவ்வாறின்றி மனத்தை அடக்காதவர்க்கே, இது தீது; இதுநன்று என்ற எண்ணம் உண்டாம். தீதும, நன்றும் மனம் தரும மாற்றங்கள் என்ற எண்ணமிலாதார்க்கே, அவை பிறரால் உண்டாகின்றன என்ற எண்ணமும, அதைத் தொடர்ந்து, தீது செய்தார் மாட்டுச் சினமும, நன்று செய்தார் மாட்டு அன்பும் தோன்றுதலும உண்டாம்; தீமையால் துன்புறுவது போலவும், நன்மையால் அவை தணிதல்போலவும் எண்ணுவோரும் அவரே; உள்ளத்தை ஒருவழி நிறுத்திய உரனுடையார்க்கே, தோற்றமுண்டேல் மரணமுண்டு என்ற எண்ணமும், இறப்பது இவ்வுலகின் இயற்கை; அதுகண்டு அஞ்சுவது அறியாமை என்ற எண்ணமும் எழும்; அவரே, வாழும் வசதிபலபெற்று வாழ்ந்தக்கால், அவ்வாழ்க்கையினை இனிது எனப் போற்றவேண்டும் என்ற எண்ணமோ, அவ்வாழ்க்கையில் வளம் குறைந்தக்கால், இவ்வாழ்க்கை நரகம் போன்றது; இத்துன்பத்தில் உழன்று வாழ்வதினும் காடடைவதே நன்று என்ற துறவுள்ளமோ கொள்ளார்; அத்தகையாரே, வளம் பலபெற்று வாழ்ந்தாரின் வாழ்வின் பெருமை கண்டு வாழ்த்துவதோ, பொருளின்றி வறுமையுற்றார் இழிநிலை கண்டு இகழ்வதோ செய்யார்; அவர்க்கு எல்லாம ஒன்றே; ஏழையும் ஒன்றே; செல்வரும் ஒன்றே; இன்பமும் ஒன்றே, துன்பமும் ஒன்றே; நன்மையும ஒன்றே; தீமையும் ஒன்றே; இறப்பும் ஒன்றே; பிறப்பும் ஒன்றே; வாழ்வும் ஒன்றே; தாழ்வும் ஒன்றே; அவரே, எவ்வூரையும் தம்மூரே போலவும், எவரையும் தம்கேளிரே போலவும் மதித்து மாண்புறுவர்.

> "யாதும் ஊரே; யாவரும் கேளிர;
> தீதும, நன்றும் பிறர்தர வாரா;
> நோதலும், தணிதலும அவற்றோரன்ன;
> சாதலும் புதுவதன்றே; வாழ்தல்
> இனிது, என மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்
> இன்னாது, என்றலும் இலமே மின்னொடு

வானம் தண்துளி தலைஇ, ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல, ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது, திறவோர்
காட்சியில் தெளிந்தனம் . ஆகலின், மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.”

(புறம் : ௧௯௨.)

கணியன் பூங்குன்றனார் காட்டும் இவ்வரிய உண்மைகளை, இவ்வுலகம் உணர்ந்து உய்தி பெறுவது எந்நாளோ? அவர் கணித நூல் கூறும் கருத்து யாதோ!

உலகத்தார் உய்தற்பொருட்டு உயரிய அறவுரைகளை வழங்குவதே பொருளாகக்கொண்ட பொருண்மொழிக் காஞ்சியாம் புறத்துறை தழுவிய புறநானூற்றுப் பாடலில், பொருள் நிறைந்த அறவுரைகளை அளித்த, கணியன் பூங்குன்றனார், ஒருவனும் ஒருத்தியும் கூடிவாழும் அன்பு வாழ்க்கையினை உரைப்பதே பொருளாகக் கொண்டுவரும் அகத்துறைப் பாட்டிலும், உலகியலுரைக்கும் அறவுரைகளை வழங்கியுள்ளார்

தலைவன், நாளது சின்மையும், இளமையது அருமையும் அறியானாய்ப் பொருளையே விரும்பிய உள்ளத்தனாய்த் தலைவியை விட்டுப் பிரிந்து சென்று விட்டான்; அவன் பிரிவுத்துயர் பொறுக்க மாட்டாது வருந்தும் தலைமகளைப் பொறுத்தல் நின்கடன் எனக்கூறி ஆற்றுவிக்கும் தோழியை நோக்கி, “தோழி! மருந்தாகிப் பயன்படும் ஒரு மரத்தை, அம்மரம் பட்டுப்போகுமாறு முழுவதையும் வெட்டிக்கொள்வதில்லை; அவ்வாறு கொண்டால், அம்மரத்தால் மீண்டும் பயன் பெறுதல் இயலாது; ஆதலின் அம்மரம் மேலும் வாழுமாறு சிறிது விட்டே வெட்டிக் கொள்வர்; உடலை வருத்தித் தவம் செய்வோர், தம் உடலுரன் முற்றும் குன்றுமளவு தவம்மேற் கொள்ளார்;

அவ்வாறு செய்தால், அத்தவத்தாலாம் பயன் பெறுதல் இலராவர்; ஆதலின், உடலில், உயிர் நிற்றற்காம் அளவு உரன் நிற்கவே தவமாற்றுவர்; அரசர்கள், தம் நாட்டு மக்களின் வளமெலாம் குன்றுமாறு பெருவரி வாங்க எண்ணுர்; அவ்வாறு வாங்கினுல், அக்குடிகள் அழிவராதலின், அவரினின்றும வரிவாங்கி வாழ்தல் இயலாது ஆதலின், அவர் மேலும் வாழ்ந்து வரிதருமாறு அளவே கொள்வர். இவ்வுண்மைகளை உணர்ந்தவராய நமதலைவர், பொருள் ஈட்டுவது இன்பநுகர்ச்சியின் பொருட்டு; இன்பநுகர்ச்சிக்கு இன்றியமையாதது நம் உயிர்; நம் உயிர் அழியின், ஈட்டும் பொருளால் பயன்பெறுதல் இயலாது; நாம், அவர் நம்மைவிட்டுப் பிரியாது உடனுறைவதாலேயே உயிர் வாழ்கின்றோம்; அவர் பிரிந்தால் நம் உயிர் நிற்காது என்ற உண்மைகளை மட்டும் உணராது பிரிந்து சென்றது ஏனோ? இதுவே ஆடவர் இயல்பு என்றும் கூறுகின்றனர் அறிஞர்கள்; என்னே இவ்வுலகத்தின் இயல்பு!" என்று கூறி வருந்தினாள்.

இவ்வாறு வருந்தியதோடமையாது, "மருந்துகொள்வோர், பின்னும் பெறல்வேண்டி அமமரத்தைப் பாது காப்பர்; ஆனல் நம் தலைவா என் நலனையெலாம் உண்டு, யான் இறந்து போமாறு என்னைக் கைவிட்டுப் பிரிந்து சென்றுளார்; இவர் கொடுமையினை என்னென்பேன்? மாந்தர் தம் உடல் உரன் முழுதும கெடுமாறு தவம் செய்யார்; ஆனல் யானோ, என் உள்ளம் வருந்தி ஒழியுமாறு, என் உள்ளத்தினும், அவரின்பமே பெரிதென எண்ணி அதனால் இறககலானேன்; என்னே என் அறியாமை! குடிஓமபிக் கொள்ளாக் கொடுங்கோலன் போல், அவன் என் உயிரையும கொண்டுசென்று விட்டான்; யான், அக்கொடுங்கோல் மன்னனால் அலைப்புண்ட அவன்குடிகளேபோல, அவன் அனபைப் பெறலின்றிப் பெரிதும் உழந்து வாழ்கின்றேன் என்னே இந்நிலை!" எனத் தலைவன் கொடுமைகளையும், அவன் கொடுமைசெய்யவும், அவனை எண்ணி வருந்தும் தன்

அன்புடைமையினையும் எடுத்துக் கூறித் தலைவன் செயலை மறைத்துமொழி கிளவியால் இடித்தும் கூறினாள்.

"மரஞ்சாம் மருந்தும் கொள்ளார் மாந்தர்;
உரம்சாச் செய்யார் உயர்தவம்; வளங்கெடப்
பொன்னும் கொள்ளார் மன்னர்; நன்னுதல்
நாம்தம் உண்மையின் உளமே; அதனால்,
தாம்செய் பொருளளவு அறியார்; தாங்கசிந்து
எனறூழ் நிறுப்ப நீளிடை ஒழியச்
சென்றோர் மன்றநம் காதலர்; என்றும்
இன்ன நிலைமைத்து என்ப;
என்னோரும் அறிப இவ்வுலகத் தானே."

(நற். ௨௨௬)

இவ்வாறு உலகியல் கூறி, உயரிய கருத்துச் செல்வங்களை வாரி வழங்கிய புலவர் கணியன் பூங்குன்றனார், அரசன், ஆண்டி முதலாய உலகத்தில் வாழ் மக்களுக்காம் அறங்கள் பலவற்றையும் அள்ளித்தந்துளார்; அறம், பொருள், இன்பம் ஆகிய இவற்றின் உண்மை இயல்புகளையும், அவை ஒவ்வொன்றும் கொண்டுள்ள தொடர்பினையும் தெளியவைத்து வழி காட்டியுள்ளார்.

